# THE MEASURE OF ETERNITY

# வைகுண்ட அம்மானை



Institute of Asian Studies
Chemmancherry, Chennai - 600 119
India

THE MEASURE OF ETERNITY (Part I): வைகுண்ட அம்மானை

Pages : cxvii+557

First Edition : December 1999

Price : Rs. 500/- US $ 50

Publication No. : 79



Published under the financial assistance received from the Directorate of Tamil Development of the Government of Tamil Nadu for good translations.

**Copies can be had from**

The Publications Division,
**Institute of Asian Studies**,
Chemmancherry, Chennai - 600 119,
India.

Phone (Off.) 4961662, 4960831
(Res.) 4960085
Fax : 91-44-4960959
E-mail : ias@xleb.com
World Wide Web site: http://xlweb.com/heritage/asian/

Composed by: INSTITUTE OF ASIAN STUDIES, Chennai-600 119.

Printed by: STUDENTS OFFSET SERVICES, Chennai - 600 017. Ph. 4343862

# Contents

# A System of Transliteration of Tamil

## VOWELS

| Short | | Long | |
|---|---|---|---|
| அ | a | ஆ | ā |
| இ | i | ஈ | ī |
| உ | u | ஊ | ū |
| எ | e | ஏ | ē |
| ஒ | o | ஓ | ō |

| | |
|---|---|
| ஐ | ai |
| ஔ | au |

## CONSONANTS

| Hard | | Soft | | Medial | |
|---|---|---|---|---|---|
| க் | k | ங் | ṅ | ய் | y |
| ச் | c | ஞ் | ñ | ர் | r |
| ட் | ṭ | ண் | ṇ | ல் | l |
| த் | t | ந் | n | வ் | v |
| ப் | p | ம் | m | ழ் | ḻ |
| ற் | ṟ | ன் | ṉ | ள் | ḷ |
| ஸ் | s | ஷ் | ṣ | ஹ் | h |
| | | ஜ் | j | | |

## ĀYTAM

ஃ ḵ

# பதிப்புரை

பதிப்பிற்கு எடுத்துக் கொண்ட வைகுண்ட அம்மானை என்னும் தலைப்பில் அமைந்த சுவடி ஆசியவியல் நிறுவனத்தைச் சார்ந்ததாகும். இச்சுவடி இந்நிறுவனத்தின் பதிவு எண். 185இல் பதிவு செய்து பாதுகாக்கப்படுகிறது. இதன் நீளம் அகலம் முறையே 46 x 3 செ.மீட்டர் அளவில் உள்ளது.

ஏட்டின் இரு பக்கங்களிலும் வைகுண்ட அம்மானை என்னும் நூலுக்குரிய பாடல்கள் எழுதப்பட்டுள்ளன. ஏட்டின் ஒவ்வொரு பக்கமும் மூன்றாகப் பிரிக்கப்பட்டு, பிரிவு ஒன்றிற்கு ஒன்பது வரிகள் வீதம் எழுதப்பட்டுள்ளன. இவ்விதம் நூல் முழுமையும் எழுதப்பட்டுள்ளது.

வைகுண்ட அம்மானையைப் பிரதி செய்தவர் நூலின் முன்னும் பின்னுமாக எழுதப்படாத சில வெற்றோலைகளை அமைத்துள்ளார். இவ்வோலைகள், பொதுவாக ஏட்டைத் தொடர்ச்சியாகக் கையாளுகின்ற பொழுது ஏதேனும் இதழ்கள் கையாளுகின்றவரால் உடைந்து பட நேர்ந்தால் பிரதி எடுப்பதற்குப் பயன்படும் நோக்கத்தில் அமைந்ததாகலாம். இவ்வமைப்பு அழகியல் நோக்குடன் பொதுவாகப் பல ஏடுகளில் செய்யப்பட்டுள்ளது.

ஆசியவியல் நிறுவன சுவடியோடு (பதிவு எண். 185) ஒப்பு நோக்குவதற்கு உரியதாகச் செய்யுள் வடிவில் அமையப் பெற்ற, சென்னை கீழ்த்திசை சுவடி நூலக சுவடிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. அவ்வகையில்,

அ) 277 இதழ்கள் கொண்ட முழுமை பெற்ற, பதிவெண் R. 2233-ல் உள்ள சுவடி;

ஆ) 343 இதழ்கள் கொண்ட முழுமை பெற்ற, பதிவெண் R. 3455-ல் உள்ள சுவடி;

இ) 182 இதழ்கள் கொண்ட முழுமை பெற்ற, பதிவெண் R. 5086-ல் உள்ள சுவடி

ஆகிய மூன்றும் ஒப்பு நோக்குவதற்குப் பயன்படுத்தப் பட்டன. இம்மூன்று சுவடிகளும் மைய கதையால் பதிப்பிற்கு எடுத்துக் கொண்ட சுவடியோடு தொடர்புடையதே எனினும், பாடல் அளவாலும், கிளைக் கதைகளில் காணப்படும் மிகை, குறைகளாலும் பாட பேதப் பகுதியைத் தனியே தயாரிக்க இயலாது போகும் அளவிற்கு வேறுபாடுகள் கொண்டுள்ளன.

பதிப்பிற்கு எடுத்துக் கொண்ட வைகுண்ட அம்மானை சுவடியில் கீழ்க்காணும் மாற்றங்கள், சேர்க்கைகள் தேவை கருதிச் செய்யப்பட்டன.

1) பாடல்கள் சுவடியில் ஒற்றெழுத்துகளுக்குப் புள்ளி தரப்படாது அமைக்கப்பட்டிருந்தன. பொருள் கருதி, சரியான இடங்களில் ஒற்றெழுத்துக்கள் அடையாளம் காணப்பட்டு புள்ளியிடப் பட்டன.

2) பாடல்கள் ஒவ்வொன்றும் ஆரம்பமும் முடிவுமின்றித் தொடர்ச்சியாக, எண் எதுவும் தரப்படாமல் சுவடியில் பிரதி செய்யப்பட்டிருந்தன. பாடல்கள் தொடங்குமிடங்களில் அந்தந்த பாடல்களின் தன்மைக்கேற்ப 'விருத்தம்', 'நடை' என்னும் சொற்கள் கையாளப்பட்டிருந்தன. இச்சொற்களின் அடிப்படையிலும், யாப்பின் அடிப்படையிலும் பாடல்கள் ஒவ்வொன்றும் முடியும் இடம் கண்டறியப்பட்டு அவற்றிற்கு முறையே பாடல் எண்கள் தரப்பட்டுள்ளன.

ஒவ்வொரு பாடல்களும் எத்தனை அடிகளால் ஆனவை என்பதை அறிந்து கொள்வதற்கு 'நடை' என்கிற யாப்பில் பயின்று வந்த பாடல்களுக்கு 5,10,15,20 . . . என ஐந்து அடிகளுக்கு ஒரு முறை பாடலின் வலது பக்கத்தில் தொடர்ச்சியாக எண் இடப்பட்டுள்ளது.

3) பாடல்கள் யாப்பமைதிக்கு உட்படுத்தப்பட்டு அதற்கேற்ப அசை, சீர் அமைப்பில் பிரித்து எழுதப்பட்டுள்ளன.

4) ஏட்டினைப் பிரதி செய்து செப்பமுற வடிவமைத்த வேளையில் பல்வேறு இடங்களில் தமிழ் இலக்கணத்திற்கு முற்றிலும் புறம்பாக வரும் எழுத்துப் புணர்ச்சிகள், சொற்கள் ஆகியன மாற்றியமைக்கப் பட்டுள்ளன. மாற்றப்பட்ட சொற்களுக்கு இணையாக இருந்த சுவடியிலுள்ள சொற்கள் 'சுவடிச் சொற்கள்' என்கிற தலைப்பின்கீழ் ஒவ்வொரு பக்கத்திலும் தரப்பட்டுள்ளன. இவ்விதம் செய்யும் வேளையில் வட்டார வழக்குச் சொற்கள் எவ்வித மாற்றமும் செய்யப்படாமல், இனங்காணப்பட்டு அவ்விதமே பிரதி செய்யப்பட்டன.

5) பொருள் புரிதலில் இடர்பாடு உடைய கடினச் சொற்கள், வட்டார வழக்குச் சொற்கள் ஆகியனவற்றிற்குத் தேவையான உரை விளக்கங்கள் தரப்பட்டுள்ளன.

6) நூல் முழுவதற்குமான கதையோட்டத்தைப் புரிந்து கொள்வதற்கு ஏற்ப எளிய சிறு சிறு தலைப்புகள் பாடல்களின் நடுநடுவே தரப்பட்டுள்ளன. இவை பதிப்பாசிரியரால் எழுதப்பட்டது என்பதை உணர்த்தும் விதத்தில் பாடல்களுக்கு என அமைக்கப் பெற்ற எழுத்து வகையிலிருந்தும் வேறுபட்ட பிறிதொரு எழுத்து வகையில் அமைக்கப்பட்டுள்ளன; மேலும் அவை தடிமன் எழுத்துக்களில் தரப்பட்டுள்ளன.

7) இலக்கண அமைப்புக்கு மாறுபட்ட வந்த கீழ்க்காணும் வகையிலான சொற்கள் பதிப்பாசிரியரால் மாற்றத்திற்கு உட்படுத்தப்பட்டன.

| | | |
|---|---|---|
| கேள்க்க | > | கேட்க |
| இம்மைதனில்த் | > | இம்மைதனில் |
| பிரகே | > | பிறகே |
| மகிள்ந்து | > | மகிழ்ந்து |
| புரப்பட்டார் | > | புறப்பட்டார் |

என்பன சில எடுத்துக்காட்டுகள். இவை போல மேலும் பல வகையான எழுத்துப்பிழைகளும் இனங்கண்டறியப்பட்டு மாற்றப்பட்டுள்ளன.

இவ்விதம் பிரதி எடுக்கப்பட்டுள்ள இந்நூலுள் கீழ்க்காணும் எண்ணிக்கையில் விருத்தங்களும், நடை அமைப்பில் அமைந்த பாடல்களும் உள்ளன.

| | பாடல்கள் | அடிகள் |
|---|---|---|
| நாற்சீர் விருத்ததம் | 1 | 4 |
| அறுசீர் விருத்தம் | 196 | 784 |
| எண்சீர் விருத்தம் | 7 | 28 |
| பதினான்கு சீர் விருத்தம் | 1 | 4 |
| நடை | 37 | 7,236 |
| | 242 | 8,056 |

பதிப்பிற்கு எடுத்துக் கொண்ட சுவடியில் மூன்று விதமான காலங்கள், மூன்று விதமான ஆசிரியர் பெயர்கள் உள்ளன. ஆசிரியர், காலங்களைக் குறிப்பிடும் நூற்பகுதிகளை ஓரிரு முறை படிக்கும் பொழுதே முறையே நூலாசிரியர், அவரின் காலம் ஆகியவற்றை நூல் பிரதி எடுத்தவர்கள், அவர்களின் காலங்கள் ஆகியவற்றிலிருந்து வேறுபடுத்தித் தெளிவுபடுத்த முடியும்.

"திருந்து புகழ்வைகை தென்வீரை யம்பதியான்
பொருந்து தவம்பெற்றோன் புகழழகு தன்புதல்வன்
அன்னவனாம் பொன்னழகு அருகனென வேவளரும்
மன்னனாம் பொன்ன மகீபனுட தன்மருகன்"

(பா. 229 அடி. 23-26)

என்னும் இப்பாடலடிகள் பாடலாசிரியர் பற்றிய குறிப்புகளைத் தருகின்றன. தென்வீரை என்னும் ஊரில் இப்புலவர் பிறந்தவர் என்பதை 'தென்வீரை யம்பதியான்' என்னும் சொற்றொடர் உணர்த்தும். இவ்வூர் பாண்டிய நாட்டிலுள்ள சேது சமஸ்தானத்தின் ஆட்சிக்குட்பட்ட பகுதியாகும். வீரசோழன் என்ற பிறிதொரு பெயரும் இவ்வூருக்கு உண்டு. இவ்வூரிலி ருந்து வீரை அம்பிகாபதி, வீரைக் கவிராச பண்டிதர், வீரை வெளியனார், வீரை வெளியன் தித்தனார் போன்ற பல புலவர்கள் சங்ககாலம் முதற்கொண்டு தோன்றியிருக்கின்றனர்.

" . . . . புகழழகு தன்புதல்வன்
அன்னவனாம் பொன்னழகு . . . ."

(பா. 229 அடி. 23 & 24)

என்கிற இவ்வடிகள் புலவரின் பெயரையும், அவரின் தந்தையின் பெயரையும் குறிப்பிடுகின்றன. இப்புலவரின் பெயர் பொன்னழகு என்பதையும், இவரின் தந்தையின் பெயர் புகழழகு என்பதையும் அறியமுடிகிறது. இப்பாடல் அடிகள் அன்றி பிற எவ்விடங்களிலும் நூலாசிரியர் பற்றிய செய்திகள் தரப்படவில்லை. இவரது மாமனார் இவ்வூரில் பெரிய தனவந்தராகவோ, அல்லது குறுநில மன்னராசவோ விளங்கி இருக்கக் கூடும். பாட்டினுள்,

"மன்னனாம் பொன்ன மகீபனுட தன்மருகன்"

(பா. 229 அடி. 26)

என்று பயின்று வரும் தொடர் புலவரின் மாமன் முறையினை உடையவர் மன்னன் என்னும் குறிப்பைத் தருகிறது.

தென்வீரையம்பதியில் வாழ்ந்த பொன்னழகு என்னும் இப்புலவர் மூல நூலான வியாச பாரதத்தில் தேர்ச்சிப் பெற்றவர் என்பதையும், விருத்தம் பாடி நூலைச் சிறப்பாகச் செய்தவர் என்பதையும் இந்நூல் பாடலடிகள் காட்டுகின்றன (பா. அடி. )

"மெய்கண்ட வேத வியாசர் மொழிந்தகதை
வைகுண்ட அம்மானை மகாபாரத முதல்நூலை"

என்னும் இவ்வடிகள் ஆசிரியர் நூலாசிரியரின் மகாபாரதத் தேர்ச்சியை உணர்த்தும். மேலும் நூலாசிரியர் தாம் இந்நூலை மூல நூலை விடவும் பெரிய அளவில் அமைக்கப் பாடியதாகக் கூறுகிறார்.

"வாக்கருளிச் செய்வாய் வடவன் முடித்தகதை
சுருக்கமாய்ப் பாடினதைத் தோற்றமுடன் தெரிந்து
பெருக்க விரிவுசெய்து பெருமாள் பதம்போற்றி"

(பா. 4 அடி. 89-92)

என்னும் இவ்வடிகள் இக்கருத்தை விளக்கும். இந்நூல் பாடிய புலவர் ஸ்ரீரங்கராயர் என்பவரின் சீடராக இருந்து, கல்வி கேள்விகளில் சிறந்து இந்நூலைச் செய்துள்ளார் என்பதை அறிய முடிகிறது.

"எண்ணரிய சீரங்க ராயருட தன்சீஷன்
. . . . . . . . . . . . . . . .
சொல்லும் வைகுண்டகதை சோர்வறவே யான்பாட"

(பா. 4 அடி. 44 - 48)

என்னும் அடிகளால் இதனை உணரலாம். இந்த ஸ்ரீரங்கராயர் குறித்தும், இந்நூலை எழுதிய பொன்னழகு என்பவர் குறித்தும் வேறு செய்திகளை அறிந்து கொள்ள இயலவில்லை.

இந்நூலின் வேறுபட்ட இரு பிரதிகள், அவற்றைப் பிரதியெடுத்தோர், அவைகளின் காலம் ஆகியன ஆராயத்தக்கன். அவ்வகையில் நயினார்க் கோனார் எழுதிய பிரதி, சேதுராயன் எழுதிய பிரதி ஆகியன முறையே அமைகின்றன.

"1088-ம் ஆண்டு சித்திரை மாதம் 27-ம் தியதி வெள்ளிக்கிழமையும் மிருகசீஷ நட்செத்திரமுஞ் சித்தயோகமுங் கூடிய சுபயோக சுபதினத்தில் பாம்பன் குளத்திலிருக்கும் நாராயணமூர்த்தி ஆலயத்திற்கு மேற்படி ஊர் நாராயணக் கோனார் மகன் நயினார்க் கோனார் எழுதி வைத்த வைகுண்ட அம்மானை எழுதி முகிந்தது. முற்றும். ஸ்ரீமன் நாராயண மூர்த்தியினுடைய அனுக்கிரகமும் உமையாள் பார்பதி அம்மாளுடைய இரக்கம் பொருந்திய தயவும் எப்போதும் உண்டாகி விக்கினங்களின்றிக் காப்பாற்றிக் கொள்வார்களாகவும் வேணும். மகாவிஷ்ணுவின் அனுக்கிரகமுண்டாகச் சுவாமி துணை." என்னும் இக்குறிப்பு பொன்னழகுப் புலவர் எழுதிய வைகுண்ட அம்மானை நூலின் நேரடிப் பிரதியைப் பார்த்தோ அல்லது மூலப்பிரதியின் வழிப்பிரதியைப் பார்த்தோ நயினார்க் கோனார் என்பவர் எழுதிய செய்தியை உணர்த்தும்.

இப்பிரதி செய்த நயினார்க் கோனார் என்பவர் கொல்லம் வருஷம் 1088-ம் ஆண்டு சித்திரை மாதம் அதாவது கி.பி. 1913-ம் வருஷம் மே மாதம் தமக்கென கிடைத்த வைகுண்ட அம்மானை பிரதியைக் கொண்டு பிரதி எடுத்தார் என்பதை அறிய முடியும். இவர் தந்தையார் பெயர் நாராயணக் கோனார் என்பதை சுவடிக் குறிப்பால் உணர முடிகிறது. இவ்வேட்டினைப் பலரும் படித்து இன்புறும் நோக்குமுடனும், திருமால் பக்தர்கள் வைகுண்ட ஏகாதசியின் பொழுது முற்றோத பயன்படும் நிலையிலும் நயினார்க் கோனார் எழுதி வைத்திருக்கக் கூடும். இவ்வேடு பாம்பன்குளத்திலிருக்கும் நாராயண மூர்த்தி ஆலயத்திற்காக எழுதப்பட்டது என்கிற செய்தியையும் ஏட்டிலுள்ள குறிப்பால் அறியமுடிகிறது. ஏட்டைப் பிரதி செய்தவர், "ஸ்ரீமன் நாராயண மூர்த்தியினுடைய அனுக்கிரகமும் உமையாள்பார்பதி அம்மாளுடைய இரக்கம் பொருந்திய தயவும்" வேண்டுவதால் இவர் சைவ வைணவ காழ்ப்புணர்ச்சி அற்றவர் என்பதையும் அறிந்து கொள்ள முடிகிறது.

இப்பிரதியைப் பின்பற்றிச் சேதுராயன் என்பவர் பிறிதொரு பிரதி செய்துள்ளார். இவ்வேட்டில் இறுதியில் அவர், "இந்த வைகுண்ட அம்மானை புராணம் எழுதினேன் பாம்பன் குளம் மால் நாடார் குமாரன் சேதுராயன். இதில் பிழையிருந்தால் கற்ற பெரியோர்கள் பிழை திருத்தி மன்னிக்க வேண்டுமென்று பெரியோர்களைக் கெஞ்சி மன்றாடுகிறேன். ஸ்ரீமன் நாராயண மூர்த்தி துணை." என குறிப்பு தருகிறார்.

இதைப் போல நூலின் தொடக்கத்திலும் இவ்வேட்டைப் பிரதி செய்தவர், "1088ஆம் ஆண்டு மாசி மாதம் 21ஆம் தியதி பாம்பன் குளத்திலிருக்கும் நாராயண மூர்த்தி ஆலயத்திற்கு எழுதி வைத்த வைகுண்ட அம்மானை நீடுமழ காலம் வாழ்க" என்ற பிறிதொரு குறிப்பையும் தருகிறார். ஆதலின் இது கி.பி. 1914-ம் வருஷம் பெப்ரவரி மாதம் திருமால் கோயிலுக்காக எழுதப்பட்ட பிரதி என்பதையும், இது நயினார்க்கோனார் எழுதிய வைகுண்ட அம்மானை பிரதியை அடிப்படையாகக் கொண்டு பிரதி செய்யப்பட்ட மூன்றாம் பிரதி என்பதும் விளங்கும். நூலைப் பிரதி செய்த சேதுராயன் என்பவர், '

"என்னப்பன் செந்தூ ரய்யன் இன்பநற் கிளையரு ளாரே
பொன்னப்பன் துன்பந் தீர பொருந்தியிக் கதையம் மானை"

(பா. 3 அடி. 1 & 2)

என்னும் அடிகள் மூலம் பொன்னப்பன் என்பவரின் துன்பம் தீரும் பொருட்டு இவ்வம்மானையைப் பிரதி செய்ததாகக் கூறுகிறார். வைகுண்ட அம்மானை கதையின் மையம், செனமேசெயன், வியாசர் பாண்டவர்களின் வைகுண்டப் பயணத்தைக் கூறக் கேட்டு நோயால் ஏற்பட்ட துன்பம் தீர்ந்தது என்பது இங்கு ஒப்பிடத் தக்கது. இவ்வம்மானை கதைப்பாடலைப் பிரதி எடுத்தவர் இந்நூலை, "இந்த வைகுண்ட அம்மானை புராணம் எழுதினேன்" எனக் குறிப்பிடுவதும் இந்நூலின் தெய்வீக மகத்துவத்தைக் கருதியே ஆகும்.

நயினார்க் கோனார், சேதுராயன் ஆகியோருக்கு முன்பாகவும் பல்வேறு வைகுண்ட அம்மானைச் சுவடிகள் காணப்படுகின்றன. R. 3455-ம் எண்ணில் பதிவுச் செய்யப்பட்ட அரசினர் கீழ்த்திசை சுவடி நூலக வைகுண்ட அம்மானையில் கீழ்க்காணும் குறிப்பு உள்ளது.

"1870 வருஷம் டிசம்பர் மாதம் 25 தியதிக்கு சரியான பிரமோதூத வருஷம் அய்ப்பசி மாதம் 10 தியதி ருதி வாரமும் சோதி நச்சேத்தரமும் திரிகை(யை) திதியும் கூடிய சுபதினத்தில் சேலம் ஜில்லா . . . சுப மஸ்து சிவ சிதம்பரம் துணை. செவ்வாறு ஆண்டவர் சகாயம். கடவுள் துணை."

இதனால் இச்சுவடி கி.பி. 1870-ல் எழுதப்பட்ட சுவடி என்பது தெரியவரும். இக்குறிப்பு பதிப்பிற்கு எடுத்துக்கொண்ட சுவடியில் தரப்படும் இரு வேறு பிரதிகளின் காலங்களையும் விட பழமையானது என்பதையும் உணர்த்தும். திருவனந்தபுரத்திலுள்ள அரசினர் கீழ்த்திசை சுவடி நூலகத்திலுள்ள பதிவு எண் 10293-ல் "922ஆம் ஆண்டு மார்கழி மாதம் 11ஆம் தேதி எழுதியது" என்கிற குறிப்பு உள்ளது. இவ்வாண்டின் படி வைகுண்ட அம்மானை கி.பி. 1817-ம் ஆண்டில் பிரதி செய்யப்பட்டுள்ளதை என்பதை அறியலாம். இவ்வேடும் நயினார்க் கோனார், சேதுராயன் ஆகிய ஏடுகளைப் பிரதியெடுத்தவர்களுக்கு முந்தைய ஏடே. இவ்விதம் சேதுராயனால் படியெடுக்கப்பட்ட வைகுண்ட அம்மானை ஏட்டிற்கும் முந்தைய நிலையில் பல படிகள் இருந்திருப்பதை அறிய முடிகிறது.

இவற்றுள் பவ வருஷத்தில் எழுதப்பட்ட மூல ஏட்டிலிருந்து தமிழகத்தின் பெரும் பகுதிகளிலும் கையாளப்படும் 60 ஆண்டு கால சக்கர சுழற்சியை உடைய கால அமைப்பைப் பின்பற்றிச் சில அண்மைப்படிகளும், தமிழகத்தின் தென் பகுதிகளில், குறிப்பாகத் திருவிதாங்கூர் சமஸ்தான ஆட்சியின் செல்வாக்கு உடைய பகுதிகளில் கொல்லம் ஆண்டைப் பின்பற்றிச் சில அண்மைப்படிகளும் எழுதப்பட்டிருக்க வேண்டும். கிடைத்த ஏடுகளின் அடிப்படையில் கீழ்க்காணும் விளக்கப் படம் எது மூலப்படி, எவை அண்மைப் படிகள், எவை கீழ் வழி வந்த ஏடுகள் என்பதைக் காட்டும்.




இவ்விளக்கப்படத்தில் சுவடிகளின் முதல் இறுதிகளில் முறையே காலக் குறிப்பு உள்ளவைகள் மட்டுமே சேர்க்கப்பட்டுள்ளன. தனியார், கோயில்களில் உள்ள பிற வைகுண்ட அம்மானை சுவடிகளையும் சேகரித்து இவற்றை வகைப்படுத்தும் பொழுது மூல ஏட்டிலிருந்து எவ்விதம் எந்தெந்த காலங்களில் அண்மைப் படிகள் உருவாகின என்பதையும், முறையே கி.பி. 1914, 1915-ம் ஆண்டுகளில் பிரதியெடுக்கப்பட்டவைகளுக்கு நேர் முந்தைய வழி ஏடு எது என்பதையும் தெரிந்து கொள்ள அதிகம் வாய்ப்பிருக்கிறது.

பல வித அண்மைப்படிகளைக் கடந்து பதிப்பிற்கு எடுத்துக் கொண்ட வழி ஏடு காணப்பட்டாலும் படி எடுத்தவரான சேதுராயன் சிறந்த புலமையாளர் என்பதை ஏட்டின் மூலம் அறிய முடிகிறது. நூலின் தொடக்கத்தில் அமைந்துள்ள கடவுள் வாழ்த்துப் பாடல்கள், பிரதி செய்த தன்னைப் பற்றியும் தன் குலத்தைப் பற்றியும் அவர் கூறும் சிறப்பு செய்திகள் அடங்கிய பாடல்கள் ஆகியன பிரதி செய்தவரின் கல்வியை உணர்த்தும்

ஏற்கனவே பல கதைப்பாடல்களின் சுவடிகளையும், இலக்கியச் சுவடிகளையும், வாய்மொழிக் கதைப்பாடல்களையும் நிறுவனத்தின் சுவடித்துறைப் பதிப்பித்துள்ளது. கதைப்பாடல்களாக மட்டும்

வில்லுப்பாட்டில் பாடப்பெறும் கதைப்பாடல்கள், வாய்மொழியாக வழங்கி வந்த கதைப்பாடல்கள், சிந்து மெட்டில் அமைந்த கதைப்பாடல், யட்சகான நாடக வடிவில் அமைந்த கதைப் பாடல்கள், நொண்டி நாடக வடிவில் அமைந்த கதைப்பாடல், அம்மானை வடிவில் அமைந்த கதைப்பாடல்கள் மற்றும் பிற கதைப்பாடல் என இதுவரையிலும் பதினெட்டு நூல்களை வெளியிட்டு உள்ளன.

1. வில்லுப்பாட்டு நிகழ்த்து கதைப்பாடல்கள்
   1. இராமர் கதை
   2. உச்சினிமாகாளி கதை
   3. குறுக்குளாஞ்சி கதை
   4. சின்னத்தம்பி கதை
   5. பலவேசஞ் சேர்வைக்காரன் கதை
   6. பெண்ணரசியர் கதை
   7. பெருமாள் சுவாமி கதை
   8. வெங்கலராஜன் கதை

II. வாய்மொழிக் கதைப்பாடல்கள்
   1. அண்ணன்மார் கதை
   2. சந்தனத்தேவன் கதை

III. சிந்து மெட்டில் அமைந்த கதைப்பாடல்
   1. புலித்தேவன் சிந்து

IV. யட்சகான நாடகங்கள்
   1. சாரங்கதரன் யட்சகானம்
   2. தேருர்ந்த சோழன் யட்சகானம்
   3. நீலி யட்சகானம்

V. நொண்டி நாடகம்
   1. திங்களூர் அருள்மலை நொண்டி நாடகம்

VI. அம்மானை கதைப்பாடல்கள்
   1. ஆமையர் அம்மானை
   2. மரி கருத்தம்மாள் அம்மானை

VII. பிற வகையினது
   1. வராங்கன் கதை

கதைப்பாடலின் வரிசையில் அம்மானை வகையில் இந்நூல் பத்தொன்பதாவது நூலாக நிறுவனம் வெளியிடுகிறது. நூற்களைத் தமிழ்ப் படித்தோர் மட்டுமன்றி உலகம் முழுவதும் பெருவாரியாக வழங்கப்படுகின்ற ஆங்கிலம் படித்தோரும் படித்துணர, அவற்றின் மொழிபெயர்ப்போடு வெளியிடுவதை நிறுவனம் வழக்கமாகக் கொண்டுள்ளது. வைகுண்ட அம்மானையும் ஆங்கில மொழிபெயர்ப்புடன் தரப்படுகிறது. மேலும் நூலின்

தமிழ் வரிவடிவ மொழியினைப் படித்துணர முடியாதவர்களுக்கு அதன் எழுத்துப்பெயர்ப்பும் தரப்பட்டுள்ளது. இவை மூன்றும் முறையே நூல் முழுதும் தமிழ்ப் பகுதி, அதன் எழுத்துப்பெயர்ப்பு பகுதி, தமிழ்ப் பகுதியின் ஆங்கில மொழிபெயர்ப்பு என்கிற வரிசை அமைப்பில் அமைக்கப்பட்டுள்ளன. மேலும் தமிழ், ஆங்கில மொழிபெயர்ப்பு ஆகியவற்றிற்கான பகுதிகளில் வரும் குறிப்புரைகள், விளக்கம் வேண்டி நிற்கும் அரிய சொற்களின் விளக்கக் குறிப்புகள் ஆகியனவும் அந்தந்தப் பகுதிகளிலேயே தரப்பட்டுள்ளன.

*நன்றியுரை*

இந்நூல் குறிப்பிட்ட காலத்தில் வெளிவருவதற்கு தேவையான அனைத்து உதவிகளையும் செய்தவர் ஆசியவியல் நிறுவன இயக்குநர் முனைவர் ஜி. ஜான் சாமுவேல் அவர்கள். அவர்களுக்கு நான் என்றும் நன்றிக் கடப்பாடு உடையேன்.

நூலின் அமைப்பு மற்றும் பாடலின் யாப்பு அமைதி ஆகியவற்றில் பெரிதும் கவனம் செலுத்தி நூல் சிறக்கத் துணை நின்றவர் நிறுவனச் சுவடித்தலைவர் முனைவர் பூ. சுப்பிரமணியம் அவர்களுக்கும் நான் நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டவன் ஆவேன்.

பாடலுக்குக் குறிப்புரை தயாரிப்பதிலும், பாடலைச் சீரமைப் பதிலும் தமிழ் மெய்ப்பு திருத்துவதிலும் சொல்லடைவு முதலியன தயார் செய்வதிலும் பேருதவிகள் புரிந்தவர்கள் திரு. இராதா ஜெயலட்சுமி, கு. செல்வ லட்சுமி, கோ. உத்திராடம், யா. அந்தோணி சாமி, பி. பன்னீர் செல்வம் மற்றும் இ. பகவதி ஆகியோர்.

அழகிய முறையில் கணனியில் அச்சு கோர்த்தும் விரைவாக நூல் வெளிவர துணைநின்றவரும் திருமதி த.செ. சாந்தம் அவர்கள், மற்றும் திரு. து. வேல்முருகன் ஆகியோர்.

அழகிய ஓவியம் வரைந்து அளித்தவர் அ.செ. நடராஜன், அழகாக அச்சிட்டோர் மாணவர் மறுதோன்றி அச்சகத்தார்.

ஆசியவியல் நிறுவனத்தில் நடைபெறும் சங்க இலக்கியங்களைப் பிற திராவிட மொழிகளில் மொழிபெயர்க்கும் திட்டத்தைத் தொடங்கி வைக்கும் தமிழக முதல்வர் மாண்புமிகு கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் தலைமையில் இந்நூல் வெளியிடப்படும் இத்தருணத்தில் அனைவருக்கும் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கி. ஜெய குமார்

## EDITOR'S NOTE

The palm leaf manuscript registration No.185, used for this publication belongs to The Institute of Asian studies. The dimension of this manuscript is 46 x 3 cm. The text is written on both sides of the palm leaves of the manuscript. Each page of the leaf is separated into three sections, and nine lines are written in each section. The whole work is rendered in the same way.

The copyist had provided some empty leaves at the front and the back of the manuscript. This, he might have done to facilitate their use when some leaves get damaged during handling. This system of providing empty leaves has been done in many manuscripts for the sake of beauty too.

The manuscripts, a) Reg. No. 2233-277 leaves (complete), b) Reg. No. 3455-343 leaves (complete), and c) Reg. No. 5086-182 leaves (complete), from Government Oriental Manuscript Library, Chennai, had been used for comparison with these manuscripts. They, and the one taken for publication have the same theme. But, as the length, the exaggerations and the shortcomings found in the anecdotes are too many, when compared with the text in publication, it was impossible to catalogue the differences.

In the manuscript of *Vaikuṇṭa ammāṉai* the following changes and additions were made as they were necessary.

1) In the songs, the letters were not dotted. For the clarity of meaning they had been dotted.

2) The songs in the original were written without either a beginning or an end. At the beginning of the songs the words *viruttam* or natai were used, depending on the type of the song. Deciding on these words and the pattern of the prosody used, the end of the songs had been found and numbered. To facilitate knowing as to how long is a song, every fifth line is numbered as 5, 10, 15, 20 continuously at the right side of the page.

3) The songs are subjected to prosody and accordingly had been given *acai* (metrical syllable) and *cīr* (metrical foot).

4) After the changes had been effected, usage and grammar in certain places were found to be wanting. Hence, letter combinations and words thus found to be grammatically wrong have been changed. The words that are changed are given as *cuvaṭi coṟkaḷ* on every page. But the dialectical words had been identified and are used as such.

5) Appropriate meaning for difficult and dialectical words are given with explanation.

6) To enable the reader to understand the movement of the story, sub-headings are given at places. To differentiate them from the main text, a different font is used in bold letters.

7) The following words that were against grammatical rules were changed by the editor as follows:

| | | |
|---|---|---|
| *keḷkka* | > | *keṭka* |
| *immaitanil* | > | *immaitaṉil* |
| *pirakē* | > | *piṟakē* |
| *makiḷntu* | > | *makiḻntu* |

Like this many mistakes were identified and corrected.

The book can be categorised in the following pattern:

| | Songs | Lines |
|---|---|---|
| *nārcīr viruttam* | 1 | 4 |
| *aṟucīr viruttam* | 196 | 784 |
| *eṇcīr viruttam* | 7 | 28 |
| *patināṅku cīr viruttam* | 1 | 4 |
| *naṭai* | 37 | 7,236 |
| | 242 | 8,056 |

In the manuscript of the publication, three periods and the names of three authors are mentioned.

It is easy to understand the difference in the period and the names between the copyists and the author easily, by reading the text once or twice.

The above lines mention about the author. The usage Teṉvīrai ampatiāṉ tells us that the author was born in a place called, Teṉvīṟai. This place belongs to the Cētu state of the Pāṇṭiya land. This place has another name, Vīracōḻaṉ. Vīṟai Ampikāpati, Vīraikkavirāca Paṇṭitar, Vīṟai Veḷiyaṉār, and Vīrai Veḷiyaṉ Tittaṉār are from this place. Some of them belong to the *Caṅkam* period (verse 229 lines

23&24) mention his and his father's names. We understand that the name of the author is Poṉṉaḻaku and his father's name is Pukaḻaḻaku. Apart from these lines there is no reference to the author anywhere. His father-in-law might have been either a rich man or a minor king. The lines (verse 229 line 26) refer to the fact that the king was his father-in-law. The fact that the poet, Poṉṉaḻaku who lived in Teṉvīraiampati, was conversant in *Viyāca pāratam* and that he made the work great by rendering many songs in *viruttam.*

The poet says that he rendered the work much bigger than the original (verse 4 lines 89-92). It is known further that the poet was the pupil of Sri raṅkarāyar, under whose guidance he became a scholar (verse 4 lines 44-48). We are not able to know anything else about either Poṉṉaḻaku or Sri raṅkarāyar.

Research may be made into the two different manuscript copies, those who copied them, and their period. The copies are made by Nayiṉār Kōṉār and Cēturāyaṉ. "On Friday, 27th in *cittirai, kollam* year 1088, an auspicious day when the star was *mirukacīriṭam*, the time was *citta yōkam* when at the temple of Nārāyaṉamūrtti at Pāmpaṉkuḷam, Nārāyaṉa Kōṉār's son Nayiṉār Kōṉār offered this document named *Vaikuṇṭa ammāṉai.* May the blessings of Sri Nārāyaṉamūrtti and Umaiyāḷ be on me as always. Let them guard me from possible troubles. Let God help me get the blessings of Mahā Viṣṇu." This note conveys the fact that Nayiṉār Kōṉār either copied from the original manuscript or from the copy of the original.

There are manuscripts of *Vaikuṇṭa ammāṉai* before those of Nayiṉār Kōṉār and Cēturāyaṉ. In the *Vaikuṇṭa ammāṉai* manuscript R. 3455, found in the Government Oriental Manuscripts Library the following note is found.

"On 25th December, 1870 with the Tamil equivalent of 10th *aipaci, prammatūta* year, *kuru vāram, cōti* star, *tirikai titi*, an auspicious day, at Salem district . . . . *Cupa mastu.* Civa Citamparam is help. God is my guide."

It is clear from the above that this belongs to the year 1870 A.D. It is also clear that it is dated earlier than the two copies used for this publication. The manuscript Reg. number 10293 notes, " Written on 11th *mārkaḻi*, 922." This reference reveals that *Vaikuṇṭa ammāṉai* was copied in 1817 AD.

This copy is also earlier than the copies of Nayiṉār Kōṉār and Cēturāyaṉ. Thus we can conclude that there were many copies before the *Vaikuṇṭa ammāṉai* in question.

Some of the copies might have been made in the *pāva varuṣam* (before the sixty year cycle of the Tamil Nadu calender) following the method of having a 60

year cycle as it is in Tamil Nadu, or following the *Kollam* year of the Travancore state. They would have been of recent origin. The following diagram makes it clear as to which is the original copy, which are of recent origin and which are copies of copies.




This diagram includes only the copies which have a reference to the period. There is a rich possibility of knowing about the period of the work if we could collect various copies from individuals and various temples and categorize them. It is also possible to know from them as to how and from where the recent copies were made. We may also be able to know as to which work served as the original for the copies made in 1914 and 1915 A.D.

Though it is a fact that the present copy belongs to the recent copies, it is to be noted that the copyist Cēturāyaṉ is very knowledgeable. The songs of invocation, and the songs that contain references to him and his ancestry speak about his scholarship.

The Department of Manuscriptology of the Institute of Asian Studies has published many manuscripts of ballads, literary works and oral folk ballads. A total of 18 books are published by the Institute comprising of the ballads that existed only in the form of *villup pāṭṭu*, the ballads that existed only as oral poetry, ballads made in *cintu* rhythm, ballads in the form of *yaṭcakāṉa*, drama forms, ballads in the genre of *noṇṭi*, dramatic form', ballads in *ammāṉai* genre and many other ballads.

I Ballads in the performing art villup pāṭṭu

1. *Rāmar Katai* - The Epic Eternal

2. *Uccinimākāḷi Katai,* 3. *Kurukaḷāñci Katai,* 4. *Cinnatampi Katai* - The Wandering Voice

5. *Palavēcam Cērvai Katai* - The Unsung Melodies

6. *Peṇṇaraciyar Katai* - The Valorous Virgins

7. *Permāḷ Cuvāmi Katai* - The Divine Pilgrimage

8. *Veṅkalarājan Katai* - The Dateless Muse

9. *Tampimar Katai* - The Scoarching Guile

II Ballads as oral poetry

1. *Aṇṇanmār Katai* - Elder Brothers Story

2. *Cantaṇatēvan Katai* - The Bundit Brothers

III Ballads in the *Cintu* rhythm

1. *Pulitēvan cintu* - The First Freedom Fighter

IV *Yaṭcakāna* dramas

1. *Cāraṅkatāran yaṭcakānam* - A Tale of Betrayal

2. *Tērūrnta cōḻan yaṭcakānam* - Where Justice Chimes

3. *Nīli yaṭcakānam* - A Tale of Nemesis

V *Noṇṭi Nāṭakam*

1. *Tiṅkalūr aruḷ malai noṇṭi nāṭakam* - Redemption Through Grace

VI *Ammānai* ballads

1. *Āmaiyar ammānai* - The Vows Fulfilled

2. *Mari Karutammāl ammānai* - The Defender of the Faith

VII Others

1. *Varāṅkan Katai* - Destiny and Divinity

This book, in the genre of *ammāṉai,* is published by the Institute of Asian Studies as the nineteenth book among the ballads. It is customary of the Institute to publish not only the Tamil version but also the English translation to enable the English knowing people allover the world to study and enjoy. *Vaikuṇṭa Ammāṉai* also comes with an English translation. For the benefit of those who do not know the Tamil script, transliteration of the text is also provided. Explanatory notes and meaning for difficult terms are given both in Tamil and English in the respective pages themselves.

**Acknowledgement**

I am very grateful to Dr.G. John Samuel, Director, Institute of Asian Studies, who was kind enough, permitting me to publish this book, helping me in every aspect and guiding me throughout.

I thank Dr.P. Subramaniam, Head, Department of Manuscriptology, who has evinced much interest in the publication of my books and guided me at every step. Dr.V. Murugan meticulously went through both the Tamil and English texts and offered valuable suggestions.

For the book to come to shape many did help. Thiru. Ratha Jayalakshmi modified the prosody of the work. Ms.K. Selva Lakshmi, G. Uthiradam,Y. Anthoni Samy, K. Panneer Selvam and Mrs.E. Bhagavathi rendered their willing help in proof reading and in the preparation of the index.

Mrs.T.C. Santham took pains in designing the book on the computer. Mr.D. Velmurugan assisted her.

The librarian Mr.Periannan,Librarian, Institute of Asian Studies, Soundrapandian, Curator, Government Oriental Manuscript Library, was kind enough, giving me some palm-leaf manuscripts to compare with the one taken for the publication and giving permission to take Xerox copies of a an ancient book of Vaikunta ammanai.

Mr.A.S.Natarajan was responsible for the beautiful get-up or the book. The Student Xerox are responsible for the elegant printing .

When this book is released by the Honorable Chief Minister of Tamil Nadu, Dr.Kalaignar M.Karunanithi, I thankfully remember all these people who stood behind me in bringing this book on print.

**Dr. Jaya Kumar**

## Translator's Note

Thoughts are translated in to words, words into ideas and ideas into language. Languages are mere abstractions as they convey only a portion of the experiences. Experiences can never be shared completely, for, they are, like pain and pleasure, unique to the individual. But, the propagation of an idea needs communication, and communication needs a language, though most of the words we find in any language express only a part of an experience. Can anyone testify to the real feelings of the Pāṇṭavars? From the speeches of Kaṇṇaṉ can we come to any conclusion about Kaṇṇaṉ's feelings? So, when it comes to a translation, the central idea, the theme that matters most. If it can translate the real intent and the purpose of the author, I think, it has achieved its aim.

*Vaikuṇṭa ammāṉi* posed certain peculiar problems to me. These stories could be told in a day, or more than a day or sometimes in a fortnight. Hence, flexibility is the key word in the composition of such ballads. There are peculiarities that take the form of often repeated phrases varying in length from a few words to several lines, some found many times and some found only two or three times. Kaṇṇaṉ is always referred to as *kāyam* flower coloured, dark cloud coloured etc. Vimaṉ is always referred to as the strong shouldered and Arjuṉaṉ as an able marksman etc. Practically every one of the characters of the poem, mortal or immortal, has one or more of these epithets attached to his name, and they are rarely referred to in any other way. It is now recognized that in illiterate societies a large body of 'literature' can be, and is, composed and retained in the mind for oral presentation. In illiterate societies the poet composes in lines of poetry that have a pronounced metrical or rhythmical pattern, making frequent use of set patterns of words, some long, some short- the epithets and formulas of the poet. These patterns are fixed by the oral poet, and his stock of them is gradually built up over a period of time to furnish him with a ready supply of fixed phrases to fit almost any occasion. He will have a formula for sitting down to eat, he will have one for describing the female characters, there will be one for sunrise and sunset, and there will be some longer ones in the forms of anecdotes to be added as the occasion arises. The oral poet cannot falter in his recitation, if he wants to make a success of his chosen profession. He cannot pause to think of a next line or to meditate on what he has already said. The skilled oral poet will have no need to pause or falter, as he has in his mind hundreds of ready-made phrases and lines to be called forth on demand. These are the living techniques in oral composition.

The professional and semi-professional bards entertain at temple festivals, weddings and functions of importance allover Tamil Nadu. Some of them are liter-

ate and others are illiterate, a factor that seems to have no effect what so ever on their abilities as oral poets, since the technique is the same, whether the bard can read or not. He begins by listening to older bards and learns certain themes. These themes are taken from the folklore, from stories connected with the exploits of great national, epic heroes of the past, and from recent historical events. He has learned a certain number of stories and themes, he learns the epithets and formulas used by the older, experienced bards. And then he is ready to recite in public himself. The bard does not memorize a story that he has read or heard from another. Each recitation of any given tale is new composition in itself and differs from each previous recitation. The differences are, however superficial, consisting mainly in the arrangement of events and in the formulas and epithets used. The bard can make his tale long or short at will. If it is to be a long recitation he need only to incorporate more themes in his recitation. The only problem is in adjusting the beginning and end of several different themes so as to enable them to fit together in one continuous narrative. Hence, it is difficult to find about when, where and by whom the work was composed.

During translation, I encountered quite a few difficulties. The most problematic one was the repetition of epithets and lines as a whole. I have retained them at certain places and omitted at others, observing no special criterion for doing so. Wherever I felt that they would hinder the free movement of the story I have omitted. To retain the special flavour of such a folklore I have included certain stock phrases and words so that the translation would be able to throw some light, however little it may be, on the richness of the Tamil folklore genres. Another problem I faced was while translating the empty words, the author has used, either for the sake of rhythm or melody or for maintaining the grammatical aspect of the metre. In most of the places I had to omit them, for the simple reason that they would gobble up pages quite unnecessarily. In some places the anecdotes are too long and repetitive. It is always a cursed entity encountering the Pāṇṭavar, after a fight with one of the Pāṇṭavar would get the curse removed and would go away, narrating their story to them. Some of the incidents are quite wordy and hence I had shortened them, giving only the gist.

I have not followed any metrical foot, because I felt that I would not be able to catch some of the meanings I have now if I attempted to do so. My main intention while translating the work was to make it easily understandable, even for a casual reader. In spite of the efforts I had taken to avoid factual or any other error, there might have been quite a few that escaped my notice. Kindly forgive them. Bringing them to my notice would help me in doing a better job of offering my mite to the language I love, Tamil.

I thank to **Dr. G. John Samuel**, Director, Institute of Asian Studies, for giving me an opportunity to serve my mother tongue. My heartfelt thanks to him for his great service to the cause of Tamil.

I cannot but mention the meticulous work, the research **Dr. K. Jaya Kumar** has done in compiling such a difficult text from the manuscript. I would like to record here that but for his exhaustive work this translation would not have been possible.

I thank my good friend **Dr.V. Murugan** for his guidance and help whenever I was in a blind alley. I thank my daughter for making this work possible.

**K.Mohan Ram**

# ஆய்வுரை

வியாசர் எழுதிய மகாபாரதத்துள் சுவர்க்காரோகணப் பருவத்தில் கூறப்படும் கதைப்பகுதிகளே வைகுண்ட அம்மானைக் கதைக்கு அடிப்படையானதும், காலத்தால் முந்தியதுவுமாகும். எனினும் வைகுண்ட அம்மானைக்கு முன்பாகவே 'பெருந்தேவனார் பாரதம் என்னும் மாவிந்தம்' நூல் பாண்டவர்களின் வைகுண்ட பயணத்தை விவரித்துக் கூறுகிறது. இதற்கு அடுத்த நிலையில் நல்லாப் பிள்ளையின் பாரதம் வியாசரின் சுவர்க்காரோகணப் பருவத்தையும் தன் நூலில் எடுத்தாள்கிறது. இவ்விரு நூல்களும் செவ்வியல் இலக்கியத் தகுதி பெற்ற நூல்கள் ஆகும். இவ்விரு நூல்களுக்கும் இணையான நாட்டார் இலக்கியத் தகுதி பெற்றதும், வியாசரின் சுவர்க்காரோகணப் பருவத்தைத் தமிழ் மொழியில் கூறுவதுவுமான பல நாட்டார் இலக்கிய வகை சார்ந்த வைகுண்ட அம்மானை நூல்கள் உள்ளன.

பாண்டவர்களும் பாஞ்சாலியும் வைகுண்டம் செல்வதாகக் கூறப்படும் உரைநடைக் கதைகள், கூத்துகள், வில்லுப்பாட்டுகள், உடுக்கைப் பாட்டுகள், அம்மானைக் கதைகள் முதலியன தமிழகத்தில் செல்வாக்குடன் திகழ்ந்தன. தருமர், பீமன், அர்ச்சுனன், நகுலன், சகாதேவன், திரௌபதை என்னும் அறுவர்களும் தமிழ் மக்களால் நேசிக்கப்படும் பாத்திரங்களாகத் தமிழ் மொழி இலக்கியத்தில் காணப்பட்டனர். எந்தளவு சூதாட்டத்தால் நாடிழந்து கானகத்தில் வசித்து, கண்ணன் துணையோடு கௌரவர்களோடு போராடி நாட்டைப் பெற்று வாழ்ந்த பாண்டவர்களின் வாழ்க்கை இன்றளவும் மக்களால் செவ்வியல் இலக்கிய வடிவிலும், நாட்டார் இலக்கிய வடிவிலும், பிரசங்க வடிவிலும் படிக்க, பார்க்க, கேட்கப்படுகிறதோ அந்தளவு அவர்கள் வைகுண்டம் சென்ற நிகழ்வும் படிக்கவும், பார்க்கவும், கேட்கவும்படுகின்றன. இதை வைகுண்ட அம்மானை தொடர்பாகக் கிடைக்கும் ஏராளமான சுவடிகளே உறுதி செய்யும்[1], பாண்டவர்கள் திரௌபதையோடு வைகுண்டம் சேர்ந்த கதையின் செல்வாக்கு தமிழகத்தில் காணப்படும் மகாபாரதத்தின் செல்வாக்குடனும் ஒப்பிடும் தன்மையில் இவ் ஆய்வுரை அமைக்கப்படுகிறது. இவ் ஆய்வுரை பாரதக் கதைக்கு இந்திய அளவிலும், திராவிட மொழிகளின் அளவிலும் காலந்தொறும் இருந்த செல்வாக்கைக் கூற முற்படுகிறது. இப்பாரதக் கதை செவ்வியல் இலக்கியங்களிலும் நாட்டார் இலக்கியங்களிலும் செல்வாக்குடன் திகழ்ந்த தன்மையையும் இவ் ஆய்வுரை தெளிவுபடுத்துகிறது.

---

1. வைகுண்ட அம்மானை சுவடிகள் குறித்த விவரங்கள் பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளது.

## பாரதக் கதையின் செல்வாக்கு

இந்தியா முழுவதும் உள்ள எழுத்து மொழிகளில் மகாபாரதக் கதைகள் காணப்படுகின்றன. எழுத்து மொழிகள் அல்லாதனவற்றிலும் இக்கதைகள் வாய்மொழியில் செல்வாக்குடன் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. ஒரு மையக் கதையைச் சுற்றி ஏராளமான கிளைக்கதைகளுடன் மகாபாரதம் காணப்படுவதும், ஒவ்வொரு கதையும் ஏதோ ஒரு நீதியைப் போதிக்கும் தன்மையில் அமைந்திருப்பதும், கதையின் பாத்திரங்கள் இன்றைய மனித தர்மங்களிலிருந்து அதிகம் விலகிப் போகாமையும், இன்னும் பல காரணங்களால் இந்தியாவின் பல திறத்து மக்களோடு இக்கதை பின்னிப் பிணைந்துள்ளது.

J. Murray Mitchell என்பவர் மகாபாரதத்தின் தத்துவமும், அறக் கருத்துக்களும் இந்தியா முழுமையும் உள்ள இந்துக்களின் மனங்களை ஆழமாகப் பாதித்துள்ளன என்கிறார்.[1] இன்னும் உயர்வாக மகாபாரதம் இந்திய மக்கள் வாழ்வியல் நெறிமுறைகளுக்கும், ஒழுக்கங்களுக்கும், தத்துவங்களுக்கும் உரிய அடிப்படை நூல் என்பார் பிறிதொரு அறிஞர்.[2] நா. வானமாமலை கதாபாத்திரங்களும் மக்களும் உறவாடும் நிலையில் பாரதம் படைக்கப்பட்டுள்ளது என்கிறார். மேலும் அவர் அர்ஜுனன், பீமன் ஆகியோர் மக்களின் 'உறவுடைய வீரர்களாக'க் காட்சியளிப்பதாகக் கூறுகிறார்.[3] மகாபாரதத்துள் சிறந்து விளங்கும் பாத்திரமும், விஷ்ணுவின் அவதாரமாகக் கொள்ளப்படும் கண்ணன் ஏனைய விஷ்ணுவின் அவதாரங்களைப் போலன்றி மக்களோடு மக்களாக வாழ்கின்றவனாகவும், நண்பர்களுக்கு உதவுகின்றவனாகவும், 'மனிதப் பண்புகள் நிறைந்தவனாகவும்' காணப்படுவதும் இவ்விதிகாசம் பாமரர்களைக் கவர அடிப்படையாக அமைந்தது என்றும் அவர் குறிப்பிடுவார். "மகாபாரதம் உலகப் பெருங்காப்பியங்களுள் மிகச் சிறந்த ஒன்று. அதில் சொல்லப்படாத நீதிகளும் வாழ்க்கை முறைகளும் தருமங்களும் உலகியல்பும் இல்லை. நீதியையும் இராசதருமத்தையும் போதிப்பதற்கென்றே அது வந்தது" எனப் பாரதக் கதையின் பெருமையைப் பேசுவார் மு. அருணாசலம்.

---

1. "Whatever impression the philosophical and moral portions may have made on the Hindu mind, there is no question that the story contained in the *Mahabharata* has powerfully influenced every part of India." J. Murray Mitchell, *Hinism past and present,* p.130

2. "Indians themselves consider the Mahābhārata doubtless an epic, as a work of the art of poetry (*kāvya*), but at the same time theyconsider it also as a text book of morals of law and philosophy based on ancient tradition and hence endowed with indisputable authority"

3. Maurice Winternitz, *History of Indian Literature Vol.I.*

### மகாபாரதத்தில் கண்ணன் சிறப்பு

பாரதக் கதையின் தெய்வ அம்சமாகிய கண்ணன் இந்தியா முழுமையும் வழிபடுகடவுளாகக் கொள்ளப்படுகிறார். கிருஷ்ணன், வாசுதேவன், தாமோதரன், கோவிந்தன், புருஷோத்தமன், மாதவன், கேசவன், நாரணன், நாராயணன் ஆகிய பெயர்கள் கண்ணன் சார்புடையனவாகக் காணப்படுகின்றன. இந்தியாவின் அனைத்துப் பகுதிகளிலும் வைஷ்ணவக் குடும்பங்களில் சிறப்பாகவும், ஏனைய இந்து மதத்தின் உட்பிரிவுகளில் பொதுவாகவும் இப்பெயர்கள் ஆண் குழந்தைகளுக்குச் சூட்டப்படுகின்றன. நாமதீபநிகண்டு தெய்வ வர்க்கம் பிரிவில் விஷ்ணுவின் 120 பெயர்களைத் தருகின்றது.[1] அவற்றுள் பெரும்பான்மையானவை கிருஷ்ண அவதாரத்தோடு தொடர்புடையதாகவும், மகாபாரதக் கதை நிகழ்வுகளின் அடிப்படையில் பிறந்தனவாகவும் காணப்படுகின்றன.

### சங்க காலத்தில் பாரதக் கதையின் செல்வாக்கு

சங்க இலக்கியம் தொட்டே தமிழகத்தில் பல புலவர்கள் தம் பெயரைக் கண்ணனோடு தொடர்புபடுத்தி அமைத்துக் கொண்டனர். உறையூர் மருத்துவன் தாமோதரனார், காவிரிப்பூம்பட்டினத்துச் சேந்தன் கண்ணன், தாயங் கண்ணன், நாமலார் மகன் இளங்கண்ணன், பூங்கண்ணன், கிடங்கில் குலபதி நக்கண்ணன், சேந்தன் கண்ணனார், தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனார், வடம வண்ணக்கன் தமோதரன், வேம்பற்றூர்க் கண்ணன் கூத்தன் முதலிய பல பெயர்கள் இவ்வகையில் குறிப்பிடத்தக்கன.

சங்க இலக்கியத்துள் திருமால் குறித்த ஏராளமான செய்திகள் இடம்பெற்றுள்ளன. அதிலும் குறிப்பாகப் பரிபாடலில் திருமாலைக் குறித்துத் தனிப்பாடல்கள் உள்ளன. திருமால் குறித்துப் பொதுநிலையில் புகழ்ந்துரைக்கும் சங்க இலக்கிய நூல்கள், சிறப்பாக மகாபாரதக் கதையுள் அவதாரக் கடவுளாக வரும் கண்ணனைச் சிறப்பு நிலையில் அவரது அவதார லீலைகளைக் கூறிப் புகழ்ந்துரைக்கின்றன.

அவ்வகையில்,

1, கன்று கொண்டு விளாமரம் எறிந்தது (முல். தனி. 1:3)

2, கிருஷ்ணாவதார மகிமை உரைத்தல் (அக. 59: 3-6)

3, பெருமழையில் ஆயர்குடியைக் காக்கக் கண்ணன் குன்று எடுத்தமை (முல். தனி. 1:4)

---

1. எஸ். வையாபுரி பிள்ளை (உரை.), நாமதீப நிகண்டு, நூற். 44-51.

4, கேசி என்ற அரக்கனைக் கொன்றது (பரி. 3: 31-32)

5, பலராமவதாரம் எடுத்த நிலை (பரி. 1: 1-5)
(புறம். 26: 3-4)

6, தன்னை அழிக்க வந்த மல்லரைச் சாய்த்தல் (கலி. 134: 1-3)

போன்ற கண்ணனோடு தொடர்புடைய மகாபாரதக் கதைக் கூறுகள் சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்ட செய்தி குறிப்பிடத்தகுந்தது.

அத்துடன் பாரதக் கதையின் வேறு பல போக்குகளையும் சங்க கால மக்கள் சிறப்பாகத் தெரிந்து வைத்திருந்தனர் என்பதையும் அக்காலப் பாடல்கள் காட்டுகின்றன.

1, பாண்டவர்கள் தங்கியிருந்த அரக்கு இல்லத்திற்குத் தீ வைக்கப்படல்
(கலி. 25: 1-4)

2, கர்ணன் சூரியனது புதல்வன் என்கிற குறிப்பு (கலி. 101: 18-20)

3, பாரதப் போர்க்களம் பற்றிய செய்திகள் (கலி. 104 : 57-59)
(புறம். 2: 13-16)

4, பீமன் அரக்கு இல்லத்திலிருந்து சகோதரர்களையும் பாஞ்சாலி யையும் காத்தல் (கலி. 101: 18-20)

5, பீமன் துரியோதனனின் துடையைப் பிளத்தல் (கலி. 52: 2-3)

6, பாண்டவர்கள் கௌரவர்களைப் போர்க்களத்தில் கொன்றமை
(பெரும். 415-417)

7, அர்ச்சுனன் காண்டகவனத்தை எரித்த நிகழ்ச்சி (சிறு. 238)

8, பீமன் சமையல் கலையில் வல்லோன் என்கிற செய்தி (சிறு. 239-241)

போன்றன மக்கள் மகாபாரதக் கதை நிகழ்ச்சிகளை எந்தளவு தெரிந்து வைத்திருந்தனர் என்பதைக் காட்டும். இதில் குறிப்பிடத்தக்க செய்தி யாதெனில் பாரதக் கதை குறிப்புகள் பெரும்பாலும் உவமைகளாக, எந்தவித விளக்கமுமின்றி, மிக இயல்பாகப் புலவர்களால் கையாளப்பட்டமையாகும். எடுத்துக்காட்டாக,

"காவெரி ஊட்டிய கவர்கணைத் தூணிப்
பூவிரி கச்சைப் புகழோன் தன்முன்
பனிவரை மார்பன் பயந்த நுண்பொருள்
பனுவலின் வழாஅப் பல்வேறு அடிசில்" (சிறு. 238-241)

இன்னும் இந்நான்கு அடிகளில் புலவர் அர்ச்சுனன் காண்டவ வனத்தை எரித்தவன் என்ற நிகழ்வையும், பீமன் சிறந்த சமையல் கலை வல்லோன் என்கிற குறிப்பையும் மிக இயல்பாக, எந்த வர்ணனையுமின்றி, இயற்பெயர்களைக் கூட குறிப்பிடாது, நிகழ்வைக் கூறிக் கதாப்பாத்திரங்களைப் புரிந்து கொள்ளும்படி அமைத்துள்ளனர்.

மேலும், அர்ச்சுனன் பாண்டியன் மகளாகிய சித்திராங்கதை என்பவளை மணந்தான் என்கிற பாரதக்கதை குறிப்பு பாண்டவர்களையும் பாண்டியர்களையும் உறவு முறை ஆக்கியமையும் தமிழக மக்கள் பாரதக் கதையை மிகவும் நன்றாகத் தெரிந்து வைத்திருக்க ஏதுவாயிற்று. இவ்வுறவு முறையால் பாண்டிய அரச வம்சத்தாருக்குப் பாண்டவர்களோடு தொடர்புடையவர் என்பதை உணர்த்தும் 'பஞ்சவர்', 'கவுரியர்' என்னும் பட்டப் பெயர்கள் வழங்கப்பட்டமையை எஸ். வையாபுரி பிள்ளை கூறுகிறார்.[1] மேலும் அவர் இந்தத் தொடர்பை வலியுறுத்தவே, "பாரத யுத்தத்தில் தமிழ் மன்னர்கள் இருதிறப் படைகளுக்கும் உணவு நல்கினர் என்றும் கூறி அவர்களது பூர்வோத்தரம் விளக்கினர். இவற்றையெல்லாம் பூர்வ மக்கள் நம்பவும் செய்தனர்" எனக் குறிப்பிடுகிறார்.[2]

இவைகளால் நமக்குக் கீழ்க்காணும் உண்மைகள் தெரியவருகின்றன.

1, சங்க காலத்திற்கு முன்பாகவே பாரதக் கதைகள் தமிழகத்தில் பெருவழக்கில் வழங்கியிருந்தமை.

2, சங்க கால மக்களுக்குப் பாரதக் கதைகள் மீது இருந்த அதீத ஈடுபாடு.

3, சங்க கால மக்கள் பாரதக் கதையிலுள்ள கதாப்பாத்திரங்களோடு தங்களுக்குப் பாரம்பரிய உறவுகள் உண்டு என்பதில் பெருமை கொண்டமை.

இத்தகு மகாபாரதம் தமிழ் மொழி மட்டுமின்றி ஏனைய திராவிட மொழிகளிலும் செல்வாக்குடன் திகழ்ந்தது.

1. எஸ். வையாபுரி பிள்ளை, தமிழ் இலக்கிய சரித்திரத்தில் காவிய காலம், ப. 62.
2. அதே நூல், ப. 64

## தெலுங்கு மொழியில் பாரதக் கதையின் செல்வாக்கு

தெலுங்கு மொழியில் இலக்கிய வடிவம் கொண்ட மகாபாரதக் கதையோடு, பல மாறுதல்களுக்கு உட்படுத்தப்பட்ட புதிய நாட்டார் மகாபாரதக் கதைகளும் வழக்கில் உள்ளன. அந்தந்த மண்ணின் தன்மைகளுக்கு ஏற்ப, அந்தந்த வட்டார மக்களின் கதாபாத்திரத் தன்மையோடு ஒட்டிப்போகும் படி மகாபாரதக் கதைகள் மாற்றி அமைக்கப்பட்டுள்ளன.[1] இம்மொழியில், பல யட்சகான நூல்கள் மகாபாரதக் கதையைத் தழுவி அமைக்கப்பட்டுள்ளன. பாரதக் கதையில் வரும் கிளைக்கதைகள் பலவும் நாட்டார் கதைப் பாடல்களாக அம்மொழியில் காணப்படுகின்றன, நளசரித்திர பதம், சுபத்ரா கல்யாணம், சசிரேகா பரிணயமு, தேவயாணி சரித்திரமு போன்றன குறிப்பிடத்தக்கன.[2]

## கன்னட மொழியில் பாரதக் கதையின் செல்வாக்கு

கன்னட மொழியில் பாரதக் கதையின் தாக்கம் அம்மொழியிலுள்ள பல்வேறு நாட்டுப்புற நிகழ்த்துக் கலைகளில் உள்ளன. அவை மட்டுமின்றிப் பாரதக் கதையின் சிறந்த கதாப்பாத்திரங்களைப் புகழ்ந்து பாடும் 'ஹந்திய ஹாடுகளு' 'கச்செய ஹாடுகளு' 'பன்னிய ஹாடுகளு', 'கொந்திய ஹாடுகளு' போன்ற நாட்டார் பாடல்கள் பலவும் இம்மொழியில் உள்ளன. மேலும், நாட்டார் நிகழ்த்துக்கலைகளில் ஒன்றான யட்சகானம் பொதுவாக மக்களுக்கு வாழ்வின் மதிப்புகளைக் குறித்து விளக்குவதற்காக ராமாயணம், மகாபாரதம், பாகவத புராணம் முதலியவற்றிலிருந்து கதைகளை ஆக்கிக் கொண்டுள்ளன.[3]

---

1. In the *Mahabharata* stories also, the Telugu folk have introduced their own customs and ways of life, their own likes and dislikes in such a way that the original stories have been transformed altogether and they seem as though they are native stories with local characters."

B. Rama Raju, *Glimpses into Telugu Folklore*, p.56.

2. டி.எஸ். கிரிபிரகாஷ் & பா. ஆனந்தகுமார், தெலுங்கு இலக்கிய வரலாறு, ப. 248.

3. "Most often, *yakṣagāṇa* poets are common people, whose main aim is the propagation of the values of life portrayed in *Rāmāyaṇa, Mahābhārata, Bhāgavatapurāṇa* and other works by composing prasaṅgas based in their stories".

Krisnamurthy Hanur (Ed.), *Encyclopaedia of the Folk culture of Karnataka*, p.430.

## மலையாள மொழியில் பாரதக் கதையின் செல்வாக்கு

மலையாள மொழியில் மகாபாரதக் கதைகள் அரச குலத்திலிருந்து சாதாரண மக்கள் வரையிலும் பிரபலமாக வழக்கில், வேறு வேறு வகையான நாட்டார் நிகழ்த்துக் கலைகளின் ஊடாக மக்களை இன்றளவும் சென்றடைந்து கொண்டிருக்கின்றன. ஒரு குறிப்பிட்ட கிராமத்தில் வாழும் சாதிய மக்கள், தங்கள் வாழ்க்கை ஒழுக்கமாகப் பாரதம் பாடுவதையே தொழிலாகக் கொண்டிருந்தனர். மத்திய கேரளப் பகுதியில் இவ்விதம் பாரதக் கதையை அடிப்படையாகக் கொண்டு சொந்தமாக உருவாக்கிப் பாடப் பெற்ற பல கதைப்பாடல்களைக் காணமுடிகின்றது. கதகளி, தெய்யம், வில்லுப்பாட்டு போன்ற பலவகையான நிகழ்த்துக் கலைகளின் வழியாக மகாபாரதக் கதைகள் பல நடிக்கப் பெறுகின்றன என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

“பாரதக் கதைப் பகுதிகள் கதகளி மூலம் நடைபெறும். கீசகவதம், துரோபதை வஸ்திராபரணம், கிருஷ்ணன் தூது போன்றவை முக்கியமாக நடத்தப்பெறும்” என கதகளி நிகழ்த்துக் கலையில் பாரதத்தின் செல்வாக்கைக் கூறுவார் ஏ.என் பெருமாள்.[1]

## தமிழில் மகாபாரத நூல்கள்

இம்மூன்று எழுத்து வடிவம் கொண்ட திராவிட மொழிகள் தவிர்த்து தமிழில் செவ்வியல் இலக்கிய நிலையிலும் நாட்டார் இலக்கிய நிலையிலும் மகாபாரதமும், மகாபாரதத்தை அடியொற்றிப் பிறந்த கிளைக்கதைகளும் பதிவு செய்யப்பட்ட முறைகளும், வரலாறும் ஆராயத்தக்கன.

## பெருந்தேவனார் பாரதம்

சங்க இலக்கியத்தில் குறுந்தொகை முதலான தொகை இலக்கியங்களுக்குக் கடவுள் வாழ்த்துப் பாடிய பெருந்தேவனார் பாரதம் பாடினார். இப்பாரதம் ‘பெருந்தேவனார் பாரதம்’ என்று இன்றளவும் தமிழகத்தில் பேசப்படுகிறது. இந்நூல் 12,000 பாடல்களாலான விரிந்ததொரு நூல் என்பர். எனினும் இந்நூலின் சிறு பகுதியே தற்பொழுது வழக்கில் உள்ளன. இது குறித்து, “உத்தியோக பர்வமும், யுத்த பர்வத்தில் பதின்மூன்று நாள் போர்களுக்குரிய பகுதியுமே ஸ்ரீ அ. கோபாலையரவர்கள் பதிப்பிட்ட நூலின்கண் உள்ளது. . . . . ஆனால் இது மிக விரிந்ததோர் நூலாதல் வேண்டுமென்று ஊகித்தல் தகும்” என்பர்.[2]

1. ஏ.என். பெருமாள், தமிழ் நாடகம் ஓர் ஆய்வு, ப. 20

2. எஸ். வையாபுரி பிள்ளை, மேற்படி நூல், ப. 510.

இந்நூல் பெருந்தேவனாரால் வெண்பாவினால் செய்யப்பட்டது. இவ்விதம் பெருந்தேவனார் பாரதம் செய்ய மக்களும், மன்னரும் பாரதக் கதையை நன்கு அறிந்து வைத்திருந்தமையும் ஒரு காரணமாக வேண்டும். சோழ மன்னரான நல்லுருத்திரன் அவர் இயற்றிய முல்லைக் கலியில் பாரதக் கதைக் குறிப்புகளைத் தருவது நோக்கத்தக்கது.

**10-ம் நூற்றாண்டில் தோன்றிய பாரதம்**

*சின்னமனூர்ச் சாசனத்துள்,*

"மஹாபாரதம் தமிழ்ப்படுத்தும் மதுராபுரிச்சங்கம் வைத்தும்

மகாராஜரும் சார்வபௌமரும் மகிமண்டலங் காத்திகந்தபின்"

என மகாபாரதம் குறித்த மொழிபெயர்ப்புச் செய்தி காணப்படுகிறது. இச்சாசனம் கி.பி. 10-ம் நூற்றாண்டில் வரையப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கதாகும். சாசனத்துள் சம்பந்தர் காலத்து 'நெல்வேலி வென்ற நெடுமாறன்' பற்றிய குறிப்பு உள்ளதால் இம்மொழிபெயர்ப்பு கி.பி. 600-ல் இருக்கலாம் என்கிறார் எஸ். வையாபுரி பிள்ளை.[1] இந்நூல் தற்பொழுது வழக்கில் இல்லை.

**நந்திவர்மன் காலத்தில் தோன்றிய பாரதம்**

தெள்ளாறு எறிந்த நந்திவர்மன் காலத்தில் பெயர் தெரியாத புலவர் ஒருவரால் பாரதம் ஒன்று செய்யப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. இப்பாரதம் தகடூர் யாத்திரை போன்று உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாகச் செய்யப் பெற்ற நூலாக இருக்கலாம் என்பர்.[2] தெள்ளாறு எறிந்த நந்திவர்மன் காலம் கி.பி. 826-828 என்பது குறிப்பிடத்தக்கது.

**கருணிலை விசாகன் இயற்றிய பாரதம்**

கி.பி. 1172-1218 வரை சோழ நாட்டை ஆண்ட மூன்றாம் குலோத்துங்கன் ஆட்சிக் காலத்தில் கருணிலை விசாகன் என்பவர் பதின்மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஒரு பாரத நூலைச் செய்துள்ளார். இது குறித்து எஸ். வையாபுரி பிள்ளை, "பாரதமொன்று தமிழில் இயற்றப்பட்டதாகச் சாஸன வாயிலாக அறிகிறோம். இதனைக் குன்றவத்தனக் கோட்டத்து இல்லத்தூர் நாட்டு அரும்பாக்கமுடைய அருணிலை விசாகன் திரைலோச்யமல்லன் வத்ஸராஜன் என்பவர் இயற்றினான். . . . . 13-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இப்பாரதம் தோன்றியதாதல் வேண்டும்" என்பார்.

1. அதே நூல், ப. 69.

2. எஸ். முத்துரத்ன முதலியார் (பதி.), பெருந்தேவனார் பாரதம் (மாவிந்தம்), ப.5.

## வில்லிபுத்தூரார் பாரதம்

கி.பி. 14-ம் நூற்றாண்டில் வில்லிபுத்தூரார் செய்த பாரதம் மிகவும் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெறுவதாகும். இவர் தம் பாரத நூலை வியாச பாரதத்தை அடியொற்றியே செய்தார். எனினும் வியாசரின் காவியத்துள் குறிப்பிடப்படும் பதினெட்டாம் நாள் போரோடு, அதாவது பத்தாவது பருவமான சௌப்திக பருவத்தோடு வில்லிபுத்தூரார் பாரதம் நிறைவு பெறுகிறது. இப்பாரதம் ஏனைய அனைத்துத் தமிழ் பாரதக் காப்பியங்களை விடவும் இன்றளவும் மக்களால் விரும்பிப் படிக்கப்படுகிறது; பல பதிப்புகளையும் கண்டுள்ளது. இப்பாரத நூலுக்கு வில்லிபுத்தூராரின் மகன் வரந்தருவார் என்பவர் 23 பாடல்களில் பாயிரம் செய்துள்ளார்.

## வரந்தருவார் பாரதம்

இதே நூற்றாண்டில் வருந்தருவார் தம் தந்தையார் பாடாது விட்ட, வியாசர் பாரதத்தில் உள்ள எட்டுப் பருவங்களையும் விரித்துப் பாடினார் என்கிற செய்தி ஒன்று வழக்கில் உண்டு. வரந்தருவார் பாரதம் எங்கும் கிடைக்க வில்லை.[1]

## அம்பலக்காடு மையனின் முயற்சி

கி.பி. 17-ம் நூற்றாண்டில் அம்பலக்காடு மையன் என்பார் பாரதம் எழுதும் முயற்சியைத் தொடங்கினார் என்பதை அறியலாம். இதில் சந்தனுவின் வரலாறு மட்டும் இடம்பெற்றுள்ளது. இப்பகுதிக்குப் புலவர் "அதிபருவத்தந்தாதி பருவம்" என்கிற பெயரைத் தந்துள்ளார்.

## 18-ம் நூற்றாண்டில் தோன்றிய இரு பாரத நூல்கள்

கி.பி. 18-ம் நூற்றாண்டில் வில்லிபுத்தூராழ்வார் எழுதிய பாரதத்தை விரிவுப்படுத்தும் முயற்சியை அரங்கநாதக் கவிராயர் என்பவர் செய்தார். இந்நூல் குறித்து, "இதில் 2,477 செய்யுள்கள் உள. இது 1922இல் அச்சேறியது. அரங்கநாதக் கவிராயர் வில்லிபாரதத்தை இந்நூலால் நிறைவு செய்தார்" என ப. சிவனடி தனது நூலில் குறிப்பிடுகிறார்.[2] இதே போன்றதொரு பிறிதொரு முயற்சி நல்லாப் பிள்ளை, முருகப் பிள்ளை ஆகியோரால் செய்யப்பட்டன. இவர்கள் வில்லி புத்தூரார் பாரதத்தைப் பெரிதாக்கும் முயற்சியிலும், வியாசர் எழுதிய சுவர்க்காரோகணப் பருவத்து நிகழ்ச்சிகளைத் தமிழ்ப்படுத்தியும் 14,728 விருத்தப்பாக்களில் காவியம் செய்தனர். எனினும் இவர்கள் இருவரும் எழுதிய நூல் 'நல்லாப்பிள்ளை பாரதம்' என்றே அழைக்கப்படுகிறது.

---

1. எஸ். வையாபுரி பிள்ளை, மேற்படி நூல், ப. 208.
2. ப. சிவனடி, இந்திய சரித்திரக் களஞ்சியம் (1781-1790), ப.213
3. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு - பதினான்காம் நூற்றாண்டு, ப.35.

## 19-ம் நூற்றாண்டில் தோன்றிய மகாபாரத வசன நூல்கள்

கி.பி. 19-ம் நூற்றாண்டில் தரங்காபுரம் சண்முகக் கவிராயர் என்பவர் மகாபாரத வசனம் என்றதொரு நூலைச் செய்தார். இது நல்லாப் பிள்ளை பாரதத்தை அடியொற்றியது. மகாபாரதம் பாமரர்களையும் சென்றடைய வேண்டும் என்ற நோக்கில் கஸ்தூரிரங்கையர் என்பவர் இதே நூற்றாண்டில் மகாபாரத வினாவிடை என்றதொரு நூலைச் செய்தார்.

## 20-ம் நூற்றாண்டில் பாரதத்தின் செல்வாக்கு

20-ம் நூற்றாண்டில் உரைநடையில் வியாசரின் பாரதத்தை அடியொற்றித் தமிழில் ராஜாஜி அவர்கள் 'வியாசர் விருந்து' என்றொரு நூல் செய்துள்ளார். பாரத வசனம் என்றொரு நூல் கரிசங்கால் சீனிவாசவாரியரால் செய்யப்பட்டது. அலெ. நடராஜன் என்பவர் வியாச பாரதத்தை அடியொற்றி உரைநடையில் மகாபாரதத்தைத் தமிழ்ப்படுத்தியுள்ளார். இது நான்கு பாகங்களாக வெளியிடப்பட்டுள்ளது.

## நாட்டார் வடிவில் மகாபாரதத்தின் செல்வாக்கு

செவ்வியல் இலக்கியத் தன்மையில் செய்யப்பட்ட பல்வேறு தமிழ் மகாபாரத நூல்களைப் போலவே நாட்டார் இலக்கியத் தன்மையிலும் முன்னதினும் நோக்க நிரம்ப நூல்கள் செய்யப்பட்டன. இக்கூற்றில் அடிப்படையாகக் கொள்ள வேண்டியது யாதெனில் பாரத இலக்கியங்கள் செவ்வியல் அமைப்பில் பெரும்பாலும் முழுமையாகச் செய்யப்பட, பாரதக் கதையில் மக்களின் மனதிற்கு விருப்பாகத் திகழ்ந்த சிறுசிறு பகுதிகளே நாட்டார் இலக்கியங்களாக அதிகம் நூல் வடிவம் பெற்றன. தமிழகத்தில் தோன்றிய பிற எந்த செவ்வியல் இலக்கியங்களும் இந்தளவு அதிகமான நாட்டார் வடிவங்களைப் பெறவில்லை என்பதும் கவனத்தில் கொள்ளப்பட வேண்டிய ஒன்றாகும். சமஸ்கிருத இலக்கியமாகிய வியாசர் பாரதம் தமிழ்ப் படுத்தப்பட்டு அதன் பின்னர் பாமர மக்களின் புரிதலுக்காக மேலும் எளிமைப்படுத்தப்பட்டு பல்வேறு நூல்களாகப் பல்கிப் பெருகியதும் இங்கு ஆராயத்தக்கன.

## மகாபாரதமும் அதன் இலக்கிய வகைகளும்

அவ்வகையில் மகாபாரதக் கதைகள் அம்மானை, கும்மி, கூத்து, விலாசம், கதை, போர், குறம், சதகம், பதிகம், மாலை, பரணி, வண்ணம், அகவல், தாலாட்டு, புலம்பல், கலியாணம், கீர்த்தனை, மாலை, அந்தாதி என பலவகையான இலக்கிய வகைகளில் காணப்படுகின்றன. இத்தகு வகைகளில் அமைந்த பாரதக் கதைகள்,

1. படிக்கத் தகுந்தன
2. படிக்கவும் நடிக்கவும் தகுந்தன
3. நடிக்கத் தகுந்தன

என்கிற மூன்று நிலைகளில் வைத்து நோக்கத்தக்கன. இம்மூன்று நிலைகளிலுள்ள அனைத்துப் பாரதக் கதைகளும் இன்னமும் அச்சுக்குக் கொண்டுவரப்படவில்லை. பல சுவடி நிலையிலும், பல வாய்மொழி நிலையிலும் இருப்பது குறிப்பிடத்தக்கன. ஒவ்வொரு வகையான இலக்கிய வகைக்கும் இவண் உதாரணங்கள் தரப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| அம்மானை | - | பாரத அம்மானை, குருசேத்திர அம்மானை |
| கும்மி | - | மகாபாரதக் கும்மி |
| கூத்து | - | அல்லி நாடகம், வீமன் விஜயன் கர்வபங்கம் என்னும் பஞ்சபாண்டவர் பாகப் பிரிவினை |
| விலாசம் | - | ஸ்ரீ கிருஷ்ண விலாசம், பாரத விலாசம் |
| கதை | - | அசுவமேதயாகக் கதை, பாண்டவர் கதை |
| போர் | - | பதினான்காம் போராகிய சியந்தவன் சண்டை நாடகம், பாரதப்போர் |
| குறம் | - | துரோபதை குறம் |
| சதகம் | - | கேசவ சதகம் |
| பதிகம் | - | கண்ணபிரான் பதிகம் |
| மாலை | - | கலியுக மாலை, குருசேத்திர மாலை |
| வண்ணம் | - | கிருஷ்ணன் வண்ணம், பாரத வண்ணம் |
| அகவல் | - | திரௌபதியம்மன் அகவல் |
| தாலாட்டு | - | திரௌபதி தாலாட்டு, கீதாசாரத் தாலாட்டு |
| புலம்பல் | - | திரௌபதி புலம்பல், பொன்னுருவி புலம்பல் |
| கலியாணம் | - | அபிமன்சுந்தரி கலியாணம் |
| கீர்த்தனை | - | மகாபாரதக் கீர்த்தனை |
| மாலை (அம்மானை) | - | அல்லி அரசாணி மாலை, புலந்திரன் களவு மாலை |
| அந்தாதி | - | விசயன் அந்தாதி |

## மகாபாரத நிகழ்த்துக் கலைகள்

இவைகள் அன்றியும் கூத்தாக எந்தவித இலக்கிய வகையுள்ளும் அடங்காது நடிக்கப்பெறும் பல்வேறு பாரதக் கதைகளும் வழக்கில் உள்ளன. பாண்டவர் வனவாசம், புலந்திரன் கல்யாணம், அசுவமேத பருவம், பாரத வசனம், மகாபாரத ஆதிபர்வ ஓடம் போன்றன அவ்வகையில் குறிப்பிடத் தக்கன.

## நிகழ்த்துக் கலைகளும் பாரதக் கிளைக் கதைகளும்

மகாபாரதக் கதை உலகக் காப்பியங்களுள் அளவில் மிகப் பெரியது. இக்காரணம் பற்றியும், இக்காப்பியத்தை என்றும் மக்கள் புனிதத் தன்மையாகக் கருத வேண்டும் என்பது பற்றியும் இந்நூல் வியாசரால் கூற, மேரு மலையில் விநாயகரால் தமது கொம்பொடித்து எழுதப்பட்டது என்கிற புராணக் கதை மக்கள் மனதில் பதியும்படிச் செய்யப்பட்டது. அன்றாடம் உழைத்துக் களைத்துத் திரும்பும் மக்கள் இக்கதையை முழுவதும் படித்து சுவைப்பது என்பது இயலாதவொன்று. ஆகவே, மகாபாரதக் கதையின் ஏதேனும் ஒரு பகுதியை ஒரு நிகழ்த்து கலையின் ஊடாகக் கூறும் பெருவழக்கு தமிழ் நாட்டில் காலங்காலமாக வழக்கில் இருந்து வருகிறது. அவ்வகையில் மகாபாரதக் கதைகள் ஹரிகதா காலட்சேபம், பொம்மலாட்டம், பாவைக்கூத்து, தெருக்கூத்து போன்ற பல்வேறு நிகழ்த்துக் கலைகள் மூலம் மக்களைச் சென்றடைந்திருக்கின்றன; அடைந்து கொண்டிருக்கின்றன. தஞ்சாவூர் மாவட்டத்தில் மெலட்டூர் கிராமத்தில் நடைபெறும் பாகவத மேளம் என்னும் தெலுங்கு இசை நாடக வகை சார்பில் பல பாரதக் கிளைக் கதைகள் நடத்தப் பெறுவது குறிப்பிடத்தக்கது. "மெலட்டூர் வேங்கடராம சாஸ்திரி, இவைகளை நல்லமுறையாக நடத்திப் புகழ் பெற்றவர்" என இந்த இசைவகை நாடகத்தைக் குறிப்பிடுவார். ஏ. என். பெருமாள் மேலும், அவர் பாரதக்கதையில் பிரஹலாத சரித்திரா, அரிச்சந்திரா, ருக்மணி கல்யாணம், கீசகவதம் என்பன நடைபெறுவதாகக் கூறுகிறார்.[1]

## மகாபாரதப் பிரசங்கத்திற்கான மான்யம்

மகாபாரதம் முழுமையாகவும் பல்லவர் காலம் தொட்டு இன்று வரையிலும் கிராமங்களில் கோடைக்காலங்களில் நிகழ்த்தப்பட்டுக் கொண்டிருக்கின்றது. "தமிழகத்தில் பல்லவர் ஆட்சிக் காலங்களில் ஊர்தோறும் மன்றங்களில் இரவில் மகாபாரதம் படித்துப் பொருள் கூறப்பட்டு வந்தது என்பது, அவ்வேந்தர்களின் செப்பேடுகளாலும், கல்வெட்டுக்களாலும் அறியப்படுகிறது"[2] என பல்லவர் ஆட்சிக் காலத்தில் மகாபாரதம் படிக்கப் பெற்றதைக் கூறும் எஸ். முத்துரத்ன முதலியார் அதற்கான ஆதாரங்களாக South Indian Inscription Vol.I, தண்டந்தோட்டச் செப்பேடுகள் ஆகியவற்றிலிருந்து எடுத்துக்காட்டுகளைத் தருகிறார்.

1. ஏ.என். பெருமாள், நூற்றாண்டு தமிழ் நாடகம் - ஓர் ஆய்வு, ப. 19,
2. எஸ். முத்துரத்ன முதலியார், மேற்படி நூல், ப.5.

### மகாபாரதமும் கதாபிரசங்கமும்

உ.வே. சாமிநாதையர் அவர்கள் தமது இளமைக் காலத்தில் மக்களுக்கு இதிகாசங்களின் மீதிருந்த ஈடுபாட்டையும், பாகவதம் மீதிருந்த ஈடுபாட்டையும் ஊர்களில் நடக்கும் கதா பிரசங்கங்கள் மூலம் உணர்ந்துள்ளார். ஐயர் அவர்களின் வீட்டில் கூட ஒருவர் புராணப் பிரசங்கியாக இருந்ததை அவரின் என் சரித்திரம் கூறுகிறது. நூலில் ஐயர் அவர்கள், "என் பாட்டனாரின் மாமனாராகிய ஓதவைனேசுவரையர் என்பவர் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்தவர் . . . . அடிக்கடி புதுச்சேரி முதலிய வெளியூர்களுக்குச் சென்று திருவிளையாடல், கம்பராமாயணம், பாரதம் முதலிய நூல்களைத் தொடர்ந்து சில நாட்கள் பிரசங்கம் செய்துவிட்டு ஊரார் அளிக்கும் சன்மானங்களைப் பெற்று வருவார்" என சோழ வள நாட்டில் பாரதம் படிப்பதற்கு மட்டுமன்றிக் கேட்பதற்குமான ஒரு இலக்கியம் என்பதைக் கூறுகிறார்.[1]

### தெருக்கூத்தில் மகாபாரதம்

தொண்டை மண்டலமான செங்கல்பட்டு, வட ஆர்க்காடு, தென் ஆர்க்காடு மாவட்டப் பகுதிகளில் நடத்தப்படும் செல்வாக்குப் பெற்ற நிகழ்த்துக் கலைகளுள் முக்கிய இடத்தைத் தெருக்கூத்து பெறுகிறது. இத்தெருக் கூத்தின் வழியாகப் பெரும்பான்மையும் மகாபாரதக் கதைகளே கூறப்படுகிறது. அவ்வகையில் "மகாபாரதக் கதை நிகழ்ச்சிகள் மட்டுமே அறுபதுக்கும் அதிகமான கூத்துகளாக ஆடப்படுகின்றன" என்பர்.[2]

இப்பகுதிகளில் பல ஊர்கள் பாரதக் கதையோடு நினைவுபடுத்தப்படுகிறது. பல ஊர்களில் பஞ்சபாண்டவர் தங்கி இளைப்பாறினர் என்பதை நினைவுபடுத்தும் விதமாகப் பஞ்சபாண்டவர் படுக்கையை மக்கள் காட்டுகின்றனர். 'ஒவ்வொரு கிராமமும் காவல் தெய்வக் கோயிலாகப் பாஞ்சாலியம்மன் அல்லது திரௌபதியம்மன் ஆலயத்தைப் பெற்றிருக்கின்றது" என்பதும் மகாபாரத கதையின்பால் உள்ள மக்களின் ஈடுபாட்டை உணர்த்தும்.[3]

1. உ.வே. சாமிநாததையர், என் சரித்திரம், ப.20.

2. அ. அறிவுநம்பி, தமிழகத்தில் தெருக்கூத்து, ப.67

3. அதே நூல், ப. 68.

பாரதக் கதையைப் பார்ப்பது, நடத்துவது என்பதும் மக்களின் நம்பிக்கை சார்ந்த விஷயமாக இருக்கிறது. பாரதக் கூத்தைக் காண்பதின் மூலம் மக்கள் தங்களின் பாவங்களைக் களைந்து பாவ விமோசனம் பெறுகின்றனர். இதனாலேயே இப்பகுதிகளில் 'பாரதக்கதா பாவவிமோசனா' என்கிற பழமொழி உருவாகியது. மேலும் இறந்தவர் மோட்சம் அடைய கர்ண மோட்சக் கூத்து நடத்துவது, ஊரில் மழை பெய்யாத காலத்தில் மழை பொழிய விராட நாடகம் நடத்துவது என்பன தொண்டை மண்டலப் பகுதியில் இன்றளவும் நடைமுறையில் இருக்கின்றன.[1]

ப. இரத்தின நாயகர் அண்ட் ஸன்ஸ் மற்றும் ஷண்முகானந்தா புக் டிப்போ ஆகிய நூல் வெளியீட்டு நிறுவனத்தாராலும், தாள் சுவடி நிலையில் கூத்து நிகழ்த்துவோர் பலராலும் மகாபாரதக் கதைகள் கூத்து வடிவத்தில் தயார் செய்யப்பட்டுள்ளன.[2] மேலும் தமிழகம் முழுவதும் தோற்பாவை நிழல்கூத்து வழக்கில் உள்ளது. இவ்விதக் கூத்தினை நிகழ்த்துவோர் மாட்டு வண்டியில் ஊர் ஊராகச் சென்று இரவு வேளைகளில் கூத்தினை நடத்துகின்றனர்.

## தென்மாவட்டங்களும் கதைப்பாடல்களும்

நெல்லை, தூத்துக்குடி, கன்னியாகுமரி மாவட்டங்களில் வில்லுப்பாட்டு என்றதொரு வலிமையான நிகழ்த்துக் கலையின் மூலமாக ஏராளமான பாரதக் கதைப்பாடல்கள் கோயில் திருவிழாக்கள், மனமகிழ் மன்றங்கள், சிறுதெய்வக் கொடைகள் ஆகியவற்றில் மூலம் நிகழ்த்தப் பெறுகின்றன. இக்கலையை வானொலி மற்றும் தொலைக்காட்சியின் வழியாகவும் சுப்பு ஆறுமுகம் முதலியோர் பரப்பி வருகின்றனர்.

கதைப்பாடல்கள் மட்டுமன்றி அவற்றைப் போல அமைகின்ற, ஓசை நயம் மிகுந்த அம்மானை, மாலை முதலிய பாடல்களும் இந்த நிகழ்த்துக் கலைக்கு உரியன. மேலும் தனித்துப் படிக்கும் நிலையிலும் இப்பாடல்கள் இலக்கிய இன்பம் தருகின்றன. இவ்வகையில் ஒன்றாகத் திகழ்வதும், மகா பாரதக் கதையோடு தொடர்புடையதாக இருப்பதுவும் நெல்லை மாவட்டத்தின் பாம்பன் குளத்தில் உள்ள நாராயண மூர்த்தி கோயிலில் வைத்துப் பாதுகாக்கப்பட்டதுவுமான வைகுண்ட அம்மானை இங்கு ஆய்விற்குரியது.

---

1. அதே நூல், ப. 69
2. மகாபாரத கதைகள் குறித்த நூல்கள், சுவடிகள் ஆகியன பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளன.

## அம்மானையின் இலக்கணம்

அம்மானை என்னும் மகளிர் விளையாட்டு சங்க இலக்கியம் முதல் காணப்படுகிறது. எனினும் கழங்கு என்னும் மகளிர் விளையாட்டாக அது அறியப்பட்டது. இக்கழங்கு ஆட்டக் குறிப்பு பெரும்பாணாற்றுப்படை (334-335), புறநானூறு (36,4) ஆகியவற்றில் வருகின்றது. அகநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல் ஆகிய நூல்களிலும் கழங்காடல் என்னும் அம்மானை ஆட்டத்தைக் குறிப்பதாகக் கழங்கு என்னும் சொல் பயின்று வருகிறது.[1]

"அம்மானை தம்கையில்கொண்டு அங்குஅணி யிழையார்
தம்மனையில் பாடும் தகையிலோர் அம்மானை"

(சிலப். வாழ்த். 20)

என சிலப்பதிகாரம் அம்மானை கொண்டு மகளிர் ஆடிய ஆட்டத்தைக் குறிப்பிடுகிறது.[2] அதே நூலின் பிறிதொரு பகுதியில்,

"வீங்குநீர் வேலி உலகாண்டு விண்ணவர்கோன்
ஓங்கரணம் காத்த உரவோன்யார் - அம்மானை
ஓங்கரணம் காத்த உரவோன் உயர்விசும்பில்
தூங்கெயில் மூன்றெறிந்த சோழன்காண் - அம்மானை"

(சிலப். வாழ்த்.)

என ஒரு கதை நிகழ்வை வினா விடைப் பாங்கில் இருவர் உரைப்பது போன்றதொரு வளர்ச்சியைக் காணமுடியும்.[3] இது அம்மானை வரி என அழைக்கப்படும் என்றும், இந்த இசைப்பாட்டு வினாவும் விடையுமாக மூவர் இணைந்து பாடும் முறையில் அமையும் என்றும் கூறுவர்.[4]

## அம்மானை - ஒரு சிற்றிலக்கிய வகை

அம்மானையை இலக்கிய வடிவமாகக் கொண்டு முதல் முதல் இலக்கியம் செய்தவராக மாணிக்கவாசகர் காணப்படுகிறார். இவ்வகை இலக்கிய வடிவில் அவர் திருவம்மானை என்பதை இருபது பாடல்களில் பாடியுள்ளார். இப்பாடல்களின் பொதுமையான அமைப்பு பிற்காலத்தில் தோன்றிய அம்மானை கதைப்பாடல்களின் இலக்கணத்தோடு பொருந்தியிருந்தன என்று கூற முடியாவிட்டாலும் அது கதைப்பாடலுக்கு அடிப்படையாக அமைந்தது. மேலும் சிற்றிலக்கியத்துள் உலா, கலம்பகம் ஆகியவற்றில் அம்மானை ஓர் உறுப்பாகவும் பிள்ளைத்தமிழில் ஒரு பருவமாகவும் இடம் பெற்றது. இது சொல்லாட்சி, அமைப்பு, இலக்கணம் ஆகிய அனைத்து நிலைகளிலும் அம்மானை எவ்வளவு செல்வாக்கு பெற்ற இலக்கிய வகையாகத் திகழ்ந்தது. வளர்ந்தது என்பதை நமக்குக் காட்டும்.

1. Thomes Lehmanin & Thomes malten, *A word index for Cankam Literature*, p. 143.
2. சிலப்பதிகாரம் - வாழ்த்துக் காதை - 20
3. மேற்படி நூல்,
4. K. Jaya Kumar & R. Jayalakshmi (Eds.), *The Defender of the Faith*, p. xxiv

## அம்மானையும் கதைப்பாடல்களும்

அம்மானை வழியாக நெடுங்கதைகள், இதிகாசங்கள், காப்பியங்கள், புராணங்கள், வாழ்க்கை வரலாறுகள் போன்றவற்றைக் கூறும் ஒரு முயற்சி கி.பி. 17-ம் நூற்றாண்டிலிருந்து தமிழிலக்கியத்தில் தொடங்கின எனலாம்.[1] அவ்வகையில் இராமப்பைய்யன் அம்மானை, சீராளன் அம்மானை, மூவர் அம்மானை, திருச்செல்வர் அம்மானை முதலியன குறிப்பிடத்தக்கன.

## அம்மானையின் வகைகள்

அம்மானை வழியாகத் தோற்றம் பெற்ற கதைப் பாடல்களை ஐந்து வகையாகப் பிரித்துக் காட்டுவர்.[2]

1. இதிகாச, புராண அம்மானை - வைகுண்ட அம்மானை
2. இலக்கிய அம்மானை - சீவக சிந்தாமணி அம்மானை
3. சமய அம்மானை - திருமறைப்பொருள் அம்மானை
4. சமுதாய அம்மானை - மதுரை வீரன் அம்மானை
5. வரலாற்று அம்மானை - இராமப்பையன் அம்மானை

பிறிதொரு பிரிவும் வழக்கில் உள்ளது.




1. K. Jaya Kumar & R. Jayalakshmi (Eds.), Op. cit., p.xxiv

2. Maruthamuthu (Ed.), The Vows Fulfilled, p. 23

அம்மானை கதைப்பாடல்களின் இறுதியில் அம்மானை என்னும் சொல்லாட்சி இடம்பெற வேண்டும் என்ற கட்டுப்பாடு கிடையாது என்பதையும் கிடைக்கும் அம்மானைப் பாடல்களைக் கொண்டு தெரிந்து கொள்ள முடிகிறது. (எ.டு) பூங்காவன பிரளயம். அம்மானை சொல்லிற்குப் பதிலாகக் கதை, மாலை, நங்கைப் பாட்டு முதலிய விகுதிகளும் காணப்படுகின்றன.

கதை - அமராவதி கதை

மாலை - அல்லி அரசாணி மாலை

நங்கைப் பாட்டு - இராமாயண நங்கைப் பாட்டு

**கதைப்பாட்டு அம்மானையின் இலக்கணம்**

இவ்விதம் பல விரிந்த தளங்களில் அமையும் அம்மானை கதைப்பாடல்கள் எளிய பதங்களில், எளிய சந்தத்தில், பெரும்பாலும் பொழிப்பு மோனையுடன், அடிகள் தோறும் நான்கு சீர் பெற்றதாய் காணப்படுகின்றன. பல அம்மானைப் பாடல்களில் அந்தாதி தன்மையும் உள்ளது. இது படிப்போர்க்கு மனனம் செய்வதில் உதவுவதாக அமையும்.

அறுவகை இலக்கணத்துள் கீழ்க்காணும் நூற்பா

"கலிப்பா அரையரை யாகக் கூட்டியும்
எதுகை இன்றித் தனித்தனி சேர்த்தும்
காதை யம்மானை கழறினர் சிலரே"

என கதைப்பாடலில் அம்மானை எவ்விதம் வர வேண்டும் என்பதைக் கூறுகிறது.[1]

இதற்கு உரையாசிரியர் பாண்டவர் வனவசம், நல்லதங்காள் கதை, அல்லி யரசாணி மாலை என காணப்படுவனவற்றை எடுத்துக்காட்டுகளாகத் தருகிறார். அம்மானை என்கிற சொல்லாட்சி பொதுவாக இப்பாடல்களில் இரண்டு, நான்கு, ஐந்தாம் அடிகளின் ஈற்றில் காணப்படும் என மேற்படி நூல் கூறுகிறது. இது எல்லா வகையான அம்மானைப் பாடல்களுக்கும் பொருந்துவதில்லை. குறிப்பாகக் கதைப்பாடல்களில் இவ்வரன்முறை பின்பற்றப்படவில்லை.

1. வண்ணசரபம் தண்டபாணி சுவாமிகள், அறுவகை இலக்கணம் - யாப்பு - 31.

"கொச்சகக் சீர்கொடு கூறும்அம் மானை
இழிவினது ஆகும்என்று இசைப்பது துணிவே"[1]

என்கிற பிறிதொரு நூற்பாவில் அறுவகை இலக்கணத்தின் நூலாசிரியர் பொதுவாக அம்மானை கதைப்பாடல்களில் கலித்தளை விரவி வருவது அத்துணை சிறப்பன்று என்கிறார். இதனால் வெண்டளையின் இரு பிரிவுகளான இயற்சீர் வெண்டளையும், வெண்சீர் வெண்டளையும் வரல் சிறப்பு என்பதைக் குறிப்பாக உணர்த்தினார். இவ்விதம் கூறும் யாப்பின் அமைதியையும் அனைத்துக் கதைப்பாடல்களுக்கும் பொருத்தி நோக்குதல் அரிதாக உள்ளது.

எந்த யாப்பினைக் குறித்தும் நுட்பமான அறிவில்லாத பாமர மக்கள் கவிஞர்கள் பலர் அம்மானை கதைப்பாடல்களை இயற்றியுள்ளதால், இவ்வகைக் கதைப்பாடல்களில் யாப்பிலக்கணத்தை வரையறை செய்தல் கடினமே.

ஆசியவியல் நிறுவன தமிழ்க் கலைக்களஞ்சியம் அம்மானை குறித்து கீழ்க்கண்ட வரையறையைத் தருகிறது.

> "Woven around folk tales, and using gay folk funes, those *ammāṉai* songs have been on the lips of even the not so learned; they are replete with colloquial expressions, words which have been in vogue; they are laced with pretty similes easy to understand. Repetition of certain expressions for the sake of duphony and resonance is common"[2]

இக்கூற்றிற்கு இணங்கவே பெரும்பாலும் அம்மானை கதைப்பாடல்கள் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

மு. அருணாசலம் அவர்கள் அம்மானைப் பாடல் கதைப் பாடலையே சுட்டியன என்றும், பெரிய பாடலாகத் திகழ்ந்தது என்றும், சொல்லப்பட்ட பாடலில் கதைக் கரு இருக்குமென்றும், பாடல் ஓசை எளிமையானதாகவும், மக்கள் அளவில் பிரசித்தம் வாய்ந்ததாகவும் இருக்குமென்று கூறுகிறார்.[1]

---

1. மேற்படி நூல்; யாப்பு - 32

2. Shu Hikosaka & G. John Samuel, Encyclopaedia of Tamil Literature, p.300.

## மகாபாரத அம்மானை கதைப் பாடல்கள்

தமிழ் இலக்கியத்தில் அம்மானை இலக்கியம் தொடர்பாக ஏராளமான கதைப்பாடல்கள் கிடைக்கின்றன. பாரதம் முழுமையாகவும், சிறுசிறு கதைப்பகுதி நிலைகளிலும் இராமாயணம் முதலிய பிற இலக்கியங்களுக்குக் கிடைக்கப்பட்ட அம்மானைக் கதைப்பாடல்களினும் நோக்க அதிகமாகவே கிடைக்கின்றன. மகாபாரதத்தைத் தழுவி அமைந்த அம்மானைக் கதைப்பாடல்கள் கீழே தரப்படுகின்றன.

பஞ்சபாண்டவர் வனவாசம்

பவளக்கொடி மாலை

பொன்னுருவி மசக்கை

புலந்தரன் தூது

புலந்தரன் களவு மாலை

குருஷேத்திர மாலை

கஞ்சன் அம்மானை

துரோபதை அம்மானை

அபிமன்னன் சுந்தரி மாலை

அல்லி அரசாணி மாலை

அரவான் அம்மானை

ஆரவல்லி சூரவல்லி கதை

பார்த அம்மானை

ஏணி ஏற்றம்

கர்ண மகாராஜன் சண்டை

கிருஷ்ணவதார அம்மானை

1. The ammanaip - padal has generally a story theme; it is told in a long poem; it is composed in a language simple, familier and full of appeal to the masses."

M. Arunachalam, Ballad poetry, p.6.

### மகாபாரதக் கதைப்பாடல்களில் வைகுண்ட அம்மானை

மகாபாரதத்தில் இவ்வளவு சிறப்பிடம் பெறுகின்ற அம்மானை பாடல் வகையில் வைகுண்டம், அதன் மேன்மை, கிருஷ்ணன் சிறப்பு, பாண்டவர்களின் யாத்திரை, பாண்டவர்கள் வைகுண்ட முத்தி அடைந்தமையைக் கேட்போர் பெறும் பேறு இவைகளை உள்ளடக்கிக் கூறும் வைகுண்ட அம்மானையும் இவண் பாரத அம்மானைப் பாடல்களில் சிறப்பிடம் பெறுகின்றது.

### வைகுண்டமும் அதன் பெருமைகளும்

வைணவர்கள், இறந்தோரின் ஆன்மா முக்தி அடைந்து விஷ்ணு உறையும் வைகுண்டம் செல்வதாக நம்பினர். அதிலும் குறிப்பாக ஏகாதசி அன்று இறப்போர் இப்பதவியைப் பெறுவர் என்ற எண்ணமும் மக்களிடையே இருந்தது. மேலும் மார்கழி மாதத்தில் தமிழகம் முழுவதும் ஏகாதசி அன்று மக்கள் விஷ்ணு ஆலயங்களில் விரதம் இருந்து, சொர்க்கவாசல் திறக்கும் பாவகக் காட்சியைக் கண்ணுற்று மகிழ்கின்றனர். அத்துடன் வைகுண்ட ஏகாதசிக்கு முன்பிருந்தே மகாபாரதக் கதையை மகாபாரத பிரசங்கியார் தொடர்ந்து கூற மக்கள் கேட்கும் வழக்கம் இன்றும் தமிழ் நாட்டில் தொடருகின்றன. தமிழகத்தில் மகாபாரதக் கதையைக் கூறுவோர் வட தமிழ் நாட்டில் 'பாரதகாரர்கள்' என்றழைக்கப்படுகின்றனர்.

### வைகுண்ட அம்மானை நூல் சிறப்பதற்கான காரணங்கள்

பாரதக் கதையை முழுமையும் கற்றோ அல்லது கேட்டோ ஏகாதசி விரதத்தை அனுசரிக்க முடியாதவர்கள் விஷ்ணுவின் வைகுண்ட மேன்மையையும் அதை அடைவதற்குத் திரௌபதையும், தம்பியரும் தர்மரின் தலைமையில் நடந்த விடா முயற்சியான பயணம் அடங்கிய வைகுண்ட கதையைக் கேட்பதும், பாராயணம் செய்வதும் இன்னும் பெரும்வழக்கத்தில் உள்ளன. இவ்வழக்கத்தைத் தமிழகம் முழுவதும் கிடைக்கும் பல்வேறு வகையான வைகுண்ட அம்மானை கதைப்பாடல் சுவடிகள், பல்வேறு வைகுண்ட அம்மானை தொடர்பான அச்சு நூல்கள் ஆகியன உறுதி செய்கின்றன.

எவ்வளவு மேன்மையானவராயினும் தர்மம் வெல்லும்; அவரவர் செய்த பாவங்களை அவரவர் அனுபவித்துத் தீர வேண்டும்; இறையின் சோதனை நன்மைக்கே போன்ற பல்வேறு நீதிகளை உள்ளடக்கியதாய் வைகுண்ட அம்மானை அமைந்துள்ளது. ஒவ்வொரு வைகுண்ட அம்மானைக் கதைப்பாடல்களும் அளவால், நீட்சியினால், கதை வேறுபாட்டால் வெவ்வேறு தன்மைகளுடன் திகழ்ந்தாலும் வைகுண்ட யாத்திரை, வைகுண்டம் அடைதல் ஆகிய இரு நிலைகளிலும் எவ்வித வேறுபாடுமின்றித் திகழ்கின்றன.

## வைகுண்ட அம்மானை கதைவேறுபாட்டிற்கான காரணங்கள்

இவ்வேறுபாட்டிற்கான காரணங்களும் நுனித்து நோக்கின் விளங்கிக் கொள்ளத்தக்கதே. C.S. Burne என்பார் தமது நூலில், "The story proceeds step by step; not in a continuous narrative, but dramatically, in a series of the little scences, and with frequent iteration; features which characterise the true ballad - form of song even when the burden is wanting"[1] எனக் கூறுகிறார். இதன் மூலம் கதைப்பாடலின் வடிவம், எல்லை ஆகியன கதைப்பாடலைப் புனைவோரின் அந்தந்த நேரத்து மனநிலையைப் பொறுத்தது என்பது புலப்படும்.

இதே கருத்தோடு இணைந்த நிலையில் Albert B.Lord என்பவர் தமது The Singer of Tales என்கிற தனது நூலில், "Whereas the singer thinks of his song in terms of a flexible plan of themes, some of which are essential and some of which are not, we think of it as a given text which undergoes change from one singing to another. We are more aware of change than the singer is, because we have a concept of the fixity of a performance or of its recording on wire or tape or plastia or in writing"[2] என்று கூறுவதும் கதை வேறுபாடுகள் அமையும் காரணத்தைப் புலப்படுத்தும்.

பதிப்புக்கு எடுத்துக்கொண்ட வைகுண்ட அம்மானையில் Albert B. Lord கூறும் 'flexible plan of themes' என்பதும், C.S. Burne-ன் 'the true ballad-form of song even when the burden is wanting' என்பதும் அமைந்து கிடப்பதை உணர முடியும். இப்பதிப்பு நூலுக்கான சுவடியிலும் அதற்கான இடங்கள் (flexible plan of theme & burden's wanting) சிறப்புற அமைக்கப் பெற்றுள்ளன.

## வைகுண்ட அம்மானையின் நெகிழ்ச்சியான கட்டமைப்பு

1) வைகுண்ட யாத்திரையில் தருமர் தமது சகோதரர்களுக்கு வழிநடைப்பயணக் களைப்பு தெரியாமல் இருக்கும் பொருட்டு பல்வேறு கதைகளைக் கூறும் பகுதி. இப்பகுதி மொத்தப் பாடல் அளவில் 15%-க்கும் அதிகமாக இடத்தைப் பெறுகிறது.

2) பிறப்பு, வளர்ப்பு தொடர்பான செய்திகளைத் தரும் விதத்தில் மன்னன் பரிசித்து, செனமேசெயன் ஆகியோர் பற்றி நூலாசிரியர் குறிப்பிடுவன.

---

1. Charlotte Sophia Burne, *The handbook of Folklore Traditional beliefs, pratices, customs, stories and sayings*, p.273.

2. Albert B. Lord, The singer of Tales, p.99.

3) சாபநிவர்த்திக் கதைகளின் எண்ணிக்கை, அச்சாப நிவர்த்திக் கதைகளை விவரிக்கும் முறைகள் ஆகியவற்றில் ஆசிரியருக்கு இருக்கும் சுதந்திரமான தளங்கள்.

4) கதையின் பல்வேறு இடங்களில் வருகின்ற வருணனைக் கூறுகள்.

ஆகிய இத்தளங்களிலும், இவை போன்று வரும் பிற இடங்களிலும் நூலாசிரியர் தம் கற்பனை வளத்திற்கு ஏற்ப சுருக்கிப் பாடவும் வேண்டிய நெகிழ்ச்சியான கதையமைப்பு இந்நூலில் காணப்படுகின்றன. **319** இதழ்கள், **277** இதழ்கள், **343** இதழ்கள் கொண்ட அளவில் பெரிய வைகுண்ட அம்மானை நூல்கள் அறுவரின் முத்தி பற்றியும் அதற்கான யாத்திரை பற்றிய செய்திகளையும் கூறுகின்றன. அதே கருத்தை உள்ளடக்கியே **100** இதழ்கள், **68** இதழ்கள், **35** இதழ்கள் கொண்ட அளவில் சிறிய வைகுண்ட அம்மானை நூல்களும் காணப்படுகின்றன.[1]

### அம்மானை பாடலின் யாப்பு நெகிழ்ச்சி

கதை நெகிழ்வுகளுக்கும், மொத்த அடிவரையறைகளின் பெருக்கத்திற்கும், சிறுக்கத்திற்கும் நாட்டார் கதைப்பாடல்களில் கையாளப்படுகின்ற யாப்பு வகைகளும் பெரிதும் காரணமாகின்றன. நடை, கும்மி, சிந்து, லாவணி மற்றும் பிற வகையான இறுக்கமற்ற, எளிமையான யாப்பு அமைப்புகளில் புலவர்கள் தம் விருப்பத்திற்கேற்ப கதையை நடத்திச் செல்ல முடிகிறது. வைகுண்ட அம்மானைக்கான பதிப்பு நூலில் விருத்தம், நடை என்கிற இரு யாப்புகள் கையாளப்பட்டுள்ளன. இதில் விருத்தம் செறிவாகக் கதையைச் சொல்வதற்கும், நடை விரிவாகக் கதையைச் சொல்வதற்கும் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஒரு சில உதாரணங்கள் மட்டும் இவண் தரப்பட்டுள்ளன.

1) கண்ணன் கலியுகம் வருவதற்கு முன் அரசாட்சியைத் துறந்து காட்டில் தவம் செய்து வைகுண்டம் போவதைப் பாண்டவர்களுக்குத் தெரிவித்தலும், அதைக் கேட்ட பாண்டவர்களின் துயரமும் ஐந்து விருத்தப்பாக்களில், அதாவது **20** அடிகளில் கூறப்படுகின்றன. இதே கதை நிகழ்வுகள் நடை என்னும் யாப்பில் **116** அடிகளில் கூறப்படுகின்றன.

2) தருமர் கலியுகம் வந்தமையால் தம்பியர்களோடு வைகுண்டம் செல்வதற்கு எடுக்கும் முடிவிற்கான காரணங்கள் ஏழு விருத்தங்களில், அதாவது **28** அடிகளில் கூறப்படுகின்றன. இதே செய்தியின் அடிப்படையில் பல விவரமான தரவுகளுடன் நடை யாப்பில் ஆசிரியர் **363** அடிகளில் இப்பகுதிக்கான கதையைக் கூறுகிறார்.

---

1. வைகுண்ட அம்மானை சுவடிக்களுக்கான இணைப்பு பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளது.

3) தருமர், வைகுண்ட வழிநடைப் பயணத்தின் பொழுது, தாங்கள் எவ்வித இடையூறுமின்றி வைகுண்டம் அடைய வேண்டுமென அம்மனை வழிபடுவதாக ஆசிரியர் ஏழு விருத்தங்களை அதாவது 28 அடிகளை அமைக்கிறார். அதே உள்ளீட்டோடு நடை யாப்பில் தருமர் தமது தம்பியர்களோடு பயணம் செய்த முறை, அவர், தம் தம்பியர்களுக்குக் கூறிய கதைகள் என இப்பகுதி 1375 அடிகளில், நிரம்ப செய்திகளோடு ஆசிரியரால் அமைக்கப்பட்டுள்ளது. இது யாப்பின் அமைப்பில் புலவர்கள் தம் விருப்பத்திற்கேற்ப எவ்விதம் கதையைச் சுருக்கியும், பெருக்கியும் அமைக்கின்றனர் என்பதைக் காட்டும்.

**வைகுண்ட அம்மானைக்கு முந்தைய நூல்கள்**

இத்தகு வைகுண்ட அம்மானை என்னும் இக்கதைப் பாடலுக்குப் பல நூல்கள் அடித்தளமாக அமைந்துள்ளன. அவற்றுள் மிகவும் குறிப்பிடத்தகுந்த நூல்கள்,

1) பெருந்தேவனார் பாரதம் (மாவிந்தம்)

2) நல்லாப்பிள்ளை மகாபாரதம்

3) ஸ்ரீ மஹாபாரதம் வசன காவியம் (வசன நூல்)

4) ஸ்ரீ மஹாபாரதம்

என்பன ஆகும். இதனுள் பெருந்தேவனார் பாரதம் காலத்தால் பழமையான, இடையிடையே பாடல்கள் குறைய வரப்பெற்ற ஒரு நூலாகும். நல்லாப்பிள்ளை பாரதம் வில்லிபுத்தூராரின் பாரதத்தை விரிவுபடுத்தியதோடு வியாச பாரதத்தில் உள்ள கதைக்கு இணையாகத் தமிழில் செய்யப்பட்ட அளவில் பெரிய காவியமாகும். எஞ்சிய இரண்டும் மஹாபாரத வசன நூல்களாக அமையக்கிடக்கின்றன.

**கதைச் சுருக்கம்**

வைகுண்ட அம்மானையோடு ஒப்பிடத்தக்க சில நூல்கள் தமிழில் வந்துள்ளமையாலும், வைகுண்ட அம்மானை என்னும் பெரிய நூலின் கதை ஓட்டத்தை நூலைப் படிப்பதற்கு முன்பே புரிந்து கொள்ளுதல் சிறப்பு என்பதாலும் இந்நூலின் கதைச் சுருக்கம் தரப்படுகிறது.

திருமால், கணபதி, சரஸ்வதி, முருகன் ஆகிய பல தெய்வ வணக்கங்களுடன் ஆசிரியரால் கதை கூறப்படுகிறது. ஆசிரியர் அவையடக்கம் உரைத்து, கதைக்கருவையும் கூறி மீண்டும் நூல் சிறக்கத் தெய்வங்களை வேண்டுகிறார்.

தருமர் தம் தம்பியர்களுடன் சேர்ந்து, தரும நெறி பிறழாது நாடாண்டு கொண்டிருந்தார். அவ்வேளையில் போரில் மாண்டு போன அபிமன்யுவின் மனைவி உத்தரை என்பாள் குழந்தை பெற்றாள். அக்குழந்தையை உத்தரையும் பஞ்சபாண்டவர்களும் போற்றி, சீராட்டி வளர்த்தனர். அவர்கள் குழந்தைக்கு ஒரு வயது முழுமையடைந்ததும் பரிசித்து எனப் பெயர் சூட்டி வளர்த்தனர். பரிசித்துவுக்கு ஏழு வயது முழுமையடைந்ததும் பஞ்சபாண்டவர்கள் அவனை குருகுலத்தில் சேர்த்தனர். பரிசித்துவும் அனைத்து விதமான கலைகளிலும் தேர்ச்சியடைந்தான்.

பரிசித்து இளம் வயது அடைந்ததும் தனது நண்பர்களோடு சேர்ந்து வேட்டைக்குக் கிளம்பினான். காட்டில் அவன், நண்பர்களோடு சேர்ந்து பல விதமான விலங்குகளை வேட்டையாடி மகிழ்ந்தும், பல வகையான கனிகளைப் பறித்துண்டு மகிழ்ந்தும் இளமையின் மயக்கத்தால் தான் செய்வது என்னதென்று கூடத் தெரியாமல் மயங்கியிருந்தான். அம்மயக்கத்தால் பரிசித்து நண்பர்களோடு சேர்ந்து பாம்பு ஒன்றைக் கொன்று, பல காலமாக மிகுந்த தவத்திலிருந்த சிவ முனி ஒருவரின் கழுத்தில் போட்டான். தவம் கலைந்த முனிவர் மிகுந்த சினம் கொண்டவராய் பரிசித்துவை நோக்கி உனக்குப் பாம்பால் மரணம் எனச் சாபமிட்டார்.

சாபநிவர்த்திக்கு வழி தெரியாத பரிசித்து மிக்க வருத்தத்துடன் நாடு திரும்பினான். பரிசித்துவுக்குத் திருமணம் செய்து வைக்கும் நேரம் வரவே பாண்டவர்கள் அம்முயற்சியில் ஈடுபட்டனர். பாண்டவர்கள் அதற்காகக் கண்ணனை அணுகி ஆலோசனைகளை வழங்குமாறு வேண்டினர். கண்ணனும் தமது தம்பி சாத்தகியாழ்வாரின் மகனான துளசி மகாராஜனின் மகள் செல்வியைப் பரிசித்துவுக்குத் திருமணம் செய்து வைக்க மனதுள் எண்ணினார். கண்ணனின் முயற்சியால் திருமணம் உறுதி செய்யப்பட்டது. திருமண நாள் நெருங்கவே நகர்களும், ஊர்களும் அலங்கரிக்கப்பட்டன. பரிசித்து-செல்வியின் திருமணத்தைக் காண பல நாட்டு அரசர்களும் அஸ்தினாபுரம் வந்து சேர்ந்தனர். நகரெங்கும் பல விதமான மங்கள வாத்தியங்கள் இசைக்கப்பட்டன. மணமக்கள், தங்களை நன்றாக அலங்கரித்த பின்னர் குந்தியிடமும், காந்தாரியிடமும் ஆசீர்வாதம் பெற்றனர். வாழ்த்தொலிகள், மங்கலவொலிகள் எங்கும் கேட்டன. மணமக்கள் ஊரார் காணும்படி நகர்வலமாக அழைத்து வரப்பட்டனர். வேதியர்கள் மந்திரம் ஓத பரிசித்து செல்வியை மணந்தான். இருவருமே நன்றாக வாழ்ந்து வந்தனர்.

தருமரும் மனுநீதி முறைப்படி மக்களுக்கு யாதொரு குறைவுமில்லாமல் நாடாண்டார். இவ்வேளையில் பரிசித்துவின் மனைவியான செல்வி ஆண் குழந்தை ஒன்றைப் பெற்றெடுத்தாள். பாண்டவர்களின் நலம்நாடும் கண்ணன் குழந்தைக்குச் சிறந்த ஜோதிடர் வழியாக ஜாதகத்தைக் கணித்தார். அவர்,

தாம் இந்த துவாபர யுகத்தில் வந்த கடமைகளை முடித்து விட்டமையாலும், கலியுகம் வர இருக்கின்றமையாலும் அரச வாழ்வைத் துறந்து, துறவற வாழ்வை ஏற்க மனதுள் எண்ணினார். தம் எண்ணத்தைக் கண்ணன் தூதுவர்கள் வழியாகப் பாண்டவர்களுக்குத் தெரிவித்தார்.

பாண்டவர்கள் கண்ணன் வாழும் துவாரகைக்குப் பயணமாயினர். கண்ணன் அவர்களை அருகழைத்து தம் மனதில் உள்ளதைக் கூறினார். கண்ணனின் துறவறத்தைக் கேள்வியுற்றதும் தருமர் பலவாக வருந்தி உரைத்தார். கண்ணன் தருமரையும் தம்பியரையும் ஆறுதல்படுத்தி, கலியுகம் பிறந்ததும் தாம் இருக்கப் போகும் வைகுண்டத்திற்கு நீங்கள் எல்லோரும் வாருங்கள் எனக் கூறி விடை கொடுத்தார்.

கலியுகம் பிறக்கும் நேரம் நெருங்குகையில் கண்ணனின் குழந்தைகள் துர்ச்செயலில் ஈடுபட்டனர். அக்குழந்தைகளில் ஒருவன் பெண்வேடமிட்டு சூல் தரித்த பெண்ணைப் போல இருக்கவேண்டித் தன் அடிவயற்றில் இரும்புலக்கையை மறைத்து வைத்தான். பிற குழந்தைகள் அவனை அழைத்துக் கொண்டு எதிரே வந்த துர்வாச முனிவரிடம், முனிவரே! இந்தப் பெண் என்ன குழந்தை பெறுவாள் என வினவ, அவர் மிகுந்த சினம் கொண்டவராய், இவள் இரும்புலக்கையைப் பெறுவாள்; அதனாலேயே உங்கள் குலமும் நாசமடையும் என சாபமிட்டார். முனிவரின் சாபப்படியே கண்ணன் மகனுக்கு இரும்புலக்கை குழந்தையாகப் பிறந்தது.

கண்ணன் இரும்புலக்கையால் தம் குலம் நாசமடையும் எனக் கருதி அதை பலமிழக்கச் செய்ய மனதுள் தீர்மானித்தார். அவர் கொல்லர்களை வரவழைத்து, இரும்புலக்கையை அரத்தால் சிறு துகளாக்கி அவற்றைக் கடற்கரையில் தூவும்படியும், எஞ்சிய இறுதிக் கணுவினைக் கடலில் போடும்படியும் ஆணை பிறப்பித்தார். அதன்படியே அனைத்தும் செய்யப்பட்டன.

கடற்கரையில் தூவப்பட்ட இரும்புத் துகள்கள் கூர்மையான வாள் போன்ற கோரைகளாக முளைத்தன. கடலில் போடப்பட்ட இரும்புக் கணு மீனின் வயிற்றில் சேர்ந்து, பரதவனால் பிடிக்கப்பட்டு, வேடன் மனைவியால் சமைக்கப்படும் பொழுது வேட்டைக்கு உதவும் பயன்பாடு கருதி வேடனின் அம்பறாத் தூணியில் இடம்பெற்றது.

கடற்கரையோரம் விளையாடச் சென்ற கண்ணனின் குழந்தைகள் கோரையைப் பிடுங்கி ஒருவரை ஒருவர் அடித்து மாண்டனர். செய்தியை அறிந்த கண்ணன், தாம் வைகுண்டம் சேரும் நேரம் நெருங்கியதை உணர்ந்து, தமது தம்பியான சாத்தகியாழ்வாரிடம் அரசாட்சியை ஒப்படைத்து வனம் புகுந்தார். வனத்தின் ஊடாக நடந்த கண்ணன் ஒவ்வொரு மரமாக ஆராய்ந்து தாம் தவமிருக்க ஆலமரம் ஒன்றைத் தேர்ந்தெடுத்து அதன்கீழ் அமர்ந்தார்.

அவ்வேளையில் மீனின் வயிற்றிலிருந்து இரும்புக் கணுவைப் பெற்ற வேடன் கண்ணன் பாதத்தை மானின் கண்களாகப் பிறழ்ந்து நோக்கி அம்பு தொடுத்தான். அம்பானது வேகமாகக் கண்ணனின் கால்களைத் தைத்து ஊடுருவ, அவரும் மிகுந்த வேதனையால் துடித்தார். தான் செய்த தவறை உணர்ந்த வேடன் கண்ணனிடம் பலவாறாக வருந்திக் கூறினான். கண்ணனும் வேடனை அமைதிப்படுத்தித் தமக்கு நேர்ந்த கதியைப் பாண்டவர்களுள் வீமனுக்கும் அர்ச்சுனனுக்கும் மட்டுமே தெரிவித்து அழைத்து வரக் கூறினார். வேடனும் அவ்விதமே அஸ்தினாபுரம் சென்று இருவரிடமும் செய்திகள் உரைத்தான். இதைக் கேட்டதும் வீமனும், அர்ச்சுனனும் மிகவும் குழம்பியவராய் தம் அண்ணனான தருமரிடம் யோசனை கேட்டனர்.

தருமர் தம்பியர் இருவரிடமும், உங்கள் இருவரை மட்டுமே அழைத்தமையால் அதில் ஏதோ சூட்சமம் இருக்கிறது; நீங்கள் இருவரும் அவர் கை தரச் சொன்னால் விலகியிருங்கள்; கை கொடுத்தால் அவர் உங்கள் கையின் வழியே வலிமையை வாங்கி விடுவார் எனக் கூறி அனுப்பி வைத்தார். வீமனும் அர்ச்சுனனும் விரைவாக வனத்துள் சென்று கண்ணன் வீழ்ந்து கிடக்கும் நிலையைக் கண்டு வருந்தினர். கண்ணனும் அவர்களை ஆறுதல் படுத்தி தரையில் வீழ்ந்து கிடக்கும் தம்மைத் தூக்கி இருத்துமாறு வேண்டினார். ஆனால் இருவரும் தருமரின் அறிவுரைப்படிச் செயலற்று பேசாமல் இருந்தனர். மீண்டும் வேதனையால் பலவாறாகக் கண்ணன் வருந்தியுரைக்க, இருவரும் தம் தண்டாயுதங்களை நீட்டி அவற்றைப் பிடித்து எழுந்திருக்கக் கூறினர். கண்ணனும் அவற்றின் வழியாக அவர்களின் வலிமையை வாங்கிப் பிறகு வைகுண்டம் அடைந்தார்.

இருவரும் கண்ணனின் உடலை அடக்கம் செய்து செய்திகளைத் தெரிவிக்கத் தருமரிடம் சென்றனர். செல்லும் வழியிலேயே இருவரும் கண்ணன் வைகுண்டம் அடைந்ததை உணர்ந்தனர். அவ்வேளையில் ஆயர்களின் ஆநிரைகளை வேடர்கள் கொள்ளையிட்டுச் செல்ல, ஆயர்கள் வீமனிடமும் அருச்சுனனிடமும் தங்கள் ஆநிரைகளைக் காக்குமாறு வேண்டினர். கண்ணனால் இருவரின் வலிமையும் வாங்கப் பெற்றதால் வேடர்களோடு போராடி வீமனும் அருச்சுனனும் தோல்வியை அடைந்தனர். தோல்வியுற்ற இருவரும் தருமரிடம் கண்ணனைச் சந்தித்தது முதல் ஆநிரைகளை மீட்கத் தங்களால் முடியாது போனதுவரையிலும் உள்ள நிகழ்வுகளைக் கூறினர். கண்ணனின் மரணத்தை வீமனும் அருச்சுனரும் உரைக்கத் தருமர் மிகவும் வருந்தி பலவாறாக உரைத்தார். அவ்விதமே செய்தி அறிந்த நகுலன், திரௌபதி, குந்தி ஆகியோரும் தங்கள் வாழ்வில் கண்ணன் செய்த உதவிகளை நினைத்து வருந்தி அழுதனர்.

ஒருவாறு ஆறுதல் அடைந்த தருமர் வேடர்கள் புகுந்து துவாரகையை அழித்துவிடும் நிலையை உணர்ந்தார். ஆதலின் தம்பியர்களிடம் துவாரகையில் உள்ள கண்ணனின் உறவினர்களைக் காப்பாற்றும்படி கூறினார். தம்பியர்கள் நால்வரும் அண்ணனின் கட்டளையின்படியே துவாரகையை அடைந்தனர். இவர்கள் துவாரகையை அடைவதற்கு முன்பாகவே வேடர்கள் அந்நகரை முற்றுகையிட்டிருந்தனர். தருமரின் தம்பியர்கள் கடும் போர் புரிந்து கண்ணனின் உறவினர்களை அஸ்தினாபுரத்திற்கு அழைத்து வந்தனர்.

கண்ணனின் மறைவைத் தாங்காத தருமர் தம்பியர்களிடம் தமது வைகுண்டப் பயணம் குறித்த எண்ணத்தைக் கூறினார். தருமரின் முடிவைக் கேட்ட தம்பியர்கள் மிகுந்த மன வருத்தம் கொண்டவர்களாய் பலவாறு வருந்தி உரைத்தனர். தாங்களும் தருமனோடு வருவோமென உரைத்தனர். அதனால் பாண்டவர்கள் பரிசித்துவுக்குப் பட்டம் கட்ட முடிவு செய்து அதற்கான ஏற்பாடுகளைச் செய்தனர். பரிசித்துவுக்குச் சிறப்பாகப் பல அரசர்கள் முன்னிலையில் பட்டம் கட்டப்பட்டது.

பரிசித்து சிறப்பாக நாடு ஆண்டு கொண்டு இருக்கையில் பிறநாடு ஒன்றிலிருந்து அஸ்தினாபுரத்திற்கு வந்து ஒரு பிராமணன் குடியேறினான். நிலமற்ற அவனுக்கு ஊர் பிராமணன் ஒருவன் நிலம் கொடுத்தான். வந்த பிராமணன் நிலத்தில் வீடு கட்டுவதற்கு மண் அகழும் பொழுது பொற்குடம் ஒன்றைக் கண்டெடுத்தான் அப்புதையலைத் தனக்குத் தானமாகக் கொடுத்த பிராமணனிடம் சேர்ப்பிக்க வேண்டித் தானம் பெற்ற அந்தணன் முடிவு செய்தான். அவ்விதமே அவன் செய்ய முயன்ற பொழுது நிலத்தைத் தானமாகக் கொடுத்தவனோ தான் நிலத்தோடு அதிலுள்ள அனைத்தையுமே கொடுத்ததால் புதையலைப் பெறுவது நீதி ஆகாது என மறுத்தான். வழக்கு நாட்டைவிட்டுக் கிளம்ப முனையும் தருவாயிலிருந்த தருமரிடம் வந்தது. இருவரும் தங்கள் தங்கள் நிலையில் உறுதியாக இருந்தனர். தருமர் ஐந்து நாட்கள் கழித்து தீர்ப்புக் கூறுவதாக இருவரையும் அனுப்பி வைத்தார்.

துவாபர யுகம் முடிந்து கலியுகம் வழக்கை ஒத்திவைத்த இந்த ஐந்து நாட்களுக்கு இடையில் பிறந்தது. இந்த யுகம் அனைத்து தர்ம நெறி முறைகளுக்கும் மாறாக இருப்பதை அவ்யுகப் பிறப்பிலேயே மக்கள் அறிந்தனர். தருமர் கூறிய நாளன்று இரு அந்தணர்களும் நியாயம் கேட்க வந்தனர். தருமர் வெளியூரில் இருந்து வந்து குடியேறிய அந்தணனிடம் அவன் முடிவைக் கேட்டான். அவனோ கழிந்த முறை கூறியதற்கு மாறாக, தானே அந்த நிலத்தின் அதிபதி; ஆகவே தனக்கே அப்புதையல் சொந்தம் எனக் கூறினான். நிலத்தைத் தானமாகக் கொடுத்த அந்தணனோ அதற்கு ஒப்பாது, தான் நிலத்தை மட்டுமே கொடுத்ததாகவும், நிலத்திலுள்ள புதையல் முதலியன தனக்கே சொந்தம் என்றும் வாதிட்டான். தருமன் கலியுகத்தில் தர்மம் பிறழ்வதை இந்நிகழ்வு மூலம் கண்கூடாகக் காணலுற்று வருத்தமடைந்தான்.

இனி அரசாட்சி செய்வது தகாது என முடிவு எடுத்த பாண்டவர்கள் வனம் செல்ல ஆயத்தமாயினர். இம்முடிவு அனைத்து நாட்டு அரசர்களுக்கும் அறிவிக்கப்பட்டது. பல நாட்டு மன்னர்களும் தருமரைக் காண வந்தனர். தருமர் எல்லோரிடமும் அரசாட்சி தர்மங்களை எடுத்துச் சொல்லி, அஸ்தினாபுரத்து அரசன் பரிசித்துவுக்குத் துணையாக இருக்கும்படி கூறினார். பாண்டவர்கள் பரிசித்துவிடம் தாங்கள் வைகுண்டம் போவதைப் பற்றிக் கூற, பரிசித்து பிரிவுத் துயரம் மேலிட்டுப் பலவாறாக வருந்தி உரைத்தான். பாண்டவர்கள் தங்களின் பயண எண்ணத்தைத் தம் தாயார் குந்தி, காந்தாரி ஆகியோரிடமும் தெரிவித்தனர். குந்தி தன் குழந்தைகளைப் பிரிய மனமின்றிப் பலவாறாக வருந்தியுரைத்தாள்; கடந்த கால வாழ்க்கைச் சம்பவங்களைக் கூறி அவர்களின் பயணத்தை நிறுத்த வேண்டினாள். அவ்விதமே காந்தாரியும் தனக்குப் புதல்வர்களாகப் பிறந்த கௌரவர்கள் மடிந்த பிறகு நீங்களே புதல்வர்கள் என்றிருந்தேன்; நீங்களும் செல்கின்றீர்களே என வருந்தியுரைத்தாள். இருவரும் இறுதியில் பாண்டவர்களின் யாத்திரைக்கு விடை தந்தனர். பாண்டவர்களோடு திரௌபதையும் பயணத்திற்கு ஆயத்தமானாள்.

கண்ணனைத் துதித்தபடி அறுவரும் வைகுண்டம் நோக்கித் தங்கள் பயணத்தைத் தொடர்ந்தனர். பரிசித்துவும், பிற நாட்டு மன்னர்களும், அஸ்தினாபுரத்து மக்களும் மிகவும் வருந்தியபடி விடை கொடுத்தனர்.

அறுவரும் வைகுண்டம் நோக்கிச் சென்ற பிறகு நாட்டு மக்கள் எல்லோரும் புகழும்படியாகப் பரிசித்து ஆட்சி செய்தான். இவ்விதம் பரிசித்து தான் ஆட்சி செய்யும் காலத்தில் தனது எதிர்காலம் குறித்து அறிய வேதியரை அழைத்தான். மன்னவனின் ஆணைக்கிணங்க வேதியர்களும் கோள்நிலைகளை ஆராய்ந்தனர். அவர்கள் பரிசித்துவிடம் உங்களுக்குப் பாம்பினால் மரணம் வாய்க்க இருக்கிறது எனக் கூறினர். பரிசித்துவும் தீவிர ஆலோசனைக்குப் பிறகு நடுக் கடல் ஒன்றினுள் யாருக்குந் தெரியாமல், மிகுந்த பாதுகாப்போடு கூடிய மாளிகை ஒன்றை அமைத்திட மந்திரிகளிடம் கூறினான்.

பரிசித்து ஆட்சிப்பொறுப்பைத் தன் மகன் சனமேசயனிடம் ஒப்படைத்து, அறிவுரைகள் கூறி மிகுந்த பாதுகாப்புடன் கடல் நடுவே கட்டப்பட்ட மாளிகையில் தங்கி இருந்தான். அப்பொழுது கார்க்கோடன் என்னும் கொடிய நச்சரவம் பரிசித்துவை நாட்டில் தேடி வந்தது. அவன் அங்கு இல்லை என்பதை அறிந்த அவ்வரவம் பலரும் ரகசியமாய் ஊரில் பேசியதைத் தொடர்ந்து பரிசித்துவின் இருப்பிடத்தை அறிந்து கடற்கரைக்கு வந்து சேர்ந்தது. கடல் நடுவே மன்னவன் இருந்தபடியால் நீந்திச் செல்வதும், பிற உபாயங்களைக் கையாள்வதும் சரியல்ல என்பதை உணர்ந்த கார்க்கோடன் முடிவில் தன் உருவை எலுமிச்சம் பழமாய் மாற்றிக் கடலில் மிதந்தது.

கடல் மாளிகையில் இருந்த காவலர்கள் எல்லோரும் உண்மை அறியாதவராய் மிதந்து வரும் எலுமிச்சம் பழத்தை மன்னனுக்குப் பரிசாகக் கொடுக்க முடிவு செய்தனர். அவ்விதமே மாளிகையின் அருகில் அலைகளால் தள்ளுண்டு வரப்பட்ட கனியை எடுத்துக் காவலர்கள் மன்னனைச் சென்று கண்டனர். மன்னரிடத்துப் பலவாறாகக் கனியின் பெருமைகளைக் கூறி அவருக்கே காவலாளிகள் பரிசாக வழங்கினர். மன்னனும் மகிழ்ந்து கனியை எடுத்துக் கண்ணில் ஒற்றிக் கொள்ள அதுவும் நாகமாக மாறி, கண்ணில் கொத்தி மறைந்தது. மன்னனும் விதியின் வழியே மாய்ந்தான்.

பரிசித்துவின் மரணம் செனமேசெயனுக்குத் தெரிவிக்கப்பட்டது. செனமேசெயனும், நாட்டு மக்களும் நாட்டுக்கு எடுத்து வரப்பட்ட மன்னனின் உடலைப் பார்த்து வருந்தி அழுதனர். மன்னன் செனமேசெயன் வருத்தம் தெளிந்து வேதியர் மூலம் யாகம் வளர்த்து, தன் தந்தையைத் தீண்டிய பாம்பை வரவழைத்து, அவர் உடம்பிலுள்ள விசத்தைத் திருப்பி எடுக்கச் செய்வதாகச் சபதம் உரைத்தான். அவ்விதமே வேதியர்களால் யாகம் வளர்க்கப்பட்டது.

யாகத் தீயின் வெம்மை பரிசித்துவைத் தீண்டிய பாம்பைத் தொடர்ந்தது. வெம்மையைத் தாங்க முடியாத அரவமும் இந்திரனிடம் அடைக்கலமாகப் புகுந்து நடந்தவைகளைக் கூறியது. இந்திரனும் செனமேசெயனிடம் தூதுவரை அனுப்பி இந்திரலோகத்திற்கு வரவழைத்தான். செனமேசெயனிடம் இந்திரன் தொடர்ந்து நீ யாகம் வளர்த்தால் தீயின் வெம்மையால் நாடே அழியும்; உன் தந்தை இளம் பருவத்தில் பாம்புகளை வதைத்தமையாலும், முனியின் சாபத்தாலுமே இம்மரணம் ஏற்பட்டது; ஆகவே யாகத்தை நிறுத்துவாய் எனக் கூறினான். மேலும் சாஸ்திரங்களில் உள்ளபடி தந்தைக்குரிய இறுதிக்கடன்களைச் செய்யும்படியும் கூறினான். அவ்விதமே செனமேசெயனும் நாடு திரும்பிய பிறகு மன்னன் பரிசித்துவுக்கு இறுதிக்கடன்கள் செய்து மனம் தெளிந்திருந்தான்.

செனமேசெயன் நாட்டை நன்றாக ஆட்சி புரிந்து கொண்டிருந்தான். இக்காலத்திலே வியாசர் அஸ்தினாபுரத்திற்கு வந்தார். மன்னனும் அவரை மிகுந்த பணிவோடு வரவேற்றுப் பலவாறாகப் புகழ்ந்துரைத்தான். முக்காலமும் உணர்ந்தவர் வியாசர் எனப் புகழ்ந்துரைத்த மன்னன் முனிவரிடம், நீங்கள் பாண்டவர் கௌரவர் போரைத் தடுத்திருந்தால் இத்தனைபேர் மாண்டிருக்க மாட்டார்களே என வருந்தியுரைத்தான். வியாசரும் எல்லாம் நடந்தது விதியின் வலிமையால் எனக் கூறினார். ஆனால் செனமேசெயனோ வியாசரின் கூற்றுக்கு உடன்படாதவனாய் பலவாறாக அவருக்கு மறுமொழி கூறினான். வியாசரும் மன்னனிடம் என்னளவு நான் தவறில்லாதவன்; விதியின் பயனை நீயே உணருவாய் என்றுரைத்து நாட்டிலிருந்து சென்றார்.

செனமேசெயன் தனது ஆட்சிச் சிறப்பைப் பிற நாட்டார் அறிய வேண்டும் என மனதில் கருதியவனாய் யாகம் வளர்க்க முடிவெடுத்தான். அதன்படியே யாகத்திற்கு வேண்டிய அனைத்துப் பொருள்களையும் வரவழைத்து, அந்தணர்களையும் வரவழைத்து யாகத்தை மன்னன் தொடங்கி வைத்தான். யாகம் தொடர்ந்து நடந்து கொண்டிருக்கும் பொழுது யாகத்தீயை அடுத்திருந்த அந்தணன் ஒருவன் நித்திரை வசப்பட்டிருப்பதைப் பார்த்தான். அதனைப் பார்த்த செனமேசெயனும் அந்தணன் நெருப்பில் வீழ்ந்தால் தனக்குப் பாவம் எனக் கருதித் தருப்பையால் அவன் கவனம் யாகத்தில் இருக்க வேண்டித் தீண்டினான். அரை மயக்கத்தில் இருந்த அந்தணனோ தன் மேல் புலி பாய்ந்தது எனக் கருதித் தீயில் வீழ்ந்தான். தீயில் வீழ்ந்து மாண்ட அந்தணன் மரணம் தன்னாலேயே நிகழ்ந்தது என நினைத்த அரசன் மிகவும் வருந்தினான். அதனால் அவன் பயித்தியம் பிடித்தவனானான்.

மன்னனின் நிலைகண்டு பிற நாட்டு மன்னர்கள் எல்லோரும் வருந்தினர். நாட்டிலுள்ள சிறந்த மருத்துவர்கள் எல்லோரும் வந்து வைத்தியம் பார்த்தனர்; சிலர் மாந்திரீகவாதிகளை அழைத்து வந்து மன்னனுக்கு வந்த நோயைத் தீர்க்கப் பார்த்தனர். அந்தணர் மற்றும் எளியவர்களுக்கெல்லாம் மக்கள் தான தர்மங்களைச் செய்தனர். மேலும் அனைவரும் மன்னரின் நோய் தீரக் கண்ணனைப் பிரார்த்தனை செய்தனர்.

இந்த வேளையில் விதியின் நுட்பத்தை உணர்ந்த வியாச முனிவரும் அஸ்தினாபுரத்தில் வந்து மன்னனைக் கண்டார். பிற நாட்டு மன்னர்கள் செனமேசெயனுக்கு வந்த நோயைத் தீர்க்கும்படி வேண்டினர். மேலும் மன்னன் பித்துப்பிடித்த நோயோடு உடம்பில் வெண்புள்ளிகள் தோன்றிய நிலையில் வெண்குஷ்ட நோய்க்கும் உள்ளானான்.

வியாசர் இந்நோய்கள் தீர செனமேசெயன் மகாபாரதத்தை முழுமையாகக் கேட்க வேண்டுமென உரைத்தார். அவ்விதமே பாரதம் கேட்கவும், பாண்டவர்களும் திரௌபதையும் வைகுண்டம் சென்றதைக் கேட்கவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டன. பாரதம் கேட்க மண்டபம் அமைக்கப் பெற்றது. மன்னன் செனமேசெயனும் கருமையான பட்டு ஒன்றை உடலில் போர்த்திக் கொண்டு அமர்ந்தான். "மகாபாரதக் கதையைக் கேட்டு முடிக்குமளவில் உன் மேல் போர்த்தப்பட்ட கருமையான பட்டு உன் உடம்பின் வெள்ளையை மகாபாரதக் கதையின் மேன்மையால் உள்வாங்கி வெள்ளையாக மாறும்; அத்துடன் உன் நோயும் தீரும்" என வியாசர் உரைத்தார். வியாசர் வைகுண்டம் நோக்கிப் பாண்டவர்களும் திரௌபதையும் நடந்த நிகழ்வைக் கூறலுற்றார்.

அறுவரும் கங்கைக் கரையை அடைந்து, நீராடி அனுஷ்டானங்களை முடித்து, ஆசைகளைத் துறந்து, மரவுரி தரித்துப் பயணம் புறப்பட்டனர். கலி

காலத்தின் விளைவால் ஒருவன் தாயின் தலையில் சுமையை ஏற்றியும் மனைவியைத் தன் தோளிலும் ஏற்றி நடந்து வந்தான். கலிகாலக் கொடுமையைக் கண்டவாறே அறுவரும் காட்டினை அடைந்தனர். கல்லும் உருகி விடும் அளவு காட்டினுள் வெம்மை காணப்பட்டது. தங்கள் பயணம் இடையூறு இன்றி முடிய தருமர் கண்ணனைப் பலவாறாக வழிபட்டார். தருமர் தன்னோடு நடக்கும் தம்பியரையும், திரௌபதையையும் அவர்கள்படும் துன்பம் கண்டு நாடு திரும்பக் கூறினார். அவர் ஐவரிடமும் நாடு திரும்பிப் பரிசித்துவுக்கு உதவியாய் இருங்கள் எனக் கூறினார். ஆனால் தம்பியர்கள் நால்வரும் பலமாகத் தருமர் கூறியதை மறுத்தனர். தருமரும் தம்பியரை மட்டும் தம்மோடு பயணம் தொடர அனுமதித்து திரௌபதையை நாடு திரும்பும்படிக் கூறினார். திரௌபதையும் அழுது தன்னையும் அழைத்துச் செல்லுமாறு கூறவே அறுவரும் மீண்டும் பயணம் தொடர்ந்தனர்.

அறுவரும் பாலை நிலத்தையும், மருத நிலத்தையும் கடந்து திருமால் இருக்கும் திசை நோக்கி நடந்தனர். வழியில் உள்ள அழகிய காட்சிகளைக் கண்டவாறே அனைவரும் பயணம் தொடர்ந்தனர். அதிகமான தூரங்களை அவர்கள் கடந்ததால் கால்களில் அனைவருக்கும் கொப்பளங்கள் உண்டாயின. அப்பொழுது அவர்கள் பயணத்தில் கடக்க வேண்டியதொரு நெருப்பாறு ஒன்று ஓடியது. கண்ணனைப் பாண்டவர்கள் வணங்கவே அவ்வாறும் வழிவிட்டது. அப்பொழுது தம்பியருக்குத் தருமர் பல விதமான ஞானங்களைக் கூறினார். அவரின் உபதேசப்படி தம்பியர்கள் தம் ஆயுதங்களைக் கடலில் எறிந்து, நிராயுதபாணிகளாய்ப் பயணத்தைத் தொடர்ந்தனர். திடீரென மேற்கொண்டு எவ்விதம் பயணம் தொடர்வது என வழி தெரியாது அறுவரும் திகைத்தனர்.

அனைவரும் தம் இடையூறு தீர்க்க விநாயகரை வழிபட்டனர். தருமர் விநாயகரை நோக்கித் தவமிருந்தார். விநாயகரும் தருமருக்குக் காட்சி தந்து காட்டிற்கு அவர்கள் வந்ததின் காரணத்தை வினாவினார். தருமரும் காரணம் கூறித் தங்கள் அனைவருக்கும் வைகுண்ட பாதையைக் காட்டுமாறு வேண்டினார். விநாயகர் வழி காட்ட மீண்டும் அறுவரும் பயணம் தொடர்ந்தனர். அவர்கள் அழகிய மலை ஒன்றைக் கண்ணுற்று நடக்கலாயினர். எதிரில் அப்பொழுது கந்தர்வன் ஒருவன் எதிர்ப்பட்டு தன்னோடு போர்செய்ய தருமரை அழைத்தான். அவர் மறுக்கவே பீமன், அருச்சுனன் ஆகியோரை அழைத்தான். இருவரும் தாங்கள் வைகுண்டம் போகின்றமையால் போர் செய்வதில்லை என உரைத்தனர். கந்தர்வனும் அவர்களுக்குச் சினம் ஊட்டும் வகையில் திரௌபதையைச் சிறையெடுத்தான். பீமன் மிகுந்த சினங் கொண்டு கந்தர்வனோடு போரிடத் தொடங்கினான். தருமர் பீமனை அமைதிப்படுத்தவே போர் நின்றது; கந்தர்வனும் திரௌபதையை விட்டுவிட்டு ஓடினான்.

அறுவரும் மீண்டும் பயணத்தைத் தொடர்ந்து முனிவர் ஒருவரைக் கண்டனர். அவருடன் பேசிய பிறகு பயணத்தைத் தொடர்ந்து நாக மகளிர் நீராடும் பொய்கைக் கரையை அடைந்தனர். அவர்கள் தருமரிடம் இவ்விடம் வந்ததின் காரணம் கேட்க அவர் தமது நோக்கத்தைக் கூறினார். அம்மகளிரோ அனைவரையும் நாக லோகம் வந்து வாழும்படி வேண்டினர். தருமர் மறுத்துத் தம்பியர்களோடும், திரௌபதையோடும் தம் பயணத்தைத் தொடர்ந்தார்.

பயணம் செய்யும் வழியில் அனைவரையும் மலை போலக் கிடந்ததொரு பாம்பு விழுங்கியது. பீமன் தனது சிறுவாளை எடுத்து பாம்பினைப் பிளக்க, அனைவரும் வெளிவந்து நீராடித் தம் உடல்களைச் சுத்தப்படுத்தினர். பீமனால் பிளக்கப்பட்ட அரவமும் அந்தணன் உருவை எடுத்தது. அந்தணன் ஆனவன் தன் வரலாற்றைத் தருமரிடம் கூறி, பீமனால் தான் சாபவிமோசனம் பெற்றமைக்கு மகிழ்ந்து தேவலோகம் அடைந்தான். மீண்டும் அறுவரும் பயணமாயினர். அவர்களின் பயணவழியில் கடக்க முடியாத மலை ஒன்று வர அதை பீமன் தனது தண்டாயுதத்தால் அடித்தான். அது வேதியன் உருவை அடைந்தது. அவ்வேதியன் தருமரிடம் தான் மலையாகச் சபிக்கப்பட்டதின் காரணத்தைக் கூறிச் சென்றான். மீண்டும் அறுவரும் வனத்தினுள் பயணத்தைத் தொடர்ந்தனர்.

வனத்தின் வழியாக அறுவரும் செல்லும் வேளையில் குதிரை முகத்துடன் கூடிய ஒரு பெண் அர்ச்சுனனின் தோளினைத் தழுவி அழகிய பெண்ணுரு கொண்டாள். அவள் தன் வரலாற்றைத் தருமரிடம் தெரிவித்துப் பயணமாயினாள். அவள் சென்றதின் பிறகு நடந்து மாலியாறு என்னும் நதிக்கரையை அடைந்தனர். அவ்வாற்றினை எளிதாகக் கடக்க வீமன் ஐவரையும் தன் தோள்களில் ஏற்றிக் கொண்டு தண்ணீரில் நடக்கத் தொடங்கினான். அந்நதி அவ்வேளையில் பெண்ணுரு கொண்டது. தருமரிடம் அப்பெண் தன் வரலாற்றினைக் கூறினாள்.

மீண்டும் அறுவர்களும் பயணத்தைத் தொடரும் பொழுது திரௌபதி உடல் தளர்ந்து மிகவும் வருத்தமடைந்தாள். அவள் சிறிதுசிறிதாகத் தனக்கு மரணம் ஏற்படப் போவதின் அறிகுறிகளை உணர்ந்தாள். அவளிடம் தருமர் நீ கண்ணனைத் தியானிப்பாய் எனக் கூறினார். திரௌபதியும் மிகுந்த பக்தி உணர்வோடும், கண்ணன் தனக்குச் செய்த உதவிகளை மனதிற் கொண்டும் தியானம் செய்தாள். இறுதியில் உடலைப் போட்டுவிட்டு திரௌபதி வைகுண்டம் அடையலாயினாள்.

பாண்டவர்கள் திரௌபதியின் உடலை அடக்கம் செய்து, சடங்குகள் முடித்துத் தம் பயணத்தைத் தொடர்ந்தனர். பீமன் தருமரிடம் திரௌபதை ஏன் முதலிலேயே மாண்டுவிட்டாள் என காரணம் வினாவினான். தருமர்

தம்பியிடம் அவள் துரியோதனன் மாண்டு பாரதப்போர் முடிவதற்காகப் பிறந்தவள்; ஆகவே மாண்டாள் எனக் கூறினார். பாண்டவர்கள் பயணம் தொடர்ந்து கொண்டிருக்கும் பொழுது ஒரு சிங்கம் அவர்களை நோக்கிப் பாய்ந்து வர, பீமன் தன் காலால் அச்சிங்கத்தை உதைத்தான். அக்கணமே அது ஒரு வேதியனின் உருவைக் கொண்டது. வேதியனும் தருமரிடம் தன் வரலாறு கூறிப் போக, பாண்டவர்கள் தம் பயணத்தைத் தொடர்ந்தனர். பல இடங்களைக் கடந்த பாண்டவர்கள் ஒரு முனிவரைக் கண்டனர். அவரும் பாண்டவர்களின் வரலாற்றினைக் கேட்டு, அவர்களின் பசியை ஆற்றுவித்து, உபதேசங்கள் கூறி, வைகுண்டம் போவதற்கான வழியைக் கூறினார்.

பாண்டவர்கள் மீண்டும் தமது பயணத்தைத் தொடர்ந்தனர். வழியில் அவர்கள் இடும்பி என்றொரு அரக்கியைப் பார்த்தனர். அவள் வழியடைத்து நிற்கவே ஐவரும் அவளது வாய் வழி நுழைந்து பிடரி வழியாக வெளிவந்தனர். அப்பொழுது அவள் அழகிய பெண்ணாய், திரௌபதை போல் வடிவெடுத்தாள். அவள் தருமரிடம் தன் வரலாறைக் கூறிச் செல்ல பாண்டவர்களும் பயணம் தொடர்ந்து துர்வாச முனிவரைக் காண அங்குள்ளோரிடம் வழி கேட்டு அவர் இருக்கும் இடத்தை அடைந்தனர்.

துர்வாசமுனிவரின் கோட்டைக்கு ஐவரும் செல்ல, அவரின் கோட்டை காவலாளியாக உள்ள விநாயகரைத் தருமர் வழிபடவே கதவு திறந்தது. மிகவும் பக்தியோடு விளங்கும் துர்வாசரின் நகரில் நடந்த பாண்டவர்கள் அம்முனிவரைக் கண்டனர். அவரும் பாண்டவர்களிடம் பயண நோக்கம் கேட்டு, பலவித அருளுரைகளைக் கூறி விடை கொடுத்து அனுப்பினார். பயணத்தைத் தொடர்ந்த பாண்டவர்கள் காளி கோயில் ஒன்றுக்குச் சென்று வழிபட்டனர். காளியும் தருமருக்கு ஆசி கூறினாள்.

பாண்டவர்கள் காளியின் அருளாசியுடன் தம் பயணத்தைத் தொடர்ந்தனர். அப்பயணத்தின் பொழுது கைலாசன் என்றதொரு பெரிய அரக்கன் வழியை அடைத்தது போல் கிடந்து தூங்கிக் கொண்டிருந்தான். ஐவரும் சேர்ந்து அவனைத் துயிலெழுப்பினர். அவ்வரக்கனைப் பீமன் போர் செய்து மடியச் செய்தான்.

ஐவரும் பயணம் தொடர்ந்து கொண்டிருக்கையில் பீமன் தருமரிடம் வழிநடைப் பயணக் களைப்பு தெரியாமல் இருக்கக் கதைகள் கூறும்படி கேட்டுக்கொண்டான். தருமர் மும்மூர்த்திகளின் தொழில்களைக் குறித்துத் தம்பியரிடம் உரைத்தார். மேலும், அவர் பாற்கடலில் அமுதம் கடைந்த நிகழ்வைத் தம்பியர்களுக்குக் கூறினார்.

பாற்கடலில் மேரு மலையைத் தூணாக நிறுத்தி, வாசுகியைக் கயிறாகக் கொண்டு தேவர்கள் ஒரு புறமாகவும், வாலி ஒரு புறமாகவும் நின்று அமிர்தம்

கடைந்தனர். அப்பொழுது அமிர்தம் கிடைக்கும் வேளையில் வாசுகி பாம்பானது வேதனை தாங்க மாட்டாமல் விஷத்தைக் கக்கவே அனைவரும் சிவனிடம் முறையிட்டனர். சிவபெருமான் அமிர்தத்தில் விஷம் கலக்காமல் இருக்க வேண்டி வாசுகி பாம்பின் விஷத்தைச் சேகரித்து உண்டார். அப்பொழுது தன் கணவன் விஷம் அருந்தியதால் மாள்வான் எனக் கருதிய பார்வதி அவரது கண்டத்தைப் பிடித்தாள். இதனால் அவருக்கு நீலகண்டன் என்றதொரு பெயரும் வழங்கலாயிற்று எனத் தருமர் தம்பியர்களுக்கு உரைத்தார்.

மேலும் தருமர் சிவன் முப்புரம் எரித்த கதையையும் கூறலானார். அரக்கர்கள் மூன்று கோட்டைகளைக் கட்டிக் கொண்டு தேவர்கள் முதலானவர்களுக்கு மிகுந்த துன்பம் விளைத்தனர். தேவர்கள் சிவனிடம் முறையிடவே, அவர் இவ்வரக்கர்கள் சிறந்த சிவ பக்தர்கள்; ஆகவே இவர்கள் தம்மை மறக்கும் பொழுதில் நான் இவர்களின் முப்புரத்தையும், இவர்களையும் அழிப்பேன் என்றார். இதற்கு வழியறிய தேவர்கள் திருமாலிடம் சென்றனர். திருமாலும் புத்தரைப் போல வடிவெடுத்து அரக்கர்களிடம் சென்று அவர்களின் தத்துவங்களை எதிர்த்து வாது புரிந்து வென்றார். இவ்வேளையில் முப்புரத்தார் சிவபூஜையை மறக்கவே சிவனும் முப்புரத்தை அழித்து, அவ்வரக்கர்களைக் கொன்றார்.

மீண்டும் ஒரு கதை கூறும் படி தருமரிடம் வீமன் கேட்டான். தருமர் இரணியாசுரன் கதையைக் கூறினார். இரணியன் என்னும் அசுர அரக்கன் தேவர்கள் முதலாக எல்லோரையும் ஏவல் செய்து கொடுமைப்படுத்தவே அவர்கள் திருமாலிடம் சென்று முறையிட்டனர். திருமால் இரணியனுக்கு எதிராக, திருமால் பக்தனாகப் பிரகலாதனை மகனாகப் பிறக்கச் செய்தார். இரணியன் மகனான பிரகலாதன் வேதியரிடம் கல்வி பயிலும்பொழுது அவர்கள் கூறும் 'இரணிய நம' என வேதம் ஓதாது திருமால் பெருமைகளைக் கூறினான். வேதியர் பிரகலாதனைத் தம் வழிக்குக் கொண்டுவரத் தெரியாமல் திகைத்து இரணியனிடம் நடந்ததைக் கூறினார். அவன் தன் மகனை அழைத்து உன் திருமால் என்னினும் பெரியவனா? எனக் கூறி அவன் எங்கும் இருப்பானா அப்படியானால் இத்தூணில் இருப்பானோ எனத் தூணை அறைந்தான். அதனுள் இருந்து திருமால் நரசிங்கமூர்த்தியாய் வந்து அவனை மாய்த்தார்.

கதையைக் கேட்ட தம்பியர்கள் தருமரோடு நெடுந்தூரம் நடந்தனர். பீமன் மீண்டும் தருமரிடம் கதை கூறும்படிக் கேட்டான். அவர் தம்பியர்களுக்கு மாபலிச் சக்கரவர்த்தியின் கதையைக் கூறினார். ஓர் எலி யானது சிவனுக்கு ஏற்றப்பட்ட விளக்கின் திரியை அணைந்து போகாமல் இருக்க தன் மூஞ்சியினால் தூண்டவே சிவபெருமானும் மனம் மகிழ்ந்து

அதற்கு மறுபிறப்பில் மாபலிச் சக்கரவர்த்தியாகப் பிறக்க வரம் தந்தார். அவ்விதம் பிறந்த சக்கரவர்த்தியின் ஆட்சிச் சிறப்பாக இருந்ததாலும் இவ்விதம் இது தொடருமானால் ஆட்சியின் மேன்மை தேவலோகத்தையும் விஞ்சிவிடும் என்பதாலும் திருமால் அவனை அழிக்கக் கருதி மூன்றடி மண் வேண்டினார். மூன்றடி மண்தானே என்கிற இறுமாப்பில் மன்னனும் தாரை வார்த்து வாமன அவதாரத்தில் இருந்த திருமாலுக்குக் கொடுத்தார். திருமால் விஸ்வரூபம் எடுத்து ஓரடியில் விண்ணையும், மற்றொரு அடியில் மண்ணையும் அளந்து மூன்றாமடி இடத்தைத் தர மன்னனால் இயலாது போனமையால் அவனைச் சிறைபிடித்துச் சொர்க்கத்தில் வைத்தார்.

கதை கேட்டு மகிழ்ந்த பீமன் அண்ணனிடம் பிறிதொரு கதை கூறும்படிக் கேட்டான். தருமர் அவனுக்கும் தம்பியர்களுக்கும் திருமால் பிரம்மன் இருவருக்கும் இடையில் தம்முள் யார் பெரியவன் என்கிறதான போட்டியைக் குறித்தும், அதன் முடிவு குறித்தும் சொல்லத் தொடங்கினார். திருமால் உலகை எல்லாம் படைத்து, நியதிகளை உருவாக்கிவிட்டு ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தார். அப்பொழுது பிரம்மன் அவரிடம் வந்து பலவாறாகத் திருமாலின் தொழிலை இகழ்ந்துரைத்தார். இருவருக்கும் இடையில் வார்த்தைகள் பெரிதாய் போக, இறுதியில் ஒருவர் தம்முன் தம் வலிமையைக் கண்டறிய மற்போர் புரிய ஆரம்பித்தனர். இதனால் தேவர்கள், இந்திரன் முதலியோர் அச்சமுற்று சிவனிடம் முறையிட்டனர். சிவனும் அவர்களின் நிலை கண்டு இரங்கி பிரச்சனையைத் தீர்ப்பதற்காகத் திருமாலுக்கும் பிரம்மனுக்கும் நடுவில் ஓர் அக்னி மலையாக வளர்ந்தார். அப்பொழுது இருவரும் தம்முள் இம்மலையின் அடி முடியை முதலில் காண்பவர்களே பெரியவர் எனக் கூறி, அவற்றைக் காணப் புறப்பட்டனர்.

அதன்படி திருமால் வராகமாகவும் பிரம்மன் அன்னமுமாய் மாறி அக்னி குன்றின் அடிமுடியைத் தேடிச் சென்றனர். இருவரும் மிக நீண்ட தூரம் முறையே பாதாளமும், வானமுமாகச் சென்றும் அக்னி குன்றின் எல்லையைக் காண முடியாதவர்களாய்த் திகைத்தனர்.

இருவரும் அடி முடி காண முடியாமல் திகைத்துக் கொண்டிருக்கும் வேளையில் அக்னி மலையாய் வளர்ந்த சிவனின் தலையிலிருந்து வரும் தாழம்பூவைப் பிரம்மன் பார்த்தார். அவர் திருமாலை வெல்ல அப்பொழுது மனதுள் எண்ணித் தாழம்பூவிடம் நடந்தவைகளைக் கூறி, தமக்காகத் திருமாலிடம் நீ என்னுடன் வந்து நான் அக்னி குன்றின் முடியைக் கண்டதாகச் சாட்சி சொல்ல வேண்டும் எனக் கூறினார். நிரம்ப நேர யோசனைக்குப் பிறகு தாழம்பூ சம்மதம் தெரிவித்தது. சம்மதம் வாங்கிய பிரம்மன் தாழம்பூவோடு திருமால் இருக்கும் இடம் சென்று தாம் மலையின் முடி கண்டதாகவும், அதற்கு இப்பூவே சாட்சி என்றும் கூறினார்.

தாழம்பூவும் பிரம்மனின் கூற்றை ஆமோதித்துப் பொய்யுரை கூறியது. இப்பொய்யுரையால் அக்னி மலை கொதிக்கவே அனைவரும் சிவனிடம் தஞ்சமடைந்தனர். தவறை உணர்ந்த பிரம்மன் சிவனைத் துதித்தார். பிரம்மன் தவறு செய்ததால் அவருக்கு என இவ்வுலகில் தனித்த கோயிலும் பூசையும் இனி கிடையாது எனவும், தாழம்பூ பொய்யுரைத்ததால் இனி தம் கோயிலில் அதற்கு இடமில்லை எனவும் சிவன் தண்டனை வழங்கினார். திருமாலும் பிரம்மனும் தம்முள் சினம் தணிந்து சிவனைத் துதித்தனர். இருவருக்கும் சிவபெருமான் அறிவுரைகளைக் கூறினார். இருவரும் சிவபெருமானிடத்து அவர் அக்னிமலையாய் எழுந்தருளிய இடத்தில் நிரந்தரமாய் பக்தர்களுக்கு அருள் பாலிக்க வேண்டினர். சிவபெருமானும் அவ்விதமே செய்ய, அம்மலைக்கு இருவரும் 'அருணாசலம்' எனப் பெயர் சூட்டி அங்குக் கோயில் ஒன்றையும் எழுப்பினர்.

இக்கதையுடன் இராமர் கதையும், ஏனைய திருமாலின் தெய்வீக அற்புதங்கள் பலவற்றையும் தருமர் தம்பியருக்கு உரைத்தார். இவ்வேளையில் திருமால் தருமரின் மனவுறுதியை அறிய எண்ணிக் கருடனை அனுப்பினார். கருடப்பறவை அன்ன வடிவெடுத்துப் பாண்டவர்கள் பயணப்படும் வழியிலுள்ள ஆலமரத்தில் வந்து அமர்ந்தது. அங்கு வந்து பாண்டவர்களும் இளைப்பாறினர். அன்னம் தருமரிடம் அவர்களின் நோக்கத்தைக் கேட்ட பிறகு, வைகுண்ட லோகம் என்பது எவருக்கும் சாத்தியமில்லை என்பது போல பலவாகப் பேசியதோடு அவர்களின் பயணத்தையும் இகழ்ந்துரைத்தது. ஆனால் தருமரோ தம் எண்ணத்தின் உறுதியை அன்னத்திடம் தெளிவுபடுத்தினார்.

அன்ன வடிவிலிருந்த கருடன் தருமரின் மனவுறுதியைத் திருமாலிடம் கூற வைகுண்டம் திரும்பியது. தருமரின் மனவுறுதியை அறிந்து மகிழ்ந்த திருமால் அவருக்கும், அவரது தம்பியர்களுக்கும் பாதுகாவலாக இருக்கும்படி தமது சக்கராயுதத்தை அனுப்பினார். அவ்விதமே திருமாலின் சக்கராயுதம் வனத்தையடைந்து பாண்டவர்களின் பயணத்தில் அவர்களோடு தானும் தொடர்ந்தது.

சகாதேவன் அப்பொழுது மிகவும் உடல் தளர்ச்சி அடைந்து தன் உயிர் பிரியப் போவதை உணர்ந்தான். தன் நிலையைத் தருமரிடம் கூறிய சகாதேவன் திருமாலைப் பலவாறாகப் போற்றி யோக நிலையில் அமர்ந்து முக்தியை அடைந்தான். நால்வரும் சகாதேவனை அடக்கம் செய்து தம் பயணத்தைத் தொடர்ந்தனர். அப்பொழுது பீமன் தருமரிடம் சகாதேவனின் மரணம் தங்கள் நால்வருக்கும் முன்பாகவே நடந்ததின் காரணம் வினாவினான். தருமரும் அவன் அரவானை மகாபாரத யுத்தத்தில் களபலியாகக் கொடுக்கச் செய்த யோசனையே நமக்கும் முன் அவன் உயிரைப் போக்கியது என்றுரைத்தான்.

பதில் கேட்ட பீமன் சிந்தை தெளிய, நால்வரும் பயணப்பட்டு சந்தரகாந்த மலையை அடைந்து தீர்த்தமாடினர். அங்குத் தீர்த்தமாட வந்த தேவகன்னியர், நால்வர் மீதும் காதல் கொண்டு அவர்களின் பூர்வ வரலாற்றைக் கேட்டனர். தருமரும் தம் வரலாறு கூறி வைகுண்டம் நோக்கித் தாங்கள் போவதைக் கூறினார். மகளிர் தருமரையும், அவரது சகோதரர்களையும் புகழ்ந்து உரைத்து, தங்களைத் திருமணம் செய்து கொண்டு தேவ லோகத்தில் தங்கும்படி கூறினர். தருமர் அவர்களுக்கு மறுப்புரைகளைக் கூறி, தம்பியர்களோடு பயணத்தைத் தொடரலானார்.

நால்வரும் பயணத்தைத் தொடர்ந்து வாளகிரி மலையை அடைந்தனர். அவ்விடத்திலுள்ள வானரங்கள் அவர்களை உபசரித்துப் போற்றி அவ்விடத்திலேயே தங்க வேண்டின. தருமர் அன்புடன் அவற்றின் வேண்டுகோளை மறுக்கவே, வானரங்கள் அதற்கு உடன்பட்டு பாண்டவர்களின் பயணத்திற்கு வழிகாட்டிக் கொண்டு சென்றன.

பயணத்தின் பொழுது நகுலன் மிகவும் சோர்வடைந்து மரணத் தறுவாயை அடைந்தான். எமனின் வருகையை உணர்ந்த நகுலன் எட்டெழுத்து மந்திரத்தையும் திருமால் பெருமையையும் ஓதியபடி இருக்க விண்ணோர் விமானத்தில் அவனை அழைத்துச் சென்றனர். மூவரும் நகுலனின் உடலை அடக்கம் செய்து, தீர்த்தமாடி, கருமங்கள் முடித்துத் தம் பயணத்தைத் தொடர்ந்தனர். அப்பொழுது நகுலன் மடிந்ததின் காரணத்தைப் பீமன் தருமரிடம் வினாவினான். தருமரும் அவனிடம் நகுலன் தான் படித்த வித்தையைப் பிறருக்கு உரைக்காமல் இருந்தமையாலேயே அவனுக்கு மூவருக்கும் முன்பாக மரணம் ஏற்பட்டது எனக் கூறினார்.

மூவரும் அதிகமான இடங்களை நடந்து கடந்தனர். அவ்விதம் மூவரும் பயணப்பட்டுக் கொண்டிருக்கும் வேளையில் ஒரு மதயானை அவர்கள் மீது மோதியது. பீமன் அம்மதயானையை அடக்கப் போராடி வென்றான். அம்மத யானையும் பணிந்து ஒரு வேதியனாக உருமாறியது. வேதியன் தன் வரலாற்றைத் தருமரிடம் கூறி விடைபெற, மூவரும் பயணத்தைத் தொடர்ந்து மயேந்திர மலையை அடைந்தனர். அவ்விடத்திலுள்ள முனிவரைக் கண்டு வணங்கிய மூவரும் மீண்டும் பயணம் செய்து தவக் கன்னியர்களைக் கண்டனர். மேலும் பல இடங்களைக் கடந்த அவர்கள் சித்தர்கள் வாழும் இடம் சென்று அவர்களிடம் அறிவுரைகளைக் கேட்டு பயணத்தைத் தொடர்ந்தனர்.

இவ்விதம் பயணம் மேற்கொண்டிருக்கையில் அர்ச்சுனன் உடலில் அசதி ஏற்பட்டது. நா வறண்டு உடல் சோர்ந்த அர்ச்சுனன் திருமாலை நோக்கி வழிபட்டு, அவரது புகழைக் கூறலானான். அர்ச்சுனனை எதிர்கொண்டு அழைக்கத் தேவலோகம் அலங்கரிக்கப்பட்டது. வானவர்கள் அர்ச்சுனனை வைகுண்ட லோகத்தில் கொண்டு சேர்த்தனர்.

தருமனும் பீமனும் அருச்சுனன் உடலை அடக்கி வேண்டிய கருமங்கள் முடித்துப் பயணத்தைத் தொடர்ந்தனர். பயணக் களைப்பால் இருவரும் மர நிழலில் வந்தமர்ந்த பொழுது பீமன் தருமரிடம் அர்ச்சுனனின் மரணம் குறித்துக் கேட்க, அவர் தம்பியிடம் அர்ச்சுனன் திருமாலையே தனது தேரோட்டியாக வைத்துத் தேர் செலுத்திய பாவத்தாலேயே இது நிகழ்ந்தது எனக் கூறினார்.

இருவரும் தொடர்ந்து தம் பயணத்தை மேற்கொண்டு வராகி மலையை அடைந்தனர். அவ்விடத்தில் பன்றி ஒன்று தருமர் மீது மோத, பீமன் சினங்கொண்டு அதைத் தாக்கினான். உடனே அப்பன்றியும் வேதியர் உரு எடுத்தது. வேதியரும் தருமரிடம் தம் வரலாறு கூறிச் சென்றார். மீண்டும் இருவரும் பயணத்தைத் தொடர்ந்து கொண்டிருக்கையிலே பீமனுக்குப் பல தீநிமித்தங்கள் உருவாகி, அவனது மரணத்தை சூட்சமமாக உணர்த்தின. பீமனும் அண்ணனிடம் தன் நிலையைக் கூறித் திருமாலைப் பல பட புகழ்ந்து கொண்டிருந்தான். அவ்வேளையில் தேவர்கள் பல மங்கல வாத்தியங்கள் முழங்கப் பீமனைத் தேரேற்றி வைகுண்டலோகத்தில் சேர்த்தனர்.

தருமர் அனைத்துத் தம்பியரும் மரணம் அடைந்தமை குறித்து மிகவும் மனம் வருந்தியவராய், பீமனுக்கு அனைத்துக் கர்ம காரியங்களையும் முடித்தார். தருமரைத் தனிமைத் துயரம் மிகவும் துன்புறுத்தியது. அவரும் தாம் மட்டும் எவரின் துணையுமின்றி எவ்விதம் வைகுண்டம் போவோம் என வருந்தி தமக்கும் அப்பதவியை விரைந்து தரத் திருமாலிடம் வேண்டினார். இவ்விதம் பலவாறாக வருந்தி, செய்வதறியாது திகைத்து, தருமரும் வழிநடந்து, களைப்பு மிகுதியால் ஓர் ஆலமரத்தடியில் தங்கினார்.

ஆல மரத்தடியில் துயின்ற தருமரை ஐந்து தலை நாகம் ஒன்று விழுங்கியது. உடனே தருமரைப் பின் தொடர்ந்த விஷ்ணு சக்கரமானது அப்பாம்பைப் பிளந்து தருமரைக் காப்பாற்றியது. துயில் கொண்டு எழுந்தவர் போல தருமர் நிகழ்ந்த நிகழ்வுகளை அறியாதவராய் மீண்டும் பயணம் செய்து, நீராடி, தம்பியர்களுக்குத் தர்ப்பணமும் செய்தார்.

பயணத்தைத் தொடர்ந்த தருமர் தாம் செல்லும் வழியில் கடப்பதற்கரிய ஒரு மலையைக் கண்டு திகைத்தார். திகைத்த தருமர் திருமாலைத் துதிக்கவே, விஷ்ணு சக்கரம் மலையைப் பெயர்க்கத் தம் இடையூறு நீங்கப் பெற்ற அவர் பயணத்தைத் தொடர்ந்தார். ஒரு காட்டின் வழியாகச் செல்லும் பொழுது பல மிருகங்களும் தருமர் மீது அன்பு கொண்டு அவரைப் பின்தொடர்ந்தன. தருமர் அவைகளை அமைதிப்படுத்தி, நெடுந்தூரம் கடந்து சிவபெருமான் வாழும் கயிலாயமலையை அடைந்தார். அங்கிருந்து கொண்டு சிவபெருமானை வணங்கித் துதிக்கவே அவரும் தருமருக்குக் காட்சி கொடுத்தார். அவரிடம் அருளாசி பெற்ற தருமர் அங்குச் சிறிது இளைப்பாறிவிட்டு மீண்டும் பயணத்தைத் தொடரலானார். வழியில் அவர்

சிவலோகப் பட்சி, கீதக பட்சி ஆகியவைகளைக் கண்டு, அவற்றோடு உரையாடி விடைபெற்று இரவு வந்ததும் மணலையே மெத்தையாக நினைத்துப் பள்ளி கொண்டார்.

சூரிய உதயமான நேரத்தில் அவ்விடத்தில் பல அரம்பையர்கள் நீராடி வந்தனர். அவர்கள் தருமரைக் கண்டு அன்பு மொழி பேசித் தங்களிடத்து இருக்க வேண்டினர். தருமர் அவ்வேண்டுகோளை மறுத்துப் பயணத்தைத் தொடரலானார். அப்பொழுது அவர் கடக்க இயலாத அளவிற்கு ஒரு பெரிய ஆறு வழியில் ஓடிக் கொண்டிருந்தது. தருமரும் திருமாலை நோக்கித் தமக்கு உதவி செய்ய வேண்டவே ஆற்றில் நீர் பெருமளவு குறைந்தது. இவ்வேளையில் திருமால் மீண்டும் ஒருமுறை தருமரைச் சோதிக்க எமனை அனுப்பினார்.

எமன் நாயின் வடிவை எடுத்துத் தருமர் முன் தோன்றினான். அந்நாய் உடல் எல்லாம் நோய்வாய்ப்பட்டு மிகவும் பலகீனமாகவும், சீழ் பிடித்தும் இருந்தது. அது தருமரிடம் தன்னையும் அவரோடு அழைத்துச் செல்லும்படி வேண்டியது. தருமரும் சம்மதம் தெரிவித்துத் தண்ணீரில் சிறிதளவு கூட நாயின் உடல் நனையாத வண்ணம், அதன் நாற்றமடிக்கும், புழு சொரியும் உடலைச் சேர்த்தணைத்து மறுகரையில் கொண்டு விட்டார். கரையை அடைந்ததும் நாய் வடிவிலுள்ள எமன் தன் சுய வடிவை எடுத்துத் தருமரை ஆசீர்வதித்துப் போனான். தருமரும் தமது வைகுண்ட பயணத்தைத் தொடரலானார். நிரம்ப தூரம் நடந்த பிறகு தருமர் கேதார மலையைக் காணலானார். அப்பொழுது தருமரைப் பின் தொடர்ந்து வந்த சக்கரம் அவரைத் தொழுதது.

வானுலகத்துத் தேவர்கள் எல்லோரும் தருமர் தமது உடலோடே வைகுண்ட லோகத்தை நெருங்கிக் கொண்டிருப்பதை உணர்ந்து அவரை வரவேற்கத் தயாராயினர். திருமாலும் தருமரை எதிர்கொண்டு அழைக்கத் தேவர் முதலானவர்களுக்கு ஆணை பிறப்பித்தார். தேவர்கள் தமது உலகை அலங்கரித்து தருமரை எதிர்கொண்டு அழைத்து தேவலோகத்திலுள்ள பொய்கையில் நீராடச் செய்தனர். தருமரும் நீராடிப் பொன்நிற மேனியராகினார். பிறகு தருமர் இந்திர லோகத்திற்கு அழைத்துச் செல்லப்படவே, அவ்விடத்தில் உள்ளோர்களிடம் தான் தம் தம்பியர் இருக்கும் இடத்திற்குச் செல்ல விருப்பப்படுவதாகக் கூறினார்.

தருமர் பாரதப்போரில் துரோணருக்கு எதிராகப் பொய்யுரைத்த ஒரு நெறிபிறழ்ந்த செயல் இருந்தமையால் எமன் அவரை ஏழு நரகங்களையும் காணும்படிச் செய்தான். அவ்விதமே தருமரும் எம கிங்கிலியர்களால் அழைத்துச் செல்லப்பட்டார். ஒவ்வொரு நரகங்களாகப் பார்வையிட்டு வந்த தருமர் ஏழாவது நரகத்திற்கும் அழைத்துச் செல்லப்பட்டார்.

ஏழாவது நரகத்தில் தருமர் திருதராஷ்டிரனின் மைந்தர்களான துரியோதனன் முதற்கொண்டு பலரைக் கண்டார். துரியோதனன் அந்நரகத்தில் கடுமையான துயரத்தை அனுபவித்துக் கொண்டிருந்தான். அவன் தருமரைப் பார்த்துத் தனது தவறுகளுக்கு மன்னிப்புக் கோரியும் இந்நரகிலிருந்து கரையேற்றிவிடும்படியும் வேண்டினான். துரியோதனன் நிலைக்கு இரங்கிய தருமர் தாம் செய்த தான தர்மங்களின் புண்ணியத்தின் பகுதியை அளித்து அவனை நரகத்திலிருந்து மீட்டார்.

எதிரியைக் கூட மன்னித்து அருளும் தருமரின் பாங்கினைக் கண்ட எமன் அவருக்கு ராஜரிஷி என்ற பட்டத்தை வழங்கினான். ஏழு நரகங்களையும் கண்ட தருமர் எமலோகத்திலிருந்து புறப்பட்டார். அவர் பிரமலோகம் அடைந்து, பிரம்மனை வணங்கி வைகுண்டம் நோக்கிச் சென்று கொண்டிருந்தார்.

தருமரின் வருகையை எதிர்கொள்ளும் வகையில் வைகுண்டலோகம் நன்கு அலங்கரிக்கப்பட்டது. வைகுண்டலோகம் சென்ற தருமர் திருமாலைத் தம் கண்களில் நீர் சொரிய வணங்கினார். திருமாலும் அவரை அழைத்துக் கொண்டு தம் லோகத்தைச் சுற்றிக் காட்டினார். தருமர் அவ்விடத்தில் மாபலி , பிரகலாதன் உள்ளிட்ட பலரைக் கண்டார். பிறகு திருமால் தருமரைத் தமது லோகத்திலுள்ள மலர்ச்சோலைக்கு அழைத்துச் சென்றார். அச்சோலையில் தருமரின் தம்பியர்களும், திரௌபதையும் காணப்பட்டனர். திருமால் அனைவருக்கும் முடி சூட்டி வைக்க அறுவரும் வைகுண்டத்தில் வீற்றிருந்தனர்.

இவ்விதமாகப் பாண்டவர்களும் திரௌபதையும் வைகுண்டம் சேர்ந்த நிகழ்வுகளை வியாசர் செனமேசெயனுக்குக் கூறி முடித்தார். இக்கதையினை மனம் ஒன்றிக் கேட்டுக்கொண்டிருந்த செனமேசெயனின் நோய்கள் தீர்ந்தன. நோய் தீர்ந்த அற்புதத்தை உணர்ந்த செனமேசெயனும் பாண்டவர்களுக்கு மிகச் சிறப்பானதொரு கோயிலை எழுப்பினான்.

செனமேசெயனின் நோய்கள் தீர்ந்த பிறகு வியாசரும் மன்னனை வாழ்த்தி விடை பெற்றார். மன்னன் வியாசரை வணங்கி விடை கொடுக்க அவரும் விண்ணுலகம் நோக்கிப் பயணமானார். செனமேசெயனும் நன்றாக ஆட்சி செய்தார்.

ஆசிரியர் நூல் இறுதியில் நூற்பயன், நூலாசிரியர் பெயர், நூலின், காலம், இராம நாமத்தின் பெருமைகள் முதலியனவற்றைக் கூறித் தம் நூலை முடிக்கிறார்.

## பெருந்தேவனார் பாரதமும் வைகுண்ட அம்மானையும்

வைகுண்ட அம்மானைக்கு முந்தைய பாரதக் கதைகளில் காணப்படும் தருமர் முதலானோர் வைகுண்டம் அடைந்த பகுதிகளும் இந்நூலும் முறையே

பல ஒற்றுமைக் கூறுகளைக் கொண்டுள்ளன.

பெருந்தேவனார் பாரதம் எவ்வித இயல் பகுப்புகளுமின்றி வெண்பா யாப்பில் உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் அமைப்பிலும், விளக்கவுரையுடனும் காணப்படுகின்றது. இந்நூல் 339 வெண்பா பாடல்களால் ஆனது. இந்நூலாசிரியர் வியாச பாரதத்திலுள்ள சுவர்க் காரோகண பர்வத்திலுள்ள கதையை ஒத்து இந்நூலைச் செய்துள்ளார் என்பர்.[1] இந்நூல் பல ஏடுகள் விடுபட்ட நிலையிலும், கிடைத்த ஏடுகளில் சிதைந்த பகுதிகளைக் கொண்டும் பதிப்பிக்ககப்பட்டுள்ளது. பதிப்பிற்கான கதைப்பாடல் இப்பாரத நூலையே பெருமளவும் தழுவி விரிவாகச் செய்யப்பட்டுள்ளமையை வைகுண்ட அம்மானை நூலைக் கொண்டு உணர முடிகிறது.

பெருந்தேவனார் பாரதம் செனமேசெயன் விதியின் வலியை உணர்ந்து வியாசர் கூறியபடி பாரதக் கதையைக் கேட்டு தன் நோய் தீர்க்க முனைவதிலி ருந்து தொடங்குகிறது. ஆயின் வியாசர் அவனுக்குப் பாண்டவர்களும் திரௌபதையும் வைகுண்டம் ஏகியதைக் கூறாமல், ஆசிரியர் தாமே கதை கூறி முடிப்பது போல் முடித்துள்ளார். இந்நூல் வைகுண்ட அம்மானையைப் போலவே கீழ்க்கண்ட நிலைகளில், கதை கட்டமைப்பில் ஒற்றுமை உடையதாகக் காணப்படுகிறது.

1) கலியன் பிறப்புக்கு அந்தணர்கள் தர்மம் பிறழ்ந்த கதையைக் கூறுவது.

2) கண்ணன் குலம் முனிவரின் சாபத்தால் அழிதல்.

3) தருமர் ஈறாக எஞ்சிய ஐவரான திரௌபதை, சகாதேவன், நகுலன், அர்ச்சுனன், பீமன் என்கிற வரிசையில் வைகுண்டத்திற்கு உடம்பைப்போட்டுவிட்டுப் போதல்; தருமர் உடம்போடு போதல் என்கிற வரிசையமைப்பு.

4) அறுவரின் பயணத்தின் பொழுது பலரும் பாண்டவர்களிடம் சாப நிவர்த்தி பெறுதல்.

5) எமன் தருமரின் உள்ள உறுதியைச் சோதிக்க நோய்வாய்ப்பட்ட நாயாக வருதல்.

6) தருமர் துரோணரின் மகன் இறந்தான் என்னும் பொருள்பட பொய் பேசியதால் ஏழு நரகங்களையும் காணுதல்.

7) தருமர் துரியோதனனுக்குத் தம் தர்மத்தில் பாதியைக் கொடுத்து நரகத்திலிருந்து மீட்டது.

1. எஸ். முத்துரத்ன முதலியார் (பதி.) மேற்படி நூல், ப.13.

8) வைகுண்ட லோகத்தில் மாபலிச் சக்கரவர்த்தியைத் தருமர் காணுதல்.

## நல்லாப்பிள்ளை பாரதமும் வைகுண்ட அம்மானையும்

இதே அமைப்பு கதையின் வளர்ச்சி நிலையில் சில இடங்களில் சற்று விரிவாகவும், குறைவாகவும் நல்லாப்பிள்ளை பாரதம் மற்றும் வசன பாரதங்களில் காணப்படுகின்றது. நல்லாப்பிள்ளை பாரதத்தில், வைகுண்ட அம்மானையில் 'முனிவர்', 'ஒருவர்' என தேவையற்றதாக ஆசிரியர் கருதி விட்டவற்றிற்குக் கூட பெயர்கள் தரப்பட்டுள்ளன. எனினும், இந்நூலில் நல்லாப்பிள்ளை பாரதம், பெருந்தேவனார் பாரதம் ஆகிய நூல்களை விடவும் மிகவும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

## வைகுண்ட அம்மானையின் சிறப்பு

வைகுண்ட அம்மானை பெருந்தேவனார் பாரதக் கதையை உள்வாங்கியும், நல்லாப்பிள்ளை பாரதத்தைத் தேவைக்குப் பயன்படுத்தியும் விரிவாகச் செய்யப்பட்டுள்ளது என்பதை ஒப்பீட்டு நோக்கில் அறிய முடிகிறது. இந்த அம்மானை எந்தெந்த நிலைகளில் சிறப்பாகக் கதையை வளர்த்து தனிக் காவியத்திற்கான நிலையை அடைந்தது என்பது நோக்கத்தக்கது. இவ் அம்மானைப் பாடலில் நூலாசிரியர் கதைத்தெளிவுக்காக விரிவாக நிகழ்வுகளை விளக்கும் இடங்கள் பல அமைந்துள்ளன. இவ்விதம் அமையப்பெற்றவைகள் மட்டும் இவண் வரிசைப் படுத்தப்படுகின்றன.

1) பரிசித்துவின் பிறப்பு, வளர்ப்பு, திருமணம் தொடங்கிச் சாபத்தால் மரணம் அடையும் நிகழ்வுகள் வரையிலான செய்திகள்.

2) செனமேசெயன் பிறப்பும் வளர்ப்பும் பற்றிய செய்திகள்.

3) செனமேசெயன் தன் தந்தையைக் கொன்ற பாம்பைப் பழிவாங்க யாகம் வளர்த்து அதை இந்திரன் அறிவுரையால் கைவிடும் நிகழ்வுகள்.

4) பாண்டவர்கள் வனம் ஏக முடிவெடுத்த நிலையில் குந்தியும், காந்தாரியும் துயருறும் செய்திகள் பற்றிய விரிவான பாடல்கள்.

5) பரிசித்து கடல்மாளிகையிலிருந்தும் கூட விதியின் வலியால் பாம்பினால் மரணம் அடையும் நிகழ்வுகள்.

6) செனமேசெயன் விதியின் போக்கை, கொள்கையை எதிர்த்து வியாசரிடம் வாதிட்டு இறுதியில் விதியின் வல்லமையை அவனே உணரும்படியாக அந்தணன் ஒருவன் அவனால் நெருப்பில் வீழ்ந்து மாளும் நிகழ்வு.

7) வைகுண்ட பயணம் தொடரும் ஆரம்ப நிலையில் தருமர் தம்பியர்களையும், திரௌபதையையும் நாடு திரும்பக் கூற அவர்கள் ஐவரும் மறுத்துரைக்கும் விரிவான செய்திகள்.

8) வைகுண்ட பயணத்தின் பொழுது அறுவரும் நடந்து செல்லும் வழியில் காணும் காட்சிகள், முனிவர்கள், தேவமகளிர் மற்றும் பல செய்திகளைக் கூறும் புலவரின் கூற்றுகள்.

9) திரௌபதை முதலாய் பீமன் ஈறாய் ஐவரும் வழிநடைப் பயணத்தின் பொழுது மாண்டுபடுதலும், மாள்வதற்கு முன் அவர்கள் முறையே கண்ணனைத் துதித்தலும், ஒவ்வொருவரின் மரணம் குறித்த பீமனின் வினாவிற்குத் தருமன் பதில் அளிப்பதுவுமான கதை நிகழ்ச்சிகள்.

10) தருமர் தம் தம்பியர்களுக்குக் கூறிய கீழ்க்காணும் கதைகள்.

10.1) மும்மூர்த்திகளின் தொழில்கள் குறித்த கதை.

10.2) பாற்கடலில் தேவர்களும் வாலியும் அமுதம் கடைந்தது.

10.3) சிவபெருமான் திருமால் உதவியுடன் முப்புரம் எரித்தது.

10.4) இரணியாசுரன் திருமாலால் அழிக்கப்பட்ட கதை

10.5) மாபலி சக்கரவர்த்தி திருமாலால் சிறைப்பிடிக்கப்பட்டு வைகுண்டம் அடைந்த கதை.

10.6) திருமாலுக்கும் பிரம்மனுக்கும் தங்களிடையே யார் பெரியவன் என்ற போட்டி வர அதைச் சிவன் தீர்த்து அவர்களின் ஆணவம் அழித்த கதை.

10.7) திருமாலின் லீலைகள் குறித்த கதைகள்.

11) கருடாழ்வார் தருமரின் மனவுறுதியைச் சோதிக்க வைகுண்ட லோகப் பயணத்தின் கடினங்களை உரைத்தலும் அதற்கு மறுப்பாகத் தருமர் கூறிய பதிலுரைகளுமான செய்திகள்.

12) எமன் நாயாக வடிவெடுத்துத் தருமரைச் சோதித்தலும் அதில் அவர் வெல்வதுவுமான நிகழ்ச்சிகள்.

இவ்விதச் செய்திகளை வைகுண்ட அம்மானையில் ஆசிரியர் நேர்த்தியாக இணைத்ததின் மூலம் சிறிய அளவில் அமையப்பெற்ற பெருந்தேவனார் பாரதம், நல்லாப்பிள்ளை பாரதம் மற்றும் பாரத வசன நூல்கள் ஆகியவற்றிலுள்ள பாண்டவர்களின் வைகுண்ட யாத்திரை கதை பெரிய அளவில் வைகுண்ட அம்மானையில் உருவாக்கப்பட்டுள்ளது.

## பிற வைகுண்ட அம்மானை நூல்கள்

வைகுண்ட அம்மானையைப் பெருக பாடுவதற்குச் சமுகத்தில் பல காரணங்கள் இருந்தமையால் பதிப்பிற்கு எடுத்துக் கொண்ட இந்நாலும் சுமார் 8,000 அடிகளில் செய்யப்பட்டுள்ளது. ஏற்கெனவே காணப்படும் வைகுண்ட அம்மானை நூல்களாகக் கீழ்க்காண்பன உள்ளன.

1) வைகுந்த அம்மானை - பரசுராம முதலியார் எழுதிய அச்சாகாத நூல்.

2) மாவிந்தம் என்னும் வைகுந்த அம்மானை - பி. இரத்தின நாயகர் அண்ட் ஸன்ஸ், சென்னை, 1926.

3) வைகுந்த அம்மானை - ம. அழகர்சாமி பிள்ளை, எக்செல்சியர் பிரஸ், மதுரை, 1926.

4) வைகுண்ட அம்மானை - அனந்தபாரதி கவி.

5) மாவிந்தம் என்னும் வைகுண்ட அம்மானை - சோமன் எழுதிய அச்சாகாத சுவடி. 750 விருத்தங்களால் இந்நூல் உள்ளது.

இவ் ஐந்தினினுள் அனந்தபாரதி கவி இயற்றிய வைகுண்ட அம்மானையோடு இந்நூல் பெரிதும் ஒத்துச் செல்வதாக ஊகிக்க முடியும். இந்நூல் சுமார் 7,500 அடிகளைக் கொண்டு விளங்கும் நூல் என மு. அருணாசலம் தரும் குறிப்பும் இதற்கு ஆதாரம் பயக்கும்.[1] மேலும் நூலி னுள்ளும் இந்நூலை இயற்றியவர் அனந்தபாரதி கவி என கொள்ளும் வகையில் பாடல் அடிகள் செய்தியைத் தருகின்றன. இந்நூல் பதிப்பிக்கப்பட்ட குறிப்பை ஜான் முர்டாக்-ன் நூல் விவர அட்டவணை தொகுப்பின் 8வது தொகுதியின் 81-வது பக்கம் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது. எனினும் இந்நூல் தற்பொழுது கிடைக்கவில்லை.

## வைகுண்டம் பற்றிய மக்கள் எண்ணங்கள்

இன்றைக்கும் சைவர்கள் தம்மவர்களின் ஆன்மா கைலாயம் சென்று அடைய வேண்டும் என்றும், வைணவர்கள் தம்மவர்களின் ஆன்மா வைகுண்டம் சென்று அடைய வேண்டும் என்றும் விரும்புகின்றனர். இதனால்தான் மரணம் அடைந்தவர்களின் வீட்டில் ஒப்பாரி வைக்கும் பெண்கள்,

---

1. "*Vaikunta ammanai* is a large ballad in 7500 lines giving out the story of the ascent of the Pandavas to the heavens, the dropping out of the brothers one by one, and the final arrival of Dharmaputra alone in the heavens."

M. Arunachalam, *Op. Cit.*, p. 110.

"கைலாசம் உங்களுக்கு; கத்திரிக்காய் எங்களுக்கு
வைகுண்டம் உங்களுக்கு; வாழைக்காய் எங்களுக்கு."

என இறந்தவர் கைலாசம் அல்லது வைகுண்டத்திற்குச் சென்று அடைவதைப் பாவித்து அழுகின்றனர். மேலும் ஓய்வு நேரங்களில் கிருஷ்ணன் தொடர்பான மகாபாரதம், பாகவதம், வைகுண்டம் கதைப்பாடல் ஆகியவற்றுள் ஒன்றை ஏதேனும் ஒரு நிகழ்த்துக் கலையின் வழியாகவும், மதப் பிரசங்கங்கள் வழியாகவும், முற்றோதல் என்னும் பாரதம் படிப்பது வழியாகவும் தங்கள் ஆன்மாவை ஈடேற்ற மக்கள் முனைந்து கொண்டே இருந்தனர் என்பதைத் தமிழ் நாட்டில் வழங்கப்படும் மகாபாரதம் தொடர்பான ஏராளமான நூல்களின் எண்ணிக்கை நமக்குத் தெளிவுபடுத்தும்.[1] வைகுண்ட ஏகாதசி விரதம் இருப்பதும், சொர்க்க வாசல் திறக்கப்பட்ட நிலையில் திருமாலை வழிபடும் பக்தர்கள் தமிழ் நாட்டில் மிகுதியான எண்ணிக்கையில் உள்ளதும் வைகுண்டம் தொடர்பான மக்களின் நம்பிக்கையைத் தெளிவுபடுத்தும். இக்குறிப்பிட்ட நாளில் மரணமடைவோர் ஆன்மா வைகுண்டம் சென்று அடையும் என்பதில் மக்களுக்கு மிகுதியான நம்பிக்கை இன்றளவும் உள்ளது. மரணத் தருவாயை நெருங்குவோர் காதில் விழும்படி வைகுண்ட அம்மானையைப் பாடுதல் பல வைணவக் குடும்பங்களில் காணப்படுகின்றன.

பாண்டவர்கள் திரௌபதையோடு வைகுண்டம் சேர்ந்த கதையைப் படிப்பதால் நோய்கள் தீரும் என்கிற செய்தியும் செனமேசெயனின் வாழ்க்கை மூலமாக ஆசிரியரால் ஏற்றிச் சொல்லப்படுகிறது.

## பதிப்பிற்கான வைகுண்ட அம்மானையின் உட்கட்டமைப்பு

பதிப்பிற்கான வைகுண்ட அம்மானை நூல் ஒரு நிகழ்த்துக் கலைச் சார்ந்ததுவும், சந்தத்துடன் வாய்விட்டுப் படிப்பதற்காகவும் அமைந்திருப்பதை அதன் அகச்சான்று கொண்டு வரையறுக்க முடியும். கதை சொல்பவர் ஒருவர், தாம் நிகழ்த்திய வைகுண்ட அம்மானை குறித்த மூன்று நாட்கள் கதை சொல்லும் அமைப்பு இந்நூலில் உள்ளது. நூலின் தொடக்கத்தில், நூலாசிரியர் பொதுவான தெய்வ வணக்கம், அவையடக்கம் முதலியவற்றிற்குப் பிறகு,

"சொல்லுகிறேன் வீரைநகர் சோமலிங்கம் தாள்போற்றி
வெல்லுகிறேன் காம வெகுளி யினாண்மையினால்
வைகை நதியான் வளர்வீரை யம்பதியான்
மெய்க்கமலம் பூத்த விபூதிபஞ் சாக்ஷரத்தான்

1. மஹாபாரதம் தொடர்பாகத் தமிழில் வெளிவந்த வெளிவந்த நூல்களில் இதுவரையிலும் அறியப்பெற்றவை குறித்த ஒரு பட்டியல் பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளது.

எளியர்க் கெளியவனான் ஏழை யிவனெனவே
தெளிவோர்க் கடிபணியும் சீஷரில் சீஷனுமாய்
வணங்கி நமஸ்கரித்து வழுத்துகிறே னம்மானை"

(பா. 7 அடி 1-7)

என்னும் அடிகளால் கதை சொல்லத் தொடங்குவதைக் கூறுகிறார்.

இரண்டாவது கட்டமாகச் செனமேசெயன் வியாசரிடம் பாரதம் கேட்க அமர்கின்ற நேரத்தில் ஆசிரியர் மீண்டும் இறைவணக்கங்களை உரைத்து தான் கதையைத் தொடருவதாய் கூறுகிறார்.

"வாகுடைய பஞ்சவர்கள் வைகுண்டஞ் சேர்ந்தகதை
பாகுடைய சொல்லான் பரிசித்து வேந்தன்மகன்
சீரான் செனமேசன் சித்தமகிழ்ந் தன்பாக
நேராகக் கேட்க நீலவண்ணர் காப்பாமே"

(பா. 80 அடி. 1-4)

என்று திருமாலை வணங்கும் அவர்,

"ஓதுபுகழ் கதைதான் உரைக்கவே தான்கேளீர்
மாது சரசோதி வழுத்துகின்ற சொற்படியாய்
மேருவில் விநாயகனார் விரித்தெழுதும் வேதாந்தம்
பாரிலுள்ளோர் கேட்கப் பாடுகிறே னம்மானை"

(பா.80 அடி.5-8)

சரஸ்வதி வணக்கத்தையும் கூறுகிறார்.

முன்றாவது நிலையில் 153 பாடல்கள் முடிந்த பிறகு ஆசிரியர் சுவடியில் ஒரு குறிப்பைத் தருகிறார். "ஸ்ரீமன் நாராயண மூர்த்தி பாதார விந்தமே கெதி. குரு முன்னிற்க. சரசுபதி யெப்போதும் என்னாவில் நீங்காமல் குடியிருக்க வேணும்" என்னும் இக்குறிப்பு ஏறத்தாழ நூலின் 60 விழுக்காடு முடிந்தபிறகு தரப்படுகிறது. இந்த அகச் செய்திகள் வைகுண்ட அம்மானை என்னும் இப்பெரிய நூல் மூன்று நாட்கள் வரையிலும் இடைவெளி விட்டு தொடர்ந்து நடத்துவதற்குரியது என்பதைக் குறிப்பாக உணர்த்துகிறது.

---

1. விருத்தப் பாடல்களின் பாடல் முதற்குறிப்பகராதி பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளது.

## வைகுண்ட அம்மானையில் காணப்படும் யாப்புகள்

வைகுண்ட அம்மானை நூலினுள் இரு வகையான யாப்புகள் மட்டுமே பயன்படுத்தப்பட்டுள்ளன. அவை விருத்தம், நடை என்பன. விருத்தம் இலக்கணச் செறிவு சார்ந்ததாகவும், நடை பொதுவாகக் கதைப்பாடல்களில், அவற்றை யாப்போரின் திறமைக்கேற்ப எளிமை கொண்டதாகவும் இலக்கண நெகிழ்ச்சி கொண்டதாகவும் அமையும் தன்மையன. இந்நூலினுள் அமையும் விருத்தம் பொருள் விளங்கிக் கொள்ளும் தன்மையில் எளிய பதங்களோடு அறுசீர் கழிநெடில் ஆசிரிய விருத்தங்களாக அமைந்துள்ளன. இந்நூல் புலவர் தாம் விருத்தப்பா பாடுவதை மிகவும் பெருமைக்குரிய ஒன்றாகக் கருதுகிறார் என்பதை நூலின் அகச்சான்றுகள் தெரிவிக்கின்றன.

"திருத்தமுடன் இக்கதையைச் சிறப்பாகச் சீருடனே
விருத்தமுடன் கொச்சகமும் விவரமாமய் தான்பாடி"

(பா. 4 அடி. 95-96)

"நாரணரே கேட்டருளும் நான்விருத்தம் பாடுகிறேன்"

(பா. 143 அடி. 306)

"பத்து விருத்தம் படித்துப் பணிந்தேற்றி"

(பா. 154 அடி. 1)

"அரிநமோ வென்று அட்டாச் சரந்தனையும்
பரியாமல் நெஞ்சில் படித்தான் திருவிருத்தம்"

(பா. 154 அடி. 159-160)

"வேத னேயொரு பத்து முந்தனை யுண்மை யாக விருத்தமும்
ஓத வேதிரு பாதமேகெதி ஒண்டி லேன்துயர் கண்டிலேன்"

(பா. 222 அடி. 3-4)

என்னும் இப்பாடல்களில் ஆசிரியர் விருத்த யாப்பினை உயர்வு நிலையில் பயன்படுத்தியுள்ளமையைக் காணமுடிகிறது. பெரும்பாலும் நூலினுள் அதிகமான விருத்தங்கள் அறுவரும் வைகுண்ட யாத்திரையின் போது தங்கள் தங்கள் உடல் சோர்வு காலங்களில் திருமாலை வழிபடுவதற்காகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஆசிரியர் இதன் மூலம் விருத்த யாப்பு, நடை யாப்பு வகையினும் மேலானது என்கிற குறிப்பைத் தந்துள்ளார். மேலும் 'திருவிருத்தம்', 'பத்து விருத்தம்' என்பனவற்றுள் உள்ள அடைகள் விருத்தத்தின்

மேன்மையையும், அளவின் பெருக்கத்தையும் உணர்த்தும். இத்தகு விருத்தத்தில் ஆசிரியர் சிறப்பாக எதுகைகளையும், அடி மோனைகளையும் பயன்படுத்துகிறார். பெரும்பாலும் எதுகைக்காக விருத்தத்துள் தரப்படும் அடி தோறும் வரும் முதற்சீர்கள் பொருள் பொதிந்தே காணப்படுகின்றன. எனினும் ஒருசில இடங்களுள் பொருள் சிறப்பற்றதாகிய அடிதோறும் வரும் எதுகைச் சொற்களும் உள்ளன. இவை ஓசைக்காகவும், எதுகையை அமைக்க வேண்டும் என்பதற்காகவும் ஆசிரியரால் அமைக்கப்பட்டுள்ளன எனலாம். மோனை அமைப்பு விருத்தங்களின் ஒவ்வொரு அடியிலும் முதற்சீர் நான்காம் சீர் ஆகியவற்றில் கையாளப்பெற்றுள்ளன. கீழ்க்காணும் வைகுண்ட அம்மானைப் பாடல், அடிகள் தோறும் வரும் எதுகையும் ஒருவடிக்குள் வரும் மோனை அமைப்பையும் தெரிந்து கொள்ளத் தரப்பட்டுள்ளது.

“என்னைப் பிரியா திருந்தோர்கள் எங்கே யங்கே வந்தார்கள்
உன்னைப் பிரியா நானிருந்து உலையில் மெழுகு போலுருகித்
தன்னைத் தெரியா தலைவனே தடுத்தாள் கொள்வாய் வைகுண்டம்
பின்னைப் பதறி யெனக்கருளிப் பிரியா திருக்க வரந்தருவாய்”

(பா. 175)

விருத்தத்தை அடுத்து அமையும் நடை என்னும் யாப்பு நாற்சீர் கொண்ட அமைப்பில் எளிய பதங்களில், கலிவெண்பா போல இரண்டு அடிகளில் கண்ணி கண்ணியாக அமைந்துள்ளன. இவ்விரு அடி கண்ணிகளும் அடிதொறும் எதுகை பெற்று, தத்தம் ஓரடியில் பொழிப்பு மோனையுடன் வருகின்றன.

“அடர்ந்துவினை செய்தோர்கள் அவதி மிகப்படுவார்
நடந்துதவஞ் செய்தோர்கள் நல்ல தவம்பெறுவார்”

(பா. 213 அடி. 45-46)

ஒரோவிடங்களில் ஈரடி கண்ணி அமைப்புக்கு மாறாக மூன்றடிகளில் எதுகையும் அடிதொறும் பொழிப்பு மோனையும் கொண்ட பாடல் அமைப்பு காணப்படுகின்றன. புலவர் இரு கண்ணிகளில் எழுத வேண்டுமெனத் திட்டமிட்டு மூல ஏட்டிலிலேயே ஓரடி குறைவாக எழுதியிருக்கலாம். அல்லது பிரதி எடுத்தோர் நாலடியாக அமைந்த இரு கண்ணிகளில் ஓரடி விட்டு பிரதி எடுக்கவும் வாய்ப்புகள் இருந்திருக்கலாம். மூவடியிலமைந்த கண்ணிக்குக் கீழ்கண்ட பாடல் உதாரணமாய் அமையும்.

“குதையம்பு பட்டுருவிக் கோபாலர் தான்கிடக்க
இதைவந்து பார்த்து இனிதுடைய வில்வேடன்

கதையோ கதைப்பயனோ காலத்தின் வல்வினையோ"

(பா. 24 அடி. 84-86)

### யாப்புக் கட்டமைப்பில் பேச்சுவழக்குச் சொற்கள்

பேச்சு வழக்குச் சொற்கள் மிகுதியாகக் காணப்படுகின்ற இக்கதைப்பாடலில் அச்சொற்கள் 'விருத்தத்'திலும், 'நடை'யிலும் எதுகை பயன்பாட்டிற்காகவும் கையாளப்படுகின்றன.

"ஊத்தை திரண்டு ஒருவா யிருந்ததிலே
காத்தைப் பிடித்தடைத்துக் கயறில்லாப் பம்பரம்போல்"

(பா. 32 அடி. 204-205)

"நிக்கிறோ முண்மை நிறைந்தபரி சித்துவையும்
வைக்கிறோம் பாரில் வணங்குகிறோ முள்ளபடி"

(பா. 47 அடி. 29-30)

என்னும் இவ்விரு எடுத்துக்காட்டுகளில் முதலிணையில் காற்று என்னும் இரண்டாமடி எதுகைச் சொல் முதலடி 'ஊத்தை' என்ற சீருக்கு ஏற்ப 'காத்து' என மாற்றம் பெற்றுள்ளது. அது போலவே இரண்டாவது இணையில் 'வைக்கிறோம்' என்ற இரண்டாவது அடி முதற்சொல்லுக்கு ஏற்ப நிற்கிறோம் என்னும் முதலடி முதற்சொல் நிக்கிறோம் என மாற்றம் பெற்றுள்ளது. இதனால், முதற்கண்ணியில் 'ஊத்தை', 'காத்தை' என்கிற எதுகைகளும், இரண்டாம் கண்ணியில் 'நிக்கிறோம்', 'வைக்கிறோம்' என்கிற எதுகைகளும் பொருத்தமுற அமைந்து படிப்போருக்கு ஓசை நயம் குன்றாத உணர்வை ஏற்படுத்துகிறது.

பிறிதொரு நிலையிலும் வழக்குச்சொற்கள் மிகுந்த பயன்பாடு உடையனவாக இவ்வம்மானையில் அமைந்துள்ளன. பாடல்களில் சீர் நிலையில் ஈரசைச் சீர்களும், மூவசைச் சீர்களுமே பெரும்பாலும் பயன்படுத்தப்படுகின்றன. இச்சீர்களுக்கான ஓசை ஒழுங்கமைதிகளே பாடல்களில் பயன்று வருகின்றன. இவ் ஈரசை, மூவசை மரபுகள் மீறும் இடங்கள் வரும் சூழ்நிலையில் ஆசிரியர் பேச்சுவழக்குச் சொற்களைக் கையாண்டு ஓசையைச் சரிசெய்யும் நிலையையும் ஆங்காங்கே நூலுள் காண முடிகின்றது.

"வருகுதய்யா வென்று மறையோனெடுத் துரைக்கப்
பருகுகனி வாயன் பட்சமால் தானினைந்து"

(பா. 10 அடி. 30-31)

மேற்படி இரு அடிகளும் முச்சீர், இருசீர் அமைப்பில் வந்தவை. இதில் முதலடி முதற்சீர் 'வருகிறதய்யா' என்பதின் பேச்சுவழக்கு வடிவமாகத் திரிந்து 'வருகுதய்யா' என செய்யுளில் இடம் பெற்றுள்ளது. 'வருகிறதய்யா' என்பது 'கருவிளம்தண்பூ' என்கிற வாய்ப்பாட்டிலான நாலசைச் சீர் என்பதும் இது 'பருகுகனி' என்ற இரண்டாமடியின் மூவசை வாய்ப்பாடான 'கருவிளங்காய்' என்பதற்கு ஏற்ப 'வருகுதய்யா' என மாற்றம் பெற்று ஓசையில் சிறந்து அமைகிறது என்பதும் குறிப்பிடத்தக்கது.

### பேச்சு வழக்குச் சொற்கள்

பேச்சு வழக்குச் சொற்களைத் தொகுத்து நோக்கும் பொழுது இச்சுவடியைப் பிரதி எடுத்தவர் திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டத்தைச் சார்ந்தவர் என்பது புலனாகிறது (சுவடியின் ஆரம்பத்தில் இதை எழுதியவர் பற்றிய குறிப்பு உள்ளது). அந்த அளவு ஏராளமான இரு மாவட்டத்திற்கான சொற்கள் இதனுள் கையாளப்பட்டுள்ளன. சில எடுத்துக்காட்டுகளாக வழக்குச் சொற்கள் அகர வரிசைப்படுத்தித் தரப்படுகின்றன.[1]

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அடமழை | < | அடைமழை | அதுக்கு | < | அதற்கு |
| ஆத்திலே | < | ஆற்றிலே | ஆத்தோரம் | < | ஆற்றோரம் |
| ஆயான் | < | ஆசான் | இடவழி | < | இடைவழி |
| எச்சி | < | எச்சில் | கிட்டாது | < | கிடைக்காது |
| குத்தம் | < | குற்றம் | குலை | < | கொலை |
| குறுக்கே | < | இடையே நடுவில் | கெருடன் | < | கருடன் |
| சதை | < | தசை | சவுரியம் | < | சௌகரியம் |
| தாமிதமாய் | < | தாமதமாய் | துகை | < | தொகை |
| தெரிசித்தேன் | < | தரிசித்தேன் | தெய்தி | < | தியதி |
| நாத்தம் | < | நாற்றம் | பர்த்தா | < | கணவன் என்ற பொருளில் |
| பலிக்குது | < | பலிக்கின்றது | பிந்தினான் | < | தாமதமானான் என்ற பொருளில் |
| பிலா | < | பலா | மல்லுயித்தம் | < | மல்யுத்தம் |
| வலுத்து | < | வலிமையாக | வாசினை | < | வாசனை |
| வில்லு | < | வில் | வெளுறி | < | வெளுத்து |
| வேதினை | < | வேதனை | | | |

1. பேச்சு வழக்குச் சொல்லகராதி குறித்த அகரவரிசைப் பட்டியல் பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளது.

## பேச்சுவழக்குச் சொற்களில் ஒ > உ மாற்றமும், எ > இ மாற்றமும்

பொதுவாக வட்டார வழக்கிலும், பேச்சுத் தமிழிலும் முயற்சி எளிமைக்கருதி 'இ'கர, 'உ'கரங்கள் முறையே 'எ'கர, 'ஒ'கரங்களாகத் திரிந்து வருகின்றன. இது குறித்து ஜி. ஜான் சாமுவேல், "தமிழ் மொழியின் இவ்விரு வடிவங்களைப் பொறுத்தவரையில் இம்மாற்றம் முயற்சி எளிமை நோக்கி ஏற்பது என்பது தெளிவு" என்பார்.[1] பிறிதொரு அறிஞர் இஎ, உஒ மாற்றங்கள் முறையின்றிச் சங்க இலக்கியம் தொடங்கித் தமிழில் காணப்படுகின்றது என்பார்.[2] ஆனால் வைகுண்ட அம்மானையில் பல இடங்களில் 'எ'கரம், 'ஒ'எகரம் முறையே 'இ'கர 'உ'கரங்களாகத் திரிந்து சொற்களில் ஆளப்பெற்றிருக்கின்றன. மொழியியல் ஆய்விற்கு இவ்வுதாரணங்கள் பயன்படக் கூடும் என்பதால் இங்கு இவை தரப்பட்டுள்ளன.

**1. எ > இ**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| செயல் | > | சியல் | இமலோகம் | > | எமலோகம் |
| எலுமிச்சம் | > | இலுமிச்சம் | செகத்தில் | > | சிகத்தில் |

**2. ஒ > உ**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தொகை | > | துகை | கொலை | > | குலை |
| தொடர்ந்து | > | துடந்து | தொடை | > | துடை |
| தொலை | > | துலை | | | |
| தொடரும் | > | துடரும் | | | |

மேலும் இவ்வம்மானையில் இடம்பெற்றுள்ள பல வகையான உயிர் மாற்றங்கள், மெய் மாற்றங்கள், மெய்யிணை புணர்ச்சிகள் போன்றன பின்னிணைப்பில் தரப்பட்டுள்ள பேச்சுவழக்கு அகராதி கொண்டு ஆராயத்தக்கன.

## நூலில் கையாளப்பட்டுள்ள உவமைகள்

அதிகமான பேச்சு வழக்குச் சொற்கள், வடமொழி எழுத்துக்கள் விரவி வருகின்ற சொற்கள் ஆகியவற்றால் நூல் அமைந்த பொழுதும் பாடல்கள் இனிய, எளிய ஓசை நயம் கொண்டனவாக உள்ளன. எளிமையான உவமைகள் பலவிடங்களிலும் ஆசிரியரால் கையாளப்பட்டுள்ளன. ஒரு சில மட்டும் இவண் எடுத்துக்காட்டுகளாகத் தரப்பட்டுள்ளன.

பாடல் 76-ல் 3 முதல் 14 வரையிலுமுள்ள அடிகளில் செனமேசெயன் யாகம் வளர்க்க ஆணையிட்ட பொழுது, யாகத் தீ வளர்ப்போருள் ஒருவன் நிலை எவ்விதம் இருந்தது என்கிற காட்சிச் சித்திரம் பல வித உவமைகள்

மூலம் விளக்கப்படுகின்றன. வேதம் ஓதும் அந்தணன் கண்ணயர்ந்து இருக்கும் நேரத்தும் தன் தொழில் நினைத்து விழிப்பது 'நிலத்தில் விழுவான் போல்' இருப்போன் மெய்பதறி எழும்புவது போலாகும் என்கிறார். மேலும் கண்ணயர்ந்த நேரத்து அந்தணன் தலை மெதுவாகக் 'கவிழ்தல் வேலி ஓணான் எந்த ஓசையும் எழுப்பாது அசைந்தது போல என்கிறார். அவனது உடல் நடுக்கம் ஒருவன் கனவில் துஷ்ட மிருகங்கள் தன்னை வதை செய்ததைப் போல என்கிறார். அவன் கனவு கண்டு அச்சப்பட்ட நிலை 'நஞ்சுண்ட மீன்போல்' இருந்தது என்கிறார். இவ்விதமாகக் காட்சிப் படிமங்களை விளக்கப் பல்வேறு உவமைகளைப் பயன்படுத்துவதைப் போல ஒரோவிடத்து புரிதலுக்காவும், சொல்ல வந்ததைச் சிறப்பாகச் சொல்வதற்காவும், வட்டாரவழக்குத் தன்மையைச் சிறப்பாக அறிவதற்காவும் உவமைகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

பாண்டவர்கள் திரௌபதையோடு கானகத்தில் கடினப்பட்டு வருந்தி அலைந்ததை,

"கனலில் மெழுகதுபோல் கானகத்திலே யுழன்று"

(பா. 86 அடி. 16)

என்றும், அக்னி ஆறு ஒன்று வழிப்பயணத்தின் பொழுது அறுவருக்கும் வழிவிட்டு ஒதுங்கியதை,

"உத்த மருமகனுக்கு ஒதுங்குகின்ற மாமியைப்போல்"

(பா. 90 அடி. 14)

என்றும், பரிசித்துவின் உறவினர்கள் ஒன்றுபட்டு வாழ்ந்திருப்பதை,

"அல்லியுந் தாமரைபோல் அன்னசுற்ற மெல்லாரும்
துல்லியமாய் வாழ்ந்து சுகமே இருந்தார்கள்"

(பா. 7 அடி. 368-369)

என்றும் எளிய உவமைகளால் ஆசிரியர் கூறுகிறார்.

---

1. ஜி. ஜான் சாமுவேல், திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம், ப. 76.
2. "There are plenty of forms which show i̱ and e̱, and u̱ and o̱ simultaneously.

   Examples : *Koravai, Kuravai* 'group song, a kind of play in sangan period.

   *toraṭu, turaṭu* 'crook of iron or wood'

   Pon. Kothandaraman, *Modern studies in Tamil*, p.49.

செனமேசெயனின் பிறப்பின் பெருமையைக் கூறுமிடத்து,

“கங்குல் கலங்கக் கதிரோனுதித் தாற்போல்
மாணிக்க முத்து வைரமணி கோர்த்தாப்போல
ஆணிக் கனகமுமாய் அழகு செனமேசன்
. . . . . . . . தான்பிறக்க”

(பா. 10 அடி. 9-12)

என இரு உவமைகளால் கூறுகிறார். பீமன் கந்தர்வனோடு செய்த பெரும் போரை ஆசிரியர் அப்போரின் வேகம் தெரியுமளவு பல அடுக்கு உவமைகளைப் பயன்படுத்துகிறார். இருவர் போர் புரிந்த தன்மை,

“காத்து மழையுங் கலந்துபொரு தாப்போல்
ஏத்தமலை களிரண்டும் எதிர்த்துப் பொருதாபோல்
வாலியுடன் சுக்கிரீபன் வந்துபொரு தாப்போல
கோலியே முன்னாளில் கோபாலர் சிங்கமென
இரணியனைக் கொன்றதுபோல் . . . .”

(பா. 97 அடி. 111-115)

எனக் கூறுகிறார்.

## ஆசிரியர் கையாளும் பிற உத்திகள்

கானகத்தின் வழியே பாண்டவர்கள் நடக்கும்பொழுது ஆசிரியர் மிகுந்த கற்பனையும், வர்ணனை பாங்கையும் கொண்டு கதைக் கேட்போருக்கும் படிப்போருக்கும் வியப்பு ஏற்படும் வண்ணம் பாடல்களை அமைத்துள்ளார். நிஜ வாழ்வில் மனிதர்கள் கண்டிராத விலங்குகள், ஆறுகள், பறவைகள், மலைகள், தாவரங்கள், தேவலோகத்தில் வசிக்கும் விதவிதமான தேவகன்னியர்கள் என பலரை ஆசிரியர் அறிமுகப்படுத்தி விளக்கும் பாங்கு படிப்போரை வியப்படையச் செய்கிறது.

நாகலோகம், அந்த உலகத்தில் வாழும் மனிதர்கள், மலை போல் கிடந்து திரௌபதையையும் பாண்டவர்களையும் விழுங்கும் பாம்பு, பூமிக்கும் வானத்திற்கும் வளர்ந்து நிற்கும் மலை, மனித உடம்போடு குதிரை முகத்தோடு காணப்படும் பெண், படிக்கும் எவருக்கும் அருவருப்பு தோன்றும்படியான நாயின் புண்பட்ட நிலை, இந்திரலோகம், எமலோகம் முதலியவற்றின் வர்ணனைகள் என இன்னும் பலவற்றையும், மனித குலத்தார் எவரும் இதுவரை பார்த்திராதவற்றையும் நயம்பட விளக்கிக் காட்சிச் சித்திரங்களை நூலின் பல்வேறு இடங்களில் ஆசிரியர் தந்துள்ளார்.

## Nativization கோட்பாடும் வைகுண்ட அம்மானை நூலும்

இவ்வம்மானையின் ஆசிரியர் ஹஸ்தினாபுரம் உட்பட பல நகரங்கள், கதை மாந்தர்கள், மக்களின் பண்பாடு, பழக்கவழக்கங்கள், ஊர் பெயர்கள், ஆட்பெயர்கள், வர்ணனைகள், வைகுண்ட பயணத்தின் நில அமைப்புகள் மற்றும் இன்னும் பிறவற்றுள்ளும் முடிந்த வரை மண்ணியல்பு (nativization) தன்மையைக் கையாண்டுள்ளார்.

இந்திய நாட்டின் இதிகாசங்களான மகாபாரதமும், இராமாயணமும் இவ்வகையில் நாடு முழுவதும் ஒவ்வொரு மொழியிலும் அம்மொழிகளின் செவ்வியல் இலக்கியங்கள், வட்டார மொழிகள் ஆகியவற்றில் மண்ணியல்பு (Nativization) செய்யப்பட்டுள்ளன. இராமாயணம் இவ்விதம் பரவியமை குறித்தும், காலம் மற்றும் நேரம் கடந்தும் இவைகளுடன் பல காரணிகளோடு பரவியமை குறித்தும் கீழ்க்கண்டவாறு பேராசிரியர் ஒருவர் கூறுகிறார். "*Ramayana story* in its travels in space and time and through diverse cultural milieus have on the whole been on predictable lines, for one can trace most of the 'changes' to the need for adjustment to new climes and customs, or to the impact of the Jaina, Buddist or Islamic ways of life, or to the thrust of local history, the impulse to originality on the part of the **native bards**, the 'modern' desire to humanise alike God-man, Vanara and Rakshasa, and of course the constant itch for novelty or the desire to go one better than one's predecessors in the extravagance of invention and the piling up of the exceptional"[1]

இப்பேராசிரியர் கூறும் கருத்தைப் போன்றே வியாசரின் மகாபாரதத்துள் ஒரு பகுதியான சுவர்க்காரோகண பருவத்தை அடிப்படையாகக் கொண்டு தமிழில் செய்யப்பட்டுள்ள பல பாரதக்கதைகளில் தேவையான மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன. பதிப்பிற்கு எடுத்துக்கொண்ட இவ்வம்மானை நூலிலும் தமிழ்நாட்டின் தென்மாவட்டங்களான திருநெல்வேலி, தூத்துக்குடி, கன்னியாகுமரி மாவட்ட மக்களின் வாழ்வியல் சார்ந்தவற்றைப் புலவர் மனதில் கொண்டு எழுதியுள்ளார் என்பதை நூலின் பலவிடங்களிலும் உள்ள சான்றுகள் மூலம் அறிய முடியும். ஏற்கெனவே மொழியியல் கூறுகளில் இந்நூல் மேற்படி மாவட்டங்களைச் சார்ந்த மக்கள் பயன்படுத்தும் சொற்களைக் கொண்டு எழுதப்பட்டது என்பதற்குச் சான்றுகள் தரப்பட்டுள்ளன.

பரிசித்துவின் திருமணச் சடங்குகளின் தன்மை தென்மாவட்டங்களைச் சார்ந்தோர் செய்யும் முறைகளை ஒத்ததாக உள்ளது. பரிசித்துவுக்கு அணியப்படும் ஆபரண வகைகள், அவன் மனைவி செல்விக்கு அணியப்படும் ஆபரண வகைகள் ஆகியன இம்மாவட்டத்தில் மக்களின் பயன்பாட்டில்

1. K.R. Srinivasa Iyenger (Ed.), *Asian Variations in Ramayana*, p.19.

இன்றும் இருப்பன. மேலும், நிறுவனப் பதிப்பாக வெளிவந்துள்ள தென் மாவட்டங்களைச் சார்ந்த இராமர் கதை, வெங்கலராஜன் கதை, பலவேறு சேர்வைக் கதை முதலியவற்றிலும் இவ்வகை ஆபரணங்கள் பற்றிய தகவல்கள் உள்ளன. அரசாணி நாட்டுதல், மங்கல குரவை எழுப்புதல், அந்தணர்களின் மணச்சடங்குப் பொருட்கள், முறைகள் போன்றனவும் இம்மாவட்டங்களில் நடைபெறும் திருமணச் சடங்குகளோடு ஒத்துச் செல்வன.

பஞ்சபாண்டவர்களில் பீமன், தருமர் ஆகியோரை நூலின் பலவிடங்களிலும் 'தமிழ் வீமன்', 'தமிழ் தருமர்' என்று தமிழ்நாட்டைச் சார்ந்த அரசர்களாகப் புலவர் அறிமுகப்படுத்துகிறார்.

பரிசித்துவின் திருமணத்தின் போது வெளியிடங்களில் உள்ள அரசர்கள் வந்திறங்க அவர்களை, "கூறுதமிழ் வாணர் கொண்டாடி வாழ்த்தி" (47-64) நிற்பதாக ஆசிரியர் கூறுகிறார். பிறிதொரு இடத்தில் பரிசித்து சைவ சமயம் மீதும், தமிழ் மீதும் மிகுதியான பற்றுக் கொண்டவன் என்பதை,

"ஐவர் குலந்தனக்கு அரசுநிலை யென்பாரும்
சைவர் சமயந் தழைக்கவந்தா னென்பாரும்
குருகுலத்தில் வந்த குலக்கொழுந் தென்பாரும்
பெருகுந் தமிழ்வளரும் பிரபலன்கா ணென்பாரும்"

(பா. 60 அடி. 97-100)

எனக் குறிப்பிடுகிறார்.

பரிசித்துவின் மகனான செனமேசெயனும் தன் பாட்டனார்களைப் போல, தந்தையைப் போல தமிழ் மீது ஆராத காதல் கொண்டவன் என்பதை ஆசிரியர் ஓரிடத்துக் கூறுகிறார்.

"ஆகம வேத ஞானம் அருந்தமிழ்க் கவிதை நூல்கள்
பாகமா யுணர்ந்து கேட்கும் பத்திசெய் பெரியோர் தன்பால்
போகவும் வரவுந் தண்மை புகழது மதுர மோங்க
ஏக சிங்கா சனத்தில் இருந்துடன் வாழும் நாளில்"

(பா. 67)

என்கிற பாடலில் தமிழ்க் கவிதை நூல்களை ஆய்ந்து உணரும் பெரியோர்பால் செனமேசெயன் கொண்ட அன்பின் வெளிப்பாட்டை ஆசிரியர் உணர்த்துகிறார்.

திரௌபதை இறந்தபிறகும் வைகுண்டப் பயணம் தொடரும் பாண்டவர்கள் தாங்கள் செல்லும் வழியில்,

"வைகை நதிபாயும் வாவித் தடாகமுமாய்

பொய்கை யதுகண்டு புனலருந்தி யங்கிருந்து

(பா. 97 அடி. 142 & 143)

என வைகையில் தாகம் தீர்க்க நீர் அருந்திச் செல்வதாக ஆசிரியர் கூறுகிறார். இதன் மூலம் ஆசிரியர் தென்மாவட்ட மக்களுக்கு அங்குள்ள பழையாறு, தாமிரபரணி நதிகளை அடுத்த வடதிசையிலுள்ள பெரிய நதியான வைகையை அறிமுகப்படுத்தி வடதிசை நோக்கிய பாண்டவர்களின் பயணத்தில் வாசகர்களுக்கு ஒன்றுதலை ஏற்படுத்துகிறார்.

கதை சொல்வதில் பல நெகிழ்வுகளையும், எளிய யாப்பையும், இனிய ஓசையையும், ஆடம்பரமற்ற சொற்களையும் கொண்டு வைகுண்ட அம்மானை திகழ்ந்துள்ளதால் செவ்வியல் பாரத நூற்களை விட இந்நூல் மக்களிடையே பெரிதும் வரவேற்பைப் பெற்றுள்ளது. ஆகவேதான் கதை வேறுபாடுகள், பாடபேதங்கள் கொண்டு அமைகின்ற வைகுண்ட அம்மானை சுவடிகள் தமிழகமெங்கும் கிடைத்துக் கொண்டிருக்கின்றன. வேறு விதத்தில் சொல்வதானால் செவ்வியல் இலக்கிய வரிசைக்கு (சங்க இலக்கியச் சுவடிகள், திருக்குறள், தேவாரம், திருவாசகம், நாலாயிர திவ்விய பிரபந்தம், கம்ப ராமாயணம் ஆகியனவற்றுக்கு) இணையாகக் காலந்தொறும் நாட்டார் இலக்கிய வரிசையில் வைகுண்ட அம்மானை என்ற ஓர் இலக்கியம் மட்டும் பல பிரதிகளைக் கொண்டு இன்றளவும் உயிரோட்டமான இலக்கிய நூலாகத் திகழ்கிறது.

# PREFACE

The basis for the story of *Vaikuṇṭa katai ammāṉai* are the stories told in the *Corkkārōkaṇa paruvam* in the *Mahābaratha* of Viyācar, and they are the oldest source. Still, before the *Vaikuṇṭa Ammanai*, Peruntēvaṉār's *Pāratam eṉṉum Māvintam*, narrates the story of the journey of the Pāṇṭavars to *Vaikuṇṭam.* After this, Nallā Piḷḷai's *Pāratam*, handles the *Corkkārōkaṇa paruvam* of Viyācar. These two books are considered to be authentic. There are many a *Vaikuṇṭa ammāṉai* in Tamil folklore that speak of the *Corkkārōkaṇa paruvam* of Viyācar that may be considered classical.

Stories that deal with the journey of the Pāṇṭavars along with Pāñcāli in the form of prose, *kūttu* (skits), *villu pāṭṭu, uṭukkai pāṭṭu,* and *ammāṉai* songs are popular in Tamil Nadu. Tarumar, Vīmaṉ, Arccuṉaṉ, Nakulaṉ, Cakātēvaṉ and Tiroupati are characters liked by the Tamil people. The journey of the Pāṇṭavars to *Vaikuṇṭam* is read about, heard about as much as they are appreciated in classical literature and folklore. This fact is confirmed by the huge number of palm leaf manuscripts available on the subject. (Details of the manuscripts are given in the second part of the text). This article is written in such a way as to compare the popularity of the journey of the Pāṇṭavars with the popularity of the *Mahāpāratam* in Tamil Nadu. This article attempts to portray the importance of the *Mahāpāratam* at the national and the Dravidian languages level. Further, it speaks about the popularity it enjoys in Tamil classical as well as folk literature.

**The popularity of the *Mahāpāratam***

In all the dialects of India the story of the *Mahāpāratam* is found. Even in languages that lack script this story has been popular through the oral tradition. The popularity of the *Mahāpāratam* can be found in the fact that it is full of anecdotes; every story tries to inculcate some moral lesson in the reader and the characters in it have much in common with the people of the present generation. J. Murray Mitchell observes, "Whatever impression the philosophical and moral portions may have made on the Hindu mind, there is no question that the story is contained in the Mahaparatam has powerfully influenced every part of India" (J.Murray Mitchell, *Hinduism past and Present*, P.130). Another scholar says, "Indians themselves consider The *Mahāpāratam* doubtless an epic, as a work of art of poetry (*kāvya*) , but at the same time they consider it also as a text book of morals of law and philosophy based on ancient tradition and hence endowed with indisputable authority". N. Vāṉamāmalai says that the *Pāratam* is

so devised that the people are able to identify themselves with the characters. He further says that Arccuṉaṉ and Pīmaṉ appear to be soldiers related to the people (Maurice Winternitz, *History of Indian Literature Vol- I*). He mentions that Kaṇṇaṉ's living along with the common people, his helping his friends and his humane qualities ,unlike the other avatarams of Lord Viṣṇu might have made this epic so popular with the people.

"The *Mahāpāratam* is one of the great epics of the world. There is no moral, social mores and *tarma* in the world that is not spoken of in it. It had come into existence just for the sake of highlighting justice and the tarma of the kings," says M. Aruṇācalam.

**The greatness of Kaṇṇaṉ in the *Mahāpāratam***

Kaṇṇaṉ, the divine being in the *Mahāpāratam* is worshipped as a deity all over India. The various names, Kiruṣṇaṉ, Vācutēvaṉ, Tamōtaraṉ, Kōvintaṉ, Purucōttamaṉ, Mātavaṉ, Kēcavaṉ, Nārāṇaṉ, Nārāyaṇaṉ - all refer to Kaṇṇaṉ. All over India, especially in the Vaishnavite families and generally in the Hindu families these names are given to male children. *Nāmatīpa nikaṇṭu* gives 120 names for Viṣṇu in its section of divine names. Many of them appear to be related to the *Kriṣṇa avatāram* and the incidents in the *Mahāpāratam.*

**The popularity of the *Mahāpāratam* during the *caṅkam* period**

From as far back as the *caṅkam* period poets used to attach the names of Kaṇṇaṉ in their names : Uṟaiyūr Maruttuvaṉ Tāmōtaraṇār, Cēntaṉ Kaṇṇaṉ, Tāyaṉ Kaṇṇaṉ, Iḷaṅkaṇṇaṉ, Pūṅkaṇṇaṉ, Nakkaṇṇaṉ, Vaṭama vaṇṇakaṉ Tāmōtaraṇār,Vēmpattūr Kaṇṇaṉ kūttaṉ etc. are some such. There are a lot of references to Viṣṇu in the *Caṅkam* literature; especially, in *Paripāṭal* there are separate poems on Viṣṇu. The *Caṅkam* literature books that speak in general about Viṣṇu, glorify His *avatāram* in the story of the *Mahāpāratam.*

For example,

1. throwing a calf at the wood-apple tree (*Mul.Thani. 1:3*)
2. speaking of the glory of the *Kriṣṇa avatāram* (*Aka. 59. 3-6*)
3. lifting up of the hill during the deluge to save his people (*Mul. Thani. 1:4*)

4. killing a demon named Kēci (*Pari. 3: 31-32*)
5. taking the *avatāram* of Palarāmaṉ (*Pāri. 1: 1-5*)
6. destroying of the wrestlers who come to destroy Him (*Kaḻi. 134: 1-3*)

The poems show that the people of that period knew about the various aspects of the *Mahāpāratam*.

1. torching of the lac house in which the Pāṇṭavars stayed (*Kali. 25: 1-4*)
2. a reference that Karṇaṉ is the son of the Sun (*Kali. 101: 18-20*)
3. references to the battle of the *Pāratam* (*Kali . 104 57-59 & Puṟam. 2: 13-16* )
4. Pīmaṉ saving his brothers and Pāñcāli from the burning lac house (*Kali, 101: 18-20*)
5. Pīmaṉ ripping the thigh of Turiyōtaṉaṉ (*Kali. 52: 2-3*)
6. The Pāṇṭavars killing the Kauravars in the battle field (*Perum. 415-417*)
7. the incident of Arccuṉaṉ burning down the Kāṇṭakavaṉam (*Ciṟu. 238*)
8. the reference to the culinary skills of Pīmaṉ (*Ciṟu. 239-241*)

The above mentioned examples tell us to what extent the people of yore were well versed in the anecdotes of the *Mahāpāratam*. The most significant thing about the references to the *Mahāpāratam* is the way in which they are handled in the ancient poems. Mostly these references are in the form of similes. For example,

*kāveri ūṭṭiya kavarkaṇait tūṉip*
*.pūviri kaccaip pukaḻōṉ taṉmuṉ*
*paṉivarai mārpaṉ payanta nuṇporuḷ*
*paṉuvaliṉ vaḻāap palēṟu aṭicil* (*Ciṟu.238-241*)

The lines refer to a broad shouldered, mountain like one and an expert in cooking. In these four lines the poet has referred to two things : the incident

of Arccuṉaṉ putting Kāṇṭavavaṉam to the torch and the fact that Pīmaṉ is a culinary expert. The poet was able to refer to these without any explanatory note and mentioning any name whatsoever. By the mere mentioning about the marksmanship and culinary skills, the poet was able refer to the persons and bring home the point he wanted to make. This is ample proof to the fact that the people of the *Caṅkam* period had a thorough knowledge about the *Mahāpāratam.*

Further, there is a reference in the *Mahāpāratam*, to Arccuṉaṉ's marriage with Cittirāṅkatai, daughter of a Pāṇṭiya king. This makes it clear that there were relationships between the Pāṇṭavars and the Pāṇṭiyars. S.Vaiyāpuri Piḷḷai mentions about the use of titles *Pāñcavar*, and *Kaouriar* among the Pāṇṭiyars. He further mentions that, in order to ascertain the above mentioned fact one can cite the reference to the ancient Tamil kings providing food to both sides in the the Pāratam war. The ancient people believed these things to be true, he says. From these we can deduce the following facts: stories related to the Pāratam war were in circulation even before the *Caṅkam* period. The immense belief the people of the *Caṅkam* period had in these stories. The people of the *Caṅkam* period were proud about the fact that they had relationship with the characters in the *Mahāpāratam*. The *Mahāpāratam* was popular not only in Tamil but also in other Dravidian languages.

**The popularity of the *Pāratam* in Telugu**

In Telugu, along with the classical *Mahāpāratam*, there were many of its folklore versions. Depending on the culture and traditions of the land, the characters of the *Mahāpāratam* were modified. The stories were changed accordingly. In Telugu many *yaṭcahāṉams* books were written with alterations to the *Pāratam* stories. Many anecdotes from the *Pāratam* are found in folklore. *Naḷa Carittira Patam, Cubattra kalyāṇam, Sasi rēkā Pāriṇayamu* and *Tēvayāṇi Carittramu* are worth mentioning about.

**Popularity in Kannada**

In Kannada, the influence of the *Mahāpāratam* is found in their folk performing art. Their folksongs like *Hintiya hāṭukaḷu, Kacceya hāṭukaḷu, Paṉṉyia hāṭukaḷu, Konthiyā haṭukaḷu* sing the praises of the great characters in the *Mahāpāratam*. Most often *yaṭcahāṉams* poets are common people whose main aim is the propagation of the values of life portrayed in the *Rāmāyaṇam*, The *Pāratam, Bhāgavatha Purāṇa* and other works by composing prasangas based

on their stories (Kriahnamurthy Hanur (Ed.), *Encyclopaedia of the Folk culture of Karnataka,* p.430).

**Popularity in Malaỵalam**

In Malayalam the *Mahāpāratam* is popular both among the royalty and the laymen. Till this day it reaches the people in various folk forms. A particular caste in a village in Kerala had the singing of the *Pāratam* as their caste profession. In central Kerala we are able to find many ballads that are ingenuously created, having the *Mahāpāratam* as the main source. *Katakaḷi, teyyam, villu pāṭṭu* are the various folk forms through which the *Mahāpāratam* is enacted. A.N. Perumal says, "Through *katakaḷi,* stories from the *Pāratam* are enacted. *Kīcika vatam, Tiroupati vastāparaṇam, Kiruṣṇan tūtu* are important anecdotes performed" (A.N. Perumal, *Tamiḻ Nāṭakam ōr āyvu,* p.20).

**Books on the *Mahāpāratam* in Tamil**

It is important to analyze the history of how the *Mahāpāratam* and the related stories were recorded in Tamil classical literature and folklore.

***Peruntēvaṉār Pāratam***

Peruntēvaṉār, who wrote the invocation for the *Caṅkam tokai* literature like *Kuṟuntokai,* has written a book on the *Pāratam* too. It is called *Peruntēvaṉār Pāratam.* The book is supposed to contain 12,000 poems. But only a fragment is available now. *Utyōka paruvam,* the details of only 13 days' war in *Yutta paruvam* are available in the book published by Sri. S. Gopala Iyer. But it must have been a much bigger book, says S.Vaiyāpuri Piḷḷai.

The book by Peruntēvaṉ is written in the *veṇpā* form. The king and subjects of Peruntēvaṉ's time must have been very conversant with the story of the *Mahāpāratam.* It is to be noted that the Cōḻa king Nalluruttiraṉ gives hints about the *Pāratam* in his *Mullai kali.*

**The *Pāratam* in the 10th Century**

In Ciṉṉamaṉūr inscription it is written, "After writing the *Mahāpāratam* in Tamil and constituting Maturai Tamiḻ Caṅkam, Mahārajar Cārvapoụrmar"... This clearly mentions about a Tamil translation of the *Mahāpāratam.* This inscription is dated in 10th century A.D. There is a mention

about a contemporary of Campantar as "Neṭumāṟaṉ, who vanquished Nelvēli", and hence, it must belong to 600 A.D, says S. Vaiyāpuri Piḷḷai. This book is not available.

### The *Pāratam* during the period of Nantivarmaṉ

During the rule of Teḷḷāṟu eṟinta Nantivarmaṉ, a book on the *Pāratam* seems to have been written by an anonymous poet. They say that it might have been written as a combination of prose and poetry (S. Mutturattiṉa Mutaliyār (Ed.), *Peruntēvaṉār Pāratam - Māvintam*, p.5). It is to be noted that the period of Nantivarmaṉ was between 826 & 828 AD.

### Kaurṇilai vicākaṉ's *Pāratam*

From 1172-1218 A.D. Kulōttuṅkaṉ - III ruled the Cōḻa country. During his period, at the beginning of the 13th century a version of *Pāratam* was written by one Karuṇilai vicākaṉ. S.Vaiyāpuri Piḷḷai says, " We learn from an inscription that a *Pāratam* was written in Tamil. It was written by Kuṉṟavataṉa kōṭṭattu Illattūr nāṭṭu Aruṁpākkamuṭaiya Aruṇilai Vicākaṉ Tirailōcciya Mallaṉ Vatsarājaṉ... It must have appeared in the beginning of the 13th century A.D."

### The *Pāratam* of Villiputtūrār

The *Pāratam* written by Villiputturār in the 14th century A.D. has a place of pride in Tamil literature. He has written his book on the pattern of the *Viyāca Pāratam*. But it ends with the *Couptika Paruvam*, that is, the 18th day battle of the *Viyāca Pāratam*. This book of Villiputturār is preferable to many other works on the *Pāratam*. It has gone through many reprints. Villiputturār's son Varantaruvār has given the introduction in 23 poems.

### *Varantaruvār Pāratam*

There is a reference to the fact that Varantaruvār wrote expansively the eight *paruvams* that were left out by his father. *Varantaruvār Pāratam* is not available anywhere (S.Vaiyāpuri Piḷḷai, *Tamiḻ illakkiya carittirattill kāviya kālam*, p.208).

### The efforts of Ampalakkāṭumaiyaṉ

In the 17th century, Ampalakkāṭumaiyaṉ wrote a version of the *Pāratam*. It contains only the biography of Cāntaṉu. The poet calls this *Ātiparuvattantāti Paruvam*.

## அர்ச்சுனன் குழந்தைக்கு ஆபரணம் அணிவித்தல்

தத்தி விளையாடத் தாயார் வளர்த்திடவே
வெற்றி[1] விசையன்மிக மகிழ்ந்து பேரனுக்குத்

தண்டை சிலம்புச் சதங்கை யதுபூட்டி
வெண்டையமும் வச்சிரமணி விரசுகளுந் தான்பூட்டிப்

பூசணங்கள் பூட்டிப் பொன்னால் அலங்கரித்து
வாசமுள்ள வாழவீமன்[2] மைந்தனுக்குத் தக்கதெல்லாம்

பூட்டி யலங்கரித்துப் பூரித்தான் மகிழ்ந்து[3]
நாட்டிய சீர்வல்லி இராசன் மனமகிழ்ந்து

## பிள்ளைத்தமிழ் பருவங்கள் கடந்து குழந்தை ஓராண்டு அடைதல்

தும்பிகளு மூதிடுமாம் சொல்லும் பயின்றிடுமாம்
அம்புலி யும்பார்த்து ஆனை யசைந்தாடிச்

செங்கீரை யாடிச் சிறுதாலந் தானாடி
வங்கார முத்தமொடும் மருவியதோர் சப்பாணி

சிற்றில்[4] விளையாடி சிறுதாலந் தானாடி
முத்தி யொருவயசு முழுதும் பருவமதாய்த்

## பாண்டவர்கள் குழந்தைக்குப் பரிசித்து எனப் பெயரிடுதல்

தத்தி யடியுமிட்டுத் தம்பி யிவனெனவே
பத்தடியுந் தானடந்து பிராயமோ ரெண்டாகித்

7.56. வெற்றி விசையன் - மிகுந்த வெற்றிகளைப் பெற்ற அர்ச்சுனன்; அபிமன்யுவின் தந்தை. 7.57. தண்டை, சிலம்பு, சதங்கை - குழந்தைகளுக்கு அணியும் சிலவகை அணிகலன்கள். 7.58. வெண்டையம் - குழந்தைகளுக்குக் கைப் பெருவிரலில் அணியும் ஒரு வகை மோதிரம். வச்சிரமணி விரசு - சிறந்த வயிரத்தாலான ஓர் ஆபரணம். 7.59. பூசணங்கள் - ஆபரணங்கள். 7.60. வாழ்அவீமன் - சிறந்த வாழ்க்கை வாழ்ந்த அபிமன்யு. 7.62. சீர்வல்லி இராசன் - பெருமைமிகு அல்லியின் கணவனாம் மன்னன் அர்ச்சுனன். 7.63. தும்பி - ஒரு வகை வண்டு. 5.64. அம்புலி - சந்திரன். 7.65. ஆனை - யானை என்பதின் பேச்சுவழக்குச் சொல். செங்கீரை - பிள்ளைத்தமிழ் இலக்கியத்துள் கூறப்படும் இரண்டாம் பருவம். சிறுதால் - தாலப்பருவம் என்னும் மூன்றாம் பிள்ளைத்தமிழ்ப் பருவம். 7.66. வங்கார முத்தமொடும் - பொன்னனைய முத்தப்பருவமும்; இது பிள்ளைத்தமிழில் ஐந்தாம் பருவமாகக் கொள்ளப்படுகிறது. சப்பாணி - குழந்தை இரு கைகளையும் கொட்டும் சப்பாணிப் பருவம்; இது பிள்ளைத்தமிழில் நான்காம் பருவமாகக் கொள்ளப்படுகிறது. 7.67. சிற்றில் - ஆண் குழந்தைகளுக்கு என விதிக்கப்பட்ட மூன்று பருவங்களுள் முதலாம் பருவம். எஞ்சியவை சிறுபறை, சிறுதேர் ஆகியன. சிறுதாலம் - சிறிய உள்ளங்கை. 7.68. முத்தி - முற்றி என்பதின் பேச்சுவழக்குச் சொல். 7.69. தம்பியிவன் எனவே - குழந்தை இதுவெனவே. 7.70. பிராயம் - வயது. ரெண்டு - இரண்டு என்பதின் பேச்சுவழக்குச் சொல்.

---

சு.சொ : 1. வெத்தி 2. வாள்வீமன் 3. மகின்ந்து 4. சித்தில்

### Arccuṉaṉ adorns the child with ornaments

As the mother brought up the playful toddler,
Triumphant Vijayaṉ adorned the grandson
With ornaments, jewels of gold
Anklets, ankle-rings, bells for feet,
Ring for thumb, and diamond studded jewels.
The husband of winsome Alli
Adorned the child and rejoiced at.
Spittle trickling, the child lisped,
Looked at the moon and toddled like an elephant
The stages *ceṅkīrai* and *tālam,*
*Muttam* and *cappāṇi* he crossed.
He played *ciṟṟil*
And grew up to be one year old.

### The Pāṇṭavars name the child Paricittu

The little boy toddling along could walk
Ten steps and swift he turned two.

தெரிசித்துப் பஞ்சவர்கள் சிந்தை மிகமகிழ்ந்து
பரிசித்தென நாமம் பகர்ந்தார்கள் பேரனுக்கு

### பரிசித்து மூன்று வயதடைதல்

மூன்று வயதாகி முலைமறந்து[1] வீதிசுத்தி
ஊன்று சிறுகோலு முண்டைவில்லுந் தான்பிடித்து

### பரிசித்து நான்கு வயதடைதல்

நாலு வயசாகி நடையுடையும் பாவனையும்[2]
மாலுடைய பேரனுக்கு வயசுமொரு யஞ்சாகி

### பரிசித்து ஐந்து வயதடைதல்

அஞ்சு வயசாகி யானைரத மீதேறிக்[3]
கொஞ்சு பரியேறிக் கொற்றவனும்[4] வீதிசுத்தி

### பரிசித்து ஆறு வயதடைதல்

ஆறு வயசாகி ஆடைவெகு பூசணமும்
நீறு புனைந்து நெடியோனை நெஞ்சில்வைத்து

ஆயா னடிபணிந்து ஆகமங்கள் கற்றுணர்ந்து
இராசாதி ராசனென்று நாற்றிசையுங் கொண்டாட

வில்வித்தை சாத்திரமும் விதவித மாய்ப்பயிற்றிக்
கல்வித் தமிழறியக் கட்டழகன்[5] வேணுமென்று

### பரிசித்து ஏழாம் வயதில் குருகுலத்தில் சேர்க்கப்படல்

ஏழு வயதில் யெழுத்தறிந்து[6] ஓதுதற்கு
வாழான வாழவீமன் மகனும் படித்திடவே

**7.71.** தெரிசித்து - குழந்தையைக் கண் குளிரக் கண்டு. பஞ்சவர்கள் - பாண்டவர்கள். **7.73.** முலை மறந்து - தாய்ப்பால் பருகும் பருவத்தைக் கடந்து என்ற பொருளில். வீதி - தெருக்கள். **7.74.** ஊன்று சிறுகோல் - கையில் பிடித்திருப்பதற்கு வாகாய் அமைந்த சிறிய கம்பு. உண்டை வில் - தூரத்திலுள்ள பறவைகள் சிறு விலங்குகள் ஆகியவற்றைக் கல் வைத்து விசையின் உதவியால் தாக்கவுதவும் ஒரு வகை ஆயுதம். **7.76.** மால் - திருமால். பேரன் - பரிசித்து. அஞ்சு - ஐந்து என்பதின் பேச்சுவழக்குச் சொல். **7.77.** ரதம் - தேர். **7.78.** பரி - குதிரை. கொற்றவன் - பரிசித்து. **7.79.** பூசணம் - ஆபரணம். **7.80.** நீறு - திருநீறு. புனைந்து - பூசி. நெடியோன் - திருமால். **7.81.** ஆயான் - ஆசான்; குரு; மேற்படி குருவைப் பேச்சு வழக்கில் நாடார் சமூகத்தார் மற்றும் பிற ஒரு சில சாதியர் ஆயான் என அழைப்பர். ஆகமங்கள் - வேதாகம நூல்கள். **7.82.** இராசாதி ராசன் - அரசர்களுக்கெல்லாம் அரசன். நாற்றிசை - நான்கு திசையிலுள்ள அரசர்கள் மற்றும் மக்கள்; இடவாகு பெயர். **7.85.** எழுத்தறிந்து - தமிழ் எழுத்துக்களைக் கற்றறிந்து. **7.86.** வாழான வாழ் அவீமன் மகன் - சிறந்த வாழ்க்கை வாழும் அபிமன்யுவின் மகனான பரிசித்து.

---

சு.சொ : 1. முலைமரந்து 2. பாவினையும் 3. மீதேரி 4. கொத்தவனும் 5. கட்டளகன் 6. எளுத்தறிந்து

The Pāṇṭavars watched it and grew joyful
And named the grand son Paricittu.
At three, he forgot breast milk, and rambled.
He carried a small stick and a sling.
The modes of dress, gait, manner,
Befitted Viṣṇu's grandson.
At five, he rode chariots and elephants,
On horses graceful he roamed about.
At six he wore jewels aplenty.
He applied holy ash and held Viṣṇu at heart.
Paying obeissance to *Guru*,
*Ākamam* in detail, he learned.
A king of kings he was acclaimed.
They felt that he should learn archery.
The handsome boy should learn Tamil̲, they felt.

**Paricittu admitted in *kurukulam*[1] at Seven**

When he was seven the Pāṇṭavars felt
That son of Apiman̲yu should learn letters.

1. (Formerly) learning by living with the teacher.

ஆதிகுரு விடத்தில் ஐவருந்தான் புத்திசொல்லி
ஓதிவைக்க வேணுமென்று ஒப்பிவித்தா ரம்மானை

## பரிசித்துவின் பல்கலை தேர்ச்சி

அரிநமோவென்[1] றட்சரத்தை ஐவருட பேரனுக்குத்
தெரியப் படுத்திச் சித்தறிவும் பேரறிவும்[2]

எழுத்தினுட அச்சரமும் யெல்லா மெடுத்தெழுதி
அழுத்த முதலான அன்பத்தோர் அட்சரமும்

படித்து விரசெழுதிப் பலநூலுங் கற்றதற்பின்
வடித்த தமிழதினால் வகையாக வேதெரிந்து

ஆசு மதுரமுத லவையடக்க முள்ளதெல்லாம்
பேசுந் தமிழ்பலதும் பிரியமுடன் தான்படித்துத்

தெலுங்கு தமிழ்கிரந்தம் சீரியதோர் கன்னடிகம்
துலங்குபுகழ் நாகரஞ் சோர்வறவே தான்படித்து

நால்வேத சாஸ்திரமும் நயனகுறிப் பாசைகளும்
மால்பேரன் தான்படித்து வயசுமொரு எட்டாகித்[3]

தனுசாஸ்திரம் படித்தான் தாரணியெல் லாம்புகழ
மனுவிக் கினம்நீதி மதிபுத்தி வித்தைகளும்

7.87. ஆதி குரு - பாண்டவர்கள் வமிசத்திற்குக் குருவானவராகத் திகழ்ந்த வசிட்டர். ஐவர் - பாண்டவர்களான ஐவர். 7.88. ஓதி வைக்க வேணும் - கல்வி கற்றுத்தர வேண்டும். ஒப்பிவித்தார் - பொறுப்புடன் பரிசித்துவைக் கொடுத்தார். 7.89. எட்டச்சரம் - 'ஓம் நமோ நாராயண' என்னும் திருமால் மந்திரம். 7.90. தெரியப்படுத்தி - எட்டெழுத்து மந்திரத்தின் சூட்சமத்தைத் தெரியச் செய்து, சித்தறிவும் பேரறிவும் - சிற்றறிவு என்னும் உலகியல் அறிவும் பேரறிவு என்னும் இறையை உணர்வதற்கான வழிமுறைகளைக் கூறும் அறிவும். 7.91. எழுத்தினுட அச்சரமும் - எழுத்துக்கள் என்று சொல்லப்படுகின்றனவற்றின் வரி வடிவமும். 'அச்சரம்' என்பது தென்பாண்டி நாட்டில் வழங்கப்படும் மலையாளச் சொல். 7.92. அழுத்த முதலான - ஒலியழுத்தம் முதலியவற்றால். அன்பத்தோர் அட்சரமும் - ஐம்பத்தியொன்று என்ற தொகை கொண்ட சமஸ்கிருத எழுத்து வரிவடிவங்களும். 7.93. விரசெழுதி - விரைவாக எழுதி. 7.95. ஆசு, மதுரம் - சில தமிழ்க் கவி வகைகளின் பெயர்கள். அவையடக்கம் - சான்றோரிடத்துப் பேசும் முறையும், சென்றயிடத்தின் சூழல் அறிந்து அதற்கு ஏற்ப ஒழுகும் முறையும் பற்றிய செய்திகளைக் கூறும் கல்வி. 7.96. பிரியமுடன் - விருப்பமுடன். 7.97. கிரந்தம் - நூல். சீரியதோர் - சிறந்ததொரு. கன்னடிகம் - கர்நாடகத்துள் வழங்கப்பெறும் கன்னட மொழி. 7.98. நாகரம் - தேவநாகரி மொழி. 7.99. நால் வேத சாஸ்திரம் - நான்கு வேதங்களான ரிக், யசூர், சாமம், அதர்வணம் என்னும் சாஸ்திரங்கள். நயனகுறி - கண்களால் கூர்ந்து நோக்கி உணரும் அறிவு. பாசை - மொழி. 7.100. மால்பேரன் - திருமாலின் பேரன்; இவண் பரிசித்து. 7.101. தனு சாஸ்திரம் - வில் வித்தை அறிவு. தாரணி - உலகம். 7.102. மனு - மனு தர்மம். விக்கினம் - உலக பரிபாலனத்திற்கு இடையூறாகத் திகழும் தடைகள். நீதி - உலகியல் நீதிகள்.

சு.சொ : 1. அரிநமாவென் 2. பேரறியும் 3. யெட்டாகி

They took him to the *Guru* of the clan.
Entreating him to teach the boy, they
Entrusted the boy to the *Guru*.

**Accomplishments of Paricittu**

The grandson of the five learned *Hari namō*[1]
Had the lore of the here and the hitherto.
All the letters were taught to him.
One and fifty letters[2] he learned.
And pronunciation right he was well versed.
He could write fast, and studied many books.
He learned through chaste Tami̱l very many things.
*Ācu, maturam*[3], ways of moving he accomplished.
Learned to move with the learned elders.
Spoken the tongue he learned with relish.
He learned Telugu[4] and Tami̱l,[5]
Ka̱ṉṉaḍa[6] and Thēvanāgari.[7]
Getting not bored up, he learned with relish.
He learned the four *vēdas, sāstras,*
And the language of the eye.
The grandson of Viṣṇu became eight.
He learned archery to the praise of all.
He studied *Ma̱ṉu*, realised the obstacles therewith.
He learned about rule, justice and acumen.

1.*Ōm namō Nārāyaṇa - Viṣṇu mantiram*. 2. Possibly Sanskrit. 3.Some verse types. 4,5,6 & 7. South Indian languages.

பாசை பதினெட்டும் பரிசித்து தான்படித்து
ஓசை பெற்றதேசம் உலகெங்குந் தானாள

### பரிசித்து நண்பர்களுடன் வேட்டைக்குச் செல்லுதல்

நல்வித்தை கற்றிருந்தார் நாராயணன்[1] பேரன்
செல்வித்தை கற்று சிறுவருடன் தான்கூடிக்

கானவேட்டை யாடி வருகையிலே[2] வில்லெடுத்து
தான்வேட்டை யாடவென்று தானடந்தா ரம்மானை

வாலைகளாய்க் கூடி வனம்புகுந்து நாலிடமும்
சோலைகளும் காவுகளும் சுனையு மலைபலதும்

ஓடி விளையாடி உயர்ந்தமலை தானணுகித்
தேடிக் கரடிபுலி[3] சிங்கங்கள் யானைமுதல்

மான்மரைகள் குத்தி வராகந்[4] தனைவதைத்து
மேன்மையுள்ள தேனும் விஸ்தார நற்கனியும்

வாழைக் கனியும் வருக்கைப் பிலாக்கனியும்
தாழைக்கனியும்[5] விளாங்கனியும் தனிமா துளங்கனியும்

மாங்கனியும் விளாங்கனியும் வளர்நவ்வ லின்கனியும்
சாங்கமற பருகிதனிக் காட்டிலே திரிந்து

விளையாடிப் பாலர் வெகுளி[6] மிகவாகி
இளையாமல் சற்றுமவ ரின்னதென்றும் பாராமல்[7]

**7.103.** பாசை - பதினெட்டு தேசங்களில் வழங்கப்படும் மொழிகள்; அவை சிங்களம், சோனகம், சாவகம், சீனம், துளுவம், குடகம், கொங்கணம், கன்னடம், கொல்லம், தெலுங்கு, கலிங்கம், வங்கம், கங்கம், மகதம், கடாரம், கவுடம், கோசலம், தமிழ் என்ற நாடுகளில் வழங்கப்படும் மொழிகள். **7.104.** ஓசை பெற்ற தேசம் - புகழ் படைத்த தேசம். **7.105.** நாராயணன் பேரன் - திருமாலின் பேரன்; பரிசித்து. **7.106.** சிறுவர் - பரிசித்துவின் வயதொத்த அவனின் நண்பர்கள். **7.107.** கானவேட்டை - காட்டினில் ஆடும் வேட்டை. **7.109.** வாலைகள் - இளம் பிராயத்தார். **7.110.** சோலை - மரச்சோலை. காவு - அடர்ந்த மரங்கள் மிகுந்த காடு. **7.113.** மரைகள் - ஒரு வகை மான்கள். குத்தி - வேல் மற்றும் அம்பு முதலிய வேட்டையாடும் கருவிகளால் விலங்குகளைக் குத்தி. வராகம் - பன்றி. **7.114.** விஸ்தார நற்கனி - அழகிய நல்ல பழம். **7.115.** வருக்கைப் பிலா - பலா மரத்திலிருந்து கிடைக்கும் ஒரு உயர்வகைக் கனி; பிலா இவண் பேச்சுவழக்குச் சொல். **7.116.** தாழைக் கனி - தேங்காய். விளாங்கனி - விளாமரத்துப் பழம். **7.117.** நவ்வலின் கனி - நாவல் மரத்துப் பழம்; நாவல் பழம். **7.118.** சாங்கமற பருகி - மிகுந்த ஒழுங்குமுறையுடன் அருந்தி. **7.119.** பாலர் - பரிசித்து மற்றும் அவன் பருவத்து வயதில் குறைந்த நண்பர்கள். வெகுளி மிகவாகி - கபடமற்ற மனப் பண்புகள் மிகுந்தவர்களாகி. **7.120.** இளையாமல் - மனம் சற்றும் தளராமல்.

சு. சொ : 1. நாறாயணன் 2. வரக்கையிலே 3. கறடிபுலி 4. வறாகந் 5. தாளைக்கனியும் 6. வெகுழி 7. பாறாமல்

Languages eighteen[1] he had to learn.
So he could oneday rule the famed country.

**Paricittu goes hunting with friends**

The skilled grandson of Nārāyaṇa
Went for hunting with boys of same age.
A bow he held in hand:
Ready, that he was for the game.
With young boys he entered the forest.
They moved in sport around
Gardens, groves, fountains and hillocs.
Playing with cheer un contained,
They reached a lofty hill.
They searched for bears, tigers, lions, deers
Elephants, speared and killed wild boars.
Rich honey, wonderful fruits,
Fruits of plantains and *varukkai* jack,[2]
Coconuts, wood-apples, pomegranates,
Mangoes wood apples, jamoon-plums,
All they relished in joy and roamed about.
Playful, the children grew flippant.
And turned to ways uncontained.

1. Language spoken at Aṅkam, Aruṇam, Kaliṅkam, Kāmpōkam, Koṅkaṇam, Kōcalam, Koucikam, Cintu, Cīṉam, Cōrakam, Tirāviṭam, Tuḷuvam, Papparam, Mukatam, Mārattam, Vaṅkam. 2. Good quality jack fruit.

## பாம்பைக் கொல்லுதல்

காடு கலைத்துக் கடுகி மலையேறி[1]
ஒடுகிற பாம்பை உயிர்வதைகள் செய்துகொண்டு

ஆட்டி விளையாடி அலங்கரித்து நாகமதை
கோட்டிப் பண்ணியேயவர்கள் கொன்றார்கள் நாகமதை

நாகமது செத்ததையும் நாகமதி லேகிடத்தி
வேகமுட னோடி விளையா டும்வனத்தில்

## சிவ முனிவரின் தவநிலை

அங்கே சடைமுடியு மான தவமுனிவர்
எங்கே சிவன்பாத மென்றைக்குக்காண் பேனென்று

இருகை விரித்து யிருந்தார் சிவயோகம்
அருகே சிறுவர் அச்சியலைப் பாராமல்

## முனிவரின் கழுத்தில் பரிசித்து பாம்பைப் போடுதல்

சுடரில்விழும் விட்டிலைப்போல் துன்பமொன்று மறியாமல்[2]
இடரு வருமென்று யெண்ணமது தோற்றாமல்

நையாண்டி பண்ணி நகைத்துவிளை யாடி
ஐயாண்டி பாருமென்று அரவை யெடுத்துவந்து

கேடும் வரும்போது கெடுமதிகண் தோற்றாமல்
பாடு வருமென்று பரிசித்[3] தறியாமல்

யேது வருமெனவே யெண்ணியவன் பாராமல்[4]
தீவினை தன்னையவன் தீதென் றறியாமல்

**7.121.** காடு கலைத்து - காட்டிலுள்ள விலங்குகள் மற்றும் பறவைகள் ஆகியன கலைந்து ஓடும்படிச் செய்து. கடுகி - விரைந்து. **7.123.** ஆட்டி விளையாடி - இறந்த பாம்பினைக் கையில் எடுத்து ஆட்டி, விளையாடி. நாகம் - பாம்பு. **7.124.** கோட்டி பண்ணி - குறும்புத்தனங்கள் பண்ணி. நாகம் - மலை. **7.129.** சிவயோகம் - சிவத்தை அடைய வேண்டி ஒழுகும் யோக மார்க்கம். **7.130.** அச்சியலை - அந்தச் செயலை; சியல் இவண் பேச்சு வழக்குச் சொல். **7.131.** விட்டில் - விட்டில் பூச்சி. **7.132.** இடரு - இடர்; துன்பம். தோற்றாமல் - தோன்றாமல். **7.133.** நையாண்டி - கேலி. **7.134.** ஐயாண்டி பாரும் - ஐ! இங்கே இருக்கும் ஆண்டியைப் பாரும் என்ற வியப்புப் பொருளில். அரவு - பாம்பு. **7.135.** கேடு - கேடு காலம். கெடுமதி கண் தோற்றாமல் - கெட்ட புத்தியினால் அறிவுக்கண் தோன்றாமல். **7.136.** பாடு - துன்பம். ஏது வரும் - என்னதான் நடக்கும்? ; ‘கேடு வரும்’ எனினும் அமையும். பாராமல் - நினைக்காமல். **7.138.** தீது - கொடியது.

சு.சொ : 1. மலையேரி 2. மரியாமல் 3. பரிசித்தரி 4. பாறாமல்

### Killing a snake

The disturbed the woods climbing mountains fast,
Killing snakes that ran for their lives.
They played with a snake, swinging it.
They went on playing in the forest.

### The deep meditation of the sage of Civaṉ[1]

There was a sage with matted hair;
"When will I reach the feet of Civaṉ?", he mused.
He did *Civayōkam*[2] with outstretched hands.
The kids went near him.
They could not know what he was at.

### Garlanding the sage with the dead snake

Oblivious of impending harm,
Like moths reaching fire, having no thought
That they would into troubles run
The boys ridiculed him, laughed at and played about
'Look at the mendicant', saying so he carried the snake.
'When bad time comes wisdom eclipses' they say.
Paricittu knew not what was in store for him.
He knew not what fate awaited him.
He knew not of the ill fate that awaited him.

1. Worshipping Lord Civaṉ. 2. Special meditation on Lord Civaṉ

சர்ப்பத்தைத் தானெடுத்து சன்னாசி தன்கழுத்தில்
உற்பத்தி தானுமக்கு உடமையது வென்றணிந்தான்

## முனிவர் பரிசித்துக்கு இட்ட சாபம்

கண்டந்த மாமுனியும் கண்கள் யெரிபறக்க
விண்டந்த கோபம் வெளியில் கோரமதாய்

ஏண்டா சிறுபயலே என்மீதில் பாம்புதன்னை
வேண்டாதார் போலே விடவரவைப் போட்டாயே
தீண்டாதோ யுன்னைச் சீறும் பொறியரவும்[1]

ஆனா லுனக்கு அரவால் மரணமென்று
ஞானபர னான ஞானமுனி சாபமிட்டார்

## பரிசித்து நண்பர்களுடன் அஸ்தினாபுரம் செல்லுதல்

சொன்னமுனி சாபம் துடைக்க வறியாமல்
என்னவோ வென்று ஏகிப்பரி சித்தவனும்

த்ன்னிகரில் லாததொரு தனஞ்செயனார் தன்பேரன்
சென்னி கவிழ்ந்து சிறுவருடன் தான்கூடி

அத்திபுரம் நோக்கி[2] ஆரணியம் விட்டகன்றார்
வெத்திமிகப் பேசி விளையாடிக் கொக்கரித்துப்

பட்டணமுஞ் சென்று பரிசித்து வந்திருந்தார்
அட்டதிசை புகழும் ஐவர்மிக மகிழ்ந்து[3]

வில்லெடுத்து கானகத்தில் வேட்டைபோய் வுந்ததும்
சொல்குறியான் பேரன் சிறுக்கனிவ னென்பார்க்கும்

**7.139.** சர்ப்பம் - பாம்பு. சன்னாசி - சந்நியாசி; துறவி. **7.140.** உற்பத்தி தானுமக்கு - இப்பாம்பு உமக்காக உருவானதுதான் என்கிற பொருளில். **7.141.** எரி - நெருப்பு. **7.142.** கோரம் - மிகுந்த சினம். **7.144.** வேண்டாதார் - பகைவர். விட அரவு - விஷப் பாம்பு. **7.145.** சீறும் பொறியரவு - விஷத்தைக் கக்க சீறுகின்ற புள்ளிகளை உடம்பினில் கொண்ட பாம்பு. **7.147.** ஞானபரன் - ஞான குரு. துடைக்க - சாபத்தை இல்லாமல் ஆக்க. **7.149.** என்னவோ - இனிமேல் சாபத்தால் என்ன நடக்கப் போகிறதோ? என்ற பொருளில். ஏகி - நாட்டுக்கு விரைந்து. **7.150.** தனஞ்செயனார் - அர்ச்சுனன். **7.151.** சென்னி - தலை. **7.152.** அத்திபுரம் - அஸ்தினாபுரம். ஆரணியம் - காடு. **7.153.** வெத்தி - வெற்றி. கொக்கரித்து - ஆரவாரம் செய்து. **7.155.** அட்டதிசை - எண் திசைகள். ஐவர் - பாண்டவர். **7.156.** கானகம் - காடு. **7.157.** சொல் குறியான் - சொல்லும் குறியில் தவறாமல் அம்பு எய்பவன்; அர்ச்சுனன். சிறுக்கன் - சிறியவன்; இளையவன்.

சு.சொ : 1. பொரியரவும் 2. னோக்கி

He took the dead snake and around the sage's neck,
Placed and said, "This is just made for you."

**The sage curses Paricittu**

Rudely woken, the sage's eyes grew red hot,
His fury manifesting his words, said,
"You silly fellow, on me like an enemy
You did place the venomous snake.
Let a venomous, dotted snake bite you!
You will die because of snake bite!"
Thus the wise sage cursed Paricittu.

**Paricittu goes to Hastiṉāpuram with friends**

Knowing not how to revoke the curse,
Knowing not what he had in store, Paricittu,
The grand-son of Taṉañceyaṉ[1], peerless
Hung his head, and along with friends
Left the forest for Hastiṉāpuram.
Boasting, playing, crowing over
Paricittu did reach the city soon.
The famed five grew intensely happy,
"Going to woods, hunting with a bow, a marksman,
The little boy,our grandson", said they.

1. Arccuṉaṉ.

### பரிசித்துக்குக் திருமணம் செய்ய பாண்டவர்கள் முடிவெடுத்தல்

ஆகங் குளிர்ந்து அன்புமிக பெருகித்
தாகந் தெளிந்தவர்கள் தங்கள்சுமை மாறுமென்று

தன்மருந் தம்பியரும் தங்களிலே சம்மதித்து
நன்மை செய்தஞாயம் நமக்கே பலித்ததென்று

சிந்தை மகிழ்ந்து[1] சிறுவன்மே லன்புவைத்து
தந்தையருந் தாயும் தமரிலுள்ள மன்னர்களும்

கன்னிக் கலியாணம் காசினியோர் தாமறிய
உன்னி யவர்கள் உடனேமிக புகழ்ந்து[2]

சீரான ஐவர் சிறப்பாகப் பேரனுக்கு
நேரான நாள்முகூர்த்தம் நித்தியதாம் பூலமிட

### கண்ணனிடம் பாண்டவர்கள் அறிவுரை கேட்டல்

வேதியரைத் தானழைத்து வேண்டு முகூர்த்தமிட்டு
ஆதிநா ராயணர்பால் ஐவரும்போய் சென்றுகண்டு

சுந்தரிதன் மைந்தனுக்குச் சுபசோ பனம்முடிக்கத்
தந்திர மின்னதென்று சாற்றுவீ ரெம்பெருமாள்

அழகுதிரு[3] மேனியனே அவீமன்தன் புத்திரர்க்குக்[4]
களபமணி மேனியனே கலியாணந்தான் முடிய

**7.158.** ஆகம் - உடல். **7.159.** தாகம் தெளிந்தவர்கள் - ஆசையை அறிந்து, தன் நிலைமை உணர்ந்தவர்கள்; பஞ்ச பாண்டவர்கள். சுமை -அரசாட்சி சுமை. தம்பியர் - தருமருக்குத் தம்பியர்கள். **7.161.** நன்மை செய்த ஞாயம் நமக்கே பலித்ததென்று - நியாயம் தவறாது வாழ்ந்த வாழ்க்கை நெறிமுறையினால் நாட்டை ஆள நமக்கு வம்சம் விளங்கியது என்கிற பொருளில். **7.162.** சிந்தை - மனம். சிறுவன் - பரிசித்து. **7.163.** தமர் - சுற்றத்தார். **7.164.** கன்னிக் கலியாணம் - பெண் ஒருத்திக்குப் பரிச்சித்துவைத் திருமணம் செய்யும் நிகழ்வு. காசினியோர் - உலகோர். **7.165.** உன்னி - மனதில் நினைத்து. **7.167.** நேரான - சிறந்த. நாள் முகூர்த்தம் - திருமண நாள். நித்திய தாம்பூலம் - திருமண நாளினை உறுதிப்படுத்தி மணமகன் மணமகள் வீட்டார் பாக்கு வெற்றிலையை மாற்றிக் கொள்ளும் சடங்கு. நிச்சியதாம்பூலச் சடங்கு. **7.168.** வேதியர் - அந்தணர். முகூர்த்தம் - நல்ல நேரம். **7.169.** ஆதி நாராயணர் - கண்ணன். **7.170.** சுந்தரி தன் மைந்தன் - உத்தரையின் புதல்வன்; பரிசித்து. சுப சோபனம் - மங்கலகரமான திருமணம். **7.171.** தந்திரம் - உபாயம். **7.712.** அவீமன் - அபிமன்யு. **7.172.** களபமணி மேனியன் - நறுமண திரவியங்களை உடம்பினில் அணிந்தவன்; கண்ணன்.

---

சு. சொ : 1. மகிள்ந்து 2. புகள்ந்து 3. அளகுதிரு 4. புத்திரற்கு

### The Pāṇṭavars decide to get Paricittu married

Immensely pleased, with growing fondness
They knew their selves to pass on the burden -
Tarmar and brothers agreed among themselves:
"The good we did has come back us."
Grandparents, mother, relatives and kings,
For the world to praise, decided to celebrate
The wedding of the good son of Uttarai.[1]
The five planned for their famed grandson,
A fitting betrothel and marriage.

### The Pāṇṭavars get the advice of Kaṇṇaṉ

Called a prohit and fixing a day,
The five went to Āti Nārāyaṇar,[2] said,
"To celebrate the grandson's auspicious marriage
Tell us the means and ways our Lord!
O Handsome! for the son of Apimaṉyu's
Wedding, O Lord wearing perfumes!

1. Wife of Aruccuṉan. 2. Lord Kriṣṇaṉ.

வகையேது பெண்தனக்கு மாயோனே சொல்லுமென்றார்
துகைவகையு மைவருக்குத் தோற்றமுடன் தெரிந்து

### பரிசித்துவுக்காகக் கண்ணன் பெண் கேட்டுச் செல்லுதல்

நால்வகையும் பார்த்து நாராயணர்[1] தாமும்
பால்போலும் வங்கிசத்தில் பண்பான கோத்திரத்தால்

இன்னபடி யென்று இதமாகச் சம்மதித்துச்
சொன்னதொரு மாயோனைத் தொழுது மிகப்பணிந்து

சாத்தகி யாழ்வார் தானீன்ற மைந்தனென்று
ஏத்த துளசிமகா ராசன் ஈன்றெடுத்த

செல்வியெனும் பூமடந்தை ஸ்திரியாளை[2] மாலையிட
நல்விசள மென்றவர்கள் நாரணர்போய் பெண்கேட்க

நாடி நடந்தார்கள் நல்லதொரு பஞ்சவர்கள்
தேடி துவார பதியிலே சென்றுபுக்கிக்

கண்டார்கள் மாயன் கமல மலர்ப்பாதம்
தெண்டனிட்டு வாய்புதைத்துச் செப்பினார் தருமருமே[3]

அந்த மொழிகேட்டு ஆமென்று கோபாலர்
சந்தோஷ மாகச் சாத்தகியே வாவெனவே

உன்னுடைய மைந்தன் உற்ற துளசியவன்
தன்னுடைய பெண்ணைத் தனஞ்செயனார் பேரனுக்குப்

**7.174.** பெண் தனக்கு - பரிசித்துவுக்காகக் கண்ணன் பார்க்கப் போகின்ற மணப்பெண்ணுக்கு. **7.175.** துகைவகையும் - தொகை வகையும்; 'துகை' என்பது பேச்சுவழக்குச் சொல். ஐவர் - பஞ்ச பாண்டவர். **7.176.** நால்வகை - கிராம மக்களிடையே வழங்கப்பெறும் நாலும் தெரிந்தவன் என்று கூறும் சொற்றொடர் அடியாகப் பிறந்த சொல். நாராயணர் - கண்ணன். **7.177.** பால் போலும் வங்கிசம் - மிகச் சிறந்த தூய்மையான குலம். கோத்திரம் - வம்சம். **7.179.** மாயோன் - திருமால். **7.180.** சாத்தகியாழ்வான் - கண்ணனின் தம்பியருள் ஒருவன்; மற்றையவன் பலராமன். **7.181.** துளசி மகாராசன் - சாத்தகியாழ்வானின் மகன்; கண்ணனின் மகன் முறையோன். **7.182.** செல்வி - துளசி மகாராசனின் மகள்; கண்ணனுக்குப் பேத்தி முறையினள். ஸ்திரி - பெண். மாலையிட - மணம் முடிக்க. **7.183.** நல் விசளம் - நல்ல முடிவு. **7.185.** துவாரபதி - துவாரகை; கண்ணன் அவதரித்த திருத்தலம். புக்கி - புகுந்து. தெண்டனிட்டு - அடிபணிந்து. வாய்புதைத்து - வாயைக் கையால் மூடிப் பணிவுத்தன்மை காட்டும் ஒருவரின் செயல். **7.188.** கோபாலர் - கண்ணன். **7.191.** தனஞ்செயனார் பேரன் - அர்ச்சுனனின் பேரனான பரிசித்து.

சு.சொ : 1. நாறாயணர் 2. சிரியாளை 3. தறுமருமே

How to get a bride tell us O Māyaṉ!
The ways and means to the five of us!

**Kaṇṇaṉ goes seeking for a bride for Paricittu**

Nārāyaṇaṉ considered aspects all.
Asked them to choose from a pure clan,
From a good *kōttiram*[1] following certain rules.
They paid obeisance to Māyaṉ.
Exemplary Cāttaki Āḻvār,[2]
His son Tuḷaci Mahārājaṉ,
His worthy and pretty daughter,
Celvi, a delicate damsel,
A worthy bride they decided on.
To seek the bride from Nārāyaṇar,
The Pañcavars reached Tuvārakai.
They paid respects to Māyaṉ's lotus feet,
Knelt, partly covering his mouth[3] Tarmar spoke.
Kaṇṇaṉ listened to, agreed for the proposal,
With happiness he called Cāttaki near, said:

1.A (caste) group with a common descent which practises exogamy. 2. Younger brother of Kaṇṇaṉ, the other being Palarāmaṉ. 3. As a mark of respect.

பூமடந்தை யென்னும் பொற்கொடியை யிந்நேரம்[1]
தோழன வீமன் தன்னுடைய மைந்தனுக்கு

### பெண்ணுக்குப் பரிசம் போடக் கண்ணன் கூறுதல்

மாலையிட்டு நன்றாய் மணஞ்செய்யு மென்றுசொல்லிச்
சேலை பரிசஞ் செலுத்துமென்றா ரைவரையும்

மாயனுரைக்க அந்த மன்னவர்க ளாமெனவே
தூயதொரு முகூர்த்தம் சொல்லவென்று வேதியரைக்

### பாண்டவர்கள் பரிசபணம் கொடுத்தல்

கேட்டுமொரு தினத்தில் கிருபையுடன்[2] எல்லோரும்
தீட்டுபுக ழைவர்[3] திருமா லிடந்தனிலே

கொண்டுவந்து வைத்தார்கள் கூறையொடு[4] பரிசம்
கண்டு மகிழ்ந்தார்கள் காயாம்பூ மேனியனார்

பாக்கியவா னெனவே பச்சையாய்க் கொண்டாடி
வாக்கியமும் சொல்ல மகிழ்ந்தார்கள்[5] பஞ்சவர்கள்

### அரசாணி நடும் சடங்கு

நின்றவரைப் பார்த்து நெடியோன் மனம்மகிழ்ந்து
நன்றெனவே யிப்போது நாட்டுமர சாணியென்றார்

செய்யுஞ் சடங்குஞ் சிறப்பாகச் செய்யுமென்று
ஐயன் திருமால் அருளினர்கா ணம்மானை

**7.192.** பொற்கொடி - பொன் போன்று ஒளிரும் பெண்; துளசி மகாராசாவின் மகள்; செல்வி என்னும் பூமடந்தை. **7.193.** தோழன் அவீமன் - படைகளை நிரம்பப் பெற்ற அபிமன்யு. **7.194.** மணம் - திருமணம். **7.195.** சேலை பரிசஞ் செலுத்தும் - இத்தொடர் மணமகன் வீட்டார் மணமகளுக்குத் திருமணத்தை உறுதிப்படுத்தி அவளுக்குப் புடவை மற்றும் பணத்தைப் பரிசாக வழங்கும் சடங்கைக் குறித்தது. ஐவர் - பாண்டவர். **7.196.** மாயன் - கண்ணன். **7.197.** தூயதொரு முகூர்த்தம் - மேன்மையான திருமண நாள். வேதியர் - திருமணம் முதலிய நல்லநாள் குறிக்க வல்ல அந்தணர். **7.198.** கிருபை - பணிவு. **7.199.** தீட்டு புகழ் ஐவர் - நிறைந்த புகழுடைய பாண்டவர்கள். திருமால் - இங்குக் கண்ணனைக் குறித்தது. **7.200.** கூறையொடு பரிசம் - புடவையோடு பெண்வீட்டாருக்குத் தரப்பட்ட பரிசப்பணம். **7.201.** காயாம்பூ மேனியனார் - காயாம்பூ போன்ற நீலநிறமுடைய மேனியனார்; கண்ணன். **7.202.** பாக்கியவான் - புண்ணியமுடையவன். **7.203.** வாக்கியம் - நல்லுரை. **7.204.** நின்றவர் - கண்ணனின் அறிவுரையைக் கேட்டு நின்ற பாண்டவர்கள். நெடியோன் - கண்ணன். **7.205.** அரசாணி - திருமணத்தை உறுதிப்படுத்தி மணமக்கள் அரசமரம் போல தழைக்க வேண்டும் என்பதற்காக நாட்டப்படும் அரசமரக்கிளை. **7.207.** ஐயன் திருமால் - கண்ணன்.

---

சு.சொ : 1. யின்னேரம் 2. கிறுபையுடன் 3. ளைவர் 4. கூரையொடு 5. மகிள்ந்தார்கள்

"Your worthy son Tuḷaci's daughter
Dainty Celvi, who shines like gold,
For the grandson of Arccuṉaṉ
To Apimaṉyu's son with army huge

**Kaṇṇaṉ bids Pañcavar to offer *paricam*[4]**

"Give in marriage and celebrate the wedding."
Kaṇṇaṉ asked the Pāṇṭavars
To present sari, and the *paricam.*
As Māyaṉ said so, all the kings
Asked prohits to fix an auspicious day.

**The Pāṇṭavars give *paricam* money**

On the fixed day, they all with grace,
The famed Pāṇṭavars to Tirumāl
Brought the wedding sari and *paricam.*
Pleased was the *Kāyāmpū mēṉiyaṉ*[2]
Saying they were fortunate, Kaṇṇaṉ
Gave them his word and happy were thePāṇṭavars.

**The ceremony of fixing of *aracāṇi*[3]**

Pleased, Kaṇṇaṉ looked at those standing,
Said "Well, now fix *aracāṇi.*
Perform all ceremonies grandly."
Lord Viṣṇu bade them thus.

1. Gift of cash, jewels etc given to the bride by the groom's parents. 2. A shrub or dwarfish tree bearing purple flowers-memecylon tinctorium. *Kāyāmpū mēṉiyaṉ* - Viṣṇu, whose colour resembles that of *Kāya* flower. 3. A bough of peepul tree together with others from some trees is fixed between two of the interior posts of the marriage *pantal*, round which the parties pass, performing particular ceremonies.

## பாண்டவர்கள் விநாயகரை வணங்குதல்

அந்தமொழி கேட்டு ஐவருந்தான் கோபாலர்
விந்தமலர் பாதமதில் விழுந்து நமஸ்கரித்து

வந்தார்கள் அத்திபுரம் வர்ணமணி மண்டபத்தில்
சந்தோஷமா யிருந்து சகலபேரையும் அழைத்து[1]

அத்தி புரத்திலுள்ள அன்னசுற்றம் தானறிய
சித்திவிநா[2] யகனைத் தெரிசித்தடி பணிந்து

மூலப் பொருளே முதல்பொருளே மூர்த்தியய்யா[3]
ஞாலப் பொருளே நமஸ்காரம் நாயடியார்

பாலெனெங்கள் மைந்தன் பரிசித்து வேந்தனுக்குக்
காலபெலமா யிருந்து கலியாணம் தான்முகித்து

முன்னிற்க வேணுமைய்யா முக்கண்ணனார் புத்திரனே
சென்னிக்குள் நின்ற சிரோன்மணியே முன்னடவாய்

### நகர் அலங்காரம்

என்றுதுதி பண்ணி இறையோனைத்[4] தான்பணிந்து
சென்று நகரில் சிறப்பித்தார்[5] பட்டணத்தை

வான்கமுகு நாட்டி வளப்பரப்பில் பந்தலிட்டு
நன்இளநீர் மாங்கனிகள் தீன்கரும்பு தானிறைத்து[6]

வாழைக்[7] கனியுடனே வாழைமரந் தானாட்டித்
தாழைமடல் மல்லிகைப்பூ சரமாலை தானிறைத்துப்

**7.209.** விந்தமலர் - தாமரை மலர். **2.210.** அத்திபுரம் - அஸ்தினாபுரம். வர்ணமணி மண்டபம் - ஒளி மிகுந்த மாணிக்கம் முதலியவற்றால் அலங்கரிக்கப்பட்ட மண்டபம். **7.211.** சகலபேரையும் - அனைவரையும். **7.212.** அன்னசுற்றம் - அனைத்து உறவினர் கூட்டம். **7.215.** ஞாலப் பொருளே - உலகப் பொருளே. நமஸ்காரம் - வணக்கம். நாயடியார் - நாய் போலும் கீழ்ப்படிதலுள்ள அடியார். **7.217.** காலபெலமாயிருந்து - திருமணக் காலத்தில் மிகுந்த துணையாகயிருந்து. முகித்து - முடித்து. **7.218.** முக்கண்ணனார் புத்திரன் - மூன்று கண்களையுடைய சிவனின் புத்திரன். கணபதி சென்னிக்குள் நின்ற சிரோன்மணியே - தலையினுள் அணியப்பட்ட உயர்ந்த மணி போன்றவனே. **7.222.** வான்கமுகு - வானமளவு உயர்ந்த கமுகு மரம். வளப்பரப்பு - வளமையான பரந்த இடம். **7.223.** தேன் இளநீர் - தேன் போன்று இனிமையான நீரைத் தன்னகத்தே கொண்ட இளநீர். தீன் கரும்பு - இனிமையான கரும்பு. இறைத்து - ஆங்காங்கே இருக்கும்படி செய்து.

சு.சொ : 1. அளைத்து 2. சித்திவினா 3. முற்த்தியய்யா 4. இரையோனைத் 5. சிரப்பித்தார் 6. தானிரைத்து 7. வாளைக்

### The Pāṇṭavars worship Lord Vināyakar

Hearing these words the five fell at
The feet of Kaṇṇaṉ and paid abeisance.
Back to Hastiṉāpuram they came,
To the gem studded hall, felt very glad.
Soon they called there one and all.
With all kith and kin and paid
Citti Vināyakaṉ, obeisance.
"O the origin and the first cause!
I an obedient dog, worship you.
Be a help so that our son
Kingly Paricittu gets married.
O, son of the Three-Eyed lead us on!
O, the one like gem on head lead us on!

### Decoration of the city

Praying thus they paid obeisance to god
And went about decorating the city.
Fixed areca trees, and *pandals* on
Fertile grounds, placed tender coconuts,
Mangoes, and sugar-canes kept aplenty,
Plantain trees with fruits were fixed, there were
*Tāḻai*[1] petals, jasmine strings all round.

1. A wild plant found on sea shores, the sweet scented or screw pine, *pandanas* Oderatissima.

பட்டா லலங்கரித்துப் பட்டுமேல் கட்டிகெட்டி
வட்டா ரஞ்சூழ மாணிக்க மாலையிட்டு

மாட மலங்கரித்து மாளிகையும் மேடைகளும்
கூட மலங்கரித்துக் கோபுரமும் பரவினையும்

தெருவீதி யெல்லாஞ் சித்திரங்கள் தானெழுதி
மருவு மலரும் மருக்கொழுந்து வாசினையும்

சாந்து புனுகுபன்னீர் சவ்வாது[1] நல்லகஸ்தூரி
ஏந்தும் பரிமளமும் எங்கெங்கும் தான்வீச

வாசமுள்ள தெல்லாம் வகைவகையாய்த் தானிறைத்துத்
தேசம் புகழ்ந்திடவே தெய்வலோக மெனவே

வைகுண்டம் போலே வைரவை டூரியங்கள்
செய்கின்றார் ஐவர் திருமால் மகிழ்ந்திடவே

## திருமணம் காணச் சுற்றத்தாரும் பிற நாட்டரசர்களும் வருதல்

நாளும்[2] முகூர்த்தம் நல்முகூர்த்த வேளையிலே
வாழுமர சாணியது மாணிக்கத் தால்சமைத்து

அன்னசுற்ற மெல்லாம் அலங்கார மாய்க்கூடித்
தென்னவர்கள் மன்னர் தேசத்து மாமகுடத்

திறமையுள்ள[3] கோத்திரமும் திறமாகத் தான்கூடி
முக்கிய மாகமணம் முகிப்பிக்க வந்தாராம்

**7.226.** கட்டிகெட்டி - மாணிக்கத்தால் மாலையைக் கெட்டியாகக் கட்டி. **7.227.** மாடம் - மண்டபம். **7.228.** மேடை - உப்பரிகை. கூடம் - அறை. பரவு - பரவை; திடல். **7.230.** சித்திரங்கள் - ஓவியங்கள். **7.231.** மருவு மலர் - உடலோடு தழுவி உறவாடத்தக்க மலர். மருக்கொழுந்து - ஒரு வகை மணமுள்ள மலர். வாசினை - வாசனை; வட்டாரவழக்குச் சொல். **7.232.** சாந்து - சந்தனம். புனுகு - புனுகுப் பூனையிலிருந்து கிடைக்கும் ஒரு வகை நறுமணப் பொருள். சவ்வாது - ஒரு வகை நறுமணப் பொருள். கஸ்தூரி - கஸ்தூரி மானிலிருந்து கிடைக்கும் ஒரு வகை நறுமணப் பொருள். **7.233.** ஏந்தும் - உயர்ந்த. பரிமளம் - ஒரு வகை நறுமணப் பொருள். **7.234.** தானிறைத்து - எல்லாவிடமும் சிதறும்படிச் செய்து. **7.235.** தெய்வலோகம் - தேவர் உலகம். **7.236.** வைகுண்டம் - திருமால் வாழும் உலகம்; வைணவர்கள் முக்தி அடைந்தபின் செல்லுமிடம். வைர, வைடூரியம் - நவமணிகளுள் இரண்டு. **7.237.** ஐவர் - பாண்டவர். **7.239.** மாணிக்கத்தால் சமைத்து - நவரத்தினங்களுள் ஒன்றான மாணிக்கத்தால் அலங்கரித்து. **7.240.** அன்ன சுற்றம் - உறவுமுறை உடைய சுற்றம். அலங்காரமாய் - அழகுடன். **7.241.** தென்னவர் - பாண்டியர். மாமகுடத் திறமையுள்ள கோத்திரம் - மிக பெரிய புகழுடைய மகுடம் அணியப் பெற்ற அரச குலத்து வம்சத்தார். **7.243.** மணம் - திருமணம். முகிப்பிக்க - முடித்திட.

---

சு.சொ : 1. சபாது 2. நாமு 3. திரமையுள்ள

Silk cloths were fixed *mēlkaṭṭi*[1] were tied.
Tying strings of ruby all around the
Palace, houses and stage were beautified.
Halls and towers and open grounds
Were aptly decorated soon.
Painted pictures along all streets,
Fragrant flowers *marikkoḻuntu*,[2]
Sandal, civet, rose water good musk
Gave off fragrance everywhere.
All fragrant things strewed all around
So celestial it looked, that all did praise.
The precious gems there likened those of *Vaikuṇṭam*.
The five[3] adorned the town pleasing Tirumāl.

**Relatives and foreign kings come to the wedding**

On the appointed day, at the auspicious time
They decorated *aracāṇi*[4] with rubies.
All the kith and kin in glory gathered.

1. A cloth spread beneath the roof of a room to prevent the dust from falling. 2. A fragrant kind of shrub , Artemisia austriaca. 3. The Pāṇṭavar. 4. A bough of peepul tree together with others from some trees is fixed between two of the interior posts of the marriage *pandal*, round which the parties pass, performing particular ceremonies.

வந்ததொரு மன்னர் மகுடமுடி வேந்தர்களும்
பந்திபந்தி யாகப் பாவாணர் கீதமுடன்

ஆனையொரு கோடி அசுவமெழு கோடி
சேனையோ யெட்டுக்குருணி[1] தேருமிரு கோடி

### மங்கள ஓசைகள்

சங்கீத மேளம் தவில்முரசு மல்லாரி
எங்கும் முழங்க எக்காளம் பூரிகையும்

பேரிகையும் மத்தளமும் பேசுங்கிடி பிடியும்
வாரியொலி யதுபோல் வானமுழக்கம்[2] போலாகித்

தித்தி நகரி திருச்சின்னந் தாரையுடன்
சத்திக்கு மேகமென தம்புரு கின்னரமும்

மூவர் முதலான முப்பத்து முக்கோடி
தேவர்களும் மாதவரும் செயசோபனஞ் சொல்லவே

மங்கள வாழ்த்து மறையோர்கள்[3] தானோத
சிம்மாச னத்தில் திருமாலும் வந்திருக்க

### பரிசித்து அலங்கரிக்கப்படுதல்

மாப்பிள்ளையு மொப்பிவித்து மௌலியுந் தான்தரித்து
வாடை பரிமளங்கள் வாசனைகள் தான்திமிர்ந்து

**7.245.** பந்தி - கூட்டம். பாவாணர் - கவி இயற்றவல்ல புலவர். கீதம் - பாடல். **7.246.** ஆனை - யானை என்பதின் பேச்சுவழக்குச் சொல். அசுவம் - குதிரை. **7.247.** சேனை - காலாள்படை. குருணி - மிகப் பெரிய எண்ணிக்கையைக் குறிக்கும் ஓர் அளவுப் பெயர். தேர் - தேர்ப்படை. **7.248.** மேளம், தவில், முரசு, மல்லாரி - சில இசைக் கருவிகளின் பெயர் வகைகள்; இவைகள் தோலால் செய்யப்பட்ட பொதுக்குணமுடையன. **7.249.** எக்காளம் - ஒரு வகை ஊதுகுழல். பூரிகை - ஒரு வகை ஊது குழல். **7.250.** பேரிகை, மத்தளம் - பறை வகை சார்ந்த இசைக்கருவிகளின் பெயர்கள். கிடிபிடி - ஒரு வகை இசைக்கருவி. **7.251.** வாரிவொலி - கடல் ஓசை. வான முழக்கம் - வானத்தில் கேட்கும் இடியோசை போன்ற பேரொலி. **7.252.** தித்தி - ஒரு வகை ஊதுகுழல். நகரி - நகரா; ஒரு வகைத் திருச்சின்னம். தாரை - ஒரு இசைக்கருவியின் பெயர். **7.253.** சத்திக்கு மேகமென - மலையைச் சூழ்ந்த மேகத்தால் ஏற்பட்ட மழை ஓசை என. தம்புரு, கின்னரம் - தேவர் மீட்டுவதாகக் கருதப்படும் சில இசைக்கருவி வகைகள். **7.254.** மூவர் - பிரம்மன், திருமால், சிவன் என்னும் மூவர். **7.255.** மாதவர் - தவசிகள். செயசோபனம் - வெற்றியைக் குறிக்கும் மங்கல ஓசை. **7.256.** மறையோர் - அந்தணர். **7.257.** திருமால் - கண்ணன். **7.258.** மாப்பிள்ளை - இங்குப் பரிசித்துவைக் குறித்தது. ஒப்பிவித்து - அழகுபடுத்தப்பட்டு. மௌலி - கிரீடம். **7.259.** வாடை - வாசனை. பரிமளங்கள் - சுகந்த வாசனைப் பொருள்கள். திமிர்ந்து - பூசி.

---

சு.சொ : 1. யெட்டுகுறுணி 2. வானமுளக்கம் 3. மரையோர்கள்

The Pāṇṭiyars, royalty and all those
Capable crowned kings together,
Came to celebrate the wedding.
Came the kings and the crowned monarchs.
Singers in groups came in a crowd.
A crore elephants, horses seven crore
Soldiers a lot and chariots two crores were there.

**Auspicious sounds**

Musical *mēḷam*[1], and *tavil*,[2]
The *murasu*[3] and *mallāri*,[4]
*Ekkāḷam*[5] sounded everywhere.
*Pūrikai*[6], *pērikai*[7], *mattaḷam*,[8],
Sweet *kiṭipiṭi*[9] sounded like
The ocean and the thunders deep.
*Titti*[10], *nakari*[11] and *tārai*[12] with
*Tampuru*[13], *kinnaram*[14] sounded like falling rain.
The trinity[15] with thirty - three crore
*Tēvars*[16], and sages did produce
Sounds auspicious and the Brahmans
Were showering auspicious blessings.

**The make-up of Paricittu**

The groom was made up and he wore a crown.
Fragrances and pleasant perfumes he wore.

1-4. Various kinds of drums. 5. Wind instruments. 7,8. Kinds of drums. 9. A musical instrument. 10. A wind instrument. 11. A holy insignia. 12. A musical instrument. 13,14. Celestial musical instruments. 15. Pirammaṉ, Viṣṇu & Civaṉ. 16. Celestial beings.

காலாழி[1] யிட்டுக் கடுக்கன் சவடியிட்டு
கோலச் சரப்பளியுங் கொத்துமுத்துத் தாவடமும்

வேடிக்கை யாக விசயன்தன் பேரனுக்குச்
சோடித்தார் வேணதெல்லாஞ் சொர்ண மயமாக

நாராயணன்[2] பேரன் இராசாதி[3] இராசனுக்குச்
சீரான[4] நால்வகையுந் தெரிந்துநல்ல பூஷணமாய்

அரிசித்தமே மகிழ்ந்து[5] அன்பான பேரனுக்குப்
பரிசித்து வேந்தனுக்குப் பலபணியுந் தான்பூட்டித்

## மணப்பெண் அலங்காரம்

துளசிமக ராசனுட துய்யதொரு பெண்கொடிக்கு
வளயல் தரித்து வாகுடைய பட்டுடுத்திப்

பூமடந்தையார் தனக்குப் பொன்னால் அலங்கரித்து
தேமருவும் பிச்சைமுல்லை செண்பகப்பூ மாலையிட்டு

மாப்பிள்ளையும் பெண்ணும் மதனும் ரதிபோல
சீப்பிட்டு மையெழுதிச் சித்திரம்போல் கோலமிட்டு
வைத்து மனமகிழ்ந்து வந்துசொன்னார் மாயனிடம்

## குந்தியை ஆசீர்வதிக்க அழைத்தல்

மாயோனுட யைவருமாய் வந்திருந்து பந்தலின்கீழ்
தாயான குந்திமா தேவிதனை யழைத்து[6]

**7.260.** காலாழி - காலில் அணியப்படுகின்ற ஒரு வகை மோதிரம். கடுக்கன் - ஒரு வகைக் காதணி. சவடி - ஒரு வகை அணிகலன். **7.261.** கோலச் சரப்பளி - அழகு வாய்ந்த சரப்பளி என்னும் ஆபரணம். கொத்து முத்துத் தாவடம் - முத்துக்களால் கோர்க்கப்பெற்ற அழகிய மாலை. **7.262.** வேடிக்கையாக - மகிழ்ச்சியாக. விசயன் - அர்ச்சுனன். **7.263.** சோடித்தார் - அழகு படுத்தினார். வேணதெல்லாம் - வேண்டியதெல்லாம். சொர்ணமயம் - பொன்மயம். **7.264.** நாராயணன் பேரன் - கண்ணனின் பெயரனான பரிசித்து. **7.265.** நல்ல பூஷணம் - உயர்ந்த அணிகலன்கள். **7.266.** அரிசித்தம் - திருமாலின் உள்ளத்து முடிவு. **7.267.** பல பணி - பல வகையான அணிகலன்கள். துய்யதொரு பெண்கொடி - தூய்மையானதொரு பெண்; இங்குப் பரிச்சித்துவுக்கு மனைவியாக வரும் செல்வி என்னும் பூமடந்தை. **7.269.** வளயல் - மங்களகரமானதாகப் பெண்களுக்குக் கையில் அணியும் ஒரு வகை அணிவகை. வாகு - அழகு. **7.270.** பூமடந்தையார் - இங்கு மணப்பெண்ணைக் குறித்தது. **7.271.** தேமருவும் - தேன் உள்ளே பொருந்தி திகழும். பிச்சை - பிச்சி என்னும் மலர்வகையின் பேச்சுவழக்குச் சொல். **7.272.** மதன், ரதி - காதல் தெய்வங்களின் பெயர்கள். **7.273.** சீப்பிட்டு - தலைவாரி. சித்திரம் - ஓவியம். **7.274.** மாயன் - கண்ணன். **7.275.** ஐவர் - பாண்டவர். பந்தல் - மணப்பந்தல். **7.276.** குந்திமா தேவி - பாண்டவர்களின் தாய்; பரிசித்துவுக்குக் கொள்ளுப்பாட்டி உறவு உடையவள்.

---

சு.சொ : 1. காலாளி 2. நாறாயணன் 3. இராதி 4. சீறான 5. மகிள்ந்து 6. யளைத்து

Rings on toes, ear-studs and *cavaṭi,*[1]
Beautiful *carappaḷi*[2] and
Long chains with pearl bunches he wore.
With pleasure the grandson of Vijayaṉ[3]
Was adorned with gold aplenty.
The kingly groom, the grandson of Nārāyaṇaṉ
Was adorned with jewels faultless.
Viṣṇu pleasing, the grandson Paricittu
Was bedecked with jewels numberless.

**The make-up of the bride**

Tuḷaci Maharajan's daughter pure,
Wore bangles and beautiful silk.
The bride was adorned with gold, and garlands
With *picci*[4], *mullai*[5], *ceṇpakam,*[6]
Flowers that with nectar brimmed.
She combed hair, with mascara madeup and
Like a (living) picture was kept ready.
They informed Māyaṉ of this.

**Requesting Kunti to bless**

With Mayaṉ the Pāṇṭavars beneath the *pantal,*
Spoke to their mother Kunti Tēvi,

1. An ornament 2. An ornament. 3. Arccuṉaṉ 4,5,6 - Different flowers.

உன்பேரனா னதொரு உற்ற அபிமனுட
தன்பால னான சமத்தன் பரிசித்துவுக்கு
சுபசோபனம் முடித்துத் தோகையரே நீர்பார்க்க

வேணு மிருமென்று விளம்பினார் பஞ்சவர்கள்
பூணு மனமகிழ்ந்து பொற்கொடியாள் வீற்றிருந்தாள்[1]

### காந்தாரியை ஆசீர்வதிக்க அழைத்தல்

புகழ்பெரிய தாயார்தன் பொற்கோவில் சென்றுபுக்கித்
திகழும்நா வாசகமே திரவியமே மாதாவே

கற்புடைய மாதாவே காந்தாரித் தாயேநீ
மற்புயவேள் வாழவீமன் மைந்தன்பரி சித்துவுக்கு

அகலா திருந்து அபிமருட புத்திரர்க்குச்
செகலலோக மெய்க்கச் செய்யுங்கலி யாணமென்று

சொன்னவுடன் காந்தாரி தோகையரு மாமெனவே
அன்னமென நடந்து ஐவருடன் கூடி

நல்லதென்று பந்தலின்கீழ் நடுவாகத் தானிருந்து
செல்லக்கலி யாணம் திருமால்தன் பேரனுக்கு

### கண்ணன் முன்னின்று மணச் சடங்குகள் செய்தல்

மணமுடிக்க வேண்டி மாயோன் எழுந்தருளி
மணவறையில் சென்று மாப்பிள்ளையுங் கைப்பிடித்துக்

கெண்டிநீர் வார்த்துக் கெடுவிதமாய் தான்கூடித்
தண்டரள மார்பன் தாமோதரன் மகிழ்ந்து[2]

**7.277.** அபிமன் - அபிமன்யு. **7.278.** பாலன் - மைந்தன். சமத்தன் - திறமையாளன். **7.279.** சுபசோபனம் - மங்களகரமான திருமணம். தோகை - இங்குக் குந்திதேவியைக் குறித்தது. **7.280.** வேணும் - வேண்டும். **7.281.** பொற்கொடியாள் - குந்திதேவி. புகழ்பெரிய தாயார் - புகழ் மிகுந்த தாயான காந்தாரி; பாண்டவர்களின் பெரியம்மா உறவு முறையினர். பொற்கோயில் - அரண்மனை. **7.283.** நா வாசகமே - நாவால் வந்தோரை வாழ்த்திப் புகழும் மாதாவே. **7.285.** மற்புயவேள் வாழ் அவீமன் - மற்போர் செய்வதில் வல்ல அரசனான சிறந்த அபிமன்யு. **7.286.** அபிமர் - அபிமன்யு. **7.287.** செகலலோகம் - சகல லோகம் என்பதின் பேச்சுவழக்கு. மெய்க்க - பொருந்த. **7.289.** அன்னம் - ஒரு வகைப் பறவை; இப்பறவையின் நடை பெண்களின் நடைக்கு உவமையாகச் சொல்லப்படுவது சங்க காலம் முதல் தமிழில் ஓர் மரபாகக் கையாளப்படுகிறது. **7.290.** நடுவாகி - நடு நாயகமாக. **7.291.** திருமால் - கண்ணன். **7.294.** கெண்டி நீர் வார்த்து - மணமகளை மணமகன் கையில் பிடித்துக் கொடுத்துத் தாரை வார்த்து. கெடுவிதமாய் - மன எழுச்சியுடன். **7.295.** தண்டரள மார்பன் - குளிர்ச்சி பொருந்திய முத்துமாலை தவழும் மார்பினன்; கண்ணன்.

---

**சு.சொல் :** 1. வீத்திருந்தாள் 2. மகிள்ந்து

"Your grandson, son of Apimaṉyu
Talented Paricittu's wedding
Auspicious, you should witness."
Thus spoke the Pāṇṭavars five.
Pleased at heart Kunti Tēvi was seated.

**Requesting Kāntāri to Bless**

To the famed, temple-like-home of their aunt[1]
They went, said, "O woman of words!
Our wealth, our precious mother!
O chaste mother, Mother Kāntāri!
Be with us for the wedding of Paricittu,
Son of the good wrestler Apimaṉyu
And celebrate it to the wonderment of the world."
Kāntāri concurring and with a graceful gait
Likening that of a swan , walked and
Sat under the pandal along with the five,
To witness Tirumāl's grandson's wedding.

**Kaṇṇan performing the wedding rites**

To solemnize the wedding Māyaṉ came.
He held the groom's hand at *maṇavaṟai.*[2]
He poured holy water[1] with heartfelt joy,
Tāmōtaraṉ, wearing[3] cool pearl strings

1. Kāntāṟi - the aunt of Pāṇṭavars, the mother of Kauravas. 2. The chamber for the performance of the wedding-ceremony. 3. Pouring water by a donor, on the right hand of the donee in making a grant to give irrevocably by pouring water into the hand of the person receiving the gift, here, the bride -an essential wedding ceremony.

மனையே வலம்வந்து மகிழ்ந்து மனையானை
இணையாகப் பெண்தனையும் இப்படியே கூட்டிவந்து

நேராய்மனை யேற்றி நிருவாக[1] முள்ளதெல்லாம்
செய்துமண முடித்துச் சிறப்பாகப்[2] பந்தலின்கீழ்
பைங்கிளிக்கும் மாப்பிள்ளைக்கும் பாங்கான நற்சடங்கு

சாஸ்திரத் திலுள்ள சடங்கு முடித்தற்பின்
கோத்திரங்கள் சூழ[3] குரவை முழக்குடனே[4]

### மணமக்கள் நகர்வலம் வருதல்

ஆனைரத மேறி அலங்காரமாய் வரவே
சேனைதளத் துடனே தெருவீதி சுற்றிவந்து

மங்கிலியம் தான்தரிக்க வரவேணு மென்றுசொல்லி
இங்கிதமாய் மாப்பிள்ளையை யேத்தினா ரானையின்மேல்
கன்னிகையும் தேரேறிக் கணவனுடன் பின்புவர

சகல கலைமுழங்கச் சாம்பிராணி தூபமிட
பகலதுபோல் தீவெட்டி பகலெத்தி நின்றிலங்க

இரவுபக லாகி இந்திரன்தன் பட்டணம்போல்
அரவுயுற்றோன் பட்டணந்தான் அடங்கலும் செயசெயன

### கண்டோர் மகிழ்ச்சி

வாண மெறிந்தார்கள் வானத்தின் மின்னெனவே
காணவந்து நிற்பாரும் கண்டு மகிழ்வாரும்

7.296. மனையே வலம் வந்து - மணமக்களுக்காக அமைக்கப்பட்ட மணமேடையை வலமாகச் சுற்றி வந்து. மனையான் - மணமகன் பரிசித்து. 7.297. பெண் - மணமகள்; செல்வி என்னும் பூமடந்தை. 7.298. மனை - மணமேடை. நிருவாகம் - மணச்சடங்குகள். பைங்கிளி - பசும் கிளியனைய மென்மையானவள்; மணப்பெண். 7.301. சாஸ்திரம் - வேத சாஸ்திரம். 7.302. கோத்திரங்கள் - சுற்றத்தார். குரவை - பெண்கள் நாவால் குழறி எழுப்பும் மங்கல ஓசை. ஆனை ரதம் - யானை இழுத்துச் செல்லும் தேர். 7.304. சேனைத்தளம் - படைத்தளம். 7.305. மங்கிலியம் - மாங்கல்யம்; தாலி. தரிக்க - அணிய. 7.307. கன்னிகை - மணப்பெண். 7.308. சகலகலை முழங்க - சகல வேதங்களும் முழங்க. சாம்பிறாணி - நறுமண வாசனை தரும் ஒரு வகைப் பொடி. 7.309. தீவெட்டி - தீவட்டி என்பதின் பேச்சுவழக்கு; பண்டைய காலத்தில் வெளிச்சத்துக்காகப் பிடிக்கப்படும் ஒரு வகைத் தீபந்தம். பகலெத்தி - பகல் ஒளியையும் புறந்தள்ளும்படி செய்து என்கிற பொருளில். 7.310. இந்திரன்தன் பட்டணம் - தேவலோகம். 7.311. அரவுயுற்றோன் - பாம்புக் கொடியைக் கொண்டு ஆட்சி செய்பவன். துரியோதனன். பட்டணம் - இங்கு அஸ்தினாபுரத்தைக் குறித்தது. அடங்கலும் - முழுமையும். 7.312. வாணமெறிந்தார்கள் - ஒளி மற்றும் ஓசையை உண்டாக்க வல்ல வாணங்களை எறிந்தார்கள். மின் - மின்னல். 7.313. காணவந்து நிற்பார் - மணமக்களைக் காண வந்து நிற்பவர்கள்.

சு.சொல் : 1. நிறுவாக 2. சிரப்பாகப் 3. சூள 4. முளக்குடனே

Went round *maṉavaṟai* with the groom,
Along with bride took them round.
Sat them there and ceremonies performed.
Under *pantal* he solemnized the wedding.
The wedding of the groom and the tender bride
Observing all rites, prescribed in *the sāstras.*
The gathered kin sounded *kuravai*[1] .

**Procession of the Birde and Groom**

On a chariot drawn by an elephant
In procession with army they went.
For tying *tāli*[2] as the groom was needed,
They gracefully made the groom mount an elephant.
The bride on chariot followed the groom.
With the chanting of the *Vēdas,*
Torches turning nights into days,
The city of one whose bamer had a snake[4],
The whole big city buzzed about.

**Onlookers happy**

The display of fire works likened lightning.
People thronged to witness, enjoyed :

1. Ululation 2. A gold chain or turmeric smeared cord with holy pendants, tied by the bridegroom round the bride's neck at wedding. 3. The king of celestial beings. 4. Turiyōtaṉaṉ, the city is Hastiṉāpuram.

இந்திரனோ வென்பாரும் இறையவனோ[1] யென்பாரும்
சந்திரனோ வென்பாருஞ் சரணமது செய்வாரும்

மன்மதனோ வென்பாரும் மாயவனோ வென்பாரும்
தருமர்குலத் துதித்த தார்வேந்த னென்பாரும்

பூவாண ரெங்கும் பூமலர்கள் தான்சொரிய
பாவாணர் ராகம் படித்துவரச் சங்கீதம்

## மக்களின் மகிழ்ச்சி

பட்டணத் திலுள்ள பலஜனங்கள் தான்பார்த்துக்
கட்டழகன்[2] வாறான் கருத்துடனே பாருமென்பார்

வீதிசுத்தி வாறான்காண் விசயனுட தன்பேரன்
சாதியர்க ளெல்லோருந் தனித்தனியே பார்ப்பாரும்

## மணமக்கள் மணப்பந்தல் புகுதல்

கோட்டையும் பட்டணமுங் குதிரைத் தளத்துடனே
நாட்டையுஞ் சுற்றி நகரி வலமாக

வந்துபந்தல் புக்கினர்காண் மாப்பிள்ளையும் பெண்கொடியும்
இந்தமனை போலும் இருவர்மனை மீதில்

## வேதியர்களின் சடங்குகள்

மாய னருளாலே வந்திருந்தா ரம்மானை
ஆயருட னைவர் அருகிருந்து வேதியரை

ஓமம்வளர்க்க வென்று உத்தாரம் பண்ணினார்கள்
சாமமொன்றுக் குள்ளாகத் தாலி தரிக்கவென்று

**7.315.** சரணம் - பணிந்து வணங்குதல். **7.316.** மாயவன் - கண்ணன். **7.317.** தார் வேந்தன் - மலர்மாலை அணிந்த அரசன். **7.318.** பூவாணர் - தேவர். **7.319.** பாவாண - கவிஞர்கள் ராகம் - இனிய ஓசை. **7.321.** வாறான் - வருகிறான் என்பதின் பேச்சுவழக்கு வடிவம். கருத்துடனே - கவனத்துடனே. **7.322.** வீதி - நகரவீதி. சுத்தி - சுற்றி என்பதின் பேச்சு வழக்குச் சொல். விசயனுட தன் பேரன் - அர்ச்சுனனுடைய பேரன்; பரிசித்து. **7.324.** கோட்டை - நகரக் கோட்டை. **7.325.** நகரி - நகர்; அஸ்தினாபுரம். **7.326.** பந்தல் - மணப்பந்தல். புக்கினர் - புகுந்தார். பெண்கொடி - மணப்பெண். **7.328.** மாயன் - கண்ணன். **7.329.** ஆயர் - ஆயர் குலத்தவன்; கண்ணன். **7.330.** ஓமம் - ஹோம குண்டம்; திருமணச் சடங்கின் பொழுது வார்க்கப்படும் அக்னி குண்டம். உத்தாரம் - உத்தரவு. **7.331.** சாமம் - ஏழரை நாழிகை கொண்ட ஒரு காலவளவு; இது மூன்று மணி நேரம் கொண்ட தற்கால அளவுக்குச் சமமானது. **7.331.** தாலி தரிக்க - தாலி அணிய

சு.சொல் : 1. இரையவனோ 2. கட்டளழகன்

"Is he Intiraṉ?" Some in wonder said.
"Is he Lord Almighty?" some said.
"Is he the moon god?" some did say.
Some so taken up,they obeissance paid.
"Is he Cupid?" some did wonder.
"Is he Māyavaṉ?" some did muse.
"Hs's progeny of Tarmar's clan", some said.
Tēvars showered flowers from above.
Singers walked rendering melodious tunes.

**The joy of people**

Myriad people of the town witnessed and said,
"The handsome man comes, look, Oh, carefully look!"
"Vijayaṉ's grandson's procession comes", some said.
Men in different caste groups witnessed the procession.

**Married couple enter the marriage *pantal***

With cavalry crossing forts, and towns,
Going about the country and town,
The bride and groom reached the marriage *pantal.*
With Mayaṉ's grace remained in a huge house.
Along with Tirumāl[1] they bade Brahmans
To start the holy fire for the wedding,
So they could get married within a *cāmam*[2],

1. Kaṇṇaṉ belonging to the Āyar clan. 2. Ancient measurement for time. equals three hours.

கும்பமொடு மாவிலையும் குசப்புல்லும் நூலுடனே
இன்பமுடன் சோடித் திருந்தார்கள் வேதியர்கள்

அக்கினியும் நெய்யு மார்பரித்து மேல்புகைகள்
முக்கியமா யெங்கும் மூலமது பொருளாய்

வைகுண்ட மூர்த்தி[1] மலரடியைப் போற்றிசெய்து
மைகொண்டு வேதியனார் மண்டலத்தில் நீர்வார்த்து

## பரிசித்து மணமகளுக்குத் தாலி கட்டுதல்

தேங்காயுடைத்து வைத்துச் சித்திவிநா யகர்முன்
பாங்காக வைத்துப் பரிசித்து வேந்தனுக்குக்

கங்கணமுங் கட்டிக் கன்னிகைக்குக் காப்புமிட்டு
வங்கணமாய் பெண்கழுத்தில் மங்கிலியமே தரித்து

அந்தணரும் மங்கிலியம் அக்கினியே சாட்சியென்று
சந்தணமும் பூசியவர் தானிருந்தா ரம்மானை

தெய்வப்பிரா[2] மணரும் தேவர்களும் சாட்சியதாய்
ஐவருந் தொட்டு அபிமனுட புத்திரர்க்குக்

கன்னித்திருக் கழுத்தில் கற்பித்தார் மங்கிலியம்
விண்ணவர்கள் வாழிசொல்ல விரையவே தான்வாங்கித்

தரித்தார்கள் மங்கிலியம் தையல்நல்லார் தன்கழுத்தில்
பரிதே ருடைய பரிசித்து மன்னவனும்

**7.332.** கும்பம் - குடம். குசப்புல் - தருப்பைப் புல். நூல் - குடத்தைச் சுற்றிக் கட்டப்பட்ட வெண்மை நிறத்து நூல். **7.333.** சோடித்திருந்தார்கள் - அழகு படுத்தியிருந்தார்கள். **7.334.** புகை - ஓமத்திலிருந்து எழும் புகை. **7.335.** மூலமது பொருளாய் - எல்லாவற்றிற்கும் மூல முதலாய் இருக்கும். **7.336.** வைகுண்ட மூர்த்தி - வைகுண்டத்தில் வாசம் செய்யும் இறைவனாம் திருமால். இங்குக் கண்ணனைக் குறித்தது. **7.337.** மைகொண்ட - கருமை நிறம் கொண்ட. மண்டலத்தில் - கமண்டலத்தில். **7.388.** சித்தி விநாயகர் - நினைத்த காரியத்தைச் சித்தி பெறச் செய்யும் விநாயகக் கடவுள். **7.340.** கங்கணம் - மணமகனுக்குக் கையில் மஞ்சள் நூலால் கட்டும் ஒரு வகைச் சடங்கு. கன்னிகை - மணப்பெண். காப்பு - மணமகளுக்குக் கையில் மஞ்சள் நூலால் கட்டும் ஒரு வகைச் சடங்கு. **7.341.** வங்கணமாய் - மிகுந்த நேசத்துடன். மங்கிலியம் - மாங்கல்யம். **7.345.** ஐவரும் - பஞ்ச பாண்டவரும். அபிமன் - அபிமன்யு. **7.346.** கன்னி - செல்வி என்னும் பூமடந்தையாகிய மணப்பெண். கற்பித்தார் - கட்டளையிட்டார். **7.347.** வாழி - வாழ்த்து. **7.348.** தையல் நல்லார் - பெண்ணில் சிறந்தவள்; இங்கு மணமகளைக் குறித்தது. **7.349.** பரி தேருடைய - குதிரைகளையும் தேர்களையுமுடைய; குதிரைகள் பூட்டப்பட்ட தேர்களையுடைய எனினும் அமையும்.

---

சு.சொ : 1. முர்த்தி 2. தெய்வப்பிறா

With *kumpam,*[1] *taruppai,*[2] mango leaves and threads
The Brahmans had decorated the place.
The ghee poured into the crackling holy fire, caused dense smoke
They worshipped the feet of the all - important, all-pervading One,
The Lord of *Vaikuṇṭam.*
The Brahmans sprinkled holy water
From their kamaṇṭalams.[3]

**Paricittu tying the tāli**

In front of Siddhi Vināyakar[4]
They broke coconuts and orderly placed them.
Paricittu tied *kaṅkaṇam*[5]
And he tied *kāppu*[6] to the bride.
With love Paricittu tied the *tāli.*
The Brahmans proclained that
The fire was witness to the wedding.
The groom and bride gracefully stayed
With sandal paste smeared all over.
Holy Brahmins, and Tēvars bore witness.
The Pāṇṭavars touched and blessed the *tāli.*
The celestials blessing, Apimaṉyu's son received the *tāli* to tie
On to the neck of the virgin, Celvi.

1. A large sacrificial pot painted with mystic diagrams, adorned with leaves, flowers etc. 2. *Kuça,* a sacrificial grass, much used in Hindu worship. 3. The water vessel of a religious mendicant 4. Lord Vināyakaṉ , who fulfils all wishes. 5. A rite wherein threads dyed in turmeric solution are tied to the wrist of the groom. 6. Ceremonial tying of yellow thread to the wrist of the bride to ward off evil.

வேதம் விளங்க வெண்கவரி தான்வீச
நாதம் முழங்க நகரிமிக முழங்க

செயசெய வென்றுமிக செச்சைகளும் தானதிர
அயனுடன் மாமுனிவர் அச்சைதையுந் தானெறிய

### மங்கலம் மற்றும் சோபன பாடல்களை மகளிர் பாடுதல்

மங்கலமும் பாடி வாழ்த்திச் சரஸ்வதி[1]
திங்கள்மதி வதனஞ் செயசோபன மெனவே

### மணவறை புகுதல்

சோபனமுஞ் சொல்ல துடியிடையும் மாப்பிள்ளையும்
தாபமுடன் கைகோர்த்துத் தங்கள் மனைபுகவே

பண்ணினார் கோபாலர் பரிசித்து வேந்தனுக்கு
நண்ணினார் கோபாலர் நடவுமென்று கைபிடித்துக்

கணவனுடன் பெண்கொடியைக் கருத்துடனே தானனுப்பி
மணவறையில் போமெனவே மாயன் உதவிசெய்தார்

அந்தநல்ல நேரமதில் ஐகதிரோன் வந்துதித்தான்
நந்த கோபாலர் நரசிங்க மாமூர்த்தி[2]

### மஞ்சள் நீராட்டுச் சடங்கு

மற்றதொரு மூன்றாம்நாள் மஞ்சள் நீராடுமென்றார்
அத்தனார் சொல்படிக்கு அன்பர்கள் நீராடி

### மணமக்கள் வாழ்க்கை

மாப்பிள்ளையும் பெண்ணும் வாழ்ந்திருந்தா ரம்மானை
முப்பிலுள்ள வங்கிஷமும் முன்னோரும் பின்னோரும்

**7.351.** நாதம் - மங்கலவோசை. நகரி - ஒரு வகை இசைக்கருவி. **7.352.** செச்சை - ஒரு வகை இசைக்கருவி. **7.353.** அயன் - பிரம்மன். மாமுனிவன் - வியாசர். அச்சதை - அட்சதை; மஞ்சள் கலந்த மங்கல அரிசி. **7.355.** திங்கள் மதி வதனம் - சந்திரனின் வடிவம் ஒத்த முகம். செய சோபனம் - மங்கல வாழ்த்து. **7.356.** துடியிடை - துடி என்னும் இசைக்கருவியைப் போன்ற சிறுத்த இடையை உடையவள்; செல்வி என்னும் பூமடந்தை ஆகிய மணப்பெண். **7.357.** தாபம் - மனக்கிளர்ச்சி. **7.358.** கோபாலர் - கண்ணன். **7.359.** நண்ணினார் - சேர்த்தார். நடவுமென்று - இல்லற வாழ்க்கையைத் தொடருங்கள் என்ற பொருளில். **7.360.** பெண்கொடி - மணமகளாகிய செல்வி என்னும் பூமடந்தையைக் குறித்தது. **7.362.** ஐகதிரோன் - அழகிய சூரியன். **7.363.** நந்த கோபாலர், நரசிங்க மாமூர்த்தி - இவண் கண்ணனைக் குறிக்கும் சொற்கள். **7.364.** மஞ்சள் நீர் - திருமணம் முடிந்ததற்குப் பிறகு மணமக்கள் நீராடும் ஒரு வகை நீராடும் சடங்கு. **7.365.** அத்தனார் - இறைவன்; கண்ணன். **7.367.** முப்பிலுள்ள வங்கிஷம் - பாண்டவ வம்சத்து முதியவர்கள்.

சு.சொ : 1. சரஷ்வதி 2. மாமூற்தி

Paricittu rich in horses and chariots,
Tied the *tāli* around the best woman's neck.
To chanting of *Vēdas*, and white *kavaris*[1] fanning,
Auspicious sounds, *nakari*[2] were heard.
The booming *ceccai*[3] filling the air,
Kaṉṉaṉ and Viyācaṉ a great sage threw *aṭcatai*.[4]

**Women singing auspicious, congratulatory, joyful songs**

All blessed them, predicting auspicious events,
For the bride with a pretty mien.
To the accompaniment of auspicious blessings
The slender waisted bride and the groom
Hand in hand, longingly entered home.
Kōpālaṉ helped king Paricittu.
Blessing them to go ahead in life.
With husband they sent the tender girl with care.
Mayan helped them to the bridal chamber.
The sun rose at the auspicious time.
Nanta Kōpālaṉ, Naracinka
Māmūrti[5] bid them take bath in
Turmeric water on the third day.
As bid by Kaṉṉaṉ the lovers took bath.
The groom and bride were living joyfully.

1. The hair- fan formed of the tail of the yac (bos grunniens) used for fanning idols at temples, festivals and royal personages. 2. A musical instrument. 3. A musical instrument 4. Rice grain mixed with turmeric powder sprinkled on those to be blessed. 5. The eldest of the Pāṇṭavars.

அல்லியுந் தாமரைபோல் அன்னசுற்ற[1] மெல்லாரும்
துல்லியமாய் வாழ்ந்து சுகமே இருந்தார்காண்

**தர்மரின் ஆட்சிச் சிறப்பு**

தன்மருந் தம்பியருந் தாரணியை யாண்டிருந்தார்
நன்மை பெருக நாத்திசையுந் தான்வாழ்க

தின்மை யகலத்தே திருசெழித்[2] தோங்க
கன்மவினை யகலக் காவேரி பொங்கிவரச்

சென்னல்மிக விளைய சிறுசம்பா னோடிவர
கன்னல் விளைந்து கதலிமுத்து முத்தீண
மதுரப் பிலாப்பழுத்து வழிந்தொழுகி[3] யாறோட

கமுகு குலைசிதறிக்[4] கனிந்து பழமுதிர
குமுகுமென்று தேன்சொரியக் குன்றுமேல் தானிருந்து

தெங்குடனே தேன்மாவுஞ் சேர்ந்து கலந்துநிற்க
ஓங்குபுகழ்[5] செல்வ மொருக்காலுங் குன்றாமல்

இராசனடு நீதி நெறிமுறமை[6] தப்பாமல்
வாசமுட னைவர் மனுநீதியா யிருந்து

தாரணியெல் லாம்மகிழ்த்[7] தார்வேந்தர் போற்றிசெய்ய
காரணி மீனாட்சி கயல்கன்னி தன்னருளால்

**7.368.** அல்லி, தாமரை - சில மலர் வகைகளின் பெயர்கள். சுற்றம் - உறவினர்கள். **7.370.** தன்மர் - தருமர். தாரணி - உலகம். **7.371.** நாத்திசை - நால் திசைகள் என்பதின் பேச்சு வழக்குச் சொல். **7.372.** தின்மையகலத்தே - திட்பமான நாட்டின் கண்ணே. திரு - செல்வம். **7.373.** கன்ம வினை அகல - பாண்டவர்கள் நாட்டிடத்தே வாழும் மக்களுக்கு அவர்கள் செய்த கர்மவினைகள் அகல என்ற பொருளில். காவேரி - கர்நாடகம் மற்றும் தமிழகத்தில் பாயும் ஒரு நதி; புலவர் தம் கற்பனையால் இந்நதி அஸ்தினாபுரத்துள் பாய்ந்ததாகக் கூறுகிறார். **7.374.** சென்னல் - செந்நெல்; சிறந்த நெல் பயிர். சிறு சம்பா - நெல் வகையினுள் ஒரு வகை. **7.375.** கன்னல் - கரும்பு. கதலி முத்து - வாழை மரத்தினுள் பிறந்த ஒரு வகை பழுப்பு நிற முத்து. **7.376.** மதுர - இனிமையான. பிலா - பலா மரம்; பிலா இவண் பேச்சு வழக்குச் சொல். வழிந்தொழுகி யாறோட - பலாமரத்துப் பழத்தின் சுளையிலிருந்து தேன் ஒழுகி ஆறு போல ஓட. **7.377.** பழம் - பாக்கு மரத்தின் பழம். **7.378.** குமுகுமு - ஒலிக்குறிப்புச் சொல். **7.379.** தெங்கு - தென்னை மரம். தேன் மா - தேன் போன்று இனிமையான மாம்பழம். **7.380.** ஒருக்காலும் - ஒருபொழுதும். **7.381.** இராசன் - தருமன். முறமை - மறைகள். **7.382.** வாசமுடன் - புகழுடன். ஐவர் - பாண்டவர். மனு நீதி - மனு தர்ம நெறிகள். **7.383.** தாரணி - உலகம். தார்வேந்தர் - மலர்மாலை அணிந்த அரசர். **7.384.** காரணி, மீனாட்சி, கயல்கண்ணி - உமையவளின் சில நாமங்கள்.

சு.சொ : 1. அன்னசுத்த 2. திருசெளித் 3. வளிந்தொளுகி 4. சிதரி 5. ஓங்குடிகள் 6. முரமை 7. லாம்மகிள்த்

Elders, ancients and young ones, and
All relatives of the clan, together
Like water-lily and lotus,
Lived in happines free from faults.

**The just reign of Tarmar**

Tarmar and brothers were ruling the land
With prosperity, abounding plenty.
In the strong country there was plentiful wealth.
People's *karma* got alleviated.
Kāvēri[1] was brimming over.
Plenty of rice and small *campā*[2] grew.
Sugar cane grew, *katali muttu*
Produced pearls[3] and honey like juice
Of jack fruits was flowing stream like.
From bunches of arecanut riped ones fell down.
From hills above honey was prefusely dripping.
With coconut, sweet mango trees stood.
Fame and wealth never decreasing,
The king's law and justice never went awry.
The *edicts of Maṉu,* they did follow.
Kings wearing garlands praising, they ruled,
As Mīṉākṣi, Kayal kaṇṇi[4]
The cause of all blessing with grace.

1. A south Indian river. An exaggeration. The poet says the South Indian river flowed into the North Indian city of Astiṉāpuram. 2. A strain of rice. 3. A brown coloured pearl born from a particular plantain tree. 4. An ancient king who wrote down codes of conduct and laws for social order.

## பரிசித்துவின் மனைவி மகப்பேறடைதல்

**விருத்தம்**

8. ஐவரு மிருந்து பாரில் அனேகநாள்ச் சீமை யாண்டு
செய்வது தரும ஞாயந் திராசுபோல் நிறையாய்க்[1] கொண்டு
கைவருங் கரும மெல்லாங் கரியமா லறிய[2] பின்னும்
மெய்வரும் புதுமை சேர மேதினி யாளும்[3] நாளில்

9. சித்த சருப னான திரள்வாழ் அவீமன் மைந்தன்
பத்த ரெவர்க்கும் நல்ல பரிசித்து வேந்தன் தேவி
எத்திசை மதிக்க வேதான் ஏந்திழை[4] கெர்ப்ப[5] மாகி
வெற்றிசேர்[6] மாதம் பத்தும் விளங்கவே சுமந்தாள் மாது.

## பரிசித்துவின் மனைவி ஆண் குழந்தை பெறுதல்

**நடை**

10. பாத்தனுட பேரன் பரிசித்து வேந்தனுக்கு
நாற்றிசையுங் கொண்டாட நற்குமரி கெர்ப்பமதாய்

மாதமுந் திங்களுந்தான் வந்ததிட்டந் தானறிந்து[7]
நீதியுடன் சடங்கு நேமித்தார் பெண்கொடிக்கு
ஏதுவான பூமடந்தைக் கெல்லோரும் வந்துநின்று

மதுசொரியும் பூங்குழலாள்[8] மாதுதனக் கவர்கள்
முதுகுநீர் வார்க்க மொய்குழலாள்[9] பூமடந்தை

**8.1.** அனேக நாள் - அநேக நாள்; அதிகமான நாட்கள். சீமை - நாடு. **8.2.** ஞாயம் - நியாயம் என்பதின் பேச்சுவழக்குச் சொல். நிறை - மாட்சிமை. **8.3.** கருமம் - கர்மம்; செயல். கரிய மால் - கரிய நிறமுடைய திருமால்; கண்ணன். **8.4.** மெய் வரும் - உண்மையாக வருகின்ற. மேதினி - நாடு. **9.1.** சித்த சருபனான - கீர்த்தி வாய்ந்தவனான, ஒப்பற்றவன்; இவண் பரிசித்துவைக் குறித்தது. அவீமன் மைந்தன் - அபிமன்யுவின் மைந்தன் பரிச்சித்து. **9.2.** பத்தர் - பக்தர். **9.3.** எத்திசை - அனைத்துத் திசைகளிலுள்ளோரும். ஏந்திழை - பரிச்சித்துவின் மனைவியைக் குறித்தது. கெர்ப்பமாகி - கர்ப்பமாகி; கெர்ப்பம் இவண் பேச்சுவழக்குச் சொல். **9.4.** வெற்றி சேர் மாதம் பத்து - செல்வி என்னும் பரிசித்துவின் மனைவி கருக்கொண்ட பத்து மாதங்களை ஆசிரியர் இவ்விதம் குறிப்பிட்டார். **10.1.** பாத்தன் - பார்த்தன்; அர்ச்சுனன். நற்குமரி - நல்ல குணங்களைக் கொண்ட செல்வி என்னும் பெண். **10.3.** வந்த திட்டந்தானறிந்து - பரிசித்துவின் மனைவி கருவுற்று கழிந்த மாதங்கள் எத்தனை என்பதைச் சுற்றத்தார் அறிந்து. நீதியுடன் - முறையுடன். நேமித்தார் செய்தார். **10.5.** ஏதுவான - பொருத்தமான. **10.6.** மது சொரியும் பூங்குழலாள் மாது - தேன் சொரிகின்ற பூக்களைச் சூடிய பெண்; பரிசித்துவின் மனைவியாகிய செல்வி என்னும் பூமடந்தை. **10.7.** முதுகு நீர் வார்க்க - கர்ப்பம் தரித்த பெண்ணுக்குச் சீமந்த காலத்தில் முதுகில் நீர் தெளிக்கும் ஒரு வகை சடங்கு. மொய்குழலாள் - வண்டுகள் தேன் மொய்க்கும்படி மலர்கள் சூடிய பெண்ணாள்; பரிச்சித்துவின் மனைவி.

---

சு.சொல் : 1. நிரையாய் 2. லரிய 3. யாழும் 4, ஏந்திளை 5. கெற்ப 6. வெத்திசேர் 7. தானரிந்து 8. பூங்குளலாள் 9. மொய்குளலாள்

**Wife of Paricittu becomes pregnant**

The five lived long ruling the world.
Like a balance they dispensed with justice.
They acted with the knowledge of Kaṇṇaṉ.
When they were truthfully ruling the world,
Gloried king Apimaṉyu's son,
Paricittu's wife conceived to the joy of all.
For months ten did she carry the child.

**Wife of Paricittu begetting a male child**

Grandson of Pārttaṉ,[1] king Paricittu's
Wife to the joy of all was pregnant.
Computing the days and months of pregnancy,
All rites in order they did for her.
She wore garlands, of flowers full of nectar.
On her back they did sprinkle water.[2]

1. Arccuṉaṉ. 2. A particular rite.

திங்களோர் பத்தாகிச் செனமேசெயன் தான்பிறந்தார்
கங்குல் கலங்கக் கதிரோனுதித்[1] தாற்போல்

மாணிக்க முத்து வைரமணி கோர்த்தாப்போல
ஆணிக் கனகமுமாய் அழகு செனமேசன்

### கலியுகத்தின் பிறப்பு

சீலமுடன் அன்பாய் செனமேசன் தான்பிறக்கக்
காலதுவா பரமுடிந்து களித்தே கலிபிறக்க[2]

வருகுதென்று லோகம் வழங்கவே யிவ்வசனம்
பெருகுபுகழ்[3] தன்மருக்குப் பேரன் பிறந்தமையால்

வாளவீமன் தன்பேரன் வந்தா னெனவேதான்
காளகண்ட மேனியனார் கண்ண ரறியவென்று

எழுதினார் வாசகங்கள் ஏவினா ரின்பமுடன்
எழுதிவந்த ஒலைதன்னை யெம்பெருமாள் தான்பார்த்து

### கண்ணன் குழந்தையின் ஜாதகத்தை வேதியர் மூலம் கணித்தல்

இராசி[4] களும்நல்ல நட்சேத்திரம் பார்த்து
வாசியெனும் வேதியரை மாயன்வர வழைத்துப்

பாலன் பிறந்தான்[5] பரிசித்து வேந்தனுக்குக்
காலமென்ன இராசியென்ன கருத்துடனே பாருமென்று

மாய னிவைசொல்ல மறையோனு மேதுசொல்வார்
தூயவரே யிப்போதுச் சொல்லுகிறேன் கேளுமினி[6]

**10.8.** திங்கள் - மாதம். செனமேசெயன் - சநமேசயன்; பரிசித்துவுக்கும் செல்வி என்னும் பொற்கொடிக்கும் பிறந்தவன். **10.9.** கங்குல் - இருள். கதிரோன் - சூரியன். **10.10.** மாணிக்கம், முத்து, வைரமணி - சில வகை நவரத்தினங்களின் பெயர்கள். கோர்த்தாப் போல - கட்டினால் போல். **10.11.** ஆணிக் கனகம் - ஒரு வகைச் சிறந்த பொன். **10.12.** சீலமுடன் - மேன்மையுடன். **10.13.** கால துவாரபரம் - கிருதயுகம், திரேதாயுகம் ஆகிய முதல் இரண்டு யுகங்களை அடுத்து வந்த மூன்றாவது யுகமான துவாபரயுகம். களித்தே - மகிழ்ந்தே. கலி - நான்காவது யுகமான கலியுகம். **10.14.** வருகுது - வருகிறது என்பதின் பேச்சுவழக்குச் சொல். **10.16.** வாள் அவீமன் - வாளினைக் கொண்ட அபிமன்யு. **10.17.** காள கண்ட மேனியனார் - குயில் போலும் கறுத்த மேனியை உடையவர். **10.18.** வாசகங்கள் - செய்திகள். ஏவினார் - கொடுத்தனுப்பினார். **10.20.** இராசி - மேஷம் முதலாய்த் தொடங்கி மீனம் ஈறாய் உள்ள பன்னிரு ராசிகள். நட்சத்திரம் - அசுவதி முதலாய்த் தொடங்கி ரேவதி ஈறாய் உள்ள இருபத்தியேழு நட்சத்திரங்கள். **10.21.** வாசி - ஒரு வேதியர் பெயர். மாயன் - கண்ணன். **10.23.** காலம் - ஒருவர் பிறந்த போது உள்ள நேரத்தில் நவக்கிரகங்களின் சஞ்சாரம் பற்றிய காலம். **10.24.** ஏது - என்ன. **10.25.** தூயவரே - தூய்மையானவரே; இங்குக் கண்ணனைக் குறித்தது.

சு.சொ : 1. கதிறோனுத் 2. கலிபிரக்க 3. பெருகுபுகள் 4. இறாசி 5. பிரந்தான் 6. கேழுமினி

In ten months Jaṉamējayaṉ was born.
Like sunrise after dark clouds had scattered,
Like ruby, pearl, and diamond put together,
Like pure gold, handsome Jaṉamējayaṉ was born.

**The advent of *Kali yukam*[1]**

*Tuvāpara yakam* ended and *kali yukam* began.
For all to know the grandson
To the illustrious Tarmar,
The grandson of Apimaṉyu was born.
For dark complexioned Kaṇṇaṉ to know
They sent a message with pleasure.
Kaṇṇaṉ read the message that came.
Through Brahmans Kaṇṇaṉ prepared
The astrological chart of the child
To compute zodiacal signs, stars.
Māyaṉ brought a brahmin named Vasi, said,
"A child's born to king Paricittu.
Do cast his horoscope with care."
As Māyaṉ spoke the vedic scholar said,
"O holy one do listen to

1. Time, according to Hindu mythology is divided into four great segments or *yukam*. They are, *kruta*, *tirēta*, *tuvāpara* & *kali yukams*.

சென்மேசன் தான்பிறந்த சீருமிரா சிப்பலனும்
கனமான நாளும் கால துவாபரமும்

நாளுஞ் சரியாகி ஞாயம் வரம்புதப்பிக்
கோளும் பெரிய கொடுமை கலியுகமும்

**கண்ணன் கானகம் செல்ல முடிவெடுத்தல்**

வருகுதய்யா வென்று மறையோனெடுத்[1] துரைக்கப்
பருகுகனி வாயன் பட்சமால் தானினைந்து

ஆன துவாபரமும் ஆச்சுதென்று யிப்போது
கானகமே செல்லக் கருதியே மேகவண்ணர்
ஐவருக்குந் தூதாள் அனுப்பினார்கா ணம்மானை.

**கண்ணன் முடிவைப் பாண்டவர்கள் தூதுவர் மூலம் அறிதல்**

**விருத்தம்**

11. காசினி யளந்த மாயன் கலியுகம் வருமுன் தானும்
பேசியே கொள்வோ மென்று பிரவஞ்ச விபர மெல்லாம்
இரகசிய மாகத் தூதர் நாழிகை தன்னில் சென்று
தேசிக ரைவர் தன்னைச் சீக்கரங் கொடுவா வென்றார்.

12. உத்தொரு வசனங் கேட்டு ஒருநொடி தன்னில் தூதர்
அத்தினா புரியில் சென்று ஐவரை வணங்கிக் கொண்டு
கத்தினா ரருளிப் பாடல் கருதியே யுரைத்த போது
சித்தமே மகிழ்ந்து[2] தன்மர் சீக்கரம் பயண மென்றார்.

**10.26.** சென்மேசன் - சநமேசயன்; பரிசித்துவின் புதல்வன். **10.27.** கால துவாபரம் - மூன்றாவது யுகமான துவாபர யுகம். **10.28.** ஞாயம் - நியாயம் என்பதின் பேச்சுவழக்குச் சொல். வரம்பு - வன்முறைகள். **10.29.** கோள் - நட்சத்திரம். கலியுகம் - நான்காவது யுகத்தின் பெயர். **10.31.** பருகுகனி வாயன் - இனிய பழங்களைப் பருகுகின்ற வாயினை உடையவன்; கண்ணன். பட்சமால் - பச்சைமால்; பசுமை நிறமுடைய திருமால்; கண்ணன். **10.32.** ஆச்சுதென்று - முடிந்து விட்டதென்று. **10.33.** கானகம் - காடு. மேகவண்ணர் - மேக நிறமாம் நீல வண்ணத்தை ஒத்தவர். **10.34.** ஐவர் - பஞ்ச பாண்டவர். **11.1.** காசினி யளந்த மாயன் - இந்த உலகத்தை மூன்றடியால் அளந்து முடித்த கண்ணன். **11.2.** பிரவஞ்சம் - பிரபஞ்சம்; உலகம். **11.3.** நாழிகை - **24** நிமிடங்கள் கொண்ட ஒரு கால அளவு. **11.4.** தேசிகர் ஐவர் - அரசர்கள் ஐவர்; பஞ்ச பாண்டவர். கொடுவா - கொண்டு வா; இடைக்குறை. **12.1.** உத்தொரு - உற்றதொரு என்பதின் பேச்சுவழக்குச் சொல். **12.3.** கத்தினார் - கத்தனார்; விஷ்ணு அவதாரமாகிய கண்ணன். **12.4** சித்தம் - மனம். தன்மர் - தர்மர்.

சு.சொல் : 1. மரையோனெடுத் 2. மகிள்ந்து

The astrological predictions
Regarding Jan̲amējayan̲'s birth.
The day sees the end of the *tuvāpara yukam.*
Coming days portend justice's break down.
The evil influences of the planets
Are going to be felt." said the scholar.
Dark Kaṇṇan̲, who relished fruits, pondered
About *tuvāpara yukam* that came to a close.
Cloud coloured Kaṇṇan̲ planned to go to forest.
He sent a message to the Pāṇṭavars.

**The Pāṇṭavars learn of Kaṇṇan̲'s decision through the messenger**

In secret the messenger made haste
To bring the five kings[1] in no time.
The messenger with the message in a jiffy,
Reached Hastin̲āpuram, and paid
His respects to the Pāṇṭavars.
He conveyed the message sent by Kaṇṇan̲.
Pleased, Tarmar arranged for a journey soon.

1.The Pāṇṭavars.

## தருமர் சகோதரர்களிடம் செய்தி அறிவித்தல்

13. தம்பிமார் நால்வர் தம்மைத் தருமரு மருக ழைத்து
உம்பர்கோன் தம்பி ரானார் உலகினை அளந்த[1] மாயன்
நம்பியே யுண்மை யாக இரகசிய மருளிச் செய்து
இன்பமாய் வருக வென்ற தேதெனத் தெரியா தென்றார்.

14. ஆயனார் தூதன் வந்தான் சூழின[2] தெல்லாஞ் சொன்னான்
மாயனா ருண்மை கண்டு வணங்கிநம் வார்த்தை சொல்லி
நேயமாய் வருவோம் நீங்கள் நிமிஷத்தில் வாரு மென்று
தூயதோர் தர்ம ராயன் துரக மீதி லானார்.

## பாண்டவர்களின் துவாரகைப் பயணம்

15. வீமன் விசைய னகுலனுமாய் வேதம் புரிந்த சகாதேவன்
தாமோ தரனார் தனைக்காணத் தன்ம ருடனே பின்செல்வார்
தாம ரயரி ராமாவெனவே சரணஞ் சரண மெனத்தொழுது
சோம வாரந் தனிலவர்கள் துவார புரியில் போயினரே.

**நடை**

16. வாசமுள்ள பஞ்சவரை மாயனவர் சொல்லியொரு
நேசமுள்ள தூதனைப்போய் நிமிசத்தில் வாவெனவே

சொல்லி யனுப்பிவிடத் தூதுவனுந் தானோடி
நல்லதொரு தன்மரையும் நமஸ்கரித்துத் தான்வணங்கிக்

கண்ணரெனுந் திருமால் காயாம்பூ[3] மேனியனார்
அண்ணலவர்ச் சொல்லி அருளினர்கா ணுங்களையும்

13.2. உம்பர்கோன் தம்பிரானார் - தேவர்கள் அனைவருக்கும் தெய்வமாகிய விஷ்ணுவாம் கண்ணன். உலகினை அளந்த மாயன் - மகாபலிச் சக்கரவர்த்தியிடம் மூன்றடி மண் கேட்டு உலகை அளந்த திருமால். 13.3. இரகசியம் அருளி - அந்தரங்கச் செய்தி ஒன்றினைக் கூறி. 13.4. ஏது - எதனால். 14.1. ஆயன் - கண்ணன். சூழினதெல்லாம் - நடந்ததை எல்லாம். 14.2. நம் வார்த்தை சொல்லி - நமது எண்ணங்களைக் கூறி. 14.3. நேயமாய் - அன்புடன். வாரும் - வாருங்கள். 14.4. தர்மராயன் - தர்மர். துரகமீதிலானார் - குதிரையின் மீது ஏறலாயினார். 15.1. வேதம் புரிந்த - வேதங்களை நன்கு கற்றுணர்ந்த. 15.2. தாமோதரனார் - திருமால்; இங்குக் கண்ணனைக் குறித்தது. 15.3. தாம் அர யரி ராமா வெனவே - ஐவரும் பயணப்பட்ட பொழுது ஹரி என்றும், ராமா என்றும் திருமால் மகிமைகளைக் கூறியபடியே. 15.4. சோம வாரம் - திங்கள் கிழமை. துவாரபுரி - கண்ணன் வாழும் துவாரகை நகரம். 16.1. வாசமுள்ள - பெருமையுள்ள. மாயன் - கண்ணன். 16.2. நேசம் - பொறுப்பு. நிமிசம் - நிமிஷம். 16.3. தன்மர் - தர்மர். நமஸ்கரித்து - வணங்கி. 16.5. காயாம்பூ மேனியனார் - காயாம்பூ போலும் நீல நிறமுடைய மேனியை உடையவர். 16.6. அண்ணல் - தலைவர்.

சு.சொ : 1. அழந்த 2. சூளின 3. காயாம்பூ

**Tarmar conveying the news to his brothers**

Tarmar called the four brothers by side, and said,
"Tēvar's[1] king Māyaṉ who measured the worlds[2]
In faith wants to share some secret.
Asked us to meet him for purpose unknown.
The messenger of Kaṇṇaṉ has come,
He has conveyed all that happened there.
We'll meet Māyaṉ and share our thoughts
In a jiffy we'll be back with his grace."
Saying so,Tarmar, the virtous mounted the horse.
Vīmaṉ, Vijayaṉ, Nakulaṉ, and
Cakātēvaṉ knowing the *Vēdas*
Followed Tarmar to see Tāmōtaraṉ.
Chanting "Hare, Ram you're our refuge!"
On Monday they reached Tuvārakāpuri.
To run to the famed Pāṇṭavar's
And to return ,first mission accomplishing,
Māyaṉ bid a responsible messenger.
The messenger ran very fast.
Paid respects to goodly Tarmar said,
Kaṇṇaṉ alias Tirumāl whose is
The colour of *kāyām* flower,
Our leader has sent me and graced you.

1. Celestial beings. 2. Viṣṇu took the form of a brahman and requested land for three steps. Keeping one step on earth, placed the second on the moon. The third step, as requested by Mahāpali, took on his head and killed him.

அந்த மொழிகேட்டு யடியேனு மோடிவந்தேன்
விந்தை மலர்வதனா விரைந்துநீர் வாருமென்றான்

தூத னுரைத்தமொழி தூயதன்மர் தான்கேட்டு
போத மனமகிழ்ந்து[1] பூரித் திருபுயமும்

தம்பியருந் தாமுந் தத்துபரி மீதேறிக்
கெம்பீர மாய்நடந்தார் கேசவனார் தம்மூரில்

### கண்ணன் பாண்டவர்களை அருகழைத்தல்

வந்தோமென் றைவர் மாயனுக்குத் தூதுவிட்டு
சந்தோச மாகத் தானிருக்கும் வேளையிலே

கஞ்சமலர் மார்பன் கரியமால் தான்கேட்டு
பஞ்சவரை வாவெனவே பவளமணி மண்டபத்தில்

வந்திருந்தார் செங்கண்மால் மாயவன்றன் னோடு
செந்திருவை யொத்ததொரு சிம்மா தனந்தனிலே

பத்தியுள்ள பஞ்சவரும் பச்சைமால் சொல்படிக்குச்
சத்திய வாண்மை தவறாமல் மன்னவர்கள்

மண்டபத்தில் வந்து மாயன் தனைவணங்கித்
தெண்டனிட்டு தன்மர்த் தெரிசித் தடிவணங்கி

### தர்மர் கண்ணனிடம் வினாவுதல்

நெய்யுண்ட மாலே நெடியோனே யெங்களைநீர்
வைகுண்ட மூர்த்தி[2] வரவழைத்த காரியமேன்

**16.8.** விந்தை மலர் வதனா - தாமரை மலர் போன்ற முகத்தையுடையவனே; தருமனே. **16.10.** போத - கண்ணன் நாட்டிற்குப் போக. பூரித்து - மனம் மகிழ்ந்து. **16.11.** தத்து பரி - பாய்ந்து ஓட வல்ல குதிரை. **16.12.** கெம்பீரமாய் - கம்பீரமாய் என்பதின் பேச்சுவழக்குச் சொல். கேசவன் - கண்ணனைக் குறித்தது. **16.13.** ஐவர் - பாண்டவர். **16.15.** கஞ்சமலர் மார்பன் - தாமரை மலரில் உறையும் திருமகளை மார்பிடத்துக் கொண்டவன்; திருமால்; இவண் கண்ணனைக் குறித்தது. **16.16.** பவளமணி மண்டபம் - பவளங்களும் மாணிக்கங்களும் பதிப்பிக்கப் பெற்ற சிறந்த மண்டபம். **16.17.** செங்கண்மால் மாயவன் - சிவந்த கண்களை உடைய திருமாலாம் கண்ணன். **16.18.** செந்திரு - சிவந்த பொன். சிம்மாதனம் - சிம்மாசனம்; அரியணை. **16.19.** பத்தி - பக்தி. **16.20.** சத்திய வாண்மை - சொன்ன சொல். **16.22.** தெண்டனிட்டு - அடிபணிந்து. தன்மர் - தர்மர். தெரிசித்து - தரிசித்து. அடி வணங்கி - பாதங்களை வணங்கி. **16.23** நெய்யுண்ட மாலே - வெண்ணையைத் திருடி உண்ட திருமாலே; கண்ணனே. **16.24.** வைகுண்ட மூர்த்தி - வைகுண்டத்தில் வசிக்கும் திருமால்; கண்ணன்.

---

சு.சொ : 1. மகிள்ந்து 2. முர்த்தி

Obeying his words, I, a slave came running.
Oh Lord, with a face lotus like!
You make haste and go over there."
Virtuous Tarmar heard the messenger.
Pleased he was as his shoulders puffed.
With his brothers mounted fast horses and
Galloped majestically to the city of Lord Kēcavaṉ[1]

**Kaṇṇaṉ calls the Pāṇṭavars to his side**

Informing Māyaṉ of their arrival,
In complete joy the Pāṇṭavars remained.
Tirumāl in whose breast Lakshmi[2] dwelled
Received the Pāṇṭavars in a hall
Studded with coral and ruby.
They stayed with Tirumāl of red shot eyes
Who sat on a throne made of the purest gold.
The Pāṇṭavars piously followed
The word of Māyaṉ as always.
The kings who always kept their words
Reached the mantap and paid respects to Māyaṉ.
Kneeling, Tarmar paid obeisance :
"O Lord, who stole butter and ate[3]
Vaikuṇṭamūrtti,[4] why sent for us?

1. Kaṇṇaṉ. 2. Viṣṇu's consort. 3. The ruler of Vaikuṇṭaṉ. 4. As a small boy Kaṇṇaṉ, brought up among cowherds, was fond of butter. He used to steal butter from other houses.

## கண்ணனின் பதிலுரை

என்றுதன்மர் கேட்க யெம்பெருமா னேதுசொல்வார்
வென்றுதிசை யெட்டும் விசையெனும் வீமனுமாய்

மண்டலத்தை யாண்டு மனுநீதி தப்பாமல்
விண்டலத்தோர் கொண்டாட மேதினியில் தானிருந்து

நீதி வழுவாமல் நெறிமுறமைப் பொய்யாமல்
சாதி வரம்பு தவநிலைமைப் பேராமல்

வாழ்ந்தீரிது[1] வரையும் மன்னவரே யிப்போது
நான்தான் ஒருவிசளம் நவிலுகிறே னீகேளு

நல்லதென்று பஞ்சவர்கள் நாரணரே சொல்லுமென்று
வல்லதொரு மாயன் வரயதிர்ந்தங் கேதுசொல்வார்

முன்னா ளுகமும் முடிவுசரி யாச்சி
இன்னாள் கலியுகமும் யிப்போவரு குதென்று

சொல்லுந் துவாபரமுந் துகையுஞ் சரியாக
வெல்லுங் கலியுகந்தான் விபரீதமாய்த் தானாகி

ஆனதினா லிங்கிருக்க அடவில்லை யென்றுசொல்லி
மானமுட னுங்களுட வாக்கறியத் தானழைத்தேன்

இனிமேல் நமக்கு இவடஞ் சகியாது
கனிதே னிருக்குமந்தக் கானகமே வீடாகப்

போகவென்று நாம்நினைத்தோம் புண்ணியரே யுங்களுக்கு
ஆகமுடன் சொல்லி அருளினோங் கண்டீரே

16.26. வென்று திசையெட்டும் - எட்டுத் திசைகளையும் வென்று. 16.27. மண்டலம் - நாடு. 16.28. விண்டலத்தோர் - தேவ லோகத்தார். மேதினி - உலகம். 16.29. நெறிமுறமை - அரச தர்ம நெறிமுறைகள். 16.30. சாதி வரம்பு - ஜாதீய ஒழுக்க வரன்முறைகள். பேராமல் - தவறுபடாமல். 16.32. விசளம் - விவரம். நவிலுகிறேன் - கூறுகிறேன். 16.34. அதிர்ந்தங்கு ஏது சொல்வார் - மனம் துன்பத்தால் அதிர கண்ணன் என்ன சொன்னார் என்ற பொருளில். 16.35. முன்னாள் உகமும் - இதற்கு முந்தைய யுகங்களும். 16.36. இப்போ - இப்பொழுது என்பதின் பேச்சுவழக்குச் சொல். வருகுதென்று - வருகிறது என்று. 16.37. துவாபரம் - நான்கு யுகங்களுள் மூன்றாவது யுகம். துகை - தொகை என்பதின் பேச்சு வழக்குச் சொல்; துவாபர யுகத்தின் மொத்த கால அளவு. 16.39. அடவில்லை - முறையில்லை. 16.40. மானம் - நேசம். வாக்கு - இங்குப் பாண்டவர்களின் மனவோட்டத்தைக் குறித்தது. 16.41. இவடம் - இவ்விடம் என்பதின் பேச்சுவழக்குச் சொல்; இங்கு மதுராவைக் குறித்தது. சகியாது - ஒத்து வராது. 16.42. கானகம் - காடு. 16.43. புண்ணியர் - புண்ணியம் செய்தவர்கள்; பாண்டவர்கள். 16.44. ஆகம் - மன விருப்பம்.

சு. சொ : 1. வாள்ந்தீரிது

### Kaṉṉaṉ's reply

To Tarmar in reply, Kaṉṉaṉ said,
'O the victorious in directions all!
Along with Vijayaṉ and Vīmaṉ
With Maṉu's justice you ruled the land.
With celestials celebrating
You did rule on earth with glory.
Dispensed right justice, violated
No rules, followed caste restrictions
Keeping spiritual levels
Live did you, O kings till now!
Now listen to the matter I am to tell"
"Well, Tirumāl pray tell" said the Pāṇṭavars.
Able Māyaṉ grief numbing His heart
Said",The previous *yukam* has just ended.
Now *kali yukam* has come to stay.
Over is the *tuvāpara yukam*.
*Kali yukam* will be disastrous.
Hence staying here is not just right.
Hence with love I did bring you here.
Just to know of your opinion.
This place will be suitable no more.

வேறு நினைவு விபரீதங்க ளொன்றுமில்லை
கூறுகிறே னிவ்வசனம் கொற்றவரே[1] யுங்களிடம்
செய்தியென்ன வென்று திருமாலுந் தான்கேட்டு

### தர்மரின் வருத்தவுரைகள்

நாதி யனாதிநம நாராயணா[2] யநம
ஆதி வராக யரிகேசவன் பாதம்
சோதியே வேதச் சுருதிக் கதிபரே

ஆண்டபெருமா ளேயெங்கள் ஆதியனா திநம
புண்டரீக மார்பழகா பொன்னலங் காரிநம

அச்சுதா பஞ்சவர்கள் ஐவருக்கும் நாயகமே
சச்சுதா னந்தமெனுஞ் சாரூப வாசமுள்ள

கற்பூர வாசகனே காயாம்பூ[3] மேனியனே
பொற்பூவும் வாசமும்போல் பூலோகம் மீதில்வந்து

எங்கள்தனைக் கார்க்க யிவ்வடிவு தானெடுத்துத்
தங்களுட லுயிர்போல் தற்காத்தீர் என்நாளும்

சீருஞ்சிறப்புஞ்[4] செலுத்திவெகு செல்வமெல்லாம்
பேருஞ் செலுத்திப் பிரபலமாய்த் தானிருந்து

வைத்தீரிது வரையும் வாழ்ந்தோம்[5] புவிமீதில்
மைத்துனர் போலெங்களுக்கு வாரமாய்த் தானிருந்து

**16.48.** நாதி அனாதி நம - எல்லா உயிர்களினூடே உறைந்தவனும் அதே நேரத்தில் தனித்த தன்மையனாய் வாழ்பவனுமாகிய இறைவா உன்னை நான் வணங்குகிறேன் என்ற பொருளில்அமைந்த தொடர். **16.49.** ஆதி வராக யரி கேசவன் பாதம் - எல்லாவற்றிற்கும் பழமையானவன். தன் பத்து அவதாரத்துள் மூன்றாவது அவதாரத்துள் பன்றியாக அவதரித்து உலகத்தைக் காத்தவன்; திருமாலாம் நாராயணன் பாதம். **16.50.** சோதியே - ஒளி வடிவுடையவனே வேதச் சுருதிக்கு அதிபரே - வேத மந்திரங்களுக்குத் தலைவனே. **16.51.** ஆண்ட பெருமாளே - எங்களை ஆண்ட பெருமாளே. **16.52.** புண்டரீக மார்பழகா - தாமரை மலர் உறையும் லட்சுமியை மார்பில் கொண்ட அழகனே. பொன்னலங்காரி - பொன்னாலாகிய ஆபரணங்கள் பலவற்றை அணிந்தவன். **16.53.** அச்சுதா - திருமாலே. நாயகமே - தலைமையாளனே. **16.54.** சச்சுதானந்தம் - சத் + சித் +ஆனந்தம் என்னும் மூன்றின் சேர்க்கையாக விளங்கும் வடிவம். சாருப வாசமுள்ள - கடவுள் உருவம் பெற்று வாசனையுடைய வடிவம். **16.56.** பொற்பூவும் வாசமும் போல் - பொன்னால் ஆகிய பூவினுள் காணக்கிடைக்கும் மனத்தினைப் போல. **6.57.** கார்க்க - காப்பாற்ற என்பதின் பேச்சு வழக்கு சொல். **16.62.** வாரமாய் - உரிமையாய்.

---

சு.சொல் : 1. கொத்தவரே 2. நாறாயணா 3. காயாம்பு 4. சீறுஞ்சிரப்புஞ் 5. வாள்ந்தோம்

The forest full of honey, and fruits
We will make as our home.
We thought of going there, O the blessed ones!
To convey this I sent for you.
Nothing is gone astray, no more doubts.
I am telling you kings of this matter.
Now what do you say?" Tirumāl asked.

**Sad utterances of Tarmar**

"Nātiyaṉāti nama Nārāyaṇāya nama![1]
*Ātivarāka* Arikēsavaṉ's[2] feet I worship.
O kindly light, the essence of the *Vēdas*!
O Lord who rules us Āti aṉāti[3]!
O Lord with beautiful chest adorned!
A chest where goddess Lakshmi dwells.
O Accutaṉ[4], the Pāṇṭavar's leading light!
Whose body is formed by *cat, cit, āṉantaṃ*
Fragrant like camphor, coloured like
*Kāyampu,* a fragrant golden flower!
To save us you took this body,
Guarded us like your life till this day,
Graced, glorified us, gave us all wealth.
Gave us name, made us famous.
On earth enabled us to live till this very day
Borther -in-law, a real kin you were!

1. I pay obeisance to you O God who lives in all things but at the same time having a separate entity of your own. 2. The older of the oldest. The first cause. Among his ten *avatārs*, He took the third one as pig and saved the world. 3. I worship the one with and without a beginning. 4. Tirumāl.

ஆபாத நெஞ்சன் அநியாய நெட்டூரன்
மாபாவி யான வணங்காமுடி வேந்து

செய்தவினைக் கெல்லாஞ் செயமாக நீரிருந்து
எய்தவனைக் கொன்று இமலோகந்தான் சேர்த்துத்

தந்தீர் புவியாள சாங்கமாய்த் தானிருந்து
நந்தகோ பாலரெங்கள் நரசிங்க மூர்த்தியென்று

தன்மருந் தம்பியரும் தான்போற்றி வாழ்த்திநின்று
மின்மருவுந் திண்புயனே வேதநா[1] ராயணனே

நாலுமுகந் தானிருந்து நடப்பீரி ருப்பீர்காண்
மேலுமருப் பீர்காண் மேதனியைத் தானளப்பீர்

ஆரு மறியாமல் ஆலிலைமேல் பள்ளிகொள்வீர்
பாருலகை யுண்டு படைப்பீ ருலகளப்பீர்

கோலமெல்லாம் நீரெடுத்த கோலமே யல்லாது
ஞாலமதி லுன்னையல்லாமல் நடப்பதுவும் வேறுமுண்டோ

ஏதோ திருக்கூத்து யெத்தனையோ விஸ்தாரம்
சூதோ தெரியாதுன் சூத்திரத்தை யாரறிவார்

கண்ணுக்கும் பார்வையதாய்க் கலந்திருக்கும் மாயோனே
விண்ணுக்குள் மேகசல மேதினிக்குண் டாக்கிவைத்த

**16.63.** ஆபாத நெஞ்சன் - பாதகச் செயல்களை எண்ணும் நெஞ்சினன்; துரியோதனன். நெட்டூரன் - நிஷ்டூரன்; கொடுமையாளன்; இங்குத் துரியோதனனைக் குறித்தது. **16.64.** வணங்காமுடி வேந்து - தன்னினும் பெரியவர்களைக் கண்டு பணிதல் அறியாத மன்னன்; துரியோதனன். **16.65** செய்த வினை - செய்த கொடுமைகள். **16.66.** எய்தவன் - போர் தொடுத்தவன்; துரியோதனன். இமலோகம் - எமலோகம் என்பதின் பேச்சுவழக்கு. **16.67.** சாங்கம் - ஒழுக்கம். **16.69.** தன்மர்- தருமர். **16.70.** மின் மருவுந் திண்புயனே - மின்னல் போன்ற ஒளியுடைய லட்சுமி பொருந்துகின்ற வலிமையான தோளினை உடையவனே; இங்குக் கண்ணனைக் குறித்தது. **16.71.** நாலுமுகந் தானிருந்து நடப்பீர் இருப்பீர் காண் - பிரம்மனின் உறக்க காலத்தில் அவனின் படைப்புத் தொழிலைச் செய்து நடப்பீர் வாழ்வீர் என்ற பொருளில். **16.72.** மேலு மருப்பீர் - வராக அவதாரத்தில் கொம்பினை உடையீர். மேதினியைத் தானளப்பீர் - வாமன அவதாரத்தில் பூமியை அளந்தீர். **16.73.** ஆரும் - யாரும் என்பதின் பேச்சுவழக்கு. **16.74.** பாருலகை யுண்டு படைப்பீர் - பிரளய காலத்தில் உலகத்தை உண்டு அக்காலம் முடிந்த பிறகு மீண்டும் படைப்பீர். **16.75.** கோலமெல்லாம் - அவதாரச் சிறப்பெல்லாம். **16.76.** ஞாலம் - உலகம். **16.77.** திருக்கூத்து - கண்ணன் லீலைகள். **16.78.** சூதோ தெரியாது - நீ உன் மனத்துள் எடுத்துள்ள நுட்பமான முடிவோ எனக்குத் தெரியாது என்கிற பொருளில். **16.80.** மேக சலம் - மேகத்தினுள் நீர்.

சு.சொ : 1. வேதநாறா

Unjust, cruel with evil thoughts,
Lacking humility the king was sinful
For his evil deeds you vanquished him.
Killed, him sending him to the netherworld
Gave us land to rule, stayed along
Lord Nanta Kōpālaṉ is our
Naraciṅkamūrtti[5]!" saying so
Tarmar and brothers paid respects.
"Oh Lord Vēda Nārāyaṇaṉ
In whose chest dwells goddess Lakṣmi!
Doing duty of the four-faced one.[1]
Horns you had as *Varāka Avatār*![2]
As Vāmaṉaṉ you measured the earth.
On peepul leaf you sleep, no one knowing!
You swallowed earth and created it again
All the things are more forms of your self.
With your will only anything moves.
What is your deep game, what your plans?
Who can of your plans, and calculations know?
O Māyaṉ, like vision that blends with the eye!
The One who puts water in clouds for earth!

1. Pirammaṉ-the god of creation, one of the holy trinity in Hindu mythology. During the period when He hibernates Kaṇṇaṉ is supposed to look after his activity of creation. 2. Viṣṇu took the form of a *Varākam* (fig) and brought out the earth hidden in the sea by an Asura.

கத்தனே யும்முடைய காவலா லிங்கிருந்தோர்
நித்தனே யும்மைவிட்டு நிமிச மிருப்போமோ

என்னமொழி[1] யுரைத்தீ ரென்பெருமா ளென்றுதன்மர்
பன்னகம் மீதிருந்த பச்சமுகில் மேனியனே

அட்டதிக்குந் தானறிய ஐவர்தா னெப்போதும்
விட்டுப் பிரியாத மேகவண்ணர் தம்மைவிட்டு

மண்ணாசை யாலே மறந்தார்க ளென்றுசொல்லி
விண்ணாரும் மற்றுமுள்ள மேதினியோ ரும்நகைக்க

விருப்பமுட னாங்கள் மேதினியை யுண்டெனவே
இருப்பதுவு மில்லையினி யெந்தவித மானாலும்

வருவோந் திருமாலே வார்த்தையொன்றும் பேசாமல்
திருவுந்தி பூத்தோனே செந்தா மரைப்பதத்தைக்

கண்டு வணங்கி கைகெட்டி வாய்புதைத்துத்
தொண்டுபண்ணி நாங்கள் தொழுதுவை குண்டமதில்

காத்திருந் தேவல்செய்ய கற்பிவிக்க வேணுமையா
வீத்திருப்போ மும்மிடத்தில் மேதினியே வேண்டாங்காண்

என்றுதன்மர் சொல்ல இருந்த பெருமாளுக்கு[2]
நன்றுநன்று தன்மிதரே நால்வகையுஞ் சீருபண்ணித்

## கண்ணனின் அறிவுரை

தேச மலையாமல் செங்கோல் தவறாமல்
வாசமுள்ள சுற்றம்[3] மனைவிமக்கள் வாடாமல்

16.81. கத்தனே - கர்த்தனே; கண்ணனே. 16.82. நித்தனே - என்றும் நிரந்தரமாய் வாழ்பவனே. நிமிசம் - நிமிடம் என்பதின் பேச்சுவழக்குச் சொல். 16.84. பன்னகம் - பாம்பு; இங்குத் திருமால் பள்ளி கொள்ளும் ஆதிசேடனைக் குறித்தது. 16.85. அட்டதிக்குந் தானறிய - எட்டு திசையிலுள்ள மக்களும் அறியும்படி. 16.88. மேதினியோர் - உலகத்துப் பெரியவர்கள். 16.89. மேதினியை யுண்டெனவே - உலகத்தை நிலையான ஒன்று என்று கருதியே. 16.92. திருவுந்தி பூத்தோன் - தொப்பூழ் கொடியில் தாமரை மலரைப் பூக்கச் செய்தவன்; திருமால்; இங்குக் கண்ணனைக் குறித்தது. 16.93. கை கெட்டி - கையினைக் கொட்டி; ஒருவரின் பணிவின் அடையாளத்தைக் குறிக்கும். 16.94. தொண்டு பண்ணி - பணிவிடை செய்து. 16.95. ஏவல் - பணிவிடை. கற்பிவிக்க - கட்டளையிட. 16.96. வீத்திருப்போம் - வீற்றிருப்போம் என்பதின் பேச்சுவழக்குச் சொல். 16.98. தன்மிதர் - தர்மர். நால்வகையும் - முடிந்த அளவு என்ற பொருளில்; எல்லா வகையாலும் எனினும் அமையும். சீரு - சீர் என்பதின் பேச்சுவழக்கு; சிறப்பு. 16.99. தேசம் அலையாமல் - தேசத்து மக்களுக்குத் துன்பம் நேராமல். செங்கோல் தவறாமல் - இறையாண்மையில் மாறுபடாமல். 16.100. சுத்தம் - சுற்றம் என்பதின் பேச்சுவழக்குச் சொல்.

சு.சொ : 1. என்னமொளி 2. பெருமாழுக்கு 3. சுத்தம்

O creator we were guarded by you!
Without you can we be Eternal?
What harsh words have you spoken to us?
Green complexioned One who on Snake reclines[1]
All on earth know the Pāṇṭavars
Never left the dark cloud cloured one.
'They have left him now for love of land!'
Thus the celestials and earthlings
Alike, would sure ridicule us.
Holding earthly life eternal,
We would not remain here, come what may!
O Tirumāl, who has a lotus in navel[2]
Without a word, we'll follow you.
Your lotus feet we will worship,
With folded hands and covered mouths,
Serve and worship you, at *Vaikuṇṭam.*
Allow us to do your bidding.
Permit us to do your errands.
We don't want the world, we'll be with you".
As Tarmar spoke thus, Perumāḷ[3] replied,
"Well, Tarmar mend things in all aspects.
Subjects not suffering, justice
Unswerving, kith and kin, wife, children
Suffering not, crowned kings always

1. Viṣṇu is supposed to be reclining on a five headed snake called Āti Sēṣaṉ. 2. Viṣṇu's navel is supposed to be a lotus, according to the Hindu mythology. 3. Kaṇṇaṉ.

மகுட முடிவேந்தர் மனுநீதி தப்பாமல்
விகட முரையாமல் வேறுகூ றாகாமல்

சட்டமுட னாள்தோறும்[1] சாந்தகமாய் வார்த்தைசொல்லித்
திட்டப் படுத்திச் செப்பமிட்டுக் கொண்டதற்பின்

ஏகாந்தமாய் வருவீர் எல்லாருஞ் சம்மதிக்கப்
பாகாந்த மென்மொழியைப் பதையாம லேயிருத்தி

மார்க்கமதாய் வருவீர் வைகுண்டஞ் சேரவென்றால்
தீர்க்கமுறு[2] பஞ்சவரோ செப்பினோ மிவ்வார்த்தை

கலிபிறக்கு[3] முன்னேதான் கானகத்தில் நாம்போறோம்
கலிபிறந்த செய்தி காதில் விழுந்தவுடன்

அரைநா ழிகைநேரம் அவனிதனில் நில்லாமல்
விரையவே வாருமென்று வேறொன்றும் பேசாமல்

## பாண்டவர்கள் நாடு திரும்புதல்

இந்தமொழி[4] மாயன் யெடுத்துரைக்கத் தன்மருமே
சிந்தை மகிழ்ந்து திருத்தாள் சரணமென்று

தம்பியருந் தானுஞ் சரண மெனப்பணிந்து
நம்பினோ மாலே நமஸ்காரம் போய்வாறோம்.

## பாண்டவர்கள் கண்ணனைப் புகழ்தல்

17. எங்குமாய் நிறைந்த[5] மூர்த்தி[6] யீரேழு லோக மெல்லாம்
அங்குமாய் இங்கு மாகி ஆருயிர்க் கெல்லாந் தானாய்ப்

**16.102.** விகடம் உரையாமல் - பொல்லாங்கு கூறாமல். **16.103.** சாந்தகமாய் - சாந்த மனத்துடனாய். **16.104.** செப்பமிட்டு - நாட்டை வளப்படுத்தி. **16.105.** ஏகாந்தம் - தனிமை. **16.106.** பாகாந்த மென்மொழி - பாகு போலும் இனிக்கும் நற்சொல் பேசுகின்ற மென்மையான மொழியாள்; பாஞ்சாலி. **16.108.** தீர்க்கமுறு பஞ்சவரே - திடமான எண்ணமுடைய பாண்டவர்களே. செப்பினோம் - கூறினோம். **16.109.** கலி - கலியுகம். கானகம் - காடு. போறோம் - போகிறோம் என்பதின் பேச்சுவழக்கு. **16.111.** அவனி - உலகம். நில்லாமல் - நிற்காமல். **16. 113.** மாயன் - திருமால்; கண்ணன். **16.114.** சிந்தை - மனம். திருத்தாள் - மேலான பாதங்கள். **17.1.** ஈரேழு லோகம் - பதினான்கு உலகங்கள். **17.3.** பொன்னலங்காரா - பொன்னால் ஆகிய ஆபரணங்கள் அணிந்த அலங்கார புருஷனே; - கண்ணனே.

---

சு.சொ : 1. னாள்தோரும் 2. தீற்கமுறு 3. கலிபிரக்கு 4. இந்தமொளி 5. நிரைந்த 6. மூர்த்தி

Adhering to Maṉu's justice,
Not slanderously engaging in
Double talk, lawfully ruling,
Uttering all words of comfort,
Planning, correcting, and bettering things, rule.
If, after all agree that you go,
Without consternation you leave
Behind the sweet-spoken one.
If you want to reach *Vaikuṇṭam*
Do take this route.
Oh strong willed Pāṇṭavars we've spoken.
Before *kali* comes, to the woods we go.
Hearing the news of *kali's* advent,
Wasting not a minute on earth,
We hasten without uttering a word."

**The Pāṇṭavars return to their country**

As Māyaṉ spoke these words, Tarmar
Pleased, surrendered at His holy feet
He and brothers humbly fell at His feet,
Said "we trust in you Lord, we take leave!
O Lord you pervade all in the worlds fourteen,
There and here existing for all souls.
O Lord, perfection personified,
Who is bedecked in precious jewels,
All that is, is the will of Kaṇṇaṉ!

பொங்குபூ ரணமாய் நின்ற பொன்னலங் காரா போற்றி
தங்குவ தில்லை நாங்கள் தரணியி லும்மை விட்டு.

18. ஆவதோர் கால மெல்லாம் அச்சுதன் சியலி னாலே
தேவலோ கங்கள் மெய்க்கச் சிந்தனை தவிர்த்தீ ரையா
போவதோர் காலம் வந்தால் புத்தியு மலைக்க லாமோ
நாவது ரெண்டுஞ் சொல்லோம் நாரணா போற்றி போற்றி.

**நடை**

19. என்றுதன் மர்மயன் இருதாளைப் பூண்டுகொண்டு
அத்திபுரம் நோக்கி ஐவருந்தான் வந்ததற்பின்

## தவமுனி கண்ணனிடம் கலியன் பிறப்பைக் கூறுதல்

வெற்றிபுரி மாயன் விளங்குந் துவாரபுரியில்
வீற்றிருந்து[1] செங்கோல் விசாரிக்கு மன்னாளில்[2]
சாஸ்திரங்கள் சொல்லுந் தவமுனியும் வந்தனர்காண்

காலங் கலியுகமுங் கற்பினையுந் துர்புத்தியும்
கோலங் குறுகி குணபே தகமாகிப்

பொய்யுந் திருட்டும் புலையாட் டெனக்களவும்
செய்யும் பிரளி வெகுசினமுதர சினமும்

குண்டுணியுங் கோளுங்[3] குடிகேடு வஞ்சனையும்
தெண்டம் பரும்பிடியுந் தெண்டினையுங் கண்டிதமும்

**17.4.** தங்குவதில்லை - இருப்பதில்லை. தரணி - உலகம். **18.1.** அச்சுதன் - திருமால்; கண்ணன். சியலினாலே - செயலினாலே என்பதின் பேச்சுவழக்கு. **18.2** மெய்க்க - மெச்ச; பொருந்த. சிந்தனை தவீர்த்தீர் ஐயா - எங்களை உங்கள் மனத்திலிருந்து எடுத்தீர் ஐயா என்ற பொருளில். **18.3.** மலைக்கலாமோ - திகைக்கலாமோ. **18.4.** நாவது ரெண்டுஞ் சொல்லோம் - நாவினால் இரு விதங்களாகப் பேசியறியோம் என்றவாறு. **19.7.** மயன் - மாயன்; கண்ணன். தாள் - பாதம். பூண்டு கொண்டு - அணைத்துக் கொண்டு. **19.2.** அத்திபுரம் - அஸ்தினாபுரம். **19.3.** வெற்றிபுரி மாயன் - வெற்றிகள் பலவற்றைப் புரிகின்ற மாயன்; கண்ணன். **19.4.** அன்னாள் - அந்நாள். **19.5.** சாஸ்திரங்கள் சொல்லும் - வேத சாஸ்திரங்கள் புகழ்ந்து சொல்லுகின்ற. **19.6.** கற்பினை - கற்பனை; சாதுரியப் பேச்சு. **19.7.** கோலங்குறுகி - ஒழுக்க நெறிமுறைகள் குறைந்து. குண பேதகம் - குணங்களில் வேறுபாடுகள். **19.8.** புலையாட்டு - கீழ்மைத் தன்மை. களவு - திருட்டு. **19.9.** பிரளி - புரளி என்பதின் பேச்சுவழக்கு; வதந்தி. வெகு சினம் - மிகுந்த சினம். உதர சினம் - உதிரம் கொட்டும்படி ஒருவரை ஒருவர் தாக்கிக் கொள்ளும்படி உண்டாகின்ற சினம். **19.10.** குண்டுணி - ஒருவர் மனதில் பிறரைத் தாழ்வாக நினைக்கும்படிக் கூறும் பொய்யுரை; குமரி, நெல்லை மாவட்ட பேச்சுவழக்குச் சொல். கோள் - புறங்கூறும் செயல். குடிகேடு - குடிமக்களை அழிவுக்கு உட்படுத்துதல். வஞ்சனை - வஞ்சித்தல். **19.11.** தெண்டம் - அபராதம். பரும்பிடி - பரும்படி; நேர்த்தியின்மை. தெண்டனை - தண்டனை என்பதின் பேச்சுவழக்குச் சொல். கண்டிதம் - கண்டதம்; கொடுமை செய்தல்.

---

சு.சொ : 1. வீத்திருந்து 2. மன்னாழில் 3. கோமுங்

Divine worlds praising, you forgot us.
When's time to leave the mind shouldn't waver.
Double-speak we haven't, Nārāyaṇaṉ!
Lord we pay obeissance to you."
Saying so Tarmar hugged Māyaṉ's feet.
The Pāṇṭavars then to Hastiṉāpuram went.

**A sage tells Kaṇṇaṉ about *Kali's* birth**

When the ever victorious Māyaṉ
Who was at Tuvārakāpuri
Stayed and was ruling the country,
A sage well versed in *the sāstras* came, said,
"*Kali yukam* brings glib talk, evil minds,
Immorality would increase.
There will be loss of character.
Falsehoods, thefts, and burglaries,
Rumours, wrath, blood letting fury,
Bearing tales, calumny, ruining
Families, deceit, penalties,
Punishments, crudeness, cruelty,
Honour and tradition will be lost.

மான மரவுதப்பி வரம்பழிந்து[1] போனதுவும்
தானதவங் குலைந்து சத்தியமும் பொய்யாகி

மேல்குலமே கீழ்குலமாய்க்[2] கீழ்குலமே மேல்குலமாய்
கால்மேல் தலைகீழாய் கலியன் பிறக்குகிறான்[3]

### கண்ணன் பலரிடமும் ஆலோசனை கேட்டல்

நால்வேதஞ் சொல்ல நாரணருந்தான் கேட்டுப்
பால்பொருந்தும் வாயாற் படைத்தலைவர் மந்திரிமார்

சாத்தகி யாழ்வார் சகலரையுந் தானழைத்து[4]
ஏத்த விசாரமினி யேதுசொல்லு மென்றார்

### மந்திரிமார்களின் பதிலுரை

தேவ சியலாலே தீங்கறியோம் நாயடியார்
ஏவல்செயுந் தொண்டர் ஏதென் றெடுத்துரைக்கச்

சொல்புத்தி கேட்குந் தொண்டகளுக் கேநீரும்
கற்பித்தருள் சொல்ல கத்தனேயுண் டெனவே

கேட்கு மடியார்க்குக்[5] கிருபையின்ன[6] தென்றுரையீர்
தீர்க்கமுட னூழியங்கள் செய்கிறோ மென்றுரைத்தார்

### கண்ணன் தன் முடிவை உறுதிபட உரைத்தல்

ஆதலால் மாலு மவர்கள்தனை யாதரித்து
நீதமல்ல நாமும் நீண்ணிலத்திலே யிருக்கச்

சோதிரிகள் சொல்படியே சுகமென்று நாம்தாமும்
வாதினைக்குள் ளாகாமல் வனத்தில் தவமிருக்க

**19.12.** மானம் - மரியாதை. மரவு - மரபு என்பதின் பேச்சுவழக்கு. வரம்பழித்து - ஒழுக்கம் அழிந்து. **19.13.** தானம் - வறியோர்க்கு நல்கும் கொடை. **19.15.** கால்மேல் தலைகீழாய் கலியன் பிறக்குகிறான் - உடம்பின் அங்க லட்சணங்களுக்கு மாறுபட்டு கால் மேலே இருக்கத் தலை கீழேயிருக்கக் கலியன் என்பான் பிறக்கிறான் என்ற பொருளில். பிறக்குகிறான் - பிறக்கிறான் என்பதின் பேச்சுவழக்கு. **19.16.** நால் வேதம் - ரிக், யசூர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்கள். **19.17.** பால் பொருந்தும் வாயால் - பால் போலும் இனிமையாகப் பேசும் வாயினால். **19.18.** சாத்தகி ஆழ்வார் - கண்ணனின் தம்பியருள் ஒருவன். சகலரையும் - எல்லோரையும். **19.19.** ஏத்த விசாரம் - ஏற்ற ஆலோசனை; ஏத்த என்பது ஏற்ற என்பதின் பேச்சுவழக்கு. **19.20.** சியல் - செயல் என்பதின் பேச்சுவழக்கு. நாயடியார் - நாயினும் மேலாய் அடிபணிந்து வாழும் அடியவர்கள். **19.22.** கற்பித்து அருள் சொல்ல - கட்டளையிட்டு அருள்வாக்கு கூற. கத்தனே - கர்த்தனே; கண்ணனைக் குறித்தது. **19.25.** ஊழியம் - தொண்டு. **19.26.** மால் - திருமால்; கண்ணன். **19.27.** நீதமல்ல - முறையல்ல. நீணிலத்தில் - நீண்ட இந்நிலவுலகில். **19.28.** சோதிரிகள் - ஜோதி என ஒளிவிடும் உடம்பு கொண்ட முனிகள். **19.29.** வாதினை - வாதனை என்பதின் பேச்சுவழக்கு; வருத்தம்.

---

சு.சொ : 1. வரம்பறிந்து 2. கீள்குலமாய் 3. பிர்க்குகிறான் 4. தானளைத்து 5. அடியாற்க்கு 6. கிறுபையின்ன

No philanthropy, no penance, there would be.
Truth to lies would get converted.
Upper and lower castes would get roles reversed,
As Kaliyaṉ with leg up, and head down is born.[1]"

**Kaṇṇaṉ consults others**

Kaṇṇaṉ ,fond of the *Vēdas* four[2]
Sent for ministers and army chiefs
Cāttaki Āḻvār' and many others too.
"What do you suggest, tell me?" he said.

**The reply of the ministers**

"We dog-like slaves know no evil, Lord,
How can your servants, advise you?
For us disciples who do your biddings,
You are there Lord to commandingly guide.
O, tell what we, your slaves have to do.
We would get them done at any cost."

**Kaṇṇaṉ confirms His decision**

Tirumāl spoke comforting them:
"It's not proper for me to stay here any more.
Words of the luminous sages would do good
To do penance at the forest sans ills.

1. Signifying that everything upside down is going to happen 2. *Rig, Yojoor, Sama, Adharvaṇa Vēdas.*

நன்றாகத் தோணுதுகாண் நம்முடைய யோசனைக்குள்
குன்றாமல் நீங்கள் குவலையத்தில் தானிருந்து

எப்போதும் போலே யிருப்பீர் சுகமாக
அப்போ திருந்தவர்கள் ஆக மிகவுருகி

**கண்ணனின் குழந்தைகளுடைய துர்ச்செயல்**

இருக்குந் தருவாயி லின்னமொரு கற்பினைதான்
பெருக்கும் பெருமாள்தன் பிள்ளைகள்தான் செய்தகுத்தம்

பச்சமா லீன்ற பதினாயிரம் புத்ல்வர்
இச்சையுடன் கூடிமுன்னாள் இசைந்துவிளை யாடுகையில்

துர்வாசமா[1] முனிவன் சோதினைக்குப் பாலரிடம்
நிறுபாக மாக நீண்டசடை முடியாய்

சன்னாசி வேசமுமாய்த் தான்வரவுங் கண்டவர்கள்
மின்னார்போல் வேட மிகுந்ததொரு கற்பனையாய்க்

கோலஞ் சமைந்து குழாங்களுடன்[2] கூடிக்
காலஞ் சிறுமையதாய்க் காரணங்கள் தான்முடிய

வந்து தவசியிடம் வ்ாலைகளுஞ் சேட்டைபண்ணி
இந்தப்பெண் கெர்ப்பிணிதா[3] னென்னபிள்ளை தான்பெறுவாள்

ஐயரே சொல்லுமென்று அடிபணிந்து நின்றார்கள்
வெய்ய தவமுனியும் விந்தையிது வென்றுசொல்லிச்

**துர்வாசரின் சாபம்**

செப்புகிறோம் தம்பியரே செய்யிழையாள் தன்வயிற்றில்
இப்புவியில் நல்ல இருப்புலக்கை யாய்ப்பிறந்து

19.31. குவலையம் - உலகம். 19.33. ஆகம் - உடம்பு. 19.34. கற்பினை - கட்டளை. 19.37. இசைந்து - பொருந்தி. 19.38. துர்வாச மாமுனிவன் - அத்திரி முனிக்கும் அசூயைக்கும் பிறந்தவர்; மிகுந்த சினங்கொண்ட முனிவர். சோதினை - சோதனை என்பதின் பேச்சு வழக்கு. 19.39. நிறுபாகமாக - நிர்வாணமாக. 19.40. சன்னாசி - சந்நியாசி. 19.41-42. மின்னார் போல் வேடம் மிகுந்ததொரு கற்பனையாய் கோலம் சமைந்து - மின்னல் போலும் ஒளிவிடும் அழகிய பெண்ணின் வடிவத்தில் தன்னை ஒப்பனை செய்து. 19.42. குழாம் - கூட்டம். 19.43. காலஞ் சிறுமையதாய் - போதாத கலி காலத்தின் சிறுமைத் தன்மையால். 19.44. வாலை - இளஞ்சிறார். சேட்டை - குறும்பு. 19.45. கெர்ப்பிணி - கர்ப்பணி என்பதின் பேச்சுவழக்கு. 1947. வெய்ய - சினந்த. விந்தை - வேடிக்கை. 19.49. இருப்புலக்கை - இரும்புலக்கை.

சு.சொ : 1. துறுவாசமா 2. குளாங்களுடன் 3. கெற்பிணி 4. யாய்பிரந்து

It seems appropriate to our mind.
Keeping your status you live on here.
As of old you do live in comfort."
Thereon they all in sorrow grew thin.

**The evil deeds of the children of Kaṇṇaṉ**

As things were at this stage the misdeed
Of Perumāḷ's children caused trouble.
Kaṇṇaṉ had ten thousand children.
They were playing in joy extreme.
As fate dictated, the sage, Turvācar[1] passed by,
He was naked with matted hair and beard,
Wearing signs of a mendicant.
One of the boys disguised as a pretty girl.
He was made up with rich imagination.
The playing children saw the sage come.
As time was bad,[2] their fate impelling,
When the sage approached, the youth played the prank.
"Here, this girl's pregnant. She gets what child?
O Iyer, please tell." saying thus,
With mock reverence the boys there stood.
Angered, the sage said" Oh! it's amazing!
O brothers from the womb of this pretty girl
A good long iron pestle will be born,

1. A very short tempered sage born to sage Attiri and Acūyai. 2. Because of the evil influences of Kāḷi.

உங்கள் குலமெல்லாம் உருவழிந்து[1] போம்படியாய்க்
கங்கு லிருள்போல கருந்துலக்கை தான்பிறக்கும்

என்று முனியுரைத்து ஏகினர்கா ணம்மானை
அன்றுமுனி சொல்படிக்கு அவன்வயற்றி லேயிருந்து

### இரும்புலக்கை குழந்தையைக் கண்ணன் காணுதல்

வந்து விழுந்ததுகாண் மண்மே லிருப்புலக்கை
அந்த வுலக்கைதன்னை ஆயருட பக்கலிலே

கொண்டுபோய் வைத்தார்கள் குழந்தையர்க ளெல்லோரும்
கண்டு திருமால் கருத்திலே கொண்டருளிக்

### கண்ணன் செயல்

கொல்லர்தனை யழைத்துக்[2] கூரிய வாளரத்தால்
சல்லிப் பொடியாய்த் தவிடுபொடி யாக்குமென்றார்

அந்தப் படியே அரத்தால் பொடி(ய)தாக்கிச்
சிந்தப் பொடியுஞ் சிறுமணல்போ லானபின்பு

### இரும்பு கணு மிஞ்சுதல்

அரத்திட்டு ராவி அதுபிடிக்கு மெட்டாமல்
உரத்த சிறுகணுவா யுச்சிதமாய் மிச்சமென்றார்

கணுவை யெடுத்துக் கார்கடலில் போடுமென்றார்
அணுவா யுதிர்ந்ததெல்லாம்[3] அலையோரந் தூவுமென்றார்

ஆமென் றெறிந்தார்கள் ஆயனார் சொல்படிக்குத்
தாமகன்ற கன்மந் தமக்கே பலித்துவிட

**19.50.** போம்படியாய் - போகும்படியாய். **19.51.** கங்குலிருள் - ஒருபொருள் பன்மொழியைப் போல இருளின் மிகுதியை வலியுறுத்த கங்குல், இருள் என்னும் இரு சொற்களும் பயன்படுத்தப்பட்டன. கருந்துலக்கை - கரிய உலக்கை. **19.52.** ஏகினார் - சென்றார். **19.55.** ஆயருட பக்கலிலே - கண்ணனின் அருகினிலே. **19.57.** கருத்திலே கொண்டருளி - பிறந்த உலக்கை யார் சாபத்தால் நடந்தது என்பதை மனத்தால் நினைத்து. **19.58.** கூரிய - கூர்மையான. **19.59.** சல்லிப்பொடியாய் - மிகமிகச் சிறிய பொடியாய். **19.60.** அரம் - வாள். **19.61.** சிந்தப்பொடியும் - சிந்திய பொடியும். ராவி - மேலும் அரத்தால் தேய்த்து. **19.62.** அதுபிடிக்கும் எட்டாமல் - அந்த இரும்புத்துகள்கள் யாருடைய கைப்பிடிக்கும் அகப்படாமல். **19.63.** உரத்த - வலிமையான. உச்சிதம் - மேன்மை. மிச்சம் - மிகுதி. **19.64.** கார் கடல் - கருத்த கடல். **19.65.** உதிர்ந்ததெல்லாம் - உதிர்ந்த துகளை எல்லாம். அலையோரம் - அலைகள் உள்ளிழுத்துச் செல்லும் வண்ணம் அலைகளின் ஓரம். **19.66.** ஆயன் - கண்ணன். **19.67.** தாமகன்ற - தன்னைவிட்டு அகன்று இருந்த. கன்மம் - கர்மம்.

சு.சொ : 1. உருவளிந்து 2. யளைத்து 3. யுற்ந்ததெல்லாம்

To bring total ruin to your clan!
A very dark 'iron pestle will be born."
Saying thus the sage went away'
As the sage had said, from the boy's stomach
An iron pestle fell on to the earth.
Taking the pestle to the side of Kaṇṇaṉ
The children placed it by His side.
Kaṇṇaṉ in His mind's eye saw what happened.
He sent for black smiths with sharp hack saws.
Bade them to grind the postle to powder.
As ordered it was into powder filed.
The filings were like small sand granules.
The filing made it too small for holding.
All that remained was a small iron piece.
They threw the small piece into the sea, and sprinkled
The iron powder on waves that were washing the shores.
Awaiting fate soon took effect.

### இரும்புத் துகள்கள் கோரையாய் வளர்தல்

விரைத்த பொடியதெல்லா மெல்லியவாள் கோரையதாய்
உரத்து முளைத்து யுன்னிதமாய்த் தான்வளர்ந்து

நின்றதுகா ணங்கே நெடியோ னருளாலே
ஒன்றுமிச்ச மான யுருண்ட கணுவதனை

### வேடன் கையில் இரும்புக்கணு கிடைத்தல்

மச்சம் விழுங்கி வலையில்வந்து சிக்கியதே
அச்சமில்லா வேடன் அந்தமச்சந் தனைவாங்கிக்

கீறிக் கறிசமைக்கையில் கிடந்தெடுத்தான் கணுவை
மீறிச் சரந்தனிலே விருப்பமுடன் தான்சேர்ந்து

### கண்ணன் மைந்தர்கள் கோரையால் மாள்தல்

வைத்திருந்தான் வேடன் வகையாக யம்மானை
புத்திரர்கள் கூடிப் பூரித்துக் கொக்கரித்து

ஆத்திலே சென்று அணிவகுத்துக் கைபிடித்து
ஊத்திலே தான்முளைத்த உயர்கோரை தான்பிடுங்கி

அடித்துவிளை யாடவென்று அனபேருஞ் சம்மதித்துத்
துடித்துச் சிறுவர் துயரறவே தான்பிடுங்கி

நெருங்கி யடித்து நிமிசத்தில் மாண்டார்கள்
வருங்காரி யமறியா மதலைகளு[1] மாண்டார்கள்

விளையாட வந்திடத்தில் விதிவசங்கள் தான்சூழ்ந்து[2]
கிளையோ டிறந்து[3] கிடக்கிறா ரென்று சொல்லிக்

19.68. விரைத்த - தூவிய. வாள் கோரையாய் - வாள் போலும் கூரிய கோரைப் புற்களாய். 19.69. உரத்து முளைத்து - வலிமையுடன் முளைத்து. 19.71. மிச்சமான யுருண்ட கணு - இரும்புலக்கையை ராவியதில் மிச்சமாகிப் போன உருண்ட இரும்பு கணு. 19.72. மச்சம் - மீன். 19.74. கறி சமைக்கையில் - கறியாகச் சமைக்கும் பொழுது. இடந்தெடுத்தான் கணுவை - இரும்புக் கணுவை மீன் கறியிலிருந்து கண்டெடுத்தான். 19.75. சரம் - அம்பு. 19.77. பூரித்து - மனம் மிக மகிழ்ந்து. கொக்கரித்து - ஆரவாரம் செய்து. 19.78. ஆத்திலே - ஆற்றிலே என்பதின் பேச்சுவழக்கு. ஊத்திலே - ஊற்றிலே என்பதின் பேச்சுவழக்கு. உயர் கோரை - உயரமாய் வளர்ந்த கோரை. 19.80. அனபேரும் - அனைவரும். 19.84. வந்திடத்தில் - வந்த இடத்தில் என்பதில் மரூஉ. 19.85. கிளையோடு - சுற்றத்தொடு.

---

சு.சொ : 1. மதலைகழு 2. தாள்சூள்ந்து 3. டிரந்து

The sprinkled powder like thin swords
Grew with strength as plants over there.
Stood as plants by grace of Kaṇṇaṉ.
The small iron piece that did remain
Was swallowed by a fish which was,
Soon caught in a fishing net.
A fearless hunter bought that fish.
When cut for cooking he found the iron piece.
He fixed it as an arrow head and kept.
The hunter kept the arrow with him.
The children together frolicked, shrieking,
Went to the river, stood in lines and held hands.
They plucked the reeds that grew by the river side.
With which to beat each other and play they planned.
The playful kids plucked them with ease.
Beat one another in playful mirth.
In a minute they all fell down dead.
They young children who could not know
Of consequences, died as cursed.
To the place where they came for play, their fate
Followed and with kith and kin they all perished.
Those who witnessed it informed Kaṇṇaṉ

### கண்ணனின் மனவோட்டம்

கண்டபேர் தானோடிக் கண்ணரிடந் தானுரைத்தார்
அண்டர் பிரானும் அலுவ லொழிந்துதென்று

செய்யுங் சடங்குளும் சீக்கிரத் திலேமுடித்து
வைகுண்டஞ் சேர மனதிலுத்தா ரம்மானை.

### கண்ணனின் ஏவல் படி சாத்தகி வருதல்

**விருத்தம்**

20. தம்பியர் மகுட மன்னர் சகலமும் வாரு மென்று
எம்பிரா[1] னருளிச் செய்த யேவல் கேட்டேதோ வென்று
நம்பிநா ரணரே வந்தோம் நாதனே சரண மென்று
தம்பிரா[2] னடிகள் போற்றி சாத்தகி யாழ்வார் நின்றார்.

### கண்ணனின் கட்டளை

21. நின்றதோர் தம்பி மற்ற நிருபர்தன் முகத்தை நோக்கி
மன்றலர் நந்த கோபர் மானிலம் விட்டுக் கானம்
பொன்றவும் வேணும் நான்தான் புவிதனை யாண்டு நீங்கள்
தென்றலங் காமன் போல சிகத்தினில் வாழு மென்றார்.

22. கரியமா லருளிச் செய்த காரண மேதோ வென்று
தெரியவே விபரங் கேட்கத் தேசிக ரறிந்து நன்றாய்
அரியதோர் கலியன் வாறான் யானுமே வனத்தில் போறோம்
பெரியதோர் புவன மெந்தன் பேர்தனைச் செலுத்தி வாழும்.

### கண்ணன் வனம் புகுதல்

23. இப்படி யிறையோன்[3] சொல்ல யேங்கியே முகங்கள் வாடி
அப்படிச் சொன்னீ ரானால் அடியரும் வாரோ மென்று
செப்பிடத் திருமால் தானுந் தெரியவே யுண்மை யாக
வைப்பினி லிருங்கோ வென்று வனம்புகக் நடந்தார் மாயன்.

19.87. அண்டர் பிரான் - கண்ணன். அலுவல் ஒழிந்து தென்று - தான் உலகத்திற்கு வந்த வேலை முடிந்துவிட்டது என்று நினைத்து. 19.89. மனதிலுத்தார் - மனதில் நினைத்தார். 20.1. சகலமும் - சகல பேரும். வாரும் - வாருங்கள். 20.2. எம்பிரான் - கண்ணன். 20.4. சாத்தகி ஆழ்வார் - கண்ணனின் தம்பி. 21.1 நிருபர் - அரசர்கள் 21.2 நந்த கோபர் - நந்த கோபாலர்; கண்ணனின் வளர்ப்புத் தந்தை. மானிலம் - மாநிலம்; பெரிய உலகம். கானம் - காடு. 21.3. பொன்றவும் - பொருந்தவும். 21.4. அங்காமன் - அழகிய மன்மதன். சிகம் - ஜெகம் என்பதின் பேச்சுவழக்கு; உலகம். 22.2. தேசிகர் - அரசர்கள். 22.3. வாறான் - வருகிறான் என்பதின் பேச்சுவழக்கு. போறோம் - போகிறோம் என்பதின் பேச்சுவழக்கு. 22.4 புவனம் - உலகம். பேர் - பெயர். 23.3. செப்பிட - அரசர்கள் கூறிட 23.4 வைப்பினில் இருங்கோ - அவரவர் இடங்களில் இருங்கள் என்ற பொருளில்.

---

சு.சொ : 1. எம்பிறா 2. தம்பிறா 3. இரையோன்

Lord of the Universe knew His purpose was over.
In haste He performed the rites essential.
He planned for returning to *Vaikuṇṭam*.
Kaṇṇaṉ bid His brother and kings to come.
At the bidding of their Lord they came.
"We're here and at your feet we surrender."
Saying so Cāttaki Āḻvār came.

**The commandments of Kaṇṇaṉ**

Gleaning the faces of His brothers and other kings,
Kaṇṇaṉ said, "Leaving the country for the woods
I should go, ruling this country you
Live long like breezy, handsome Cupid."
The reason for dark Kaṇṇaṉ's resolve,
The kings queried and Kaṇṇaṉ replied that
As *kali* came, to forest he went.
He asked them to rule the land in Kaṇṇaṉ's name.

**Kaṇṇaṉ goes to the forest**

As the Lord said so their faces fell.
"If you go, we also would go," they said.

## கண்ணனின் உபதேசங்கள்

**நடை**

24. வனத்தினில் தவமிருக்க மாயவனார் தானினைந்து
சனத்துக் கிதவான துண்மைகளும் புத்திகளும்

சொல்லி வுபசரித்துத் துயரமெல்லாந் தான்தீர்த்து
மெல்லியதோர் கானகமே விரும்பி மனதிலெண்ணிச்

சாத்தகி யாழ்வார்க்குந் தனிமகுடந் தான்தரித்து
நாற்றிசைகளும் போற்ற நம்மைப்போல் தானிரென்று

முடிமகுடந் தான்தரித்து முறமையாய் நீயிரென்று
நெடியமால் தான்வாழ்த்தி[1] நீணிலத்தோர் தாமறிய

மன்ன ரமைச்சர் மகுடமுடி வேந்தர்களும்
பின்ன மில்லாதபடி பேதியர்தான் அவர்க்குச்[2]

சொன்னபடி கேட்டுத் தொழுது வணங்கிநித்தம்
அன்னசுத்த மெல்லாம் சமனாற்றித் தானிருங்கோ

காலங்கலி யுகமாய்க் காரணமுந் தோன்றுகையால்
ஞாலங்கள் தாமறிய நம்முடைய ரூபமெல்லாம்

கலிகால மானதினால் கானகத்தில் நாம்போறோம்
பலியாதிக் காலமென்று பைய யெடுத்துரைத்துப்

பொறுமை பெரிதாகப் போறோ மிருங்களென்றார்
சிறுமைவரு மெங்களுக்குத் தேவரீர் போறதினால்[3]

**24.2.** சனம் - ஜனம்; மக்கள். **24.5.** சாத்தகி ஆழ்வார் - கண்ணனின் தம்பியின் பெயர். தனி மகுடம் - தனித்த சிறப்பு வாய்ந்த கிரீடம். **24.7.** முறமை - முறைமை; ஒழுக்கம். **24.8.** நீணிலத்தோர் - நீண்ட உலகினை ஆழ்வோர். **'24.10.** பின்னம் இல்லாத படி - பழுதுகள் இல்லாதவாறு. பேதியர் - கண்ணன் கானகம் செல்லுவதால் என்ன செய்வது என்று பேதித்த அரசர். **24.12.** அன்ன சுத்தம் - அன்ன சுற்றம் என்பதின் பேச்சுவழக்கு. சமனாற்றி - சமமாகப் பாவித்து. **24.14** ஞாலம் - உலகம். ரூபம் - வடிவம். **24.16.** பலியாது - பலிக்காது; நாம் கலிகாலத்தில் கூறப் போவதை இனி கேட்போர் யாரும் இலர் என்ற பொருளில். பைய - மெதுவாக. **24.18.** சிறுமை - குறைவு.

சு.சொ : 1. தான்வளர்த்தி 2. அவற்கு 3. போரதினால்

Kaṇṇaṉ asked them to stay in their places.
And alone He went to the forest.

**The advice of Kaṇṇaṉ**

Resolving to stay at forest, Māyaṉ
Advice, truths, useful for human race,
Gave and got rid of their sufferings.
With thoughts of the forest on His mind,
He did crown Cāttaki Āḻvār.
"For all to praise, ṛule like us." He said.
"Wearing the proper crown,be a just king"
Kaṇṇaṉ blessed one and all.
He faultlessly advised monarchs and ministers
He consoled the grieving kings:
"Do follow my advice; daily
Offer prayers, do treat all
The relations with equal love.
*Kali* is fast approaching, it seems.
For all worlds to see with our body
We go to the forest ,cause *kali* has come.
Our advice no one will listen to now.
With patience great we go, you stay."

என்று மயங்கி யெழுந்துமன்னர் தானழுது
நின்று தலைகவிழ்ந்து நெடியோனைப் பின்துடர்ந்தார்

துடர்ந்ததொரு தம்பியையுந் துரைமக்கள் தங்களையும்
அடர்ந்து வராதபடி அகத்தியே யட்சுதனார்

வானம்புவி யளந்த மலர்ப்பாதந் தானோகக்
கானகமே நோக்கிக் கடுக நடந்தனராம்

## வனத்தின் சிறப்புகள்

நாடுவிட்டுத் தேசம் நன்னகரி தானுமிட்டு
கூடுவிட்ட தன்குளவி கொட்டாத வாசனைபோல்

காடுகரை கண்டார் கண்ணனார் கண்ணாலே
தேடுதவ மீதறிவு சிவயோக நாட்டமதாய்

பேரறிவு கொண்டு புறப்பட்டார்[1] மாயவனார்
ஓரறிவாய் நின்ற உயர்மரங்க ளெல்லாந்தான்

பூத்துச் சொரிய புவனம் மிகத்தழைக்கக்[2]
காத்து விசறியதாய்க்[3] காளாஞ்சி பூமியதாய்

மயில்கள் துடர்ந்தாட வானரங்கள் கூத்தாடக்
குயில்க ளிசைகூவ கொஞ்சுகிளி பேசிவர

புலிக ளடிபணிய பூதங்கள் வாய்புதைக்க
கெலிகள் வெருண்டோட கீர்த்தனங்கள்[4] வண்டார்ப்ப[5]

அரிகளி பணிய அரியோனுந் தானடக்கக்
கரிகளி பணிய கரியோனுந் தானடக்க

**24.20.** துடர்ந்தார் - தொடர்ந்தார் என்பதின் பேச்சுவழக்குச் சொல். **24.21.** தம்பி - சாத்தகியைக் குறித்தது. **24.22.** அடர்ந்து - நெருங்கி. அட்சுதனார் - அச்சுதனார்; கண்ணன். **24.23.** வானம் புவி அளந்த மலர்ப் பாதம் - வானத்தையும் பூமியையும் அளந்த மலர்ப் போன்ற பாதம்; கண்ணன் பாதம். **24.24.** கடுக - விரைவாக. **24.25.** நன்னகர் - சிறந்த நகர். **24.26.** கூடுவிட்ட தன் குளவி கொட்டாத வாசனை போல் - கூட்டினை விட்டுப் புறப்பட்ட குளவி எதிலும் பொருந்தி அமர்ந்து வாழாத தன்மையைப் போல. **24.28.** மீதறிவு - மிகுந்த அறிவு. **24.30.** ஓரறிவு - உற்று அறியும் முதலறிவு. எல்லாந்தான் - எல்லாமுந்தான் என்பதின் மரூஉ. **24.31.** புவனம் - உலகம். **24.32.** காத்து - காற்று என்பதின் பேச்சு வழக்கு. **24.33** துடர்ந்தாட - தொடர்ந்தாட என்பதின் பேச்சுவழக்கு. **24.34.** இசை கூவ - இசையோடு குரல் எழுப்ப. **24.36.** கெலி - அச்சம். கீர்த்தனங்கள் வண்டார்ப்ப - இனிய கீர்த்தனைப் பாடல்கள் இசைப்பது போல வண்டுகள் ஓசை எழுப்ப. **24.37.** அரி - சிங்கம். அரியோன் - சிவன். **24.38** கரி - யானை. கரியோன் - கரிய நிறமுடையோன்; திருமால்.

---

சு.சொ : 1. புரப்பட்டார் 2. மிகத்தளைக்க 3. விசரியதாய் 4. கீற்தனங்கள் 5. வண்டாற்ப்ப

"The leaving of our Lord will bring degradation".
Saying so kings fainted, got up, cried
With bowed heads they followed Kaṇṇaṉ
His brother[1] and all royalty trailed Him.
Kaṇṇaṉ advised them and they stayed back.
The soft feet of Kaṇṇaṉ which once measured
The heavens and earth now hurting,
He walked towards the forest deep,
Leaving the country, state and the good city.
Like a wasp that never goes back to nest
Kaṇṇaṉ walked observing the terrain of the forest,
With his mind on meditation set.
Kaṇṇaṉ went on yearning for *Civa yōkam*,
The bliss of which He did long for.
The tall trees with only one sense
Showered flowers and the earth became fertile.
A breeze was blowing on the green earth.
Peacocks danced and monkeys jumped about.
Cuckoos sang, pretty parrots lisped.
At His feet tigers fell; goblins with
Covered mouth, in reverence stood.
Their fears dispelled, crickets and bees sang.
Lions paid respects as Kaṇṇaṉ walked.
Elephants paid respects as Kaṇṇaṉ walked.

கஸ்தூரி வாசனென்று கஸ்தூரி வந்துநிற்க
வஸ்துவுக்கு வேண்டினதோர் வஸ்துவெல்லாம் வந்துநிற்க

கற்பூர வாசனென்று கற்பூரஞ் சூழ்ந்துவர[1]
நற்பூ மரங்களெல்லாம் நாத்திசையும் பூத்துநிற்க

அரவுயர்த்தோன் பாதம் அரவுபணிந் தேத்த
இரவு பகலாகும் எம்பெருமாள் வந்தயிடம்

மேகநிற மேனியர்க்கு[2] மேகம் பணிமாற
ஆகங் குளிர்ந்து அனேகநெடுந் தூரம்

வந்து நெடுமால் வனமெல்லா மாராய்ந்து
கொந்துலவு செண்பகஞ்சேர் குளிர்ந்தமலர்ச் சோலைகளும்

சந்தனமுங் கற்பகமுந் தருவும் வெகுவனமும்
கந்தமலர் காவுங் கடம்பவனச் சிறப்பும்[3]

ஆதவனூ டாடாத ஆரணிய மானதிலே
மாதவனுஞ் சம்மதியாய் மனது மிகமகிழ்ந்து

## கண்ணன் ஆலமரத்தின் கீழ் தவமிருத்தல்

நாலுதிக்கும் பார்க்க நடுவே யொருவிருட்சம்
ஆலுதித்து நின்ற யடவுதனைப் பார்த்து

இந்த விருட்சமது யெங்கும்நான் கண்டதில்லை
அந்த விருட்ச மதுவே நமக்குநிலை

**24.39.** கஸ்தூரி வாசன் - கஸ்தூரி என்னும் நறுமணப் பொருளின் வாசத்தை உடம்பில் கொண்டவன்; கண்ணன். கஸ்தூரி - மான். **24.90.** வஸ்து - பொருள். **24.41.** கற்பூர வாசன் - கற்பூரம் என்னும் நறுமணப் பொருளின் வாசத்தை உடம்பில் கொண்டவன்; கண்ணன். **24.42.** நற்பூ - நல்ல வாசமுள்ள பூ. நாத்திசை - நான்கு திசைகள். **24.43.** அரவுயர்த்தோன் - பாம்பில் பள்ளி கொள்வோன்; திருமால். அரவு - பாம்பு. **24.45.** மேகநிற மேனியர் - நீல மேக சியாமள மேனியன்; திருமால். பணிமாற - பணிவிடை செய்ய. **24.46.** ஆகம் - உடம்பு. அனேகம் - அநேகம். **24.48.** கொந்துலவு செண்பகம் - பூங்கொத்துக்களாய் மலர்ந்த செண்பகப் பூக்கள். **24.49.** கற்பகமுந் தருவும் - கேட்டதை எல்லாம் கொடுக்கும் கற்பக மரம் சூழ்ந்த இடமும். **24.50.** கந்தமலர் - வாசனையுள்ள மலர். கடம்ப வனம் - கடம்ப மரங்கள் அதிகமாக வளர்ந்த காடு. **24.51.** ஆதவன் ஊடு ஆடாத ஆரணியம் - கதிரவன் ஒளிகள் உள்ளே புகுந்து வர முடியாத அளவு மரங்கள் செறிந்த காடு என்றவாறு; இத்தொடர் வனத்தின் அடர்த்தியை உணர்த்திற்று. **24.52.** மாதவன் - திருமால். சம்மதியாய் - மனத்துள் இவ்விடம் துறவறத்திற்கு ஏற்றது என சம்மதித்த வண்ணம். திக்கு - திசை. விருட்சம் - மரம். **24.54.** ஆல் - ஆல மரம். அடவு - காடு. **24.56.** நமக்கு நிலை - நமக்கு தவம் செய்ய உகந்தவிடம் என்றவாறு.

---

சு.சொ : 1. சூள்ந்துரை 2. மேனியற்கு 3. சிரப்பும்

As musk smelling he was, musk deers came close.
All life came to attend on the Primeaval Cause
Camphor followed as he smelled like it.
Sweet smelling flower trees all blossomed.
Snakes fell at the feet of the one on snake reclined[1].
Where the Lord visited night became day.
Clouds served the cloud coloured Kaṇṇaṉ,
His body calling to distances long.
Kaṇṇaṉ went about exploring the forest.
It abounded in *ceṉpakam*,[2]
Cool gardens, sandal, *kaṟpakam*[3] trees,
Fragrant flowers and *kaṭampa* trees grand.
Sun's rays could not penetrate the forest.
Kaṇṇaṉ felt it fit place for His *tapacu*[4]

**Kaṇṇaṉ sits in meditation under a banyan tree**

Looking around, He saw a banyan
Tree at the centre of the forest.
"A tree like this I've never seen.
This tree is a suitable place for me.

1. Viṣṇu. 2. A flower. 3. Myth holds that this tree is capable of granting any thing asked for. 4. Deep meditation.

நிற்போந் தவசு நிறவேற[1] வேணுமென்று
கற்பூர வாசன் கலையா சனம்விரித்துப்
பொற்பூவின் வாசனைபோல் பொருந்திமன மொன்றாகி

அட்டா க்ஷரத்தில் அமர்ந்திருந்தா ரம்மமானை
நட்டாத்தி லன்று நடுக்கடலில் போட்டதொரு

### வேடன் உருவுபிறழ கண்ணன்மீது அம்பு விடுதல்

இருப்புக் கணுப்பதித்த யிணையம்பு தானெடுத்துச்
செருப்புச் செடிதாங்கிச் சீராவுந் தான்பூட்டிச்

சிலையெடுத்து வேடன் சித்தருவாள் கைப்பிடித்துக்
கலைமான் கலைத்துக் கான்வேடன் காடுசுத்தித்
தேன்மருவு மாயன் திருவேங் கிடப்பெருமாள்

ஆரணி யந்தன்னில் ஆல மரத்தடியில்
தாரணியை விட்டுத் தவசிருந்த கோலமது

வேடனுட கண்ணுக்கு வெருண்டுவந்த மான்போலே
ஆடவனா ரூபம் அவன்தனக்கு மான்போலே

கண்டான் கயல்வேடன் கடுகிச் சிலைதொடுத்து
விண்டான் சரந்தொடுத்து வேடனவன் மானெனவே
மார்புரள வாங்கி வலுவேட னெய்தஅம்பு

### கண்ணன் வேதனையில் மயங்குதல்

பட்டுருவி யம்பு பரிந்து மறுபுறமும்[2]
தட்டுருவத் தைத்திடவே தண்டா மரைப்பதத்தில்

24.57. வேணுமென்று - வேண்டுமென்று. 24.58. கலையாசனம் - மான் தோலாலினாலான ஆசனம். 24.59. பொற்பூ - பொன் மலர். 24.60. அட்டாக்ஷரம் - எட்டெழுத்து மந்திரம்; ஓம் நமோ நாராயணா என்னும் மந்திரம். 24.61. நட்டாத்தில் - நட்டாற்றில். 24.62. இருப்புக் கணு - இரும்புக் கணு. 24.63. செருப்புச் செடி தாங்கி - செடி கொடிகளால் ஆன செருப்பினைக் காலில் தாங்கி. சீராவுந்தான் பூட்டி - கவசத்தையும் அணிந்து. 24.64. சிலை - அம்பு. சித்தருவாள் - சிறிய அருவாள். 24.65. கலைத்து - மான்கள் அங்குமிங்கும் ஓடும்படி செய்து. சுத்தி - சுற்றி என்பதின் பேச்சுவழக்கு. 24.66. திருவேங்கிடப் பெருமாள் - திருவேங்கட மலையில் வாழும் பெருமான்; திருமால். 24.68. தாரணி - உலகம். 24.69. வேடனுட - வேடனுடைய என்பதின் பேச்சுவழக்கு. வெருண்டு - பயந்து. 24.70. ஆடவனார் - ஆண் வடிவம் கொண்டவர்; கண்ணன். ரூபம் - வடிவம். 24.71. கயல் வேடன் - கயல் மீன் போலும் கண்ணினை உடைய வேடன். கடுகி - விரைந்து. சிலை - வில். 24.72. சரம் - அம்பு. 24.73. மார்புரள வாங்கி - மார்பில் அதிக உரத்தை ஏற்றி. வலு வேடன் - வலிமையுடைய வேடன். 24.74. பரிந்து - அறுத்து. 24.75. தட்டுருவத் தைத்திடுவே - காலில் தட்டுப்பட்டு ஊடுருவி தைத்திடவே என்றவாறு. தண்டாமரை - குளிர்ந்த தாமரை. பதம் - பாதம்.

சு.சொ : 1. நிரவோ 2. புரமும்

I'll stay here for the fulfilment of my *tapacu*."
Camphor smelling Kaṇṇaṉ spread the deer skin,
Like a fragrant golden flower.
With mind in concentration deep,
He meditated on the eight lettered *mantira*[1].

**Hunter by mistake hits Kaṇṇaṉ with an arrow**

Taking the arrow with the iron piece found in the sea,
Wearing shoes made of plants, armoured
With bow and dagger in hand, the hunter,
Driving spotted deers, went about the woods
And he reached Tirumāl,
Who was in the forest under a banyan tree,
Renouncing the world doing *tapacu*.
To the hunter he seemed a terrified deer.
His manly figure to him appeared like a deer.
The hunter whose eyes resembled fish'
Took his bow and shot an arrow
At the figure which he thought was a deer.
The arrow with the hunter's muscle power
Hit Kaṇṇaṉ, pierced and came out the other side.
It injured, pierced Kaṇṇaṉ's lotus like feet.

1. *Ōm Namō Nārāyaṇa.*

மண்ணையுண்ட மாயன் மயக்கம்வந்து பூமியின்மேல்
வெண்ணையுண்ட மாயன் விதனம் பொறுக்காமல்

மூச்சத்து மேலும் முகமும் வெளுப்பேறி[1]
பேச்சத்து மேலும் பிரக்கினையுந் தோத்தாமல்

**வேடன் வந்து பார்த்தல்**

தானே அசந்து தனியே கிடக்கயிலே
மானெய்தோ மென்று மகிழ்ந்து[2] சிலைவேடன்

பதையாய தமர்ந்ததென்று பாங்குடனே ஓடிவர
வதைபட் டலைந்துவிட்ட மானென்று பார்ப்பளவில்

**வேடனின் வருத்தம்**

குதையம்பு பட்டுருவிக் கோபாலர் தான்கிடக்க
இதைவந்து பார்த்து இனிதுடைய வில்வேடன்
கதையோ கதைப்பயனோ காலத்தின் வல்வினையோ

விதியோ விதிப்பயனோ வேதாவின் கற்பனையோ[3]
மதியோ மதிமயக்கோ மகாதேவர் கற்பனையோ

ஏது விதிவசமோ எம்பெருமாள் தன்மீதில்
தீதுவரக் காரியமென் செய்த தவக்குறையோ[4]

மானென் றெனைமயக்கி வந்த விதிவசமோ
தானென் றுலகளந்த தம்பிரான்[5] மானெனவே

பொய்மான் போலவந்த புதுமை யறியாமல்
மெய்மா னென்றெண்ணி விரும்பிநா ணெய்துவிட்டேன்

**24.76.** மண்ணையுண்ட மாயன் - குழந்தைப் பருவத்தில் மண்ணைத் தின்ற கண்ணன். **24.77.** விதனம் - வேதனை. **24.78.** முச்சத்து - மூச்சு அற்றுப் போகும்படி. வெளுப்பேறி - இரத்த ஓட்டக் குறைவால் முகம் வெளிறி. **24.79.** பேச்சத்து - பேச்சு அற்று என்பதின் பேச்சுவழக்கு. பிரக்கினை - உணர்வு. தோத்தாமல் - தோன்றாமல். **24.80.** கிடக்கயிலே - மண்ணில் கிடக்கும் பொழுது. **24.82.** பதையா தமர்ந்த தென்று - அதிகம் பதைத்து ஒலிகள் எழுப்பாமல் மாண்டுவிட்டது என்று என்ற பொருளில். **24.84.** குதை அம்பு பட்டு - காலைத் தைத்து துவாரமிட்ட அம்பு பட்டு. கோபாலர் - கண்ணன். **24.85.** இனிதுடைய - மான் வேண்டி மனம் மகிழ்ந்த. **24.86.** கதையோ - கற்பனைக் கதையோ என்ற பொருளில். **24.87.** வேதா - பிரம்மன். கற்பனை - கட்டளை. **24.88.** மதி மயக்கோ - அறிவில் ஏற்பட்ட தடுமாற்றமோ. மகாதேவர் - சிவன். **24.89.** ஏது - என்ன. **24.92.** தானென்று உலகளந்த தம்பிரான் - தானே உலகம் என்று அதை அளந்த இறைவன்; இங்குக் கண்ணனைச் சுட்டியது. **24.93.** புதுமை - அதிசயம். **24.96.** முகுந்தன் - திருமால்; இங்குக் கண்ணனைச் சுட்டியது.

சு.சொ : 1. வெளுப்பேரி 2. மகிள்ந்து 3. கற்பினையோ 4. தவக்குரையோ 5. தம்பிறான்

Māyan̲ who once ate soil[1] fainted, fell on the ground.
Māyan̲, fond of butter couldn't bear the pain.
He lost his breath, face turning pale, he
Lost his tongue, losing His senses.
He lost his strength and alone lay down.
Feeling happy he'd got the deer, the hunter
Thought the deer died without a twitch.
Came he running to collect the game
He found Kaṇṇan̲ with pierced feet.
The hunter who enjoyed hunting said,
"Illusion?, imagination?
My evil time? Fate? Fruits of my fate?
Or is it at the behest of Piramman̲?
Is it confusion of the mind?
Is Mahātēvar[2] conjuring this up?
Oh curse my fate! Why this grief
To my Lord Kaṇṇan̲?
Were my meditations faulty?
Did fate deceive me that it was deer?
The Lord who measured the worlds did seem
To me like a deer and I knew not
An illusion it was and thinking
It was a deer I shot the arrow.Oh dear!

1. As a child he ate. 2. God of creation, one of the trinity.

என்செய்வே னென்விதியை யேதென் றறியேன்
முன்செய்த தீவினையோ முகுந்தன்மே லம்புபட

வஞ்சனைக ளல்ல மனத்தறிய வந்ததல்ல
கஞ்சன்தனை வதைத்த[1] கார்வண்ண னென்றறியேன்

பாவியு மானேனான் பட்சைமால் நாரணர்க்குத்[2]
தீவினைகள் செய்தேனே சென்மமென்ன சென்மமினி

என்றுசிலை வேடன் யேங்கி விழுந்தலறிக்[3]
குன்று தகர்ந்து குவலையத்தில் வீழ்ந்தாப்போல்

அலறி அபயமிட்டு ஐயோசிவ னேயென்று
தலையிலே தானறைந்து[4] தானழுதான் வில்வேடன்
வில்வேடன் தானடுங்க மெய்மகிழ்ந்து[5] கோபாலர்

## கண்ணனிடம் வேடன் அழுதுரைத்தல்

அழுதவனைத் தேத்தி யாதரித்து வாவெனவே
தொழுதேயவன் தானுந் தூரநின்று வாய்புதைத்து

என்தம்பி ரானே எளியோர்க் கெளியவனே
உந்தன் மலர்ப்பதத்தி லூடுருவி அம்புதைக்க

எய்தேனே பாவி யெழுநரகில் வீழ்கவென்றே[6]
மைதவழும் மேனியிலே வடுவர யெய்ததொரு

அம்புதொட்ட கையை அறுத்துமுன்னே வைப்பேனென்றான்
வேட னிவைசொல்ல வெருண்டெழுந்து மாயவரும்

**24.96.** முகுந்தன் - திருமால்; இங்குக் கண்ணனைச் சுட்டியது. **24.97.** வஞ்சனைகள் அல்ல - நான் மனத்தில் கொண்ட வஞ்சகத்தால் நடந்ததல்ல என்ற பொருளில். மனத்தறிய வந்ததல்ல - மனம் ஒப்பி நடந்த செயல் அல்ல என்றவாறு. **24.98.** கஞ்சன் - கண்ணனின் மாமன் முறையினன். வதைத்த - கொன்ற. கார்வண்ணன் - கார் மேகம் போலும் கரிய நிறமுடையன்; கண்ணன். **24.99.** பட்சை மால் - பச்சை மால் என்பதின் பேச்சு வழக்கு. **24.100.** சென்மம் - ஜன்மம்; இப்பிறப்பு. **24.101.** சிலைவேடன் - வில்லைக் கையில் கொண்ட வேடன். **24.102.** குன்று - சிறுமலை. குவலையம் - உலகம். **24.105.** மெய்மகிழ்ந்து - உள்ளம் மகிழ்ந்து; இங்கு தான் வைகுண்டம் செல்ல இருப்பதை மனதில் எண்ணி மகிழ்ந்து என்ற பொருளில். தேத்தி - தேற்றி என்பதின் பேச்சுவழக்கு; ஆறுதல் சொல்லி. **24.107.** வாய் புதைத்து - கையால் வாயை மூடி பணிவினைக் குறிக்கும் ஒரு வகை அங்க அடையாளச் செயல். **24.110.** நரகு - நரகம். **24.111.** மைதவழும் மேனி - மை போலும் கருத்த மேனி. வடு - அம்பு தைத்ததால் ஏற்பட்ட புண்ணின் தழும்பு. **24.113.** வெருண்டெழுந்து - வேகமாக எழுந்து.

சு.சொல் : 1. வதைத் 2. நாரணற்கு 3. தலசி 4. தானரைந்து 5. மெய்மகிள்ந்து 6. வீள்கவென்றே

What shall I do? I don't know! My fate!
Was it my previous sin that
The arrow did hit Mukuntaṉ?
Premeditated it was not!
It was not on purpose done, I didn't know
He was Kaṇṇaṉ the one who slew Kamcaṉ[1].
I've sinned against Nārāyaṇaṉ
I've done harm! what use is this birth?"
Saying so the hunter shrilly cried.
Like a fragmented hill fell on the ground
Shrieked, asked for forgiveness, prayed to Civaṉ.
Beating his head the hunter uncontrollably wept.
Seeing the shivering hunter,
Kaṇṇaṉ grew very happy.
Kaṇṇaṉ consoled him with comforting words.
Paying obeissance, covering his mouth,
The hunter at a distance stood.
"My Lord! dear to the simple folks!
To pierce your flower-like feet with an arrow
I shot! Let me fall in the seven hells!
I'll place my hand that caused the wound
On you dark complexioned body."
As the hunter spoke, Māyaṉ got up with force.

1. Uncle of Kaṇṇaṉ.

## கண்ணனின் ஆறுதலுரை

தோசமில்லை யுன்மீதில் சும்மா மலையாதே
நமக்கு முடிவிதுகாண் நல்வேடா சொல்லுகிறேன்

கக்குங் கலியுகத்தால் துன்பம் வருமெனவே
வைகுண்டஞ் சேரவென்று வந்தேன் வழிதனிலே
கைக்கொண்ட டெறிந்தகணை[1] காலில்வந்து தைத்ததுகாண்

முடிவு சரியாக முடிந்த விதிப்பயனோ
மடிந்த வுயிர்பிரிந்து வைகுண்டம் போய்ச்சேர

போவ தறியாமல் புலம்புவரோ நீவேடா
வார விதிவந்தால் மாட்டோமென்றால் போய்விடுமோ

எந்தவிதி வந்தாலென் என்னவிதி யானாலென்
இந்த மயக்கமதை இப்போதே விட்டுவிடு

## கண்ணன் வேடனிடம் உதவி வேண்டுதல்

உன்செய்தி பார்க்கில்[2] உன்மீதில் குற்றமில்லை
என்செய்தி சொல்லுகிறேன் இதமா யுதவிசெய்வாய்

## வேடனின் பணிவும் கண்ணன் உரையும்

நல்லதென்று வேடன் நாரணரைத் தான்பணிந்து
சொல்லுமென்று வாய்புதைத்துச் சோம்பி முகம்வாடி

வாட்டமுட னின்று வல்வேடன் தான்கேட்க
நாட்டமுடன் தானும் நம்பெருமா ளேதுசொல்வார்

தாராரு மத்திபுரந் தன்னிலே தானேகிச்
சீராக ஐவர் சிறந்தங் கிருப்பார்கள்
நேராக வேநடந்து நிமிசத்தி லிப்போது

**24.114.** தோசமில்லை - தவறொன்றுமில்லை. மலையாதே - திகைப்படையாதே. **24.115.** நமக்கு முடிவிதுகாண் - நான் வைகுண்டம் செல்வதற்கான காலம் இது; மண்ணுலக வாழ்வின் முடிவு நேரம் என்ற பொருளில். **24.116.** கக்குங் கலியுகம் - விஷத்தைக் கக்கும் கலியுகம். **24.118.** கணை - அம்பு. **24.122.** வார - வருகிற என்பதின் பேச்சுவழக்கு. **24.125.** உன் செய்தி பார்க்கில் - உன் செயலைப் பார்த்தால். **24.126.** இதமாய் - மனதிற்கு இதமாய். **24.128.** சோம்பி, முகம் வாடி - மன வாட்டத்திற்கான மெய்ப்பாட்டு அடையாளங்களைக் குறித்தது. **24.130.** ஏது சொல்வார் - என்ன சொல்லுவார். **24.131.** தாராரும் அத்திபுரம் - படைகள் ஆரவாரிக்கின்ற அஸ்தினாபுரம். ஏகி - சென்று. **24.132.** ஐவர் - பாண்டவர் ஐவர். **24.133.** நிமிசம் - நிமிடம் என்பதின் பேச்சுவழக்கு.

சு.சொ : 1. டெரிந்தகணை 2. பாற்க்கி

**Kaṇṇaṉ's comforting words**

"You have not sinned, so don't panic?
O good hunter, this is my end.
Knowing venemous *kali yukam*
Would bring troubles I came here.
Here on my way to *Vaikuṇṭam*
The arrow from your hands hurt my leg.
Is fate goading me on to a predestined end?
Souls of the dead would reach *Vaikuṇṭam.*
Knowing it not should you lament. O hunter?
Fate never takes no for an answer.
No one knows how one's fate would be.
This moment rid yourself of delusion.
Viewing things from your angle,
It's not your fault, I tell you
It's my problem, you help me with care."

**The Hunter's humility and Kaṇṇaṉ's Statement**

Paying obeisance the hunter agreed.
With a fallen face, covering his mouth,
Greef stricken the strong hunter asked
Lord Kaṇṇaṉ to speak.
With relish the Lord said as follows:
"Go to Hastiṉāpuram, where the armies do bustle about.
There five persons in grandeur stay.
Walk fast and in jiffy reach there.

தன்மர் நகுலன் சகாதேவன் கேளாமல்
வன்மம் வெளித்தோன்ற வாராமலே[1] நீயும்

வீமன் விசையனிடம் விளம்பியே யிப்போது
தாம ழைத்துவர[2] தான்சொன்னா ரென்றுசொல்லி

வேறொன்றுஞ் சொல்லாமல் விபரீதங்கள் வந்ததென்று
கூறென்று[3] சொல்லிவிட்டார் கூறவேடன் தன்னிடத்தில்

### வேடன் வணங்கி அஸ்தினாபுரம் அடைதல்

அவ்வசனங் கேட்டு அயர்ந்து சிலைவேடன்
இவ்வசனஞ் சொல்லு மிராகவனைத் தெண்டனிட்டு

வழிகூடித்[4] தானடைந்தான் மனதிடைந்து தான்வேடன்
பழிபாவம்[5] வந்துதென்று பயந்து திசைநோக்கிக்

காடு கடந்து கடுமலைகள் தான்கடந்து
நாடுங்கா டுஞ்சென்று[6] நன்னகரி யூடேபோய்

நாலு தெருவு நடுத்தெருவுந் தான்கடந்து
கொலுவு மரண்மனையுங் கொத்தவர்கள் தாமிருக்கும்

### வீமன், விஜயனிடம் நடந்ததைச் சூட்சமமாக வேடன் கூறுதல்

கோட்டை தனில்சென்று குருகுலத்தோர் தங்களுட[7]
வீட்டையுங் கண்டு வீமன் விசையனிடம்

அச்சுத னார்சொன்ன அந்தரங்க முள்ளதெல்லாம்
உச்சிதமாய் வேட னுரைத்தான் மனம்பதறி

அந்தமொழி [8] தன்மர் அறியாம லென்றுரைத்தார்
இந்தமொழி கேட்டு யென்செய்வோ மின்றிவர்கள்

**24.134.** கேளாமல் - கேட்காமல். **24.135.** வன்மம் - சூழ்ச்சி; மனக்குறிப்பு எனினும் அமையும். **24.137.** தாமழைத்து - கண்ணனாகிய நான் அழைத்து. **24.138.** விபரீதங்கள் - ஆபத்துகள். **24.140.** அயர்ந்து - சோர்ந்து. **24.141.** இராகவன் - திருமால்; கண்ணனைக் குறித்தது. தெண்டனிட்டு - அடிபணிந்து வணங்கி. **24.142.** மனதிடைந்து - மனம் வருந்தி. **24.143.** திசை நோக்கி - அஸ்தினாபுரம் இருக்கும் திசையினை நோக்கி. **24.145.** நன்னகரி - நல்ல நகரமாம் அஸ்தினாபுரம். ஊடேபோய் - உள்ளாகச் சென்று. **24.146.** நாலு - நான்கு என்னபதின் பேச்சுவழக்கு. **24.147.** கொலுவும் அரண்மனை - பாண்டவர்கள் கொலுவிருக்கும் அரண்மனை. கொத்தவர் - கொற்றவர் என்பதின் பேச்சுவழக்கு. **24.148.** தங்களுட - தங்களுடைய என்பதின் மரூஉ. **24.150.** அந்தரங்கம் - இரகசியம். **24.152.** அந்தமொழி - பாண்டவர்கள் ஐவருள் வீமனும் அருச்சுனனும் மட்டுமே வனத்துள் வந்து என்னைக் காண வேண்டும் என்று கண்ணன் வேடனிடம் கூறிய அந்த மொழி.

சு.சொ : 1. வாறாமலே 2. ளைத்துவர 3. கூரென்று 4. வளிகூடி 5. பளிபாவம் 6. காசென்று 7. தங்கமுட 8. அந்தமொளி

Tarmar, Nakulaṉ, Cakātēvaṉ.
Should not know, your purpose.
Inform only Vijayaṉ and Vīmaṉ, none else should know.
Tell them that I do send for them.
Tell them there was an accident.
Speak nothing of what happened here."
Thus he sent a message through the hunter.
Listening the hunter was done in.
He paid obeisance to Kaṇṇaṉ.
With deep mental agony he walked away.
Afraid that he had committed a sin, he
Crossed woods and hills towards his goal.
He crossed places and entered the city.
Crossing many streets, crossing the main road,
He reached the castle where the kings lived.
Inside the fort he found the houses of
Those of the great *Guru* clan'
There he met Vīmaṉ and Vijayaṉ.
Whatever secret Kaṇṇaṉ said,
The high strung hunter conveyed all.
He said that Tarmar should not know about it.
Hearing the words, nonplussed they were.

## இருவரின் மனக் குழப்பம்

வேடன் தனையனுப்பி வீமன் விசையனுந்தான்
ஏடலரும் தன்மர் இருதாளை பூண்டுகொண்டு

விதியோ விதிமயக்கோ மேகவண்ண ரிப்போது
அதிசெயமா யெங்களுக்கு ஆளனுப்பி விட்டகதை

ஏதோ தெரியாது யிப்புதுமை தான்கேட்டோம்
சூதோ அவருடைய சூட்சமோ கற்பனையோ[1]

தம்பி நகுலன் சகாதேவன் தன்னுடனும்
உம்பரே யுந்தமக்கு முரையாமலே நாங்கள்

அண்ணருட ரென்னைவர அனுப்பிவிட்ட கற்பனைதான்[2]
எண்ணமென்ன சாமி இனிமேல் கருமமென்ன

என்று விசையன் இவ்வசனம் தான்கேட்க
மன்றுபுகழ்[3] தன்மர் மயங்கி மனதிடைந்து

## தர்மர் தம்பியர்களுக்குக் கூறுமுறை

தம்பிரா னைவர்[4] சகாயன்தா னிப்போது
எம்பிரான்[5] கற்பனைக்கு யென்னவென்று செல்வேனான்

காரணமாய்க் காணுதுகாண் கார்வர்ணர் தன்செய்தி
நாரணனார் சொல்கேட்டு நடந்தோ மிதுவரையும்

என்னவினை வந்தாலும் ஏதுவகை வந்தாலும்
சொன்னமொழி தப்புவரோ சோதினைகாண் தம்பியரே

எப்படியே சித்தமது எம்பெருமாள் தன்னினவு
அப்படியே யல்லாது அன்றுமுத லின்றளவும்

**24.155.** ஏடலரும் - பூவிதழ் போல் மலர்கின்ற. தாள் - பாதம். **24.159.** சூது - வஞ்சனை. சூட்சம் - சூழ்ச்சி. கற்பனை - கட்டளை. **24.161.** உம்பரே - உயர்ந்தவரே; இங்குத் தர்மரைக் குறித்தது. உரையாமல் - கூறாமல். **24.163.** இனிமேல் கருமமென்ன - இனி மேல் நாங்கள் செய்யும் செயல்தான் யாது? என்றவாறு. **24.165.** மனதிடைந்து - மனம் குழம்பி. **24.167.** கற்பனை - வீமன் மற்றும் அர்ச்சுனனை வனத்துள் வரச் சொன்ன கண்ணனின் கட்டளை. **24.168.** காரணமாய் - உள் நோக்கம் கொண்டதாய். காணுது - காண்கிறது என்பதின் பேச்சுவழக்கு. **24.171.** சொன்ன மொழி தப்புவரோ - கண்ணன் சொன்ன கட்டளையைத் தட்டுதல் முறையோ என்ற பொருளில். சோதினை - சோதனை என்பதின் பேச்சுவழக்குச் சொல். **24.172.** தன்னினவு - இறைவனாம் கண்ணனுடைய எண்ணம்.

---

சு.சொ : 1. கற்ப்பினையோ 2. கற்ப்பினைதான் 3. மன்றுபுகள் 4. தம்பிறா 5. எம்பிறான்

Vīmaṉ, and Vijayaṉ sent the hunter off.
They caught hold of Tarmar's flower like feet.
"It is the quirk of fate that Kaṇṇaṉ
Has sent for us, How very strange!
We don't know! pray, clarify to us.
Is it a trick, some plan or His command?
Without the knowledge of Nakulaṉ.
Cakātēvaṉ and of you too,
He's sent for me to go with brother Vīmaṉ.
What's on His mind? What shall we do?"
Vijayaṉ sought clarification
Utterly confused Tarmar said,
"He, who is the saviour of the five,
Has commanded thus and what's there to say?
There seems to be a deep purpose
In Kaṇṇaṉ's urgent message.
We had been listening to Kaṇṇaṉ till now.
Come what may ! Let any trouble come!
Dare one violate His command?
His will and His advice only

சொல்படியே நாமும் தொண்டுபடவே கடனாம்
வில்பிடித்த சேவுகனே வீமனே யுங்களைத்தான்

வலுவுடையா ராகையினால் வரச்சொன்னா ருங்களையும்
மெலியுடை யோராக வீரியத்தை வாங்கவென்று

வரச்சொன்னார் நீங்கள் வலிவசமாய்க் கேட்பதற்குத்
தரச்சொல்வார் கையதனைத் தானகல நின்றுவிடும்

**வீமனும் விஜயனும் வனம் ஏகுதல்**

அகலநின்று காரியங்கள் ஆசாரமாய் வணங்கிச்
சகலகலை யறியுந் தாமோதர னிடத்தில்

போய்வாரு மென்று பொருந்தவிடை கொடுத்தார்
சேய்போ லிருவருமே தெண்டனிட்டு தன்மரையும்

நடந்தார் வனந்தனிலே நாரணரைத் தான்தேடிக்
துடர்ந்தார் வனங்களெல்லாஞ் சோதித்துத் தானோடிச்

சந்தனச் சோலையிலே தனித்தாலின் கீழேதான்[1]
அந்தணரு மங்கே யழுந்தும் பரதாபம்

தோத்திதுகா ணென்றிருவர் துவளநடந் தோடிக்
காத்துருவங் கொண்டு கடுகநடந்து சென்று

**கண்ணனைக் கண்டு இருவரும் கதறுதல்**

அந்தவனந் தனிலே அருச்சுனனும் வீமனுமாய்
இந்தவன மாவென் றிசைத்தோடி வந்துநின்று

**24.174.** தொண்டுபடவே கடனாம் - கண்ணனுக்குத் தொண்டு செய்வதே நம் கடமையாம். **24.175.** வில் பிடித்த சேவுகன் - வில்லைக் கையில் ஏந்திய வீரன். **24.176.** வலுவுடையார் - வலிமை உடையவர். **24.177.** வீரியம் - வலிமை. **24.178.** வலி வசமாய் - வலிமையினை வசமாய். **24.180.** ஆசாரமாய் - ஒழுக்கமாய். **24.181.** சகல கலை - அனைத்துக் கலைகள்; ஆய கலைகள் அறுபத்து நான்கும் எனினும் அமையும். **24.183.** சேய் போல் - குழந்தையைப் போல். தன்மர் - தருமர். **24.185.** துடர்ந்தார் - தொடர்ந்தார் என்பதின் பேச்சுவழக்கு. சோதித்து - ஆராய்ந்து. **24.187.** அந்தணர் - இங்குக் கண்ணனைக் குறித்தது. அழுந்தும் - அம்பு தைத்த வேதனையால் வருந்தும். பரதாபம் - பரிதாபம் என்பதின் பேச்சுவழக்கு. **24.188.** தோத்திது காண் - தோன்றுவது காண் என்பதின் பேச்சு வழக்கு. துவள நடந்து - கை கால்கள் சோர்ந்து போகும்படியாக நடந்து. **24.189.** காத்துருவம் கொண்டு - காற்றின் உருவினை எடுத்து; இங்கு வீமன் அர்ச்சுனன் ஆகிய இருவரின் வேகமான நடையினைக் குறிக்கக் கூறப்பட்டது; காத்து என்பது காற்று என்பதின் பேச்சுவழக்கு. கடுக - விரைவாக.

---

சு. சொ : 1. கீளேதான்

From day one we are following.
We are obliged to serve Him thus.
He's asked you, the one with the bow
Along with Vīmaṉ because you're strong.
As he is weak, aspiring to get strength,
You are asked there , for himto get strong.
He would hold your hand, and that is all.
Beware! Pay obiesance, keeping the distance.
Learn all arts from Kaṇṇaṉ.
Good bye!" thus he gave leave to them.
Like kids they knelt and obeisance paid.
And they walked in search of Nārāyaṇaṉ.
Hurriedly walked searching the forests deep.
Sandal tree grove and under the banyan tree.
The learned one[1] in agony was sitting.
Seeing whom the two with faltering steps ran near.
They took speed like wind walking very fast.
Arccuṉaṉ and Vīmaṉ in the forest
Found that it was the place, came running.

1. Kaṇṇaṉ.

அண்ணல் திருமாலென் றறிந்து[1] மனமிடைந்து
கண்ணருந்தான் மண்மீதில் காயத் துடன்கிடக்கக்

கண்டே விழுந்தார் கதறி [2] அபயமிட்டார்
விண்டார் மனத்துயரால்[3] விண்ணுமண்ணு தானதிர.

**விருத்தம்**

25. அய்யகோ ராமா ராமா ஐவரைப் பிரிந்து கானில்
மெய்யது புழுதி தாவ மேனியும் நிறமும்[4] வேறாய்
நய்யவும் வசமோ வுந்தன் நாமமு மறந்து நாங்கள்
உய்யவே யினிமேல் பாரி லுண்ணவும் வேணு மோதான்.

26. காயமும் வருமோ யெங்கள் கண்ணரே கண்ணா வுந்தன்
ஞாயமு மிதுவோ ஐயா நாங்களிங் கிருக்க லாமோ
மாய மாயெய் தாரோ மாயனென் றறிதி லாரோ
ஆயனே யெய்தார் சொல்லு மவனுயிர் போக்க வென்றார்.

27. பார்ப்பார் விழுவா ரெழுந்திருப்பார் பழியோ[5] குலையோ முடிந்துதென்பார்
கேட்பார் திருமால் முகம்பார்த்துக் கெதியோமதியோ விதியோ யென்பார்
ஏற்பா ரிதுதான் செய்தவினை எய்தார் படுவா ரித்துயரம்
காப்பார் திருமா லென்னாளும்[6] கயிலைக் கடவுள் அவர்தாமே.

**நடை**

28. என்று புலம்பி இருபேருந் தானழுது
குன்று மலைபோலக் குதித்து விழுந்தலறி [7]

அழுது பிரண்டுருண்டு அபைய மபையமென்று
புழுதியின் மேல்விழுந்து புலம்பிப் பரதவிக்கப்

**24.192.** மனம் இடைந்து - மனம் வருந்தி. **24.195.** விண்டார் - மனம் குமுறி அழுதார். **25.3.** நய்யவும் - நையவும் என்பதின் பேச்சுவழக்கு; மெலிந்து போகவும். **25.4.** உய்யவே - பிழைக்கவே. உண்ணவும் - உயிர் வாழ வேண்டி உணவு உண்ணவும். வேணுமோ - வேண்டுமோ. **26.1.** காயம் - அம்பு பட்டதால் ஏற்பட்ட உடல் புண். **26.2.** ஞாயம் - நியாயம் என்பதின் பேச்சுவழக்கு. **26.3.** மாயமாய் எய்தாரோ - அம்பினை உம் மேல் மாயமாக எய்து விட்டாரோ என்ற பொருளில். மாயன் - திருமால். **26.4.** எய்தார் சொல்லும் - கண்ணனே உம் மீது அம்பு எய்தவர் யார் என்று சொல்லும். **27.1.** விழுவார் - துயரத்தால் கீழே விழுவார். குலையோ - கொலையோ என்பதின் பேச்சுவழக்கு. **27.2.** கெதியோ - கதியோ. **27.3.** ஏற்பார் இதுதான் செய்து வினை - கண்ணன் மீது அம்பு எய்தவன் அதன் தண்டனையை ஏற்பான் என்ற பொருளில். எய்தார் படுவார் இத்துயரம் - அம்பெய்தவன் இத்துயரத்தை அனுபவிப்பான் என்ற பொருளில். **28.3.** பிரண்டு உருண்டு - மண்ணில் உடம்பை உருளச் செய்து. **28.4.** பரதவிக்க - பரிதவிக்க என்பதின் பேச்சு வழக்கு.

சு.சொ : 1. றரிந்து 2. கதரி 3. மனத்துயறால் 4. நிரமு 5. பாரியோ 6. லென்னாமும் 7. விழுந்தலரி 8. வல்லவறார்

Finding Lord Kaṇṇaṉ, they broke down.
Kaṇṇaṉ on the earth, wounded lay.
Seeing which they wailed, screamed and wept.
For earth and sky to tremble they wailed.
"Alas! Rām our Lord! leaving us, the five, behind
Your body in dust losing its colour
Should you suffer? Forgetting your name,
Is it fair we, eat, and live in the world?
Lord Kaṇṇaṉ! How can you be wounded?
Where's justice? Should we live any more?
Not knowing that Māyaṉ you are
Has someone stealthily hurt you?"
They'd look at him, fall down, get up,
"It's all over!" they'll lament.
Looking at this face distorted in pain
They said" Is it testing fate or a plot?
Those who caused this would pay for it!
Surely in agony they'll suffer!
Kaṇṇaṉ, the god at Kailash would save!"
Lamenting thus they both cried aloud,
Wept, fell down shrieking as if huge hills were falling.
Wept and rolled on the ground seeking mercy.
On dust they fell, lamented and cried in grief.

## வீமனும் அருச்சுனனும் கண்ணனிடம் வினாவுதல்

பூமி யதிர புவனமெல்லாந் தானதிர
சாமியுந் தன்மீதில் சரந்தொடுக்க வல்லவரார்[1]

உலகளந்தான் பாதமதில் யூடுருவி யம்புதைக்கக்
கலகஞ்செய் தாரெவரோ கண்டால் விடுவோமோ

எந்தவிதஞ் சாமி யிடைகூறு வந்துதென்று
அந்தமுள்ள வீமன் அருச்சுனனுந் தான்கேட்கச்
சுந்தரஞ்சேர் மார்பர் சொல்லுவார் நல்வசனம்

## கண்ணனின் பதிலுரை

கேளீர ருச்சுனனே கிலேசமதை விட்டுவிடு
மீளீர் வலுவீமர் வியாகுலங்கள் வேண்டாங்காண்

காலங்கள் தான்முடியும் கற்பினையுந் தோணாமல்
ஞாலங்கள் நடந்து மிகுந்ததவங்கள் தானிருக்கச்

சீலமுட னுங்களுக்குத் தெரியவே செய்திசொல்லி
ஏலவே கானகத்தில் யிருப்போந் தவமெனவே
நாமொன்று தானினைத்தால் நடுவிருந்தான் தன்செயல்தான்

இந்த வுடலுயிரு யெப்போதுந் தான்தனதாய்ச்
சொந்தமோ பூவுலகில் சுமந்தலுத்த காலமெல்லாம்

மெய்யென் றிருந்தோம்நாம் மேதினியில் நம்மதென்று
பொய்யாய் முடிந்துகாண் புத்தியுடன் கேளீர்

மோசம் வருவதற்கு முன்னறிவு நன்சியலோ
பாசம் பிடித்திழுத்தால் பக்க விலக்குமுண்டோ

28.5. புவனம் - உலகம். 28.6. சாமி - இறைவன்; கண்ணனைக் குறித்தது. சரம் - அம்பு. 28.8. கலகம் - துன்பம். 28.9. இடைகூறு - இடையூறு என்பதின் பேச்சுவழக்கு. வந்துதென்று - வந்ததென்று. 28.10. அந்தமுள்ள - அழகுடைய. 28.11. சுந்தரஞ் சேர் மார்பர் - அழகு சேர்ந்த மார்பினன்; கண்ணன். 28.12. அரிச்சுனன் - அர்ச்சுனன். கிலேசம் - துன்பம். 28.13. மீளீர் - துன்பத்திலிருந்து மீளுவீர். வியாகுலங்கள் - துன்பங்கள். 28.14. கற்பினையுந் தோணாமல் - நமது கற்பனைக்கும் தோன்றாதபடி என்ற பொருளில்; தோணாமல் என்பதின் பேச்சுவழக்கு 28.15. ஞாலம் - உலகம். 28.16. சீலம் - பெருமை. 28.17. ஏலவே - ஏற்கனவே. 28.18. நடுவிருந்தான் - எல்லா உயிர்களுக்கும் நடுவாக இருப்பவன். 28.20. சுமந்தலுத்த - சுமந்து திரிந்த. 28.21. மேதினி - உலகம். 28.22. முடிந்தது காண் - முடிந்ததைப் பார். கேளீர் - கேட்பீர். 28.23. மோசம் - உடலுக்கு உண்டாகும் அழிவைக் குறித்தது. சியல் - செயல் என்பதின் பேச்சுவழக்கு. 28.24. பாசம் - எமனின் பாசக் கயிறு. பக்க விலக்குமுண்டோ - பக்கத்திலிருந்து விலக்கி விடுவார் யாருமுண்டோ.

சு.சொ : 1. வல்லவரார்

"Earth and universe to tremble
Who's got the power to shoot you O Lord?
Who could shoot an arrow to pierce
The feet of the one who measured the worlds?
If he's found will we leave him alive?
How did this happen tell us O Lord!"
Handsome Vīmaṉ and Arccuṉaṉ asked thus.
Kaṇṇaṉ of pretty chest answered them;
"Listen O Arccuṉaṉ, get rid of your grief!
Strong Vīmaṉ get out of your misery!
Time defies imagination.
Living, with penances aplenty,
I wanted to tell you of my leaving.
Thought I'd stay in the forest meditating.
If we have plans, god has his own!
Body and soul are never related.
Wearied we grew of life on earth.
Everything's ours, we deluded our selves.
It's the end of illusion! listen to me!
Foreknowledge is useful before misfortune strikes.
When Yamaṉ's[1] rope pulls who can save us?

1. Lord of death. He is suppposed to take the lives of people with a rope called *Pācam*

நாசம் வருங்காலம் நல்லறிவு போய்விடுங்காண்
நேசம் புலையாட்டாய் நினைவுதடு மாறிவிடும்

வல்லமையால் வாழ்வதுண்டோ[1] மன்னவரே பூமிதன்னில்
நல்லவர்களே நீங்கள் நமக்குதவி யாகவந்தீர்

பயிருமொரு வேலியுமாய் பஞ்சவரே நாம்தாமும்
உயிரு முடலதுபோல் உறவாகித் தானிருந்தோம்

இப்போது வந்த இடைகூறு கானகத்தில்
செப்பமுடன் வேடன் சிலையெடுத்து மான்துரத்தி
ஒப்பமுடன் வரவே யோடிவந்த மானதுதான்

என்னுருவ மாக யிருந்தபடி யாலே
மின்னுருவ வேடன் வில்பிடித்து யெய்துவிட்டான்

வந்து விழுந்தழுதான் மண்ணும்விண்ணுந் தானதிர
வந்தழுத வேடனைத்தான் வாவென் றரவணைத்து

அங்கே யனுப்பிவைத்தேன் அந்தரங்க மாயுமக்கு
இங்கேநீர் வந்தீர்காண் என்துயரந் தீர்ந்ததுகாண்

## கண்ணன் வீமன், அருச்சுனன் இருவரிடமும் வேண்டுதல்

அம்புபட்ட வேதனைதான் ஆத்த முடியுதில்லை
வம்புபடாத தேகம் வடுபட் டிருக்குமதோ

ஆணி நரம்பு அறுபட்டுப்[2] போனதினால்
பேணி யெனைப்பார்த்துப் பிழைப்பிக்க[3] வல்லீராய்க்

காயத்துப் பார்த்துக் களைநரம்பு தான்பார்த்து
நேயத் துடனே நெறியாகத்[4] தானிருந்து

**28.26.** நேசம் - உறவு முறைகளால் உண்டாகும் பாசம். புலையாட்டாய் - தீய நெறியில் ஒழுகி ஆட்டமிட்டு. **28.27.** வல்லமையால் வாழ்வதுண்டோ - வல்லமையோடு ஒழுக்க நெறிகளைக் கடைபிடித்து யாவரே வாழ்ந்தார் என்ற பொருளில். **28.29.** பஞ்சவர் - பாண்டவர். **28.31.** இடைகூறு - இடையூறு என்பதின் பேச்சுவழக்கு. **28.35.** மின்னுருவ வேடன் - ஒளி வீசும் உடலுடைய வேடன். **28.40.** ஆத்த - தாங்க; 'ஆற்ற' என்பதின் பேச்சு வழக்கு. முடியுதில்லை - முடியவில்லை என்பதின் பேச்சுவழக்கு. **28.41.** வம்புபடாத தேகம் - தழும்பு படாத உடம்பு. **28.42.** ஆணி நரம்பு - மேலான முதன்மையான நரம்பு. **28.43.** பேணி - பாதுகாத்து. பிழைப்பிக்க வல்லீராய் - பிழைக்கச் செய்பவர்களாய். **28.44.** காயத்துப் பார்த்து - காயத்தைப் பார்த்து. **28.44.** களை நரம்பு - சேதப்பட்டுப் போன நரம்பு. **28.45.** நேயத்துடனே - அன்புடனே. நெறியாக - முறையாக.

---

சு. சொ : 1. வாள்வதுண்டோ 2. அருபட்டு 3. பிளைப்பிக்க 4. நெரியாகத்

Calamities make good senses take leave.
Affection leads to confusion.
It's end of the illusion! Listen to me!
Can one live on earth by his own strength?
O good ones you came as help to me!
Like crops and fence! O Pāṇṭavars,
Like life and body we were close.
Of the setback at the forest now:
A hunter was chasing a deer with his bow.
As he chased, the deer ran away.
Somehow I looked like a deer to him.
Lightning like, the hunter his arrow shot.
He came close, fell down and cried, wailing.
The crying hunter, I took in arms.
Sent him there to meet you in secret.
You are here, now my misery ends.
The wound by the arrow is painfully sore.
My body sans scars is wounded now.
Severed as the main nerve is.
Taking care try to save my life.
Examine the wound, and the nerve damaged.

சோதித்துப் பாருமென்று சொன்னார்காண் மாயவனார்
ஆதிதான் சொல்ல அருச்சுனனும் வீமனுமாய்

### வீமனும் அருச்சுனனும் மவுனமாயிருத்தல்

உள்ள முருகி யுடம்புகளும் புண்ணாகிக்
கள்ளலருந் தருமர் கடந்துரைக்க மாட்டாமல்
கல்லாய் மரமாய் கருத்தழிந்து[1] நின்றார்கள்
எல்லாம் விதிவசமென் றிப்படியோ நீங்களுந்தான்

### கண்ணனின் வேதனை உரை

நடந்தோம்நகரி மெய்க்க நாமிருந்த காலமெல்லாம்
கிடந்தேன் தனித்தேனான் கிட்டவரப் பயந்தீர்
போதாதோ யிவ்வளவு புதுமையென வுரைத்தார்
காதாரக் கேட்டோமே கண்ணாரக் கண்டோமே
இனியார் சதம்நமக்கு யிளைப்புத்த வேளையிலே
தனியே யினிமாள சங்கரனார் கற்பனையோ[2]

### கண்ணன் கைதர வீமன் அருச்சுனனிடம் வேண்டுதல்

தகையா யிருக்குதுகாண் தம்பியரே யெந்தனக்கு
வகையாய் வருகுதுகாண் வந்திரு வர்கைதாரும்
கைதாரு மிப்போது களைப்புமிக வாகுதுகாண்
மெய்குழறி[3] வாடி விழுமுன்னே கைதாரும்
இப்படியே கோவிந்தன் யியம்பு[4] மொழிகேட்டு
அப்படியே நின்றார்கள் அருச்சுனனும் வீமனுமாய்ப்
போகுதடா சீவன் புண்ணா யுலையுதடா
ஆகுதடா சீவனிப்போது அருச்சுனனே வீமாகேள்

**28.47.** ஆதி - யாவர்க்கும் ஆதியாய் விளங்கும் திருமால்; இங்குக் கண்ணனைக் குறித்தது. **28.49.** கள்ளலருந் தருமர் கடந்துரைக்க மாட்டாமல் - தேன் வடியும் மலர்மாலை அணிந்த தர்மரின் ஆணையாகிய, 'கண்ணன் கை தரச் சொன்னாலும் அகல நின்று விடுங்கள்' என்பதைக் கடந்து கண்ணனிடம் பேச முடியாமல் என்ற பொருளில். **28.50.** கருத்தழிந்து - சிந்தனை அற்று. **28.52.** நகரி மெய்க்க - நகரிலுள்ள பெரியவர்கள் புகழும்படி. **28.53.** கிட்ட வர - அருகில் வருவதற்கு. **28.56.** இளைப்புத்த - மெலிவுற்ற; இளைப்புற்ற என்பதின் பேச்சுவழக்கு. **28.57.** கற்பனையோ - கட்டளையோ. **28.58.** தகை - தாகம். **28.59.** வகையாய் - மயக்கமாய். **28.60.** மிக வாகுது - மிகுதியாக ஆகிறது. **28.61.** மெய் குழறி - உடம்பு தடுமாறி. **28.62.** கோவிந்தன் - திருமால்; இங்குக் கண்ணனைக் குறித்தது. **28.64.** புண்ணாய் உலையுதடா - உடம்பு முழுவதும் புண் வந்தாற்போல் சீரழியுதடா. **28.65.** ஆகுதடா சீவன் - சீவன் உடம்பை விட்டுச் சிறிது சிறிதாய் ஆகிக் கொண்டு வருகுதடா என்ற பொருளில்.

சு.சொ : 1. கருத்தளிந்து 2. கற்பினையோ 3. மெய்குளரி 4. யியம்புமொளி

With love kindly do stay by my side.
Examine with care!" said Māyavaṉ.
When the Lord said so, Arccuṉaṉ, Vīmaṉ
Their hearts meltingd, bodies hurt.
They wore garlands full of nectar.
They could not refuse words of Kaṇṇaṉ.
They were non plussed and stood like trees and stones.
Kaṇṇaṉ, thinking it was fate said "Along with you,
We once walked esteemed towns.
Those were the days, but as is now,
You're afraid to come near me as I'am fallen.
Is this not novelty enough?" said he.
"Our ears are full, we had seen enough!
Now, who's there to succour when we're down?
Is it Caṅkaraṉ[1] who has willed
That we die alone without you?"
Thus said Vīmaṉ and Arccuṉaṉ.
"O my brothers I feel very thirsty.
I feel giddy, come close and give your hand.
Give me a hand as I'm exhausted!
Before my body fails and falls down limp,
Oh! give me your hands! "said Kaṇṇaṉ
As Kaṇṇaṉ spoke, listening to him
Arccuṉaṉ and Vīmaṉ just stood still.

1. Lord Civaṉ.

அப்புவை மண்வந் தடுத்து நெருக்குதடா
அப்புவுந் தேய்வுமா யடுத்து நெருக்குதடா

தேய்வுடனே வாய்வுவையுஞ் சிக்கெனவே கட்டுதடா
வாய்வு யகன்று வழிபார்த்து[1] நிற்குதடா

காயம் விழுமுன்னேயுன் கையா யுதத்தாலே
நேயமாய்த் தூக்கி நிலத்தில்வைக்க மாட்டீரோ

ஆபத்து காக்கிறது ஐவரென்று சொல்வார்கள்
தாபப் படுகையிலே தான்பார்த்து நிற்பீரோ

நிமிசம் பொறாதுகண்டாய் நிர்சீவன்[2] போகுதடா
சமையமடா வீமா தம்பி யருச்சுனனே

**வீமன், அருச்சுனன் இருவர் செயல்**

என்றுழன்று மாயன் யிப்படியே சொல்லுகையில்
நின்ற அருச்சுனனும் நெடியதொரு வீமனுமாய்

தங்கள் தண்டாயுதமும் தனுவையும் நீட்டலுற்றார்
அங்கேயது வழியாய் அவர்பிலத்தை வாங்கலுற்றார்

**கண்ணன் உயிர் நீத்து வைகுண்டம் அடைதல்**

தண்டுந் தனுவுந் தானெடுக்க மாட்டாமல்
விண்டுமன மிடைந்து விள்ளாமலே மருவி

ஒருத்துப்பிலன் குறைந்து[3] வுள்ளயர்ந்து மெயசோர்ந்து
மறுத்துமொன்றும் பேசாமல் வலுவிழந்து[4] நின்றளவில்

**28.66** அப்பு - நீர் **28.67** தேய்வு - நெருப்பு **28.68.** வாயவு - காற்று. சிக்கெனவே - இறுக்கமாகவே என்ற பொருளில் **28.69** வாய்வு - காற்று. இங்கு உயிருக்கு மூலாதாரமான உயிர் எனினும் அமையும். **28.70** காயம் - உடம்பு கையாயுதம் - கையில் வைத்துள்ள ஆயுதம் **28.71** நேயமாய் - அன்பாய். **28.72.** காக்கிறது - காக்கின்றவர் என்ற பொருளில் அமைந்த பேச்சுவழக்குச் சொல் **28.73.** தாபப்படுகையிலே - துன்பப்படுகையிலே. **28.74.** நிமிசம் பொறாது கண்டாய் - ஒரு நிமிடம் கூட இனி உயிரால் இவ்வுடலில் தங்க இயலாது என்ற பொருளில். **28.76.** உழன்று - வருந்தி மாயன் - கண்ணன். **28.77** நெடியதொரு - வளர்ந்ததொரு. **28.78** தண்டாயுதம் - கதை தனு - வில் **28.79.** அவர் பிலத்தை வாங்கலுற்றார் - நீட்டிய தண்டாயுதம் மற்றும் வில் ஆகியவற்றின் மூலம் கண்ணன் முறையே வீமன், அர்ச்சுனன் இருவரின் உடல் பலத்தை வாங்கினார் என்ற பொருளில் பிலம் - பலம் என்பதின் பேச்சுவழக்குச் சொல் **28.81** விண்டு - விஷ்ணு; கண்ணனைக் குறித்தது. மனம் இடைந்து - மனம் மிக வருந்தி விள்ளாமல் - தண்டாயுதம் மற்றும் வில்லினைத் தழுவாமல் **28.82.** பிலன் - பலம் என்பதின் பேச்சுவழக்கு. உள்ளயர்ந்து - மனம் சோர்ந்து. மெய் - உடம்பு.

*சு.சொல் :* 1 வளிபார்த்து 2 நிறசீவன 3 குறைநது 4 வலுவிளந்து

**Kaṇṇaṉ speaks**

"My life's leaving; wounded body hurts.
Life gets exinguished ever so slowly.
Listen to me, Vīmaṉ, Arccuṉaṉ.
Earth squeezes out the water in me.
Fire and water press me together.
Along with fire tightly squeezed is air.
The air has moved and awaits exit.[1]
Before the body falls, with your weapons
Lift me with love, won't you make me stand ?
They say 'The Five'[2] save people from dangers.
When I'm in pain would you be just watching?
Not another moment, life leaves me!
My time's come brother Vīmaṉ, Arccuṉaṉ."

**The act of Vīmaṉ, Arccuṉaṉ**

As Māyaṉ in pain spoke as above,
Arjuṉaṉ and the well built Vīmaṉ proffered
Their bow and club to Him through which
Kaṇṇaṉ started draining their strength.

**Kaṇṇaṉ dies and reaches *Vaikuṇṭaṉ*[3]**

Unable to lift the club and bow
Lord Viṣṇu, heart broken, fainted.
Without touching the proffered club and bow
Strength lost, heart broken with a failing frame
He stood sans a word as He lost all strength.

1. Human body is supposed to be made of the five basic elements - fire, earth, water, space and air. When someone dies the air is supposed to leave the body first. The person is then, dead. 2. The Pāṇṭavars. 3. The abode of Lord Viṣṇu

கருத்த திருமேனி காயாம்பூ[1] மேகவண்ணர்
வெறுத்துப் புவிதனையு மெய்மறந்து தானயர்ந்து

உடலும் வெளுறி[2] யுயிரு மிகப்பதறிச்
சடலந் தனைப்போட்டுத் தப்பினா ரொப்பமுடன்.

**விருத்தம்**

29. நீலம் பரந்து விழிசொருகி நெருப்புத் தணிந்து மேலாகிக்
கோலம் பெரிய வுடல்வேர்த்து கோழை[3] யுடனே சிலேற்பனமும்
ஆலம் பெரிய மிடறிறுக்கி[4] ஆவி யொடுங்கி யறிவழிந்து[5]
சீலம் பெருகும் வைகுண்டஞ் சேர்ந்தார் முகுந்தன் செகத்தைவிட்டு.

### கண்ணனை வீமனும் அருச்சுனனும் அடக்கம் செய்தல்

30. விட்டுப் பிரிந்த திருமாலை வீமன் விசையன் தானெடுத்துத்
தொட்டுப் புவியி லுள்ளடக்கித் துயரத் துடனே விழுந்தழுது
கட்டுப் பிரிந்த தெனவேங்கிக் கானந் தனிலே விட்டகன்று
பட்டுப் பயந்து ஆயுதத்தைப் பதையா தெடுத்தார் தலைமீதில்.

### வீமனும் அருச்சுனனும் செய்தி தெரிவிக்கத் தருமரிடம் போதல்

31. ஆயுதந் தலைமேல் வைத்து அருச்சுனன் வீமன் தானும்
மாயனை யிழந்தோ[6] மென்று மனமெல்லா மிடைந்து புண்ணாய்த்
தூயதோர் தன்மர் கேட்கச் சொல்லுவோம் வாரு மென்று
நேயமாய்க் கானம் விட்டு நிமிசத்தில் வருவ தானார்.

### வீமன் மற்றும் அருச்சுனனின் வருத்தவுரைகள்

**நடை**

32. சீரான[7] வைகுண்டம் சிந்தையுடன் சேர்ந்தபின்பு
பேரான[8] பார்த்தன் பெரியவலு வீமனுமாய்

**28.84.** கருத்த - கருமையான நிறமுடைய. காயாம்பூ மேகவண்ணர் - காயாம் பூ போலும் நிறமுடைய மேகத்தின் நிறத்தை ஒத்தவர்; கண்ணன். **28.85.** புவி - பூலோகம். **28.87.** சடலம் - உடம்பு. ஒப்பமுடன் - முறையுடன். **29.1.** நீலம் பரந்து - விஷ அம்பு காலில் சொருகியமையால் உடம்பெங்கும் நீலம் பாய்ந்து. **29.2.** கோலம் பெரிய - அழகிய பெரிய. கோழை, சிலேற்பனம் - உயிர் பிரியும் பொழுது இவை உடலை அதிகம் வருத்தும் என்பது சித்த மருத்துவக் கொள்கைகளில் ஒன்று. **29.3.** ஆலம் பெரிய மிடறு இறுக்கி - விஷமானது உயிர் செல்லும் மூச்சுக் குழாய் இருக்கும் பகுதியான கழுத்தை இறுக்கி. **29.4.** சீலம் - மேன்மை. முகுந்தன் - திருமால்; கண்ணனைக் குறித்தது. **30.3.** கட்டுப் பிரிந்தது - உறவு விட்டுப் போனது என்ற பொருளில். கானம் - காடு. **30.4.** பட்டுப் பயந்து - கண்ணன் மாண்டதைக் கண்டு அச்சம் கொண்டு. பதையாது - மனதில் குழப்பமில்லாது. **31.2.** இடைந்து - வருந்தி. **31.3.** தன்மர் - தர்மர். **32.1.** சீரான - சிறப்பான. **32.2.** பேரான - புகழ் வாய்ந்த பெரிய வலு - மிகுதியான வலிமை கொண்ட.

சு.சொ : 1. காயாம்பு 2. வெழுரி 3. கோளையுடனே 4. மிடறிருக்கி 5. யறிவளிந்து 6. யிளந்தோ 7. சீறான 8.பேறான

He, complexioned like *kāyam̄*[1] flower,
He, coloured as a dark cloud, left the world.
Forgetting the body, grew very weary,
Exhausted, got flurried, His body paled
He left the body with relish and died.
His body bluish became, and eyes rolled back.
The body temperature fell.
The body beautiful sweated.
Phelgm in throat[2] accumulated.
The poison passed through the big throat.
Life force dwindled and consciousness was lost.
Mukuntaṉ[3] left for *Vaikuṇṭām.*

**Vīmaṉ and Arccuṉaṉ inter Kaṇṇaṉ's body**

Vīmaṉ, and Vijayaṉ[4] lifted the body
Of Tirumāl who had left them
And reverently interred the body.
In grief they fell on ground and cried.
They felt a relationship had snapped.
They left the forest in killing grief.
Frightened were they at Kaṇṇaṉ's death.
Without confusion they carried
Their mighty weapons on their head.
Vīmaṉ and Arjuṉaṉ felt grieved that
They had lost an alley in Kaṇṇaṉ.
Wounded at heart and to break the sad news
To Tarmar they left the forest, swiftly walked.

**The sad utteranees of Vīmaṉ and Arccuṉaṉ**

After Kaṇṇaṉ reached his abode,
*Vaikuṇṭum*, famed Pārttaṉ,[5] and strong Vīmaṉ

1. Shrub or dwarfish tree bearing purple flowers memecylon tinetorium. 2. Phelgm in the brochia.
3. Kaṇṇaṉ 4. Arccuṉaṉ. 5. Arccuṉaṉ.

மண்மேல் விழுந்தழுது மாயவனைக் காணாமல்
விண்மேல் முகம்நோக்கி மெய்சோர்ந்து நின்றவர்கள்

கச்சுதோ பூமி கசந்ததோ நாங்களுந்தான்
அச்சுதனே யென்று அடிமேல் விழுந்தழுது

மெய்ச்சுடரே ரூப வெளியே வெளிமயக்கே
நச்சரவில் பள்ளிகொள்ளும் நாரணரே யிப்போது
அச்சமில்லா தெங்களுக்கு அலைச்சல்வைத்துப் போனீரே

எங்கே இனிக்காண்போம் இப்பிறப்பி[1] லும்மையுந்தான்
அங்கே வருவோம் ஐவருந்தா னும்மிடத்தில்

**கண்ணன் வைகுண்டம் சேர்ந்ததை இருவரும் உணர்தல்**

இப்படியே நின்று இவர்கள் புலம்புகையில்
தப்படியுஞ் சங்குஞ் சரமண்டலம் முழங்கத்

தம்புரு வீணைகளுஞ் சரமண்டலம் முழங்கத்
கிம்புருவும் கின்னரமுங் கீதமுட னாதமுமாய்

வாழ்ந்தே[2] முகித்து வருகின்ற மாயனுக்குப்
பூந்தேருஞ் சங்கீதமும் பூவையரு மாடல்செய்ய

வாழும் பெருமாள் வைகுண்ட லோகமெல்லாம்
ஆளும்[3] பெருமாள்தான் அட்சுதனார் வாறாரென்று

முழங்குதுகாண்[4] சத்தமென்று முனிவோர் மகவிளங்க
விளங்குது காணீதம் வைகுண்ட லோகமெல்லாம்
என்று முனிவ ரிஷிகள் தபோதனர்கள்

32.4. மெய் - உடல். 32.5. கச்சுதோ - கைத்ததோ என்பதின் பேச்சுவழக்கு; வெறுத்ததோ என்ற பொருளில். 32.6. அடி - பாதம். 32.7. மெய்ச் சுடரே - உண்மையான விளக்கே. ரூப வெளியே - வடிவங்களுக்கு வெளியாய் இருப்பவனே. 32.8. நச்சரவு - கொடிய விஷம் கொண்ட பாம்பு. 32.9. அலைச்சல் வைத்து - மிகுதியான துன்பம் வைத்து. 32.13. தப்படி - ஒரு வகை இசைக்கருவி. சர மண்டலம் - ஒரு வகை இசைக்கருவி. 32.14. தம்புரு வீணை - வீணை வகைகளுள் ஒன்று. 32.15. கிம்புரு, கின்னரம் - சில வகை இசைக்கருவிகளின் பெயர்கள். 32.16. வாழ்ந்தே முகித்து வருகின்ற மாயன் - துவாபர யுகத்தில் வாழ்ந்து தன் கடமைகளைச் செவ்வனே செய்து முடித்த திருமால் என்ற பொருளில். சங்கீதம் - பாடல். பூவையர் - மகளிர். 32.18. வாழும் பெருமாள் வைகுண்ட லோகம் எல்லாம் - பெருமாளாம் திருமால் என்றும் ஆள்கின்ற வைகுண்ட உலகம் முழுமையும் என்ற பொருளில். 32.20. முழங்குது காண் - முழங்குகிறது பாராய் என்ற பொருளில். சத்தம் - ஓசை. மகவிளங்க - உள்ளம் சிறக்க. 32.21. நீதம் - நன்னெறி.

சு.சொ : 1. இப்பிரப்பி 2. வாள்ந்தே 3. ஆழும் 4. முளங்குதுகாண்

Fell on the ground, wept for Māyavaṉ was gone.
Looked at the sky and stood drained of strength.
"Did he get fed up with this, here world?
Has life here become bitter?
'Oh, our Lord Kaṇṇaṉ! Alas!"
Cried aloud, they bitterly wept.
"O real light, that dimensions defies!
O Nārāyaṇaṉ recliming on snake venomous![1]
You have left us in a sea of grief
We are the ones who never had fear
Will we ever see you again in this birth?
We five will come to your abode."
When they both were lamenting thus
*Tappaṭi*[2], conch, *caramaṇṭalam,*[3]
*Tampuru, vīṇai*[4], *caramaṇṭalam,*
*Kimpuru*[5], *kiṉṉaram*[6] all sounded
For Māyaṉ who had lived on earth had
Now returned, his mission[7] completing.
"In a car of flowers followed by
Music melodious, and dancing girls
Lord Perumāḷ of *Vaikuṇṭām*
Who has an eternal existence
The reigning Lord Kaṇṇaṉ arrives!"
The music seemed to say so and *riṣis* understood.
"Goodness prevailed in all *Vaikuṇṭam*.",
Thus said the sages, *riṣis*, and mendicants.
The words of holy sages in *tapas*

1. Lord Viṣṇu is supposed to take rest, reclining on a bed made of a snake called Āticēṭaṉ 2 & 3. Musical instruments. 4, 5 & 6. Musical instruments. 7. His mission on earth during *tuvāraka yukam*.

ஆரணியந் தன்னில் அருந்தவத்தோர் சொல்லும்மொழி[1]
பூரணமாய் நெஞ்சில் பொருந்த இருவருக்கும்
காதாரக் கேட்டுக் கலக்க மிகத்தெளிந்து
பாதாரந் தன்னில் பனிமலர்கள் தான்தூவிச்

### கண்ணன் உடலை அடக்கி இருவரும் ஏகுதல்

சேர்ந்தார் வைகுண்டமதில் செங்கண்மா லென்றறிந்து
பூந்தே னொழுகும்[2] புற்பவனச் சோலையிலே
நல்லடக்கம் பண்ணி நமஸ்கரித்து முக்காலும்
சொல்லடக்க மானதொரு சுந்தரஞ்சேர் மந்திரமும்
செய்யுங் கருமம் செய்சடங்கு தான்முகித்துக்
கையுங் குவித்துக் கடுகி நடப்பதற்கு
வீமன் விசையன் வில்லுந்தெண்டுந் தானெடுக்கத்
தானும்பில னில்லாமல் தலைமேலே தான்சுமந்து
வந்தவழி[3] நோக்கி[4] வருகின்ற வேளையிலே
அந்தவழி கடந்து அப்பால் வருகையிலே

### ஆயர்களது ஆடுகளை வேடர்கள் கொள்ளையிடல்

ஆடுகள் தான்மேய்த்து ஆயன் வருகையிலே
வேடர்கள் தான்சென்று விரைந்தெடுத்தா ராடுகளை
அப்போ திடைய னருச்சுனனை வீமனைத்தான்
இப்போ தருச்சுனரே இருபேரும் போகையிலே
ஆடுகொள்ளை போகுதுகாண் அபைய முரையுமென்றார்
நீடுபுகழ்[5] மாயன் நெடுங்கா னகமுறைய[6]

32.23. ஆரணியம் - காடு. 32.24. பூரணமாய் - முழுமையாய். நெஞ்சில் பொருந்த - மனதில் பதிய. இருவர் - வீமன், அர்ச்சுனன் என்னும் இருவர். 32.25. பாதாரம் தன்னில் - கண்ணன் இறந்த உடலிலுள்ள பாதத்தில். 32.28. பூந்தேன் ஒழுகும் - பூவின்கண் தேன் ஒழுகுகின்ற. புற்பவனம் - புஷ்பவனம்; மலர்க்காடு. 32.30. சுந்தரம் சேர் மந்திரம் - அழகு சேர்ந்த மந்திரம் குறிப்பிடப்பட்டது. 32.31. முகித்து - முடித்து. 32.32. கடுகி - விரைந்து. 32.33. வில்லு, தெண்டு - இவை முறையே வில், தண்டு என்பதின் பேச்சுவழக்குச் சொற்கள்; தண்டு என்பது தண்டாயுதத்தைக் குறித்தது. 32.34. பிலன் இல்லாமல் - பலம் இல்லாமல்; வலிமை இல்லாமல். 32.40. இப்போ - இப்பொழுது. போகையிலே - போகின்ற பொழுதிலே. 32.41. போகுது - போகிறது என்பதின் பேச்சுவழக்கு. அபையமுரையும் என்றார் - இரக்கம் காட்டும் என்றார். 32.42. கானகம் - காடு. உறைய - வசிக்க.

சு.சொ : 1. சொல்லும்மொளி 2. னோழுகும் 3. வந்தவளி 4. னோக்கி 5. நீடுபுகள் 6. கமுரைய

In forest consoled the hearts of the duo.
They had an earful and their confusion left.
With dewy flowers showering at feet
Ceṅkaṇmāl[1] had reached *Vaikuṇṭam*, they knew.
In gardens where flowers dripped nectar
They interred the body, worshipped, usual
*Mantiras* appropriate chanted,
Performed rites, ceremony apt did and
With folded hands paid obeisance.
Vīmaṉ and Vijayaṉ to walk swiftly
And carry the bow and club in hand lacked strength
Carrying them on head, walked along.
Crossing paths they walked further on.

**Hunters steal goats from the Yātavars[2]**

When the Āyan3[2] were grazing the goats,
Hunters rushed and stole the goats.
Shepherds addressed Arccuṉāṉ, and Vīmaṉ,
'O lords when you're about to leave
Our cattle are stolen save us, pray!"
In forest where famed Māyaṉ stayed

1. Kaṇṇaṉ he was supposed to be ruddy eyed. 2. The kinmen of Kaṇṇaṉ, who tended cattle. 3. *Yātavar*.

கொள்ளைகொண்டார் வேடர் கூகூ வெனயிடையர்
அள்ளிவந்து சொன்னான் துடிவீமன் பார்த்தனிடம்

இடைய னிவைசொல்ல யிருவர் மனமிடைந்து
தடைசெய்து வேடரையும் தான்பொரவுமே வேணுமென்று

வீரத்துடன் வீமன் விசையனு மேதிரும்பிக்
கோபத்துட னவர்கள் கொல்லவே வேடனைத்தான்

தெண்டெடுக்க வீமன் சிந்தையொன்று மில்லாமல்
விண்டொலிக்கும் வில்லெடுக்க விசையன் பிலனில்லாமல்

## வேடர்களோடு இருவரும் பொருதல்

சண்டை கொடுக்கவென்று தாண்டிக் குதித்தார்கள்
கண்டந்த வேடர் கடுகச் சினந்தெழுத்து
அண்டந்தா காயம் அதிரயிருவர்தான் பொருதார்

வீமன் விசையனுந்தான் வெட்டெனப் போர்பொருது
நேமமுட னாயுதங்க ளில்லாமல் நின்றதுதான்

வேடரறிந்து வெருண்டு சினந்தெ ழுந்து
சாடவே வீமனையுந் தம்பி விசையனையும்
போட வெருண்டு புறங்காட்டி[1] ஓடலுற்றார்

ஊடழித்து வேட ரொருமிக்க[2] ஆடுகளை
ஈடழித்துச் சேரது யிடையனையுந் தான்பிடித்துப்

பாரில் துவார பதிகளையுங் கொள்ளைகொண்டு
காரில் புனல்வேடர் கருதியே வார்த்தைசொல்லிச்

**32.43.** கொள்ளை கொண்டார் - கொள்ளை அடித்தார். கூகூ - அபயக் குரலோசைக் குறிப்பு. **32.44.** அள்ளி வந்து - அள்ளு கொள்ளையைப் பற்றி; பெருங்கொள்ளையைப் பற்றி. **32.45.** இருவர் - வீமன் மற்றும் அர்ச்சுனன். இடைந்து - வருந்தி. **32.46.** பொரவுமே வேணும் - போர் செய்ய வேண்டும். **32.49.** தெண்டு - தண்டாயுதம். சிந்தை - அறிவு. **32.50.** விண்டொலிக்கும் - விண் வரையிலும் சென்று ஒலிக்கும். பிலனில்லாமல் - பலமில்லாமல் என்பதின் பேச்சுவழக்கு. **32.53.** அண்டம் - உலகம். **22.54.** வெட்டென - விரைவாக. **32.55.** நேமமுடன் - முறையுடன். நின்றதுதான் - நின்றதைத்தான். **32.58.** போட - சண்டை போட. வெருண்டு - செய்வது அறியாது திகைத்து. **32.59.** ஊடழித்து - இடங்களை அழித்து. ஒருமிக்க - எல்லாவற்றையும் சேர்த்து. **32.60.** ஈடழித்து - பெருமையை அழித்து. சேரது - மிகுந்த அளவுடைய ஆட்டு மந்தையது உடைய. **32.61.** பாரில் - உலகில். துவாரபதி - துவாரகை. **32.62.** காரில் - இருளில்.

---

சு.சொ : 1. புறங்காட்டி 2. றொருமிய்க்க

Hunters stole goats, dismayed frightened,
Shepherds, appealed to Vīmaṉ, and Arccuṉāṉ.
When the shepherds complained the duo felt sad.
They said "To stop them you should fight the hunters."
Valrous Vīmaṉ, and Vijayaṉ turned back
To kill the baneful hunters.
Vīmaṉ lacked the will to lift his club and
Vijayaṉ lacked the will to lift his bow,
Whose strong sound would reverberate
In all heavens and on the earth.

**They fight the hunters**

They jumped forward to give a good fight,
Seeing which the hunters in anger rose.
Sky and earth trembled when they fought.
Vīmaṉ, and Vijayaṉ swiftly fought,
But they lost and stood dazed,their weapons gone.
The hunters knew of it, and rose in fury.
They fought Vīmaṉ and his younger brother.
Vijayaṉ who was terrified ran
Away in a shameful defeat.
Destroying places the hunters caught all goats,
Captured the shepherds destroying their fame.
They looted the famed Tuvārakāpuri.
In dark the hunters were talking aloud.

சீரில் சிறந்த சிறைபிடிக்க[1] வேணுமென்று
ஊரில் புகுவதற்கு உச்சாயமாய்ப் பேசிப்

### இருவரும் போரில் தோல்வியுற்று மனம் வருந்துதல்

போறார்கள் வேடரென்று போர்விசையன் வீமனுமாய்க்
கூறாம லொன்றுங் கொடுகிமனம் புண்ணாகி

நீறாக வெந்து நினைவு தடுமாறி[2]
வீறான ஐவரென்று மேதினியில் நாமிருந்தோம்

எண்ணமெல்லாம் போச்சென் றிடைந்துமனம் புண்ணாகிக்
கண்ணருட பட்டணமும் காவல ழிவதுவும்[3]

என்னவென்று சொல்வோநா மெம்பிரான்[4] கட்டளைக்குப்
பின்னமொன்றும் வாராமல் பின்ன மிடந்துதென்றால்

ஆதிபிரா னான யட்சுதற்கு மேறாது
பாதிப்பிறை[5] யணிந்த பரமனுக்கு மேறாது

நமக்குவலுக் குறைந்து[6] நாணிநின்றோ மாமாகில்
சுமக்கும்பழி[7] பாவம் தோஷம்நமக் குண்டாகும்

### நடந்தவை சொல்ல தர்மரிடம் இருவரும் செல்லுதல்

அண்ணருக்குச் செய்தி யறியவுரைப் போமென்று
தண்ணமரும் வீமனுடன் தம்பி யருச்சுனனும்

ஏங்கி முகம்வாடி இடைந்து மனமுருகித்
தாங்கி நடந்திருவர் தன்மர்தனை நோக்கி

அத்திபுரஞ் சென்று அண்ணரையுங் கைதொழுது
சத்தியுள்ள வீமன் தனஞ்செயனு மேசொல்வான்

**32.63.** சீரில் சிறந்த சிறைபிடிக்க - பெருமையில் சிறந்த துவாரகைபதியாரைச் சிறைபிடிக்க. வேணும் - வேண்டும் என்பதின் பேச்சு வழக்கு. **32.64.** உச்சாயமாய் - முயற்சியை மனதில் கொண்டவர்களாய். **32.66.** கொடுகி - கூசி; இங்குத் தங்கள் உடல்நிலை நினைத்து இருவரும் மனங்கூசி என்ற பொருளில். **32.68.** மேதினி - உலகம். **32.69.** போச்சு - போயிற்று என்பதின் பேச்சு வழக்கு. **32.70.** கண்ணருட - கண்ணனுடைய என்பதின் பேச்சு வழக்கு; உட என்பது உடைய என்ற ஆறாம் வேற்றுமைச் சொல்லுருபின் திரிந்த வடிவம். காவல் - பாதுகாப்பு. **32.72.** பின்னம் - சிதைவு. இடந்துதென்றால் - நடந்ததென்றால். **32.73.** அட்சுதர் - திருமால் இங்குக் கண்ணனைக் குறித்தது. **32.74.** ஏறாது - தெரியாது. **32.75.** வலு - வலிமை. நாணி நின்றோம் - வெட்கப்பட்டு நின்றோம். **32.76.** தோஷம் - குற்றம். **32.77.** அண்ணர் - அண்ணராகிய தருமர். **32.78.** தண்ணமரும் - தண்டாயுதத்துடன் போர் செய்யும். **32.80.** தாங்கி நடந்து - சோர்ந்து நடந்து. **32.81.** அத்திபுரம் - அஸ்தினாபுரம். **32.82.** சத்தி - சக்தி. தனஞ்செயன் - அர்ச்சுனன்.

---

சு.சொ : 1. சிரைபிடிக்க 2. தடுமாரி 3. ழிவதும் 4. மெம்பிறான் 5. பாதிப்பிரை 6. குரைந்து 7. சுமக்கும்பளி

To capture the eminent people there and
To enter the city they went in glee.

**The duo feel sorry over their defeat**

Warrior Vijayaṉ and Vīmaṉ
Felt at heart that the hunters were
Bent on committing some mischief.
They choked in grief, their hearts did bleed.
Ashamed of selves, they felt like they were
Reduced to dust and their mind wavered.
"There we lived as five valiant men.
Those days are gone!' lamented they.
"If Kaṇṇaṉ's city, loses its safety
What can we say? what shall we do?
Better the commands of our Lord are kept.
Violated if they are, then
Our Lord Kaṇṇaṉ won't know.
The Lord with creseent bedecked trusses[1] won't know.
In shame if we stand, having lost our strength
Lingering bad name, blame we'll earn.
Let's go to an' elder brother inform."

1. Lord Civaṉ

## தர்மரிடத்து இருவரும் உரைத்த உரைகள்

குருகுலத்து நாடாளும்[1] கோபாலா காத்தருள்வாய்
வருங்கருமஞ் சொல்லி வாரமாய்த் தானிருந்து

ஆதிநா[2] ராயணர்க்கு ஆபத்து வந்துதென்று
சோதிஅண்ணர் தன்னிடத்தில் சொல்லவென்று சம்மதித்துப்

போவென் றனுப்பிப் புண்ணியரே நீர்கேளும்[3]
காவெங்குந் தான்தேடிக் கானகங்க ளுந்தேடி

வனமும் வனாந்தரமு மலைகள் பலதேடிப்
புனமும் புகுந்துநதி பூத்தோனைக் காணாமல்

தேடித் திரிந்துமொரு செண்பகப்பூங் காவனத்தே
நாடித் திருமாலை நாங்கள்கண்டோ மண்ணாவி

அம்புபட்டு லோக மளந்ததொரு பாதமதில்
வம்புபடா மேனியனார் வாடி மிகமெலிந்து

மெய்க்கூடுந் தான்வெளுறி[4] மேனியெல்லாம் புண்ணாகிப்
பொய்க்கூடுந் தானாகிப் பூமிதனி லேகிடந்தார்

கண்ட வுடனே கதறி அபயமிட்டோம்
புண்டரீக மேனியனார் போதகமாய்த் தனமத்தி

என்னை யெடுத்து யிருத்துமென்றார் கோபாலர்
பின்னை நினைவுகொண்டு பேசாமல் நாங்கள் நின்றோம்

நின்றவரைப் பார்த்து நெடியோனும் பூர்வத்தில்[5]
நன்றிசெய்த பேச்சும் நடத்துகின்ற சொல்முறையும்[6]

**32.83.** குருகுலத்து நாடாளும் கோபாலா - குரு வம்சத்தில் தோன்றி நாட்டை ஆளும் அரசே. **32.84.** வாரமாய் - உரிமையுடன். **32.85.** வந்துதென்று - வந்ததென்று. **32.86.** சோதி அண்ணர் - ஒளி பொருந்திய அண்ணல்; கண்ணனைக் குறித்தது. **32.88.** கா - சோலை. **32.84.** கானகம் - காடு. **32.90.** புனம் - வயல் வெளிகள். நதி பூத்தோன் - யமுனை நதியினில் ஆடி மகிழ்ந்தவன். **32.92.** அண்ணாவி - அண்ணா; தருமரைக் குறித்தது. **32.93.** லோகம் - உலகம். **32.94.** வம்புபடா மேனியனார் - வடுபடாத மேனியை உடையவர். வாடி - வருந்தி. **32.95.** மெய்க்கூடு - உடல். வெளுறி - வெளுத்து. **32.96.** பொய்க்கூடு - உயிரற்ற உடம்பு. **32.98.** புண்டரீக மேனியனார் - தாமரை மலர் போலும் மென்மையான மேனியினை உடையவர். போதகமாய் - உபதேசம் கூறியபடி. தானமத்தி - தான் அமர்த்தி. **32.100.** பின்னை - பிறகு. நினைவு கொண்டு - நீங்கள் எங்களிடம் கூறிய அறிவுரையை மனதில் நினைத்துக் கொண்டு. **32.101.** பூர்வத்தில் - நட்புடன் பாண்டவரும் கண்ணனும் இருந்த முந்தைய காலத்தில் என்ற பொருளில்.

சு.சொ : 1. நாடாமும் 2. ஆதிநீரா 3. நீர்கேமும் 4. தான்வெமுறி 5. பூறுவத்தில் 6. சொல்முரையும்

Younger brother Arjuṉaṉ and Vīmaṉ
Who used to fight with club mighty,with
Darkened faces, now with their minds in turmoil,
With faltered steps walked towards Tarmar.
They reached Astiṉāpuram soon and
Paid respects to the elder brother.
Strong Vīmaṉ, and Taṉañcayaṉ[1] said,
"O ruler of the *Guru* clan!
O king! with kindness save us.
Be cautioned about things in store.
The life of Āti Nārāyaṇaṉ the primordial god
Was in danger and we agreed
To convey it to Kaṇṇaṉ, the shining Light.
O the virtuous one, listen to us!
We searched the gardens and forests deep;
Groves, deserts and mountains many.
We searched in fields but couldn't find Him.
We searched for one, who once spent his time
On banks of a river[2] at *ceṉpakam*[3] garden.
Elder brother! we saw Tirumāl there!
In the feet that measured the worlds,
Caused by an arrow, there was a wound.
His blemishless body was weak,
Emaciated, pale, and full of wounds.
His body lay on the ground.
Seeing it we did cry aloud and
Sought succour in agony deep.
He, with a body as soft as lotus
Advised and pacified us.
Asked us to lift and make Him sit.
Remembering your good advice,
We in silence stood there in pain.
Kaṇṇaṉ saw us standing and spoke of yore.
When his good deeds and advice guided us.

1. Vijayaṉ. 2. Kaṇṇaṉ, as a young boy enjoyed Himself bathing in river Yamuṉai. 3. A very fragrant, large yellow flower tree-micheba champaca.

உடம்புருகச் சொல்லுகின்ற உத்திரங்கள் தான்கேட்டு
குடங்கவிழ்ந்து[1] நீர்பிரிந்த கும்பமது போலாகித்

தேவரீர் சென்னதொரு செய்திதன்னை மீறாமல்
நாவுலர்ந்து நின்றோம் நாரணரை நம்பாமல்

கருத்ததனைத் தானறிந்து கைதரவுஞ் சொன்னார்காண்
உருத்தரிந்து நாங்க ளொன்று முரையாமல்

நின்றோம் பெருமாள்தன் நினைவுதனை நம்பாமல்
குன்றா மனத்துயரம் குன்றிமனம் புண்ணாகி

அந்த நினைவறிந்து ஆயுதத்தை நீட்டுமென்றார்
எந்த நினைவெனவே யெண்ணியெங்க ளாயுதத்தை

நீட்டி யிருபேரும் நின்றோமது வழியாய்[2]
வாட்டி வலுவையெல்லாம் வாங்கிவிட்டார் மாயவரும்

பிலங்குறைந்து[3] நாங்கள் பேசா திருக்கையிலே[4]
கலங்கி[5] விழிபிரட்டிக் கண்ணருந்தான் மெய்சோர்ந்து

பாசங் கலங்கிப் பதறி[6] வுடல்வேர்த்து
வாசங்கள் மண்ணில்வைத்து வைகுண்டஞ் சேர்ந்தார்காண்

செங்கண் நெடுமாலுஞ் சீவன்விட்டுப் போகையிலே
தங்கள் மரவு தான்குலைந்து போகாமல்

காருங்கள் நீங்களென்று கற்பித்துப் போறார்காண்
வாருங்கோ ஐவரும் பின்வைகுண்டஞ் சேர்வதற்கு

என்றுசொல்லி மாயனுந்தான் யேகினா ரண்ணாவி
சென்று மலர்ப்பாதந் தீண்டியெடுத் தவ்வனத்தில்

அடக்கிச் சடங்கறுத்து யலங்கார மாகநன்றாய்
முடிக்குஞ் சடங்கதுவு முகித்துவந்தோ மண்ணாவி

**32.103.** உத்திரங்கள் - உரைகள். **32.105.** தேவரீர் - இவண் தருமரைக் குறித்தது. **32.106.** நாவுலர்ந்து - பேசுவது அறியாது திகைத்தமையால் நா உலர்ந்து. நாரணர் - கண்ணன். **32.108.** உருத்தரிந்து - உடம்பு அசையாமல். **32.114.** வாட்டி - துன்புறுத்தி. வலு - வலிமை. **32.115.** பிலங் குறைந்து - வலிமை குறைந்து. **32.116.** விழிபிரட்டி - கண் விழிகளை அங்குமிங்கும் சுழற்றி. **32.118.** வாசங்கள் - இருப்பிடத்துப் பொருள்கள். **32.119.** சீவன் - ஜீவன்; உயிர். **32.119.** மரவு - மரபு. **32.121.** காருங்கள் - நீதி தர்மங்களைப் பாதுகாப்பீர். **32.123.** ஏகினார் - சென்றார். **32.124.** தீண்டி - பொருந்தி. **32.125.** சடங்கறுத்து - சடங்குகளை முடித்து. **32.126.** முகித்து - முடித்து.

---

சு. சொ : 1. குடங்கவிள்ந்து 2. வளியாய் 3. பிலங்குரைந்து 4. கயிலே 5. கலங்கிவிளி 6. பதரி

His words did melt us down
We resembled a capsized pot
Whose water had spilled out in full.
Not violating the advice
You handed out to us, O Lord,
Not trusting Nārāyaṇaṉ's words,
With dry mouths we just stood there still.
Reading our thoughts He asked for our hands.
Saying nothing we just stood there still,
Not trusting the words of Kaṇṇaṉ there.
With wounded hearts and killing grief we stood.
He asked us to proffer our weapons.
Not knowing what thoughts crossed His mind,
We proffered our weapons through which,
By force, Kaṇṇaṉ drained us of our strength.
Losing our strength we just kept mum.
Perturbed Kaṇṇaṉ, rolling eyes, lost strength.
Distressed, agitated, sweating
Profusely, He left earth for *Vaikuṇṭam.*
When Kaṇṇaṉ's life was about to end
He said,'Keep intact your clan.
You people guard it. "and then died.
'You come to *Vaikuṇṭam* later.'
Then Kaṇṇaṉ left us, Oh elder brother!
We paid obeisance, and carried Him.
In that garden we buried the body.
We performed in detail all the rites.
O brother, we performed all rites needed!

வந்தோம் வழிகூடி வாடி மனமிடைந்து
அந்த[1] வழியிலொரு ஆயனுந்தா னாடுவிட்டு

மேய்த்து வருகையிலே வேடர்புகுந் தாடெடுக்கப்
பார்த்துநீர் போரீரோ பார்த்தாவீ மாவெனவே

அபைய மபையமென ஆயனுந்தா னாடுவிட்டு
உபய மெனச்சென்று யொருமித்து வேடருடன்

தாண்டிப் பொருதார்காண் தாடாளர் வேடருடன்
மீண்டிப் பொருது மிகவெகித்து வந்தனர்காண்

தரிபட்டு நிற்க தத்துவங்க ளில்லாமல்
அரியிட்ட சாபமென்று அறிந்தோம் வலுக்குறைய[2]

முறிபட்டு வந்தோம் முதுகுபுறங்[3] காட்டித்
தெறிபட்டு வந்துமக்குச் செய்தியெல்லாஞ் சொன்னோங்காண்

## தர்மர் கண்ணன் இழப்பால் அழுதுரைத்தல்

என்றே யிவர்கள்சொல்ல யேங்கியே தன்மிதரும்
குன்றதிர்ந்து வீழ்ந்தாப்போல்[4] குதித்து விழுந்தழுது

முகத்தி லறைந்து[5] முடிகுலையத் தான்விழுந்து
வயற்றி லறைந்துகொண்டு மண்மீதி லேவிழுந்தார்

என்தம்பி ரானேநீர்[6] யெங்களுக்கு நாயகனே
தன்தம்பி ரானேநீர் சருவ[7] தயாபரனே

பூலோக நாயகனே புவன மளந்தோனே
சாலோக சாமீப சாரூப மானவனே

எள்ளுக்கு ளெண்ணைபோல் யெவ்வுயிர்க்குந் தானான
வள்ளலே யும்மை மறந்திருக்க[8] மாட்டோமே

**32.128.** ஆயன் - இடையர் சாதியன். **32.129.** வேடர் - திருடர். **32.132.** உபயம் - உதவி. **32.133.** தாடாளர் வேடர் - முயற்சியுடைய திருடன். **32.134.** மீண்டி - மீண்டும். பொருது - போர் செய்து. மிகவெகித்து - மிக சோர்ந்து. **32.135.** தரிபட்டு - வேதனைப்பட்டு. தத்துவம் - காரணம். **32.136.** அரி - திருமால்; இங்குக் கண்ணனைக் குறித்தது. **32.137.** முறிபட்டு - தோல்வி அடைந்து. **32.138.** தெறிபட்டு - சிதறி ஓடி என்ற பொருளில். **32.140.** குன்று - சிறுமலை. **32.141.** முடிகுலைய - தலைமுடி குலைந்து விழ. **32.144.** சருவ தயாபரனே - சர்வமும் நிறைந்த அருள் இறைவா. **32.145.** பூலோக நாயகன் - உலகத் தலைவன். புவனம் - உலகம். **32.146.** சாலோக சாமீப, சாருபம் ஆனவனே - சாலோகம், சாமீபம், சாருபம் என்னும் பதவிகளை பக்தர்களுக்குக் கொடுத்து, தானும் அதுவாக இருப்பவனே என்ற பொருளில்.

---

சு.சொ : 1. அந்தவளி 2. வலுக்குரைய 3. முதுகுபுரங் 4. வீள்ந்தாபோல்க் 5. லரைந்து 6. றானேநீர் 7. சருவதாயா 8. மரந்திருக்க

Walked along, we with leaden hearts.
On our way we saw a shepherd.
He was grazing some cattle there.
Hunters came there, and lifted the goats.
Seeing these hunters plundering
Will you go caring not for the shepherds?
"O Pārttan[1]! O Vīmaṉ! "they cried
Shouting, 'help! help!' shepherds left the goats.
To help the shepherds we fought with the hunters.
We fought the hunters with all our might.
Fought in futile, and came away vexed.
What could be the reason for our defeat?
We knew soon it was the curse of Hari-
The reason for our losing strength.
We came back showing the strength of our love.
We came back showing our back to the enemy[2]
Came in haste, and have conveyed all to you."

**Grief stricken Tarmar speaks**

Thus they spoke, and Tarmar in agony
Fell on the ground as if a hill fell down.
He wept, beating his face, hair dishevelled.
Beating his stomach, he fell on the ground.
"Alas! our Lord, who was our all!
My Lord! the one in whom all are!
O Lord of the earth, who measured the worlds!
*'Cālōkam', 'cāmīpam; 'Çārūpam,*
You were all to your devotees.
You were life in all living thing,
Like the oil that's in the sesame seeds.
O Lord how can we ever forget you

1. Arccuṉaṉ. 2. Positions in heaven which he gives to his true followers.

அழகுதிரு[1] மேனியனே ஆபத்துக் காத்தோனே
களபமணி மேனியரே கண்ணரே யென்றழுதார்

துளபமணி மார்பழகா[2] சுந்தரஞ்சேர் திண்புயனே
புளகமத மேனியனே பூபாலா கோபாலா

தூதுசென்றா யெங்களுக்காய்ச் சூத னிடமாகத்
தீதுகொண்ட நெஞ்சன் திரியோ தனன்தனையே

பாங்குடனே கொல்லப் பகைமுடித்து யெங்களுடன்
சாங்கமாய் நின்று தளமும்வண் சேனையெல்லாம்

கன்னன் சகுனியையும் காவலராம் நூற்றுவர்கள்
என்னவர்க ளெல்லா மிறந்து களந்தனிலே

மடிந்தவர்கள் போகுமட்டு வாரமாய் நின்றீரே
முடிந்துதோ காலம் முகில்வண்ணா வுந்தனக்கு

யெங்கேயுமைக் காண்போ மிவ்வுலகி லும்மையுந்தான்
அங்கே வைகுண்ட மணுகிவந்து காண்போமோ

ஆறுக்கு மேற்குமதோ ஐவரையும் விட்டகன்றீர்
ஊருக்கு[3] மேற்குமதோ வுலகிலைவர் தன்னைவிட்டுப்

போவீரோ யிந்தப் புலையாட்[4] டொழிந்ததென்று
சாவீரோ காலஞ் சரியாட்சு தோவெனவே

மாயமாய் வாழ்விதென்று[5] வைகுண்டஞ் சேர்ந்தீரோ
ஆமா வெனவே அயத்து[6] மறப்போமோ

**32.150.** களபமணி மேனியரே - களபம் என்னும் நறுமணப் பொருளை மேனியில் பூசியவரே. **32.151.** துளபமணி - துளசிமாலையை அணிந்த. சுந்தரம் - அழகு. **32.152.** புளகமத - கண்டோர்க்குப் புளகாங்கிதம் ஏற்படுத்தும்படியான. **32.153.** சூதனிடமாக - வஞ்சகத்தை மனத்தில் இடமாகக் கொண்ட. **32.154.** திரியோதனன் - துரியோதனன். **32.155.** பகை முடித்து - போரை முடித்து. **32.156.** சாங்கமாய் - ஒழுங்கு முறையோடு. தளம் - படை. **32.157.** கன்னன் - கர்ணன். **32.158.** என்னவர்கள் - என் உறவினர்கள் **32.159.** வாரம் - உரிமை. **32.163.** ஆறுக்கு மேற்கு - ஆற்றுக்கு மேற்குப் பக்கம். **32.165.** புலையாட்டு - 'ஈன மனித வாழ்க்கை நாடகம்' என்ற பொருளில். **32.166.** சரியாட்சு - 'சரியாச்சு' என்னும் பேச்சுவழக்குச் சொல்லுக்கு இணையான சொல்; 'சரியாயிற்று' என்ற பொருளில். **32.167.** மாயமாய் - எவருக்கும் தெரியாமல். **32.168.** ஆமா - 'ஆமாம்' என்பதின் ஈற்றுக் குறை. அயத்து - 'அயர்ந்து' என்பதின் பேச்சுவழக்கு.

சு.சொல் : 1. அளகுதிரு 2. மார்பளகா 3. ஊறுக்கு 4. புலையாட்டொளிந் 5. வாள்விதென்று 6. அயத்துமரப்

The handsome one that succour gave?
Alas! O Lord, wearing *kaḷapam*!
O Lord Kaṇṇaṉ!" cried he in pain.
"O Lord wearing *tuḷapamaṇi*[1] on pretty chest!
Alas! those strong, beautiful arms!
One with body delightful!
O the king of the earth, our Kaṇṇaṉ!
You went, as our messenger to the Turiyōtaṉaṉ,
Turiyōtaṉaṉ[1] who had a heart of evil
The deceitful,having an evil heart and enmity.
With us you did stay through and through.
You destroyed huge armies and strongmen.
Karṇan,[2] Cakuṇi[3] and many more,
Hundreds of guards and many of my kin-
All of them died on the battle field.
Till all were dead you were with us.
Is your time over, O cloud coloured one?
Where can we see you here on earth?
Will we see you there at *Vaikuṇṭam*?
From West of the river you left us, the five.
From West of the village you left us, the five.
But have you left us with a happy thought?
This silly life to an end has come.
Have you died, knowing your time had come?
Feeling that this life is *māyai*,
Have you gone to your *Vaikuṇṭam*?
Can we keep quiet by consoling,
'Yes, He is gone and that is that!'

1. Beads made of white '*tuḷaci*' (a fragrant herb) root or branch, worn by devotees of the Viṣṇu sect. 2. The eldest of Kauravars, a great warrior. 3. The uncle of Turiyōtaṉaṉ.

வாறோங்கா ணாங்களிப்போ வைகுண்டந் தானோக்கிக்
கூறோங்காண் பொய்யொருநாளைக் குவலையமும் வேண்டாங்காண்

## நகுலனின் அழுகை

என்றுசொல்லித் தன்மர் இருந்தார் மனமிடைந்து
நின்று நகுலன் நெடுமாலைத் தான்பணிந்து
குத்திவிழுந் தழுது கோவென்றபை யமிட்டு
பத்தி கலங்கிப் பதறி யுடல்பதறி[1]

விழுந்து புரண்டழுது மெய்சோர்ந்து கையறுந்து[2]
செழுந்துவரை மாயவரே சினேகம் பிரிந்தோமே

விந்தைமலர்ப் பாதமதை மேதினியில் காண்போமோ
அந்தமுள்ள மாலே யவனி யளந்தோனே
இந்த வுலகிலும்மை யென்றுதான் காண்போமோ

## நகுலனின் துயர மொழிகள்

அரிகேச வாமுகுந்தா ஐவரும்மைப் பிரிந்தால்
சிரியாரோ யெங்களையும் தேசத்தி லுள்ளவர்கள்

பரிகாசமே வருங்காண் பஞ்சவர்கள் தங்களுக்குத்
தரியோந் தரணியிலே தானிரோ மும்மைவிட்டு

வருவோம்வை குண்டமென்று வாழ்நகுலன்[3] சொல்லியபின்
தருவார்திரு நூலான் சகாதேவன் தான்சிரித்து

## சகாதேவன் 'வாழ்வு மாயை' என தத்துவமுரைத்தல்

பொய்வாழ்வை[4] மெய்யிதென்று போத மனம்மகிழ்ந்து
மெய்வாழ்வு போலே விரும்பினீர் மன்னவரே

தேகம் பொருளோ செகம்பொருளோ வுங்களுக்குத்
தாகம் பசியிளைப்புச் சஞ்சலங்கள் தான்பொருளோ

**32.169.** வாறோம் - 'வருகிறோம்' என்பதின் பேச்சுவழக்கு. **32.170.** குவலயம் - உலகம். **32.171.** மனமிடைந்து - மனம் வருந்தி. **32.173.** குத்தி - மண். பத்தி கலங்கி - நம்பிக்கையில் குழப்பம் ஏற்பட்டு. **32.174.** கையறுந்து - கையற்று; 'எந்தவித நம்பிக்கையும் இன்றி' என்ற பொருளில். **32.177.** விந்தைமலர் - வியப்பூட்டும் மலர். **32.178.** அந்தமுள்ள - அழகுள்ள. அவனி - உலகம். **32.181.** சிரியாரோ - சிரிக்க மாட்டார்களோ. **32.182.** பரிகாசம் - கிண்டல். **32.183.** தரியோம் - பொறுத்து இருக்க மாட்டோம். இரோம் - இருக்க மாட்டோம். **32.185.** திருநூலான் - 'உயர்ந்த வேதங்களைக் கற்றுணர்ந்தவன்' என்ற பொருளில். **32.188.** செகம் - ஜெகம்; உலகம். **32.189.** இளைப்பு - உடல் வருத்தம். சஞ்சலம் - மயக்கம்.

சு.சொல் : 1. பதரி 2. கைய்யாந்து 3. வாளுங்குலன் 4. பொய்வாள்வை

You'll see we too will go to *Vaikuṇṭam*.
We'll never ever utter lies.
It's no lie that we spurn this world!"
Broken hearted Tarmar remained.

**Nakulaṉ weeps**

Nakulaṉ standing as he was,
Obeisance to Lord Viṣṇu paid.
He fell on the ground and cried aloud.
He lost senses and his body shuddered
He fell, rolled on the ground, grew very tired,
Felt helpless, "Māyavaṉ's friendship is lost!
Are we ever to see your feet,
Those wonderful feet of our Lord?
O handsome Kaṇṇaṉ you measured the worlds!
Will we ever see you here on earth again?
Hari Kēcava[1], Mukunta![2]
If you leave us here alone,
Won't people of the world laugh at us?
Ridicule will result for us.
The five Pāṇṭavars with patience,
Will not stay without you on earth.
To *Vaikuṇṭam* we will come." he said.
Cakātēvaṉ[3] wellread, laughed.

**Cakātēvaṉ philosophises**

Considering false life real and happy,
O, you all loved this life my lords!
Your bodies, and earth do they matter anymore?
Thirst, hunger, fatigue do they matter?

1. Tirumāl, Viṣṇu here Kaṇṇaṉ. 2. Especially the *Vēdas* . 3. The youngest of the Pāṇṭavars

தேடுந் திரவியங்கள் செல்வமது தான்பொருளோ
நாடும் நகருமிந்த நற்பதிகள் தான்பொருளோ

தந்தையுடன் தாயுந் தமருங் கிளைபொருளோ
மைந்தரும் வீடும் மனையாட்டி தான்பொருளோ

ஆனை குதிரைகள் அலங்காரந் தான்பொருளோ
சேனைவெகு பட்டணமுஞ் செல்வமது தான்பொருளோ

என்ன பொருளென்று இடைகிறீ ரெல்லோரும்
தென்ன மாய்கை திறமென்று [1] நம்புவரோ

காயந் தரியாது கணப்பொழுது நில்லாது
நேயந் தவறாது [2] நிலைநின்றோர் தங்களுக்கு

மேகந்தரு நிழலை மெய்யென் றிருப்பார்களோ
காகுத்தன் தன்செயலைக் காணாமல் கண்டுகொண்டு

பதையா திருப்பீர்காண் பாசத்தை நம்பாமல்
சதையும் நரம்புஞ் சலமலமுங் கோழையுமாய்

ஊத்தை திரண்டு ஒருவா யிருந்ததிலே
காத்தைப் பிடித்தடைத்துக் கயறில்லாப் [3] பம்பரம்போல்

நடையு டையுமதாய் நாகரிகப் பானையும்
அடையுங் கிருமிகளு மாகாத நாத்தமுள்ள

மாயக் குரம்பையிது வஞ்சினையாம் பொய்க்கூடு
காய்க்குமே [4] மிகுந்த காமக் குரோதமிது

ஒட்டுச் சுவரிதுகாண் ஓயாக் கவலையிது
விட்டுப் பிரியுமிந்த விழுசுவரை நம்புவரோ

32.191. நற்பதி - நல்ல இருப்பிடம். 32.192. தமர் - உறவினர். கிளை - சுற்றத்தார். 32.194. ஆனை - 'யானை' என்பதின் பேச்சுவழக்கு. 32.196. இடைகிறீர் - 'மனத்தில் சஞ்சலம் கொள்கிறீர்' என்ற பொருளில். 32.198. காயம் - உடம்பு. 32.199. நேயம் தவறாது - நன்மை தவறாமல். 32.200. மேகந்தரு நிழல் - வானத்தில் ஊர்ந்து கொண்டே இருக்கும் மேகத்தின் நிழல். 32.201. காகுத்தன் - திருமால். 32.202. பதையாது - மனம் பதறாமல். 32.203. சதை - தசை. சலம் - மூத்திரம். கோழை - சுபம். 32.204. ஊத்தை - நாற்றமடிக்கும் பல்லின் அழுக்கு. 32.205. காத்து - 'காற்று' என்பதின் பேச்சுவழக்கு. 32.206. நாகரிகப் பானை - இங்கு உடம்பை உருவகப்படுத்தியது. 32.207. நாத்தம் - 'நாற்றம்' என்தின் பேச்சுவழக்கு. 32.208. குரம்பை - உடல். வஞ்சினை - வஞ்சனை. 32.209. காய்க்குமே - காய்ப்பதற்குத் தகுந்ததாய் இருக்குமே. 32.210. ஒட்டுச்சுவர் - ஒட்ட வைக்கப்பெற்ற சுவர்; நிலையற்றது என்ற பொருளில். ஓயா - ஓயாத. 32.211. விழு சுவர் - விழப்போகின்ற சுவர்; உடம்பைக் குறித்தது.

சு.சொல் : 1. திரமென்று 2. தவராது 3. கயிரில்லா 4. காய்க்மே

Wealth earned, riches, do they matter?
Do country, tour, and holy places matter?
Do parents, kins, progeny matter?
Children, house, wife, do they matter?
Beautification of oneself,
Elephants, horses do they matter?
Army, huge towns, wealth do they matter?
For what you all do feel sorry,
Will one consider illusion as real?
You see, our body is mortal; it
Doesn't stop here a moment longer!
Those that do good sans prejudice,
Will they think shadow of clouds as real?
Observe the deeds of Kākuttaṉ[1].
They were without his involvement.
Oh, don't you get agitated.
Please, you spurn all the relationships.
Flesh, nerves, urine, faeces and phelgm,
Together all dirts forming remained.
Air pumped into it- a top, sans the whip.
With gait, dresses, the pots[2] made up,
A bag of germs with stink unbearable.
The body is illusion, false and mortal.
It creates evils like lust and enmity.
A precarious wall it is-
A source of perpetual worry.

1. Kaṇṇaṉ. 2. It is customary to compare the human body to a mud pot, so fragile, that is.

காரணங்கள் தான்முடிக்கக் கரியமால் வந்துதித்து
நாரணராய்[1] வந்து நடத்துகின்றார் பாரதத்தை

உகத்துக் குகம்பிறந்து[2] ஒடுங்காத பேரையெல்லாம்
செகத்தோடே யொத்திருந்து செயம்பண்ணி யிப்படித்தான்

எத்தனையோ காலமது யெடுத்தா ரவதாரம்
கத்தனார் தன்சியலைக் காண்ப[3] தறிதெனவே

வேதங்கள் நான்கும் விளிம்புதுகாண் சாஸ்திரமும்
ஆதலால் மாயனுக்கு அளவத்த காலமெல்லாம்
அழிவதுவு[4] மில்லை அவராதி மகாமூலம்
தெளிவதுவே சித்தமென்றார் தீரன் சகாதேவன்

## திரௌபதையின் துயர மொழிகள்

அப்பால் துரோபதையு மடித்து விழுந்தலறி
மைப்பரவு மேனியற்கு வந்த விதிவசமோ

கற்புக்குலை யாமலெந்தன் காவல் நிலைநிறுத்தி
துர்புத்தி[5] செய்தோரைச் சொல்லரிய பாழ்நரகில்[6]

வைப்பித்த புண்ணியர்தான் மாளவந்த காரியமேன்
மெய்ப்பித்த புண்ணியர்தான் மேதினியில் விட்டேகித்
தப்பித்தனி வழியே[7] தான்போனா ரம்மானை

தெய்வமே ஞாயமிதோ செங்க ணெடுமாலே
ஐவர்ச் சகாயா ஆயரே அச்சுதரே

கரியமால் - கரிய நிறமுடைய திருமால். **32.214.** உகத்துக்குகம் - 'யுகத்திற்கு யுகம்' என்பதின் பேச்சுவழக்கு. ஒருங்காத - அடங்காத. **32.215.** செகத்தோடே யொத்ததிருந்து - உலகத்தோடு பொருந்தியிருந்து. செயம் - ஜெயம்; வெற்றி. **32.219.** கத்தனார் - கர்த்தானார்; திருமால். சியல் - 'செயல்' என்பதின் பேச்சுவழக்கு. **32.218.** வேதங்கள் நான்கு - ரிக், யசூர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்கள். விளம்புது - கூறுகிறது. **32.219.** அளவத்த - 'அளவற்ற' என்பதின் பேச்சுவழக்கு. **32.220.** ஆதி மகாமூலம் - எல்லாவற்றிற்கும் முதன்மையானவன். **32.222.** மடித்து - உடல் சாய்ந்து. **32.223.** மைப்பரவு - மை போன்ற கருநிறம் படர்ந்த. **32.224.** கற்புக்குலை நிறுத்தி - இத்தொடர் கௌரவர்கள் சபையிலே துச்சாதனன் பாஞ்சாலியின் துகில் உரிந்ததையும் கண்ணன் ஆடை கொடுத்து அவள் கற்பைக் காத்தமையும் கூறிற்று. **32.226.** வைப்பித்த - அனுப்பி வைத்த. மாள வந்த - மரணமடைய வந்த. **32.227.** மெய்ப்பித்த - தான் கடவுள் என்று மெய்ப்பித்த. மேதினி - உலகம்.

சு.சொல் : 1. நார்ணறாய் 2. பிரந்து 3. சாணப்பதரி 4. அளிவதுரை 5. துற்புத்தி 6. பாள்தரகில் 7. வளியே

Who can trust this impermanent one?
Kaṉṉaṉ was born for specific purposes.
Nārāyaṇaṉ led Pārttaṉ
To control the evil ones.
Thus born is He in every yukas.
He lives like a mortal and conquers them.
From time immemorial He
Takes Avtārs[1] and to understand
The ways of God is difficult.
So say the four vēdas[2] and sāstras all!
Hence, Kaṉṉaṉ's time is limitless, see.
He never dies, He is the first cause.
Learn, console your selves" Cakātēvaṉ said.

**The sad words of Tiroupatai[3]**

Tiroupatai beat chest, fell down, cried, said
"Has fate played its role for the one
Whose colour likened the dark ink?
He protected my modesty[4] and guarded me.
Evil doers He damned to hell.
Such a great one why came here to die?
He who proved Himself god has left this world.
He left us alone and went away.
O ceṅkaṇ Neṭumāl[5] is it fair?
O my Āyaṉ[6] O Accutaṉ![7],

1. Divine incarnation. 2. Rig, Yajur, Sama, Adharvaṇa. 3. The common wife of the Pāṇṭavars. 4. When Turiyōtaṉaṉ tried to disrobe Tiroupatai in Turiōyōtaṉaṉ's court, Kaṇṇaṉ gave her a nonstop supply of saris and saved her modesty. 5. Tirumāl with red shot eyes. 6& 7. Kaṇṇaṉ.

நாயகமே பஞ்சவர்க்கு[1] நாளுந்துணை யாயிருந்தீர்
தாயகமா யென்னாளுஞ் சாங்கமாய் நின்றோனே

கணக்குப் புகழறிவாய்க் காசினியோர் தங்கள்முன்னே
எனக்குப் பிழைவராமல்[2] யேழைபங்கில் நின்றோனே

என்றைக்குக் காண்பேன் எங்கள் பெருமாளைக்
குன்றைக் குடைபிடித்துக் கோபதையைக் கார்த்தோனே

ஐயா துணையெனக்கு யாரினித்தா னிப்புவியில்
மெய்யா யெனைமறந்து[3] விண்ணகத்தில் போனீரோ

நானே துணையிழந்தேன் நாரணரே யும்மைவிட்டு
வானவர் போற்றவுந்தான் வைகுண்டஞ் சேர்ந்தீரோ

**குந்தி வருந்தி உரைத்தல்**

கிளிமொழியா ளிவ்வசனம் கிலேசமாய்ச் சொல்லியபின்
மொழிகுழறி[4] குந்தியம்மாள் முகத்தி லறைந்தழுதாள்[5]

என்மருகா யென்கோவே யெல்லார்க்கும் நாயகமே
தன்மருக்குந் தம்பியர்க்குஞ்[6] சாங்கமா யென்னாளும்

இம்மைதனி லேயிருந்து யெங்களையுங் காத்தோனே
நன்மைசெய்யக் கன்மம் நடுக்கா னகந்தனிலே

மாண்டிறந்து போன மகிமையென்ன காரணமோ
வேண்டி வினைசெய்த விதிவசமோ யிப்படியாய்

அந்திரத்தில் நீரும்[7] அருந்தவசு போயிருந்த
தந்திரத்தை யின்னதென்று தன்ம ரறிந்திலையோ

**32.232.** தாயகமாய் - ஈகைத்தன்மை மிகுதியாய் கொண்டவனாய். சாங்கம் - முறைமை. **32.233.** காசினியோர் - உலகத்தோர். **32.234.** பிழை - தவறு. ஏழை - இங்குப் பாஞ்சாலியைக் குறித்தது. **32.236.** குன்ற. . . . கார்த்தோனே - இந்திரனுக்குக் கோகுலத்து மக்கள் வழிபாடு செய்யாதிருக்கவே அவன் பெருமழை பெய்து ஊரை வெள்ளக்காடாக மாற்ற கண்ணன் கோவர்த்தகிரியைக் குடையாகப் பிடித்த நிகழ்வை இவ்வடி உணர்த்தியது. **32.238.** மெய்யாய் - உண்மையாய். **32.240.** உந்தன் - உம்முடைய. **32.241.** கிளி மொழியாள் - கிளி போலும் இனிமையாய்ப் பேசும் மொழியாள்; பாஞ்சாலி. **32.241.** கிலேசம் - துன்பம். **32.242.** மொழி குழறி - பேச்சுத் தடுமாறி. **32.243.** என் மருகா - என் மருமகனே; கண்ணன் குந்திக்கு மருமகன் முறையினன். கோ - அரசர். **32.244.** சாங்கம் - ஒழுங்கு முறை. **32.246.** கன்மம் - கர்மம். **32.248.** வினை - கர்மப்பயன். **32.249.** அந்தரம் - தனிமை. அருந்தவசு - செய்வதற்கரிய கடும் தவம். **32.250.** தன்மர் - தர்மர்.

---

சு.சொல் : 1. பஞ்சவற்கு 2. வறாமல் 3. மரந்து 4. மொளிகுளரி 5. முகத்திரரைந் 6. தம்பியற்குஞ் 7. நீறும்

O the saviour of the five!
O the exemplary one! Our great help!
In people's presence you remained
The ultimate intellect, glorified.
Saved my modesty being on my side.
When will I ever see you Oh Perumāḷ[1]
Holding as umbrella, a hill once
You saved people, and cattle from torrent rains[2]
Lord, who can help us now in this wide world?
How could you leave the earth, forgetting me?
O Nārāyaṇaṉ I lost an ally!
Perhaps you'd gone to Vaikuṇṭam because
The celestials there celebrate and worship you."
The grieving woman like a parrot[3] spoke thus.

**Kunti's[4] sad words**

With faltering words, beating her face Kunti wept :
"My nephew! my Lord! Lord of us all!
You were great help to Tarmar and brothers.
In this birth you had saved us all.
You did only good! In deep forest,
Then, why should karma bring your end?
Is it fate that has caused you this?
For severe tapas alone you went.
Hasn't Tarmar its significance known?

1. Kaṇṇaṉ. 2. There was once incessant torrential downpour caused by an angry Intiraṉ, king of the Heavens. Kaṇṇaṉ was there. He lifted a nearby mountain, Kōvarttaṉam and people and cattle alike could take shelter underneath it. 3. Lisping or pratting like a parrot. A lady with a lisping, mincing and affected manner of speech, intended by graceful and charming. 4. Mother of the Pāṇṭavars.

மந்திரம் வேதம் வரம்புதப்பிப் போனதுவோ
சந்திரருஞ் சூரியருந் தானழிந்து போனாரோ

அண்டத் தடுக்கும் அரசுநிலை தான்பேர்ந்து
கொண்டல் கருவழிந்து குரைகடலுந் தான்சுவறி[1]

ஆகாயம் பூமி யந்தரங்கள் தான்கலைந்து
வாகான நற்றவங்கள் மாசடைந்து போனாலும்

இறப்பேது காணுமக்கு எம்பெருமா ளேன்றழுதாள்
பிறப்பதுவு மேதுமக்குப் பிறந்து[2] யிறப்பதுவும்

இரண்டு தொழிலாய்[3] நடத்துகின்ற புண்ணியரே
விண்டும் பலதுரையேன் விளம்பேன் ஒருவசனம்

யென்றுகுந்தா தேவி யித்தனையுந் தான்புலம்பிச்
சென்று புகுந்தாள் செய்யமணி மண்டபத்தில்

## தருமர் தம்பியர்களுக்குக் கூறும் அறிவுரை

தம்பியருந் தன்மருடன் தானே மனமிடைந்து
வெம்பி முகம்வாடி வேதநா ராயணர்தான்

சொல்லரிய தேசந் துவார புரிநகரில்
வெல்லரிய வேடர்சென்று விபரிதங்கள் பண்ணாமல்

இப்போது சென்று யெம்பெருமாள் பட்டணத்தை
மெய்ப்பாகக் காருமென்று விடைகொடுத்தார் தன்மருமே

## துவாரகையைத் தருமரின் தம்பியர்கள் அடைதல்

வீமன் விசையன் மிகுத்த சகாதேவன்
தாம னகுலனுடன் தத்துபரி மீதேறி[4]

**32.251.** வரம்புதப்பி - எல்லை மீறி. **32.253.** அண்டத்தடுக்கும் - விண்ணுலகத்தை ஒக்கும். பேர்ந்து - முறைமாறி. **32.254.** கொண்டல் - மழைமேகம். குரை கடல் - ஆரவாரம் செய்யும் கடல். சுவறி - வற்றி. **32.255.** குலைந்து - தன் நிலையில் மாறுபட்டு. **32.256.** வாகான - ஒழுங்கான. மாசு - குற்றம். **32.260.** விண்டும் பலதுரையேன் - மேலும் பல உரைகள் கூற மாட்டேன். **32.261.** குந்தா தேவி - குந்தி தேவி. **32.262.** செய்யமணி - சிவந்த மாணிக்கம். **32.264.** வெம்பி - விம்மி. **32.266.** வெல்லரிய வேடர் - வெல்வதற்கு அருமையான திருடர். **32.268.** மெய்ப்பாக - உண்மையான. காரும் - பாதுகாரும். **32.270.** தாம நகுலன் - கீர்த்தி மிக்க நகுலன். தத்து பரி - பாய்ந்து ஓடும் குதிரை.

---

சு.சொல் : 1. தான்சுவரி 2. பிரந்து 3. தொளிலாய் 4. மீதேரி

Have mantiras, Vēdas gone useless?
Has kingship heavenly awry gone?
Have clouds become barren, seas dried up?
Sky, earth, space, have they berserk gone?
How can good tapas get tarnished?
How can there be death for you?
How can you be born, for you do cause
Here birth and death, O, divine spirit?
Is there anything to say further?
I'm not going to talk anymore!" she cried.
Saying all these, lamenting Kunti
Stayed in a maṉṭapam studded with gems.

**Tarmar's advice to his brothers**

Tarmar, and brothers were heart broken.
Face darkened in sorrow deep he said,
"Go guard famed Tuvārakāpuri
The city of Vētanārāyaṇar.[1]
Stop the menace of hunters innumerable."
Thus Tarmar bid farewell to his brothers.

**Brothers of Tarmar reach Tuvārakāpuri**

Vīmaṉ, Vijayaṉ, and Cakātēvaṉ
Famed Nakulaṉ swift horses mounted.

1. Nārāyaṇaṉ well versed in the vēdas.

சிறப்பாகச்[1] சேனையுடன் சீக்கிரத்தி லந்நேரம்[2]
புறப்பட்டார் பூமி பேரண்டந் தானடுங்க

நடந்தார் துவாரபுரி நன்னகரி தானோக்கிக்
கடந்தார் வெகுதூரங் கண்டார்கள் பட்டணத்தை

### வேடர்கள் துவாரகையை முற்றுகை இடுதல்

விரைந்து நகர்புகுமுன் வேடரங்கே தான்முடுகி
நிரைந்தார் வளைத்தார் நெடுமால்தன் பட்டணததைப்

### வேடர்கள் கண்ணனின் மனைவியர்களைப் பிடிக்க நினைத்தல்

பச்சைமால் தேவியர்கள் பதினா யிரம்பேர்கள்
இச்சையுடன் வேட ரெல்லாரை யும்பிடிக்க

வளைந்தார் மனையை மாயவனார் தேவியரை
நுழைந்தே[3] பிடிக்கவென்று நோக்குகின்ற வேளையிலே

கங்குலது மூடிக் கதிரோனும்[4] போய்மறைந்தார்
கங்குல் விடியக் கதிரோனும் வந்துதித்தான்

விடிந்தே அரண்மனையில் மெல்லிநல்லா ரெல்லாரும்
இடிந்தே கரைந்து யெம்பெருமா ளேன்றழுதார்.

### கண்ணனின் மனைவிமார் துறவுவேடம் பூண்டு தப்புதல்

**விருத்தம்**

33. தேவிய ரழுத போது செங்கண்மால் தனக்குத் தோற்றிப்
பாவியர் வேடர் தாமும் பங்கமே செய்யா வண்ணம்
ஒவிய மான பெண்கள் வுருவெல்லா மாத்தி முன்னாள்
தாவிய ரிசிபோ லாகித் தரணியில் வருக வென்றார்.

**32.272.** பேரண்டம் - பெரிய உலகம். **32.275.** முடுகி - விரைந்து. **32.276.** நிலைந்தார் - நிறைந்தார். **32.277.** பச்சைமால் தேவியர் - திருமாலின் மனைவியர். **32.278.** இச்சை - ஆசை. **32.279.** மனை - அரண்மனை. **32.281.** கங்குல் - இருள். **32.283.** மெல்லி நல்லார் - மெல்லிய குணமுடைய நற்பெண்கள்; இங்குக் கண்ணனின் மனைவிமார். **32.284.** இடிந்தே - மனம் சோர்ந்தே. கரைந்து - அழுது. **33.1.** தோற்றி - தோன்றி. **33.2.** பங்கம் - கற்புக்குச் செய்யும் பங்கம். **33.3.** மாத்தி - 'மாற்றி' என்பதின் பேச்சுவழக்கு. **33.4.** தாவிய ரிசி - பற்றுகளைக் கடந்த ரிஷி. தரணி - உலகம்.

---

சு.சொல் : 1. சிரப்பாகச் 2. லன்னேரம் 3. நுளைந்தே 4. கதிறோனும்

Soon with army gracefully started.
For great big earth to tremble much
Walked they towards Tuvārakāpuri.
Covering long distances, the city they saw.

**Hunters besiege Tuvārakai**

Before they could enter the city
The hunters in haste assembled,
Besieged the city of Kaṇṇaṉ[1]

**Hunters plan the capture of Kaṇṇaṉ's wives**

Kaṇṇaṉ had wives ten thousand.
In lust the hunters to capture all,
Beseiged their house, and the wives within.
When planning to enter the house
It was dark as the sun wentdown.
Dispelling darkness the sun rose at dawn.
At morn all graceful women at castle
Lost their hearts and cried "Alas! our Lord!"

**Wives of Kaṇṇaṉ escape in disguise**

They wept and there appeared Ceṅkaṉ Māl to
Save them from the mischief of the sinful hunters.
He changed the forms of women beautiful.
Changed them to rishs who had renounced everything.

1. Dark, greenish complexioned Kaṇṇaṉ.

34. தப்புடன் தாளஞ் சங்கு தாதாபோல் வேடங் கொண்டு
இப்புவி தனிலே வேடர் யேங்கியே முகங்கள் வாடி
ஒப்புடன் தாவி யோடி யோங்கிய சடையு மாக
மெய்ப்புடன் வந்தார் கண்டார் வேடரு மலைந்து நின்றார்.

**நடை**

35. அழுததொரு தேவியர்க ளாயிழைமா[1] ரெல்லோரும்
தொழுதபைய மிட்டுச் சொன்னதொரு தோத்திரங்கள்

அந்த மொழிகேட்டு ஆயனார் சூத்திரமாய்
முந்த யிருந்த முனிவர் தபோதனர்போல்

ஆமென்று சிந்தித்தா ராயிழைமா ரெல்லோரும்
ஓமென்ற தவவுருவம் உருமாறி யேயிருந்தார்

சடையுமுடி யுடனே தான்வந்தார் வீதியிலே
படைகூடிக் காத்திருந்தார் பலவேட ரெல்லோரும்

## துவாரகையைக் கொள்ளையிட வேடர்கள் முயலுதல்

விதிபோ யசைந்து மெய்மறந்து[2] பார்த்திருந்தார்
சதிருடனே பட்டணத்தைத் தான்கொள்ளை யாடவென்று

## வேடர்கள் படையைப் பாண்டவர்கள் முறியடித்தல்

நெருங்கிவரும் போது நிமிசத்தில் தன்மர்படை
கருங்கடல் போல்சூழ்ந்து[3] கைகலந்து தான்பொரவே

துரத்தி யடித்துவிட்டுத் துன்பமா வேதிரும்பி
அரத்தியொரு சாத்தகி ஆழ்வாரை முன்னேவிட்டு

**34.1.** தப்பு, தாளம், சங்கு - சில வகை இசைக் கருவிகளின் பெயர்கள். தாதா - ஈகைக் குணமுடையோன். **34.3.** ஒப்புடன் -- ஒப்பனையுடன். **34.4.** மெய்ப்புடன் - தவ வேடத்துடன். **35.2.** தோத்திரங்கள் - பணிவு வணக்க மொழிகள். **35.3.** ஆயனார் - கிருஷ்ணன். சூத்திரமாய் - உபாயமாய். **35.4.** முந்தயிருந்த - முன்பு இருந்த. **35.5.** ஆமென்று - ஆக வேண்டுமென்று. ஆயிழைமார் - அழகிய ஆபரணங்களை அணிந்த பெண்டிர்கள்; கண்ணனின் மனைவிமார். **35.8.** படைகூடி - படைகளைச் சேர்த்துக்கொண்டு. **35.9.** விதிபோய் - வீதியில் சென்று. **35.10.** சதிருடனே - இலக்குடனே. கொள்ளையாட - கொள்ளை அடிக்க. **35.11.** நிமிசம் - 'நிமிடம்' என்பதின் பேச்சுவழக்கு. **35.12.** பொரவே - போர் செய்யவே. **35.14.** அரத்தி - 'அரற்றி' என்பதின் பேச்சுவழக்கு. சாத்தகி ஆழ்வார் - கண்ணனின் தம்பியின் பெயர்.

---

சு.சொல் : 1. ளாயிளை 2. மரத்துபார்த் 3. போல்சூள்ந்து

And in safety he asked them to go out,
With tappu,[1] tāḷam,[2] and conch sounding,
As distinguished personalities.
Causing the faces of the hunters to fall,
With make up strong and tresses long,
They came in the guise of riṣis great.
Seeing it the hunters lost their hearts.
Crying, women[3] with pretty jewels
Prayed to the Lord with pathelic pleas.
Hearing which Kaṇṇaṉ played a trick.
He willed the pretty women to become
Like riṣis of yore doing penance.
Presto! the women into sages changed.
They walked along the street with matted hair.
The hunters with more men lay in wait.
They watched them walk away in disbelief.
They then planned to loot the city.
When to its proximity they came,
Tarmar's army was in no time there.
Like a dark sea surrounding them there,
Fought and foiled the hunters plan.
Drove them away and returned in sorrow.
Lamenting, left Cāttaki Āḻvār[4] there.

1 & 2. Musical instruments. 3. Kaṇṇaṉ's wives. 4. Younger brother of Kaṇṇaṉ.

மத்துமுள்ள சேனை மகுடமுடி வேந்தரையும்
அத்திபுரந் தன்னில் அழைத்துவந்தா ரம்மானை.

## வைகுண்டம் சேரத் தர்மர் முடிவெடுத்தல்

**விருத்தம்**

36. மாயனா ருலகை யாண்டு வனத்திலே யிறந்தா[1] ரென்று
நேயமாய் வேடர் வந்து நிலைமைகை கொள்வா ரென்று
தூயதோர் தன்மர் தானுஞ் சொல்லியோர் விரலை மூக்கில்
ஞாயமோ சிவனே யென்று நைந்துடல் சோர்ந்தி ருந்தார்.

37. இப்புறஞ்[2] செய்தி யென்ன யென்றுதான் தம்பி மார்கள்
ஒப்புட னழைக்கு[3] முன்னே யுண்மையே தென்று கேட்க
அப்புற[4] மினிமே லென்ன அண்ணரே யிந்த ஞாயம்
மெய்ப்புட னிவிடம் விட்டு விரையவை குண்டஞ் சேர்வோம்.

38. இளையவ ரின்னம் நீங்க ளிருந்துதான் புவன மீதில்
கிளைவளி யுடனே கூடிக் கிள்ளையர் மகுடர் மன்னர்
பழையவர் தமருந் தாயும் பாக்கிய மனேக மெல்லாம்
குழையவர் நடந்து வாழ்ந்து[5] குவலையத் திருங்க ளென்றார்.

## தர்மர் முடிவு கேட்ட தம்பியர்களின் வருத்தவுரைகள்

**நடை**

39. தன்ம ரிவைசொல்லத் தனஞ்செயனும் வீமனுமாய்
கன்மமோ வென்று கண்ணீர்மிகச் சொரிய

**35.15.** மத்துமுள்ள - 'மற்றுமுள்ள' என்பதின் பேச்சுவழக்கு. **35.16.** அத்திபுரம் - அஸ்தினாபுரம். **36.2.** நேயமாய் - பொருத்தமாய். நிலமை கைக்கொள்வார் - 'கண்ணனது நாட்டைக் கைப்பற்றுவார்' என்று பொருளில். விரலை மூக்கில் - வலது கை ஆள்காட்டி விரலை மூக்கின் மேல் வைக்கும் ஒரு வகை அபிநயம்; இது வியப்பைப் புலப்படுத்தும். **37.1.** இப்புறம் - இந்தவிடத்தில். **37.3.** அப்புறம் - 'கண்ணன் இறந்ததற்குப் பிறகு' என்ற பொருளில். ஞாயம் - 'நியாயம்' என்பதின் பேச்சுவழக்கு. **37.4.** இவிடம் - 'இவ்விடம்' என்பதின் இடைக்குறை. விரைய - வேகமாக. **38.1.** புவனம் - உலகம். **38.2.** கிளை வளி - உற்றார் உறவினர். கிள்ளையர் - கிளி போலும் மொழி பேசும் பெண்கள். **38.3.** தமர் - சுற்றத்தார். பாக்கியம் - புண்ணியம். அனேகம் - அநேகம். **38.4.** குழையவர் - காதில் குழையை அணிந்த மகளிர். குவலையம் - உலகம். **39.1.** தனஞ்செயன் - அர்ச்சுனன். **39.2.** கன்மம் - கர்மம்; விதிப்பயன் எனினும் அமையும்.

---

சு.சொல் : 1. யிரந்தா 2. இப்புரஞ் 3. னளைக்கு 4. அய்புர 5. வாள்ந்து

They took to Astiṉāpuram
The remaining army and many kings.

### Tarmar decides to leave for Vaikuṇṭam

"Kaṇṇaṉ in the forest died and hence
The hunters would capture the country."
Said good Tarmar and, put his finger on nose.[1]
He lamented, "O God, is it fair?"
Strength depleted, in pain he stayed
Younger brothers enquired him of the future.
They asked what was in store for them.
"After Kaṇṇaṉ what's there for us?
God's truth, we'll leave, and Vaikuṇṭam reach.
You are young, hence, here live for long
With kith and kin and sweet voiced dames,
Crown kings, old relatives an' mother,
Bounties large with pretty damsels,
Wearing ear studs you live for long!"

### The sad utterances of the brothers after they come to know of Tarmar's decision

As Tarmar spoke Taṉañceyaṉ, and Vīmaṉ
Wondered if it was karma, and wept.

1. The right forefinger is placed on the nose, a gesture expressing disbelief.

நகுலன் சகாதேவன் நாட்டமுடன் வாட்டமதாய்
வெகுகவலை யாகி விள்ளாம லுள்ளுடைந்து

எங்களையும் விட்டு யினம்பிரிந்த மான்போல
தங்குவது மெங்கே தரிப்பதுவு மெவ்விடமோ

நாங்க ளும்மை விட்டு நானிலத்தி ருப்போமோ
தீங்கொன்றும் பேசோந் திருவுளமே யல்லாது

இருந்துமென்ன கோட்டை யெடுப்பதுவு மிங்கேதான்
வருந்துவோம் நாங்கள் வாடுவோ மும்மைவிட்டு

என்னமொழி[1] சொல்லி யெடுத்துரைத்தீ ரண்ணாவி
சின்னவரு மெங்களுக்குச் சீமானீர் தான்போனால்

மாய்கையிது வாழ்வு[2] மாய்மாலந் தன்னைநம்பிச்
சாய்கையிது வென்று சதமென்று தானிருந்தால்

இந்தவுட லுயிர்க்கு[3] மீடேத்த மெப்போதான்
கந்தவுட லெடுக்குங் கசுமாலப் பாண்டமிது

நாறும் புழுக்குரம்பை நன்றிகெட்ட காயமிது
சாறுஞ் சலமுந் தானடைந்த பாண்டமிது

சோற்றுத் துருத்தியிது சொல்லடர்ந்த பாண்டமிது
காற்றுப் பொருமல் கழன்றோடும்[4] பாவையிது

இடிகரையில் வாழ்மரம்போல்[5] யெண்ணமற்ற காயமிது
நெடிய மரமதுகாண் நிழலில்லாத் தாலமரம்

39.4. விள்ளாமல் - ஒன்றும் பேசாமல். உள்ளுடைந்து - உள்ளம் உடைந்து. 39.5. இனம் பிரிந்த மான் - பெண் மானைப் பிரிந்த ஆண் மான். 39.7. நானிலம் - பரந்த நிலம்; குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நால்வகை நிலமெனினும் அமையும். 39.8. பேசோம் - பேச மாட்டோம். 39.9. கோட்டை யெடுப்பதுவும் - அஸ்தினாபுரக் கோட்டையை ஆளுவதும். 39.10. வாடுவோம் - மனத்தால் மிகவும் தளர்ச்சி அடைவோம். 39.11. என்ன மொழி சொல்லி - 'வைகுண்டம் போகிறோம் என்பதற்கு எவ்விதம் துணிந்து சொற்கள் சொல்லி' என்கிற பொருளில். 39.12. சின்னவர் - சிறியவர். சீமான் - மேன்மையானவர்; தருமர். 39.13. மாய்மாலம் - மாய வித்தை. 39.14. சாய்கையிது - சாய்ந்து இருக்கும் அரியணை வாழ்வு. சதம் - நித்தியம். 39.15. ஈடேத்த - ஆன்மாவைக் கரையேற்ற. எப்போதான் - எப்பொழுதுதான். 39.16. கந்தவுடல் - நாற்றத்தைத் தன்னுள்ளே கொண்ட உடல். கசுமாலப் பாண்டம் - அழுக்கு மிகுதியாகச் சேர்ந்த பாத்திரம். 39.17. நாறும் புழுக்குரம்பை - நாற்ற மடிக்கும் புழுக்கள் நெளியும் உடம்பு. காயம் - உடம்பு. 39.18. சாறு - நிண நீர். சலம் - மூத்திரம் முதலிய கழிவுநீர். பாண்டம் - உடம்பிற்கு இவண் பாண்டம் உருவகப் படுத்தப்பட்டது. 39.19. சோற்றுத் துருத்தி - 'உணவினால் உப்பிய துருத்தி போன்றது இவ்வுடல்' என்ற பொருளில். 39.20. காற்றுப் பொருமல் - 'வாய்வு' நோயினால் உடலெங்கும் பொருமுதல். பாவை - உடம்பைக் குறித்தது.

சு.சொல் : 1. என்னமொளி 2. வாள்வு 3. யிற்கு 4. களன்றோடும் 5. வாளமரம்போல்

Nakulan̲, and Cakātēvan̲ grew sad,
Could not speak out, as their heart'd broken.
"He left us behind like a deer,
That from the herd got separated.
Where to remain and where to stay?
Without you how can we live on earth?
It's His will, we won't speak evil.
What is there in ruling from fort?[1]
Sad we'll feel and suffer deep grief
What cruel words, O brother you spoke!
Don't you leave us, the insignificant ones.
Life is unreal, an illussion, see!
Considering it as permanent and
Thinking our throne perpetual
Will there be salvation for the soul?
This our body, a stinking vessel,
Dirty to the core, the home of germs
Thankless it is, full of serum;
Dirty water[2] fills this stinking pot,[3]
A pot of food, defying details.
When gas gets spread, this body is lost.
Its like a tree on an eroded bank,
Which can not be sure of its own life.

1. Hastināpuram fort .2. Like sweat, urine etc. 3. The body is often compared to a fragile pot.

வேரில்லா தொத்ததொரு வீழ்சுவரை[1] நம்புவரோ
தூரில்லாக் காயமிதைச் சுகமென்று நம்புவரோ
அலைகடலில் சம்பரனை யாசைவைத்த பொக்கிசத்தை
நிலையில்லாக் கப்பலிதை நிலையென்று நம்புவரோ
ஓடு மரக்கலத்தை யொன்பதுவாய்ப் பொய்கூட்டைப்
போடுகின்ற தெவ்வீடமோ பொருந்துமுயி ரெவ்வாறோ
இந்தவுட லெடுத்து யிவ்வுலக மேசதமாய்
சொந்தமெனத் தானிருக்கச் சுகமோதா னண்ணாவி
இதுக்கு மல்ல இறையோனே உம்முடைய
பதுமமலர்ப் பாதம் பணிவதுவே யல்லாது
அதுகரும மெங்களுக்கு அடவுதா னிப்போது
மதுரமொழி[2] பயிலும் வாசகரே அண்ணாவி
நடக்கு வகைதெரிந்து நாயகமே நீர்தாமும்
அடக்க வுபாய மவனிதனி லுண்டுபண்ணி
வைக்க வுபாயம் வழங்குமென்றார்[3] தம்பியர்கள்
மிக்கபுகழ் தம்பியர்கள் விளம்பு மொழிகேட்டு

## பரிசித்துவுக்குப் பட்டம் கட்ட பாண்டவர்கள் முடிவெடுத்தல்

தக்கபுகழ்[4] தன்மர் தம்பியர்மே லன்புவைத்து
மக்கள் மானுடர்[5] மகுடமுடி வேந்தருடன்
கூடியா லோசனைகள் குழாங்களுடன்[6] தான்பேசி
நாடியதோர் செம்பொன் நல்லபரி சித்துவைத்தான்

39.21. இடிகரையில் வாழ்மரம் - இடிந்த ஆற்றின் கரையில் வேர்ப்பிடிப்பு இல்லாது இருக்கின்ற மரம். தாலமரம் - கூந்தற் பனை மரம். 39.28. வீழ் சுவர் - வீழப் போகின்ற மண்சுவர். 39.24. தூரில்லா காயம் - வேரில்லா மரம்போன்ற உடம்பு. 39.25. சம்பரனை ஆசை வைத்த பொக்கிஷம் - "கிருஷ்ணனுக்கும் ருக்குமணிக்கும் பிறந்த பிரத்தியுமனன் என்பானைக் கடலில் போட்டு, மீனை விழுங்க வைத்தவன்; அதைக் கடலில் பாதுகாத்தவன்" என்கிற புராணக்கதையை விளக்கும் அடிப்படையில் பிறந்த தொடர். 39.27. மரக்கலம் - 'உடம்பு'க்கான உருவகம். ஒன்பதுவாய் பொய்க்கூட்டு - ஒன்பது துவாரங்களைக் கொண்ட, அழிந்து போகின்ற உடம்பு. 39.29. சதம் - உறுதி. 39.30. சுகமோ - சுகமில்லை என்ற பொருளில். 39.31. இறைபோன் - தருமரைக் குறித்தது. பதும மலர் - பத்ம மலர்; தாமரை மலர். 39.33. அடவுதான் - அடைவுதான்; முறைதான். 39.34. மதுர மொழி - இனிமையான மொழி. 39.35. நாயகம் - தலைவர்; தருமரைக் குறித்தது. 39.36. அடக்க - கலியின் கொடுமைகளை அடக்க. உபாயம் - வழிமுறைகள். அவனி - உலகம். 39.38. விளம்பு மொழி - கூறுகின்ற உரைகள். 39.41. குழாம் - அமைச்சர் முதலாகிய கூட்டத்தார். 39.42. செம்பொன் நல்ல பரிசித்து - செம்பொன் போலும் ஒளிர்விடும் பரிசித்து; அபிமன்யுவின் புதல்வன்.

சு.சொல் : 1. வீள்சுவரை 2. மதுரவொளி 3. வளங்குமென்றார் 4. தக்கபுகள் 5. மனுடர் 6. குளாங்களுடன்

Tall it may seem, but is a shadowless palm.
Who'll trust this falling wall, a rootless tree?
Who'll think this rootless tree's a comfort?
It's like Camparaṉ[1] and the treasure placed in the sea.
A moor less ship, who'd think 'its' safe?
With holes nine the mortal body-
Where shall we place? what life therein?
Living as if life's eternal,
How can we hold this body of ours?
Not only this, O Lord brother!
Worshipping not your lotus feet
How can we live here O Lord!
O brother who always speaks sweet words,
You know, ways open for us O lord!
To contain kali find ways on the earth.
Give advice and guide us" said all the brothers.

### The Pāṇṭavars decide on the coronation of Paricittu

Gloried Tarmar with love intense
Listened to the words of the famed brothers.
With men, subjects, the crowned kings and
Groups of ministers debated he.

1. Refers to a mythological story. He dropped pirattiyumaṉaṉ born of Kriṣṇaṉ and Rukmaṇi in sea. He made a fish swallow him and protected it in the sea.

வாளவீமன்[1] புத்திரனை வாகாய் முடிசூட்டி
நாளு முகூர்த்தம் நல்முகூர்த்தம் தான்கேட்டுப்

பட்டமுங் கெட்டுதற்குப் பட்டணமுங் கோட்டைகளும்
திட்ட முடன்வெகுவாய்ச் செப்பமிட்டா ரம்மானை

## பரிசித்துவுக்குப் பட்டம் கட்டுதல்

ஆனை குதிரை அரசரொடு காவலர்கள்
சேனை யரசர்மன்னர் சீமை யடங்கலுமே

கணக்குப் படியே கணக்கெடுத்துத் தான்பார்த்து
இணக்கமா யுள்ளதெல்லா மெடுத்துதெழுதிச் சேகரமாய்

துகையேக வாங்கித் துரைமகனைத் தானழைத்து
வகையாக வீமன் மகனை முடிசூட்டிச்

சிங்கா தனத்திருத்திச் செகமன்னர் போற்றி செய்ய
மங்காத செல்வம் வானிருந்து வாழியென்று

## பரிசித்து பட்டணப்பிரவேசம் வருதல்

தந்திர மாய்வைத்துச் சந்தோச மாய்மகிழ்ந்து
விந்தையாய் வீமன்மகன் வீதிவர வேணுமென்று

ஆனையின்மே லேத்தி யவனியெல்லாந் தானதிரச்
சேனை தளத்துடனே சிங்காரமாய்க் கூடிப்

பட்டணமுஞ் சுத்திவரப் பாவாணர் கொண்டாடச்
சிட்ட பரிபாலன் தெய்வேந் திரன் போலே

வட்டக் குடைநிழற்ற[2] வந்தான் பவனிவலம்
சட்டமாய்ச் செங்கோல் தரித்துதென்று மன்னவர்கள்

**39.43.** அவீமன் புத்திரன் - அபிமன்யுவின் புத்திரன். **39.44.** நாளு முகூர்த்தம் - முடிசூட்டுவதற்குரிய முகூர்த்த நாள். **39.45.** கெட்டுதற்கு. 'கட்டுவதற்கு' என்பதின் பேச்சு வழக்கு. **39.46.** செப்பமிட்டார் - அழகுபடுத்தினார். **39.47.** ஆனை - 'யானை' என்பதின் பேச்சுவழக்கு. **39.48.** மன்னர் சீமை - அரசர் கூட்டம். **39.50.** இணக்கமாய் - பொருத்தமாய். சேகரமாய் - கூட்டமாய். **39.51.** துகையேக வாங்கி - மிகுதியான கூட்டத்தாரை வரவழைத்து. **39.54.** வானிலிருந்து - வானத்தின் கீழேயிருந்து. **39.56.** வீமன் மகன் - அபிமன்யுவின் மகன்; பரிசித்து. வீதி - உலா. வேணும் - வேண்டும். **39.57.** அவனி - உலகம். **39.58.** சேனைத் தளம் - படைக்கூட்டம். சிங்காரம் - அழகு. **39.59.** சுத்தி வர - சுற்றி வர. **39.60.** சிட்ட பரிபாலன் - பெரியோர்களைப் பாதுகாப்பவன்; பரிசித்து. தெய்வேந்திரன் - தெய்வலோகத்து அரசன். **39.61.** வட்டக்குடை - வெண்கொற்றக் குடை. நிழற்ற - ஒளி வீச.

சு.சொல் : 1. வாள்வீமன் 2. நிளற்ற

He decided on Paricittu,
The one like beaten gold, glittered.
To crown the son of Apimaṉyu,
An auspicious day and time they fixed.
For coronation; the town and castles
They renovated with a proper plan.

## Coronation of Paricittu

Elephants, horses, kings and soldiers
Monarchs, army and all from the state-
They took into account and made note of.
They chose the names and invited them all.
Before a huge crowd the prince was brought.
They crowned with pomp the son of Apimaṉyu and
Placed him on throne for kings to praise.
"With boundless wealth long live!" they said.
In position he was placed, in joy they remained.

## Paricittu goes on procession

To go on procession, Apimaṉyu's son
Mounted an elephant, earth trembling.
Army, weaponry with grace gathered,
Went about city for bards to praise:
"He guards old people, Intiraṉ[1] like!"
He with parasol in procession went.
"The sceptre's in the right hands!" said the kings

1. The king of Tēvars, the celestial beings.

துங்கப் பிரமனெனச் சொல்லுக்கரிச் சந்திரன்போல்
சிங்கார மாகவந்து சிங்காதனத் திருந்தார்

## பரிசித்துவின் ஆட்சி

இருந்து சிலகால மியலரசு தானாண்டான்
பொருந்த நடத்துகின்ற புதல்வனையே தான்மகிழ்ந்து[1]

நாளுஞ்[2] சிலகழித்து நாடுகளுந் தான்வணங்கி
ஆளும் புவிராசன் யாண்பிளையா மென்றுசொல்லி

## பிராமணன் ஒருவன் பரிசித்து நாட்டின் குடியேறுதல்

நேசமுட னாண்டு நிலைத்திருக்கு மந்நாளில்[3]
தேசத்தி லுள்ளதொரு தெய்வப் பிராமணர்கள்

முன்னாளில் வேதியன்தான் முழுதுங்குடி யிருந்தான்
பின்னாளொரு பாப்பான் பிரதேசம் விட்டுவந்து

இந்தப் பிராமணனை யிருக்கயிடந் தாருமென்றான்
அந்த மனையில் அவனுக் கொருபுறத்தில்[4]

விட்டுக் குடியிரென்று வேதியனுந் தான்கொடுத்தான்
கட்டுடனே வீடுமங்கே கட்டிக் குடியிருக்கப்

## பிராமணனுக்குப் புதையல் கிடைத்தல்

பாப்பானுஞ் சம்மதித்துப் பதியில் குடியிருந்தான்
நேர்ப்பாக அவ்விடத்தில் நிலமளந்து மண்ணெடுக்க

வெட்டினான் பூமிதன்னில் விரும்பிச் சுவரேத்திக்
கட்டினான் வீடு கனத்த புதையலொன்று

மண்ணி லிருந்தெடுத்தான் மறையோனும் அந்நேரம்
கண்ணிலே கண்டபொருள் கனமென்று தானினைந்து

39.63. துங்கப்பிரமன் - மேலான பிரம்மன்; இவண் பரிசித்துவுக்கு ஒப்புமை. 39.65. இயலரசு - இயல்பான அரசாட்சி. 39.68. ஆண்பிளை - ஆண்பிள்ளை. 39.72. பாப்பான் - பார்ப்பான்; அந்தண சாதியன். 39.74. மனை - வீடு. புறம் - வீட்டின் ஒரு பகுதி. 39.75. குடியிரென்று - குடியிருப்பீர் என்று. 39.76. கட்டுடனே - பொருத்தமுடனே. 39.78. நேர்பாக அவ்விடத்தில் - வந்து குடியேறிய அந்தணனுக்குப் பாகமாகத் தரப்பட்ட. 39.80. கனத்த புதையல் - மிகுதியான புதையல். 39.81. மறையோன் - வேதம் ஓதுபவன்; அந்தணன். 39.82. கனம் - மிகுந்த எடை.

சு.சொல் : 1. தான்மகிள்ந்து 2. நாமுஞ்சில 3. மன்நாழில் 4. கொருபுரத்தில்

Like great Piramman[1] he was celebrated.
Veracious like Hariccantiraṉ[2]
He gracefully came and sat on the throne.

### The Reign of Paricittu

Thus he justly ruled the country.
Pleased were all by his very just rule.
Days passed by and the countrymen worshipped him.
'A real man is the ruler!' said they.

### A Brahman comes to reside in the country of Paricittu

As he was ruling the state with love,
The Brahmans divine did live in peace.
One such Brahman was living there.
Another Brahman leaving his town, came there and
Asked the former for a place to live in.
On one side of his land he gave
A plot to reside for Brahman new,
To build house proper for living there.
The Brahman agreed, and lived he there.

### The Brahman digs out a treasure

On the given plot he measured the land.
To raise the wall he did dig the earth.
Treasure heavy when building the house
The Brahman found hidden in the earth.
He found that his find was a heavy one.

1. In Hindu mythology the god of creation. 2. A great king who forewent every thing for the sake of truth.

## பிராமணப் புதையலை நிலவுடமையாளரிடம் சேர்ப்பித்தல்

நமக்குமோ தக்காது நம்மிடத்தில் சிக்காது
சுமக்கும் பழிபாவந்[1] துன்பம்வரு மென்றேதான்

மனைநமக்குத் தந்த மன்னர்முத லாமெனவே
வினையொழிய[2] வேண்டி வேதியனுந் தானோடி

ஐயரே வேதியரே அதிசெயந்தான் கேட்டீரோ
துய்ய மனைகெட்டத் துடங்கினதோர் மண்கிடங்கில்

கண்டேன் திரவியமும் கனகமணிப் பொட்டகத்தில்
கொண்டேகி வந்தேன்பார் குடத்தில் பணத்தையெல்லாம்

உந்தன் பொருளிதுகாண் யுத்ததோர்கள் தான்புதைத்துச்
சொந்த முனக்கென்று தோத்துதுகா ணெந்தனக்கு

உன்மனையில் கண்டபொரு ளுனக்கல்லால் வேறுமுண்டோ
தன்மனையில் கண்டபொருள் தன்னைவிட்டுப் போகாது

ஆதலா லுன்பொருளை ஐயனே வாங்குமென்றார்
வேதியனார் சொல்ல வேதியனு மேதுசொல்வார்[3]

## வேதியர் புதையலைப் பெற மறுத்தல்

அன்றுமக்கு நாமு மன்பாக வீடுதந்தோம்
இன்றுமக்குத் தந்த யில்லிடத்தில் கண்டபொருள்

கண்டவர்க்கோ[4] சும்மா காணா திருந்தவர்க்கோ
உண்டவர்க்கோ யின்ப முறங்கினபேர்க்[5] கென்னாகும்

39.83. நமக்குமோ தக்காது - 'பிறர் மனையிலிருந்து கிடைத்த புதையல் நமக்கு தக்கதல்ல' என்ற பொருளில். சிக்காது - 'நிலைபெற்று இருக்காது' என்ற பொருளில். 39.85. மனை - குடியிருக்கத் தந்த நிலம். 39.86. வினையொழிய - புதையலைக் கைப்பற்றுவதால் ஏற்படும் பாவம் ஒழிய. 39.87. அதிசெய - அதிசயம்; வியப்பு. 39.88. துய்ய மனை - தூய்மையான வீடு. துடங்கின - தொடங்கின. 39.89. கனக மணி - பொன்னும் மாணிக்கமும். பொட்டகம் - பொக்கிஷப் பேழை. 39.91. உத்ததோர் - உற்றதோர். 39.92. தோத்துது காண் - தோன்றுகிறது பார். 39.98. இல்லிடம் - வீடு கட்டுவதற்குத் தந்த இடம். 39.99. கண்டவர்க்கோ சும்மா காணாதிருந்தவர்க்கோ - 'புதையலைக் கண்டெடுத்த உமக்கன்றி, அதை இது வரையும் காணாதிருந்த எனக்கு உரிமையில்லை' என்ற பொருளில். 39.100. உண்டவர்க்கோயின்பம் - பசியடங்கச் சாப்பிட்டவர்களுக்கே இன்பம்; இங்கு நீரே கடினப்பட்டு நிலத்தை அகழ்ந்து புதையலைக் கண்டீர் என்ற பொருளில். உறங்கின பேர்க்கென்னாகும் - 'ஒன்றும் செய்யாமல் வீணாகப் பொழுது போக்கிய எனக்குப் புதையலில் உரிமையில்லை' என்ற பொருளில்

சு.சொல் : 1. பளிபாவந் 2. வினைபொளிய 3. மேதுசொல்வார் 4. கண்டவற்கோ 5. முரங்கினபோக்

### The Brahman takes the treasure to the land owner

"As it's not ours it shouldn't stay with us.
This sure will bring attending grief as,
He who gave us the land has the rightful claim."
To avoid sin *Vētiyan̲*[1] ran and said,
"O Iyer, of such strange things have you ever heard?
I started to build the house in the pit.
I found huge wealth, gems and all in a box.
In pot have I brought all those in haste.
Your ancestors buried them, hence this is yours.
It's yours, it seems to me.
Something found on your land is yours.
Things buried in your land won't leave you.
O Iyer, do receive your things. " he said.

### Vētiyan̲ refuses the treasure

When *Vētiyan̲* spoke, the other said,
"We gave you with affection a plot.
These things found in the land we gave you
Belong to the finder, and not anyone else.
Pleasure is for those that eat food;
Not for ones who in idleness sleep.

1. Brahman, an exponent of the *vedas*.

வேண்டாங்காண் வேதியரே வீட்டில் கொடுபோவீர்
தீண்டோம்[1] பொருள்தனையுந் தீண்டுவரோ நல்லோர்கள்

போங்காணுஞ் சும்மா பொருள்தனையுங் கொண்டேகும்
வாங்கே னொருநாளும் மரியாதி யல்லவது

## பிராமணரின் மறுப்புரை

என்று மறையோனு மிவ்வசனஞ் சொல்லுவதை
நின்று பிராமணனும் நீதியோ வென்றுசொல்லிப்

பொருந்தாத காரியத்தைப் பொருந்தவே பேசுகிறீர்
வருந்தாதா ரென்று வருந்துவரோ மாநிலத்தில்

உந்தன் மனையெனக் குபகார மாய்க்கொடுத்தீர்
சொந்தமெனக் கெப்படியாஞ் சொல்லுங்காண் வேதியரே

அடமழையில்[2] காக்கைக்கு அன்னங் கொடுத்தாப்போல்
கிடைபொருளை நானெடுத்தால் கிட்டாது வேதியரே

இந்தவிதிப் பயனோ யிவ்வூரி லும்மிடத்தில்
வந்தவிதி மயக்கோ வழக்காய் முடிந்ததுகாண்

உன்சமத்து மென்சமத்து மூரறிய வேணுமென்று
பின்சமத்துப் பேசிப் புறப்பட்டார்[3] அந்நேரம்[4]

## இருவரும் தர்மரிடம் நீதி கேட்டுச் செல்லுதல்

மறியலிருந்து மடிபிடியுஞ் சண்டையு மாகி
நெறியுடைய தன்மரென்று நீதி விளங்கவென்று

பூசலிட்டுக் கொண்டு புண்ணியனார் தம்மிடத்தில்
ஊசலிட்டுச் சென்றொரு பூசல் தன்னுடனே

**39.101.** கொடு போவீர் - கொண்டு போவீர். **39.103.** போங்காணும் - இவ்விடத்தை விட்டுச் செல்லுங்கள். **39.104.** மரியாதி - மரியாதை. **39.108.** வருந்தாதார் - எதற்கும் வருத்தம் கொள்ளாதவர். **39.111.** அடமழை - அடைமழை; மிகுந்த மழை. கொடுத்தாபோல் - கொடுத்ததைப் போல. **39.112.** கிடை பொருள் - கிடைத்த பொருள்; புதையல். **39.114.** விதி மயக்கு - விதியின் காரணத்தால் ஏற்பட்ட மயக்கம். **39.115.** சமத்து - திறமை. ஊர் அறிய - ஊர் மக்கள் அறிய. **39.117.** மறியலிருந்து - தடையிலிருந்து. மடிபிடியுஞ் சண்டையுமாகி - ஒருவருக்கொருவர் புதையல் எனக்குச் சொந்தமில்லை எனச் சண்டையிட்டுக் கொண்டவர்களாகி. **39.118.** நீதி விளங்கவென்றி - உண்மை நீதி தெரிய வேண்டுமென்று. **39.119.** பூசலிட்டு - வாதாடுதல் செய்து கொண்டு. புண்ணியனார் - தருமர். **39.120.** ஊசல் - தன் நிலையில் அசைதல். பூசல் - வாக்குவாதம்.

சு.சொல் : 1. திண்டோம் 2. அடமளையில் 3. புரப்பட்டார் 4. அன்னேரம்

It's not mine O *Vētiyar* take it home!
I won't touch them, the good ever will?
Just leave me alone, take these things,
I won't take them, proper it's not.

**The former insists**

As the exponent of *vēdas* said so
The Brahman stood his ground an 'said,
"It's not fair! You properly talk of improper things.
Can someone who has never felt sad, feel so now?
You gave your plot to help me out.
How can this be mine, do tell me?
Like in pouring rain one gives a crow, food
If I take this find it'll not be fair."
The stranger said,"Is it fate? My coming to you
Has in dispute ended, you see!
Let the town know who is the most talented of us."
Challenging thus he went for pleading.

**Both go to Tarmar for justice**

From denial to dispute it grew.
To principled Tarmar for justice they went.
Quarelling, they to the blessed one

அந்தணர்கள் தன்மரிட மவர்கள்கதை சொல்லலுற்றார்
அந்தணருஞ் சொல்ல அதிசெயமாய்த் தான்கேட்டு

### மந்திரிகளிடம் தருமர் ஆலோசனை கேட்டல்

மந்திரிமார் தன்னை வாவென் றருகழைத்துத்[1]
தந்திரிமா ரெல்லாருஞ் சரியாகத் தான்கேட்டு
ஞாயம் நடுக்கண்டு நமக்குரையு மென்றுரைத்தார்
தூயதன்மர் சொல்லத் துரந்தரிக ரெல்லோரும்

### மந்திரிகள் வழக்கை விசாரித்தல்

அடுக்க யிருந்துகொண்டு யவர்வழக்கு[2] கேட்கலுற்றார்
தொடுக்கு மறையோரே[3] தொடுத்தவரே சொல்லுமென்றார்

### நிலத்தில் குடியேறிய அந்தணரின் உரை

குடியிருக்க வந்தோன் கூறினான்[4] தன்வழக்கை[5]
மடியி லடிபட்டு வெகுதூரந் தானிருந்து
இவரிடத்தில் வந்து யிருக்க யிடங்கேட்டேன்
அவரினக்கு வீடு ஆமென்றுதான் கொடுத்தார்
அவ்விடத்தில் மண்ணெடுத்து அழகாய்ச்[6] சுவரேத்தி
இவ்விடத்தில் வீடு யிதமாய் முகித்திருந்தேன்
மண்ணெடுத்த கேணியிலே மறைபொருளாய்த்[7] தானிருந்து
கண்ணிடத்திலே தெரிந்து கனகத்தில் பொன்னெடுத்தேன்
எடுத்தேன் யெடுத்தவுட னிவரிடத்தில் கொண்டேகிக்
கொடுத்தேன் பொருள்கையில் கொள்ளேனென வுரைத்தார்

39.122. அதிசெயம் - அதிசயம்; வியப்பு. 39.124. தந்திரிமார் - மந்திரிகள். 39.125. ஞாயம் - நியாயம். நடுக்கண்டு - நடுவுநிலைமையைக் கண்டு. 39.126. துரந்தரிகள் - வல்லவர்கள். 39.127. அடுக்க - அருகில். 39.128. தொடுக்கு மறையோர் - வழக்கினைத் தொடுக்கின்ற அந்தணர். தொடுத்தவர் - குற்றம் சுமத்தப்பட்டவர். 39.130. மடி - வறுமை. அடிபட்டு - கஷ்டப்பட்டு. 39.132. அவரினக்கு - அவர் எனக்கு. 39.133. சுவரேத்தி - சுவரை உயர்த்தி. 39.134. முகித்திருந்தேன் - முடித்திருந்தேன். 39.135. கேணி - பள்ளம். மறைபொருள் - மறைந்து கிடந்த பொருள். 39.136. கண்ணிடத்திலே - கண்ணிலே. கனகம் - பொன். 39.138. கொள்ளேன் - கொள்ள மாட்டேன்.

சு.சொல் : 1. களைத்து 2. யவர்வளக்கு 3. மரையோரே 4. சுரினான் 5. தன்வளக்கை 6. அளகாய்ச் 7. மரைபொருளாய்

With their dispute, went.
The Brahmans started telling their story.
Listening to the Brahmans in wonder,

**Tarmar consults ministers**

Tarmar called the ministers to his side.
"Considering the case carefully
To dispense justice impartial
Instruct me, Tarmar told his aids.
As Tarmar,the pure said so, his ministers
Sat together and heard the case.
"Plaintif, and defendant tell your case!"

**The speech of the Brahman who occupied the land**

The one, who came to reside told his case.
"Suffering from poverty intense.
Come did I from a distant place.
To reside asked him for a place.
He assented and gave me a plot.
I dug the earth and raised pretty walls.
I finished building on the land he gave
In the pit where I dug the earth
There it was, a hidden treasure.
I found in it a lot of gold.
I took it and the moment next,
Brought it and offered to him.
He says he won't touch it with his hands.
Thinking I'm a hapless refugee
He's very stubborn." said the Brahman.

அகுதி பரதேசி அடுத்துக் குடியிருந்தால்
பகுதி பெரும்பிடியாய்ப் பண்ணுகிறா ரென்றுரைத்தார்

## நிலம் தானமாய்க் கொடுத்த அந்தணரின் உரை

அந்த மொழிகேட்டு[1] அவரைநீர் சொல்லுமென்றார்
எந்தன் மனையி லிவர்க்கு யிடங்கொடுத்தேன்

இடத்தில் பொருளிருந்து யெடுத்தாரே யாமாகில்
குடத்தில் பொருள்தனைக் கூடியெடுத் தென்னிடத்தில்

கொண்டுவந்தால் வாங்குவனோ கொற்றவரே[2] சொல்லுமென்றார்
பண்டுமுன்னாள் வைத்திருந்த பழையமுத் தானாலும்

தன்னிடமாய்க் கண்டபொருள் தன்னைவிட்டுப் போகாது
யென்னிடத்தில் கொண்டுவந்தா லெப்படிநான் வாங்குவது

யென்றிருவர் வேதியரு மியம்பு மொழிகேட்டு
நன்றிவர்கள் சொன்னமொழி நாம்தெளிவ தெப்படியோ

## மந்திரிகள் தாம் கேட்டவற்றைத் தர்மரிடம் கூறுதல்

சொல்லுமறை யோர்வழக்குத்[3] தோற்றாமல் மந்திரிமார்
சொல்லும்வழக்[4] கிவர்க்குத் தேறவுந்தான்[5] மாட்டாமல்

நல்லதென்று தன்மரிடம் நவின்றார்கள் மந்திரிமார்
வல்லதொரு தன்மர் மறையோ[6] ரிருவர்க்கும்

## தர்மர் தீர்ப்பை ஐந்துநாள் கழித்துக் கூறுவதாக அருளல்

துஞ்சாத ஞாயந் துலங்கி யுரைப்பதற்கு
அஞ்சாம்நாள் வாருமென்று அருளினர்கா ணம்மானை

**39.139.** அகுதி - அகதி. **39.140.** பெரும்பிடியாய் - மிகுந்த பிடிவாதமாய். **39.143.** எடுத்தாரேயாமாகில் - எடுத்திருப்பாரேயானால். **39.144.** குடம் - பொன்னும் மாணிக்கமும் இருந்த புதையல்; கடம். **39.146.** பண்டு, முன்னாள் - இரண்டு சொற்களும் 'கழிந்த காலத்தில்' என்ற பொருளை உணர்த்தின. **39.150.** தெளிவது - நியாயம் யார் பக்கம் என்பதை அறிவது. **39.151.** தோற்றாமல் - என்ன செய்வது என்று அறியாமல். **39.151.** தேறவும் - தெளியவும். **39.153.** நவின்றார்கள் - கூறினார்கள். **39.154.** வல்லதொரு - வலிமையானதொரு. **39.155.** துஞ்சாத ஞாயம் - குறைவிலலாத நியாயம். துலங்கி - தெளிவுடன். **39.156.** அஞ்சாம் நாள் - ஐந்தாம் நாள்.

சு.சொல் : 1. மொளிகேட்டு 2. கொத்தவரே 3. யோர்வளக்கு 4. சொல்லும்வளக் 5. தேரவுந்தான் 6. மறையோ

### Speech of the Brahman who donated the land

Ministers then bade the other to speak.
"I gave land to him from my plot.
He found treasure in that, his land.
Put it in a pot and brought to me.
O King tell me will I touch it?
Though they are old pearls of yore
They rightfully belong to the finder.
How can I take it if brought to me?"
The two Brahmins argued thus.
"Both are right but how to solve it?"
The ministers could not a solution find.
Neither could they understand the case.
To Tarmar they had conveyed it.
Tarmar, the strong bade the Brahmans two
To come on the fifth day to dispense
Impartial justice to them.

## கலியனின் தோற்றம்

அடுத்ததொரு மூன்றாம்நா ளதுகழித்து[1] நாலாம்நாள்
உடுத்த கரித்துணியு மூதரசின் வார்த்தையுமாய்
அழுக்கும்[2] சிறையு மகந்தை யிடும்புகளும்
ஒழுக்கமத்த பேச்சு முருட்டும் பிரட்டுகளும்
மானமு மில்லாமல் வரம்பழிந்து நாணமற்று
தானதவ மில்லாத சண்டாள சென்மமுமாய்
ஈனமிரக்க[3] மிஞ்சி யிரவலர்க்கு மீயாமல்
ஊனமில்லா பாவ முறைந்த சிடமாகக்
கால்மேல் தலைகீழாய்க்[4] கலியன்வந்து தோன்றினானே
மேல்சாதி கீழும் கீழ்சாதி மேலாகத்
தாய்தலையில் சுமையுந் தகப்பன் குடைபிடிக்கப்
பாய்பரியின் மீதே பைங்கொடியைத் தானேற்றி
வந்தான் கலியனென்று வையகமெல் லாமுரைக்க
அந்தநாள்[5] சென்று அலைகதிரோன்[6] வந்துதித்தான்

## அந்தணர் இருவரும் வருதல்

மத்தநாளாம் போது மறையோ ரிருபேரும்
சித்தமுடனே வழக்குத் தேறவென்று தன்மரிடம்
சொன்னகெடு வஞ்சாநாள் தோற்றமுடன் வந்துநின்றார்
யென்னகாண் வேதியரே யிருபே ருடஞாயம்

39.158. கரித்துணி - கருத்த துணி. மூதரசி - மூதேவி. 39.159. சிறை - அடிமை. அகந்தை - இறுமாப்பு. 39.160. ஒழுக்கமத்த - ஒழுக்கமற்ற. உருட்டும் பிரட்டுகளும் - 'நியாயத்திற்கு மாறுபட்ட செய்கைகள் செய்து' என்ற பொருளில். 39.161. வரம்பழிந்து - எல்லையழிந்து. 39.162. சண்டாள சென்மம் - இழிந்த மனிதன். 39.163. இரவலர் - யாசிக்கின்றவர். ஈயாமல் - பொருளைக் கொடுக்காமல். 39.164. ஊனமில்லா - குறைவில்லாத. சிடம் - 'சடம்' என்பதின் பேச்சுவழக்கு. 39.165. கால் மேல் தலைகீழாய் - கால் தலையிருக்கும் இடத்திலும் தலை காலிருக்கும் இடத்திலுமாய். கலியன் - கலியுகம். 39.167,168,169. தாய் தலையிலே . . . முரைக்க - இதுவரையிலும் உள்ள அடிகள் கலியுகத்தின் பிறப்பால் உலகத்தில் தர்மம் கெட்டு அதர்ம முறைகள் வலிமை பெற்றமையை ஆசிரியர் உணர்த்தினார். 39.170. அலை கதிரோன் - அலைகடலில் உதிக்கும் சூரியன். 39.171. மத்த நாளாம் - அரசரிடம் நியாயம் கேட்கச் செல்லப் போகும் அந்த நாளில்; மத்த என்பது 'மற்ற' என்பதின் பேச்சுவழக்கு. 39.172. தேற - துணிய. 39.173. அஞ்சா நாள் - ஐந்தாவது நாள். 39.174. ஞாயம் - நியாயம்.

சு.சொல் : 1. ளதுகளித்து 2. அளுக்கும் 3. யீன 4. தலைகீளாய் 5. அந்தனாள்ச் 6. அலைகதிறோன்

### Kaliyaṉ[1] appears

Three days passed and on the fourth day
Wearing black, and dirty dress he was,
Mouthing foul words like *Mūtēvi.*[2]
Dirt, slavish, proud, mischievous,
Full of immoral words, fradulent ways
And shameless without propriety ,was he.
He was one who never helped any body.
Cheap was he with no deep, noble thoughts.
No compassion, the gave nought to beggars.
Inert he was, a home for faultless sin.
Kaliyaṉ appeared upside down[3].
He made upper caste low, lower caste up
Placing a heavy luggage on his mother's head,
His father holding a parasol,
On a swift horse with a pretty girl
For the world to wonder, he came.
The day did pass and the sun came up.

### The two Brahmans turn up

On the appointed day the Brahmans two,
With intent of justice from Tarmar,came.
On the fifth day as fixed, in style they came.
"What is your dispute O Brahmans?"
When Tarmar asked thus, the two argued
And entreated justice faultless.

1. *Kali yukam.* 2. *Sritēvi* and *Mūtēvi* are supposed to be sisters; the former is for prosperity while the latter for poverty. 3. In the place of head he had legs and vice-versa.

என்றுதன்மர் கேட்க[1] யிருபேருந் தர்க்கமதாய்[2]
நின்றுநடு ஞாயம் நீதியுடன் சொல்லுமென்றார்

## நிலம் வழங்கியவன் கலியால் பேச்சுமாறல்

எந்தன் மனையி லிவர்க்கு[3] யிடங்கொடுத்தேன்
எந்தன் புதையலைத்தா னெடுத்திவனுங் கொள்ளைகொண்டு

கொடுக்கமனஞ் சற்றுங்[4] குறையாமல் வார்த்தைசொல்லிப்
பிடிக்கிறான் சண்டையிவன் பெருமாளே யென்றுரைத்தான்

## நிலம் பெற்றவன் கலியால் பேச்சுமாறல்

உன்செய்தி யென்னவென்று உகந்துதன்மர் தான்கேட்க
என்செய்தி யென்ன யெடுத்த புதையலைத்தான்

கொடுப்பேனோ நானுங் குடத்துப் பணத்தையெல்லாம்
எடுப்பார் கொடுப்பதுண்டோ யெத்தனைதான் சொன்னாலும்

## இருவரும் தம்முள் தர்க்கம் செய்து கொள்ளுதல்

குடியிருந்தே னானால் குவலையத்தி லேயிவர்க்குக்[5]
குடியிருப்பு லாபங் கூடுந் துகைகளெல்லாம்

கொடுத்துக் குடியிருக்க வந்தேனோ கொற்றவரே
அடுத்துக் குடியிருக்க வந்திடத்தில் அய்யனுந்தான்

நெட்டூரம் பண்ணுகிறான் நீதியில்லை யோயிவடம்
எட்டூ ரறிய யிழுக்கிறான் சந்தியிலே

நீதியுடன் சொல்லுமையா நீதிநெறி[6] தப்பாமல்
வேதியர்க ளிவ்வசனம் விளம்புவது தான்கேட்டு

## தருமரின் வருத்தவுரைகள்

இனியென்ன ஞாய மெடுத்துரைக்க வகையேது
அநியாய[7] மிப்போது அந்தணர்கள் தன்வழக்கு[8]

**39.180.** பிடிக்கிறான் சண்டை - சண்டை இடுகிறான். **39.181.** உகந்து - ஆர்வமாய். **39.185.** குவலையம் - உலகம். **39.186.** துகை - தொகை. **39.188.** அய்யன் - பிராமணன். **39.189.** நெட்டூரம் - நிஷ்டூரம்; இடையூறு: இவிடம் - இவ்விடம். **39.190.** எட்டூர் - எல்லா ஊர் மக்களுக்கும் தெரியும் படியாக என்ற பொருளில். **39.193.** ஞாயம் - நியாயம். **39.195.** கீர்த்தி - செயல். **39.196.** விண்டோம் - அழிந்தோம்.

சு.சொல் : 1. கேள்க்க 2. தற்காதாய் 3. யிவற்கு 4. சத்துங் 5. லேயிவற்கு 6. நீதிநெரி 7. அனியாயம் 8. தன்வளக்கு

"I gave place for him on my plot.
He dug out my treasure, plundered it.
He doesn't want to give it to me.
Using strong words he quarrels with me,
O Lord please do justice! " said the landlord.
"What's your side?" Tarmar asked with care.
"What's my side! The treasure, I found!
Wealth in the pot I'll not give off!
Will any finder give it away?
Repeatedly he's asked for it, though.
Had I come here, merely to stay,
Paying rent, and incidental charges?
Perhaps, he may have the claim my lord!
But that's not the case here.
This Iyer,here, gives me trouble.
Is there no justice here?
For eight towns[1] to know he drags me
To the street, eight towns to know
Kindly despense faultless justice."
Listerning to the Brahmans Tarmar spoke thus:

**The sad speech of Tarmar**

"Is there justice still left on earth?
The Brahmans' dispute is not just.

1. Eight here is just a number - means : for every one to know.

கண்டோ மதிசெயந்தான் கலியனுட தன்கீர்த்தி[1]
விண்டோம் புவனம் வெறுத்தோங் கலியாலே.

**விருத்தம்**

40. அந்தணர் வழக்குங் கண்டோம் அடிக்கடி பிரட்டுங் கண்டோம்
இந்தமா நிலத்தில் நாமும் இருப்ப துக்கு மல்ல
அந்தநா ளரசு காலம் ஆண்டுதான் முடிந்து முற்றும்[2]
வந்தநாள் வந்து தானால் வழக்கென்ன வழக்கு ஞாயம்.

41. பஞ்சமா பாவங் கொண்டு பாரினில் கலியன் வந்தான்
என்செய்வோந் தம்பி மாரே யிப்படி யுலகந் தன்னில்
முன்செய்த ஞாயம் போல முற்றுமோ[3] யினிமேல் நம்மால்
பஞ்சவ ரென்று சொன்ன பாவினை வேற தாகும்.

42. ஆண்டவர் நடந்தா ரிந்த அதிசெயம் வருமென் றெண்ணி
நீண்டவர் மொழிந்து[4] போன நிச்செயம் நிசமுங் கண்டோம்
பாண்டவர் புதல்வர் நாமே பாரினி லிருந்தோ மானால்
மூண்டதோர் கலிவி டாது முடிந்தது நமக்குக் காலம்.

43. வாழ்ந்தது[5] துவாப ரத்தில் மனுநெறி முறமை[6] நீதி
தாழ்ந்தது[7] கலியு கத்தில் தன்மரென் பேரும் பொய்யாம்
சூழ்ந்ததோர்[8] கலியை விட்டுச் சொல்லும் வைகுண்டஞ் சேர
ஆழ்ந்ததோர்[9] புவியை விட்டு யகலுவோ மகலு வோமே.

44. நாரணர் நம்மை விட்டு நடந்துவை குண்டஞ் சேர்ந்தார்
காரண முடிந்த கோலங் கலியுகம் வருமென் றெண்ணி
ஆரணன் தன்னை யீன்ற[10] அச்சுதன் பச்சை மால்தான்
பூரணர் நடந்த மார்க்கம் போவது கரும மென்றார்.

**40.1.** பிரட்டும் - பொய்யும். **40.2.** இருப்பதுக்கும் அல்ல - இருப்பதற்குத் தகுதியான இடமும் அல்ல. **40.3.** முடிந்து முற்றும் - துவாபரயுகம் முடிந்து எனது ஆட்சியும் முற்றும். **40.4.** வந்த நாள் வந்துதானால் - கலியுகம் ஆகிய நாள் வந்ததானால். ஞாயம் - நியாயம். **41.1.** பஞ்சமா பாவம் - களவு, கள்ளுண்ணல், குருநிந்தை, கொலை, பொய் என்னும் ஐந்து பெரிய பாவங்கள். **41.4.** பாவினை - 'பாவனை' என்பதின் வட்டாரவழக்குச் சொல். **42.1.** அதிசெயம் - வியப்பு. **42.2.** நிச்செயம் - நிச்சயம். நிசம் - உண்மை. **42.4.** மூண்டதோர் - தோன்றியதோர். **43.1.** துவாபரம் - யுகங்கள் நான்கினுள் மூன்றாவது யுகம். மனுநெறிமுறமை - மனுதர்ம சாஸ்திரம். **44.1.** நாரணர் - திருமால். **44.2.** காரண முடிந்த கோலம் - துவாபர யுகத்தில் தனது கடமைகளை ஆற்றுவதற்கு எடுத்த அவதாரக் கோலம். **44.3.** ஆரணன் - சிவன். **44.4.** பூரணர் நடந்த மார்க்கம் - பூரணமானவராகிய திருமால் நடந்த வைகுண்ட மார்க்கம்.

---

சு.சொல் : 1. தன்கீற்தி 2. முத்தும் 3. முத்துமோ 4. மொளிந்து 5. வாள்ந்தது 6. முரமை 7. தாள்ந்தது 8. சூள்ந்ததோர் 9. ஆள்ந்ததோர் 10. யின்ற

It's a wonder, its Kali's doing.
We are finished, the cause is *kali*.
We are fed up with the wordly life.
We heard of the Brahmans' dispute
We saw them going back on words.
Staying here is not good for us.
Our ancient rules now come to an end.
Time's come, no justice for disputes.
Kali has come with five great sins[1]
What shall we do brothers? In this world
Can we hand out justice as before?
The word 'Pāṇṭavar' has lost respect.
Anticipating this, the Lord walked off,
That such strange things should happen here!
We see now His words have come true.
If we, Pāṇṭavars remain on earth
*Kali* won't leave us, our time's over!

There did live during *tuvāpara yukam*
*Maṉu sāstras*, justice impartial.
In *kali yukam* all those things are gone.
My name Tarmar has lost respect
To escape *kali*, and to reach *Vaikuṇṭam*
Leaving this world behind, let's go.
Nārāyaṇar leaving us behind,
Walked away to *Vaikuṇṭam,*
Fulfilling his purpose on earth.
Knowing that *kali yukam* approached
Paccaimāl had left this world.
It's our duty to follow His foot steps.
We should follow the omnicient one."

1. Stealing, drinking liquor, denouncing *guru*, murder and lies are the five great sins according to the *sāstras*.

45. வானவ ரிமையோர் மற்ற மாதவர் முனிவர் தேவர்
தானவ ரிஷிகள் வேதத் தபோதனர் புகழ்வு[1] செய்ய
ஞானமு மினிய கீத ராகமு மிசைகள் கூறும்
மேனகை பணிகள் மாற வெகுசுகு மவடந் தானே.

46. வீமனே விசையர் தம்பி மேதினி தன்னி லுங்கள்
நேமமும் பிலனும் வாங்கி நெடியமால் கொண்டு போனார்
சாமமாய் வேடர் முன்போய்ச் சமரினில் புறமும்[2] காட்டி
நாமினி யுலகில் வாழ்க நமக்கிது யிசையா தென்றார்.

## பாண்டவர்கள் கானகம் ஏக முடிவெடுத்தல்

நடை

47. தம்பியர்கள் நால்வரிடந் தன்மர் மொழிந்தவுடன்[3]
வெம்பிக் கலியி லழுந்தாமல் மேன்மை யதாய
நெறியுடனே[4] போக நினைத்தநினை வுள்ளதெல்லாம்
குறியுடனே போக்க கோபாலர் சன்னதிக்குப்

## பாண்டவர்கள் முடிவு பிற நாட்டரசர்களுக்கு அறிவிக்கப்படுதல்

பயணமென்று சொல்லிப் பரிவளித்து நால்வருக்கும்
செயநெ[5] றியதுள்ள சுத்தத் தமர்தனக்கு

மன்னர் மகுடமுடி வகுத்தனர்காண் வாசனையாய்த்
தென்னர் பயணமென்று செப்புமெனச் சீமையெங்கும்

சீட்டெழுதி விட்டார்கள் திசையிலுள்ள மன்னருக்கு
ஏட்டெழுத்தை வாசித்து யெல்லோருந் தான்கூடி

**45.1.** மாதவர் - பெரும் தவநெறியில் ஒழுகுவோர். **45.2.** புகழ்வு - புகழ்தல். **45.3.** கீத ராகம் - இனிய பாடல். இசை - புகழ். **45.4.** மேனகை பணிகள் மாற - மேனகை முதலியோர் ஆடல் முதலிய தொழில்கள் செய்ய. அவடந்தானே - அவ்விடந்தானே. **46.2.** நேமம் - நியமம். பிலன் - 'பலம்' என்பதின் பேச்சுவழக்கு; வலிமை. **46.3.** சாமம் - கருமை. சமர் - போர். **46.4.** வாழ்க - வாழ்வதற்கு. இசையாது - பொருந்தாது. **47.2.** வெம்பி - துன்பமடைந்து. அழுந்தாமல் - வருந்தாமல். **47.4.** குறியுடனே போக்க - குறிக்கோளுடனே செல்ல. சன்னதி - சந்நதி. **47.5.** பரிவளித்து - செய்தி தெரிவித்து. **47.6.** தமர் - சுற்றத்தார். **47.8.** தென்னர் - தென்நாட்டவர்; இவண் பாண்டவர்களைக் குறித்தது. சீமை - உலகம். **47.10.** எல்லோரும் - எல்லா நாட்டு அரசர்களும்.

---

சு.சொல் : 1. புகள்வு 2. புரமும் 3. மொளிந்தவுடன் 4. நெரியுடனே 5. செயநெ

With the celestials who don't bat their eyes,
Great sages, *riṣis*, Tēvars, all
Seers, *vēda* exponents praising
With wisdom, sweet music and songs,
Mēṉakai[1] serving, it's cosy there at *Vaikuṇṭam*.
O brothers, *Vīmaṉ*, and Vijayaṉ!
Kaṇṇaṉ sapped your strength and left you weak.
In war in dark with the hunters you lost.
Living here won't do us pride!"

**Pāṇṭavars decide to leave for the forest**

Thus Tarmar spoke to the brothers four.
To escape *Kali's* evil effects and
To uphold the principles they decided.
To go in to Kōpālaṉ's[2] presence.
Journey deciding, they informed
All relatives, all the crowned kings.
They took a list of their kin and
Bade them spread the news
Of journey of the Pāṇṭavars.

1. Celestial dancer in the court of Intiraṉ, the king of Tēvars. 2. Kaṇṇaṉ.

### மன்னர்கள் தர்மரை வந்து காணுதல்

என்ன விதிவசமோ யென்றுமன்ன ரெல்லோரும்
மன்னர் சமுகமதை வந்துகண்டா ரம்மானை

ஆண்டவரே நீர்தா னழைத்த[1] பணிவிடையென்
நீண்டபுகழ் மன்னா நிமலனே சொல்லுமென்றார்

### தர்மர் கூறும் அறிவுரைகள்

அப்போது தன்மர் அரசர் தனைநோக்கி
இப்போ கொடுங்கலிய னிவ்வுலகில் வந்துவிட்டான்

இனிமேல் கலியுகத்தி லிருக்கவுந்தான் முற்றாது
தனியே வனவாசஞ் சஞ்சரிக்க மெத்தநன்று

ஆனதினா லுங்களைநா னருகே வரவழைத்தேன்
மானமுட னீங்கள் மரபுதப்பிப் போகாமல்

கால மறிந்துநன்றாய்க் காசினிக்குள் நீங்களுந்தான்
காலத்துக் கேத்த கணக்கின் படியாகத்

தெரிந்து நடந்துகொள்வீர் செங்கோல் தவறாமல்
பிரிந்தொருவர் போகாமல் பிள்ளைசிறு பாலருடன்

கலந்து செகமுழுதுங் கட்டாக நீங்களுந்தான்
துலங்குபரி சித்துவுக்கு துரந்தரீகந் தான்தரித்து

வைக்கிறோம் நீங்கள் மகுட முடிதரித்து
நிற்கிறோ மென்றேதான் நிண்ணயமாய்ச் சொல்லுமென்றார்

### மன்னர்களின் பதிலுரை

நிக்கிறோ முண்மை நிறைந்தபரி[2] சித்துவையும்
வைக்கிறோம் பாரில் வணங்குகிறோ முள்ளபடி

நீங்க ளிருந்து நெடுங்கானகம் புகுந்தால்
நாங்க ளிருந்து நடப்பதென்ன காரியந்தான்

**47.13.** பணிவிடை - கட்டளை. **47.14.** நிமலன் - பரிசுத்தன்; தருமர். **47.17.** முற்றாது - முடியாது. **47.18.** சஞ்சரிக்க - வாசம் செய்ய. **47.20.** மானமுடன் - பெருந்தன்மையுடன். மரபு - நியதி. **47.21.** காசினி - உலகம். **47.22.** ஏத்த - ஏற்ற. **47.23.** செங்கோல் - இறையாண்மை. **47.25.** செகம் - உலகம். கட்டாக - ஒற்றுமையாக. **47.26.** துரந்தரீகம் - ஆட்சிச் சுமையைத் தாங்கும் கிரீடம். **47.28.** நிண்ணயம் - சத்தியம். **47.29.** நிக்கிறோம் - 'நிற்கின்றோம்' என்பதின் பேச்சுவழக்கு.

சு.சொல் : 1. னளைத்த 2. நிரைந்தபரி

Sent notes to kings in directions all.
On reading notes they all assembled,
Wondering what fate forced this end.
The kings all assembled and said,
"Lord, what are we to do for you?
O sacred king of ancient glory tell!"

**The advice of Tarmar**

Then Tarmar addressed the kings, present.
"Cruel Kaliyaṉ has come to the earth.
Can't stay in *kali yukam* any more .
Living in forest alone is good.
To our presence, hence, I called you.
Keeping tradition with honour,
Beware of your time and live on earth.
Do live according to the times.
Know your time and rule with justice right.
Not getting divided, with children live.
Bringing the world together as one rule,
We crown Paricittu as your king.
O kings, with crowns adorning your heads,
Give me your word that you'd be with him."
"We all will obey king Paricittu.
We all give our words now.
But if you leave for the forest dark
How can we act here without you?

எல்லோரும் வாறோம்நீர் இந்திரபதி சென்றாலும்
பல்லோரும் வந்து பணிவதுவே யல்லாது

அரைநொடியி லும்மைவிட்டு யமைந்திரோம்[1] பூமியிலே
துரையே துரைராச துரந்தரீக மன்னவனே

என்றுமன்னர் சொல்லி யிரைந்தலறி[2] யோலமிட
அன்றுதன்ம ராயர்[3] அவர்களையுந் தானமர்த்தி[4]

## தருமரின் ஆறுதலுரைகள்

ஒன்றுக்கு மஞ்சாம லுலகளந்தோன் தன்னருளால்
கன்றுக்கிரங் குகின்ற கற்றாப் பசுப்போலே

நம்மை யனுதினமும் நாள்தோறுங்[5] காத்தாப்போல்
செம்மையுடன் செங்கோல் செலுத்தும் பரிசித்துவுக்கு

ஆதரவாய்த் தானிருந்து யரசு நிலைநிறுத்திப்[6]
போதரவாய் வாழ்ந்து[7] புவிமீதில் தானிருப்பீர்

வெய்யோனு மண்ணும் விண்ணுமுள்ள காலமட்டும்
துய்யோர் மறையோர்த்[8] துதித்துப் புகழ்ந்தேத்த

## பரிசித்துவுக்கு மகுடம் சூட்டுதல்

இருமென்று தன்மிதரு மிப்போது வாருமென்று
குருமுன்னி லையாகக் கொற்றவனு[9] மந்நேரம்[10]

முடிகூட்டி வைத்தார்கள் முடிமன்னர் போற்றிசெய்ய
படியேழும் போற்ற பாரமன்னர் கொண்டாட

**47.33.** இந்திரபதி - இந்திரலோகம். **47.35.** அமைந்திரோம் - 'தனித்து இருக்க மாட்டோம்' என்ற பொருளில். **47.36.** துரையே - மேன்மகனே. துரை ராச துரந்தரீக மன்னன் - 'மேன்மக்களாகிய அரசர்களுக்குத் தலைவனாகிய கிரீடம் அணிந்த பேரரசே' என்ற பொருளில். **47.37.** ஓலமிட - துன்பத்தின் மிகுதியால் ஓசை எழுப்ப. **47.38.** அமர்த்தி - சமாதானம் செய்துவித்து. **47.39.** உலகளந்தோன் - உலகத்தை மூன்று அடிகளால் அளந்தவன்; திருமால். **47.40.** கற்றாப்பசு - இளம் பசு; ஒரு பொருட்பன்மொழி. **47.41.** காத்தாப்போல் - பாதுகாத்ததைப் போல. **47.44.** போதரவாய் - உபகரணையாய். **47.45.** வெய்யோன் - சூரியன். **47.46.** துய்யோர் - தூய்மையானவர். மறையோர் - அந்தணர். **47.48.** குரு - பாண்டவர்களின் குலக்குரு. **47.50.** படியேழும் போற்ற - ஏழு உலகங்களைச் சார்ந்தவர்களும் புகழ; ஏழு உலகங்களாவன பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மாலோகம், ஜனலோகம், தபோலோகம், சத்தியலோகம் என்பன.

சு. சொல் : 1. மையமந்திறோம் 2. யிரைந்தலரி 3. றாயர் 4. தானமத்தி 5. நாள்தோருங் 6. நிருத்தி 7. வாள்ந்து 8. மரையோர் 9. கொத்தவனு 10. மன்னேரம்

Even if you leave for Intiraṉ's[1] land
We would come there and our respects pay.
Without you we can't a moment stay.
O Lord, king, O crowned monarch!"
Saying so the kings in agony cried.
The kingly Tarmar pacified them.
"Fearing nothing with the grace of the One
Who with ease did measure the worlds.[2]
Like a cow whose heart melts for the calf,
He has been guarding us every day.
To Paricittu who rules so well-
Be his ally, strengthen his rule.
Live on here as a support to him,
As long as the earth, sun, and sky remain,
For the holy Brahmans to praise.
Stay in peace!" said Tarmar and called
Paricittu, crowned him for all
To praise, their *Guru* performing the rites.
All from the seven worlds[3], and the crowned kings praised.

1. King of Tēvars, the celestial beings. 2. Viṣṇu measured the worlds with three steps to contain Mahāpali, a benevolent king. 3. *Pūlōkam, Puvarlōkam, Cuvarlōkam, Mālōkam, Jaṉalōkam, Tapōlōlōkam, Cattiyalōkam.*

தானணிந்து செங்கோல் தரித்தார் மணிமகுடம்
கோனிவன்றா னெனவே கொலுவி லலங்கரித்து

நரனிவன்தா னெனவே நாற்றிசையுந் தானறிய
தரனிவன்தா னென்று சாத்தி மணிமகுடம்

வைத்து முடிகூட்டி மன்னவர்கள் காத்திருக்க[1]
முத்து முடிசூடி முடிமன்னர் காத்திருக்க

## பலரும் முடிசூட்டு நிகழ்வைக் காணுதல்

கொற்றக்[2] குடைநிழற்ற[3] கோவேந்தர் காத்திருக்கச்
சத்தக் கடல்போலே தளங்கள் நெருங்கிநிற்கக்

கட்டும் பரியுடைய காவலர்கள் வந்திருக்க
வெட்டும் பரிவீரர் வீரவாள் கைப்பிடித்துத்

தத்தும் பரியேறித்[4] தங்களிலே வந்துநிற்கச்
சுத்தில்ரத மீதேறித் துரந்தரீகர் வந்துநிற்கத்

தூறுதமிழ்[5] வாரணமேல் துரைமக்கள் வந்துநிற்கக்
கூறுதமிழ் வாணர் கொண்டாடி வாழ்த்திநிற்கத்

## பல வகை மங்கள வாத்தியங்களின் ஓசைகள்

தம்புருவும் வீணை சரமண் டலம்முழுங்கக்[6]
கிம்புருவு மெக்காளம் கின்னரமுந் தான்முழங்கச்

சங்கீத ராகமிசை தாளமொடு மத்தளம்
இங்கித நாகசின்ன மெக்காளம் பூரிகையும்

நவுரியுடன் செகண்டி நற்சங்கு தான்முழங்கப்
பவுரிகமாய்ப் பேரிகைகள் பலதிக்கு மேமுழங்கச்

**47.52.** கோன் - அரசன். கொலு - அரியாசனம். **47.53.** நரன் - நர நாராயணன் என்னும் தேவரிஷி. **47.54.** தரன் - அஷ்டவசுக்களுள் ஒருவன். **47.58.** தளங்கள் - கூட்டத்துடன் கூடிய மக்கள். **47.59.** பரி - குதிரை. **47.61.** தத்தும் பரி - தாவி ஓடும் பரி. **47.62.** சுத்தில் ரதம் - வேகமாக உலகைச் சுற்றும் ரதம். துரந்தரீகர் - அரசர். **47.64.** தமிழ்வாணர் - தமிழ்ப் பாடல்பாடும் இசைக்கலைஞர். **47.65.** தம்புரு, வீணை, சரமண்டலம் - சில வகை இசைக்கருவிகளின் பெயர்கள். **47.66.** கிம்புரு, எக்காளம், கின்னரம் - சிலவகை இசைக்கருவிகளின் பெயர்கள். **47.67.** மத்தளம் - ஒரு வகை இசைக்கருவி. **47.68.** இங்கித நாகசின்னம் - இனிமையான. 'நாகசின்னம்' என்னும் ஒரு வகை இசைக்கருவி. எக்காளம், பூரிகை - சில இசைக்கருவிகளின் பெயர்கள். **47.69.** நவுரி, சேகண்டி, சங்கு - இனிய ஓசைகள் தரும் சில இசைக்கருவிகள். **47.70.** பவுரிகமாய் - வித்தியாசமாய். பேரிகை - ஒரு வகை இசைக்கருவி.

---

சு.சொல் : 1. கார்த்திருக்க 2. கொத்தகுடை 3. நிகள்த்த 4. பேரித் 5. தூறுதமிள் 6. முளங்க

Paricittu wore his sceptre, gem studded crown.
The crowned king sat on the decorated throne.
Naran[1] he was as directions four to know,
Decked out, Taran[2] like he was with a crown of gems.
The coronation over, the kings waited.
Decking him with a pearl studded crown
Parasols providing shadows,
Patiently waited great many kings.
People assembled like a noisy sea.
Kings with strong horses came attending.
Soldiers with swords in hand,
Mounting horses did gather there.
On fast chariots great kings had come.
On elephants many lords did come.
The musicians were showering praises.

**The sound of many auspicious musical instruments**

*Tampuru, vīṇai, caramaṇṭalam*[3]
*Kimpuru, kiṉṉaram, ekkāḷam*[4]
Poured out music auspicious.
Musical *rāgās*, rhythmic beats were there.
Melodious *nāka ciṉṉam,*
*Ekkāḷam, pūrikai,* and *navuri* sounded
*Cēkaṇṭi,* goodly conch and
*Pērikai*[5] sounded differently.

1. A *riṣi* among Tēvars. 2. One of the eight vacus. 3, 4 & 5. Musical instruments.

சேனை தளமுஞ் சிறப்பாகத் தான்சூழ[1]
ஆனை பரிரதமும் அணியணியாய்த் தான்சூழச்

## பரிசித்து அரியாசனத்தில் இருப்பது கண்ட பாண்டவர் மகிழ்ச்சி

சிங்கா தனச்சிறப்புஞ் சேனைமன்னர் வரசிறப்பும்[2]
துங்கன்பரி சித்துடைய துரைபோல வன்சிறப்பும்

கண்கள் களிகூரக் கண்டுதன்மர் தம்பியரும்
எங்கள் பதிகாக்க[3] யிவனே புவிராசன்

ஆனா லினிமேல் அச்சங்க ளொன்றுமில்லை
போனாலும் நம்முடைய புவியிவனே யாள்வனென்று

செலுத்துவான் செங்கோல் திருமா லருளாலே
அலுத்தயர்ந்து தானிருந்த யாலோ சனைகளெல்லாம்

இன்றைக்குத் தீர்ந்தோ மினிமேல் கிலேசமில்லை
குன்றைக்குடை கவிழ்த்த[4] கோபாலர்[5] தன்னிடத்தில்

போகலாமென்று சொல்லிப் பூரித்துப் பஞ்சவர்கள்
ஏகலாம்[6] நன்றாய் இனிமேல்[7] மயக்கமில்லை

## பரிசித்துவிடம் பாண்டவர்கள் தாம் வைகுண்டம் போவதைக் கூறல்

என்றுபரி சித்துவையு மிங்கேவர வழைத்து[8]
ஒன்றுக்கு மஞ்சாமல் உலகாள்வீ ரென்கோவே

நாங்கள் வைகுண்டம் நடக்கவழி கேட்டுப்
போங்கோ வெனவுரையீர் புண்ணியரே யென்றுரைத்தார்

மன்றுசடை யாமல் வாழ்த்திமிக மகிழ்ந்து
என்றுமன மகிழ[9] யின்பமுடன் சொல்லுமென

**47.71.** சேனைத்தளம் - படைக் கூட்டம். **47.72.** ஆனை - யானை. பரி - குதிரை. **47.73.** சேனை - படை. **47.74.** துங்கன் - மேன்மையானவன். வன்சிறப்பும் - மிகுந்த சிறப்பும். **47.75.** களிகூர - மகிழ்ச்சியால் திளைக்க. **47.76.** பதி - குலம். **47.80.** அலுத்தயர்ந்து - மனம் சோர்ந்து, தளர்ந்து. **47.81.** கிலேசம் - கவலை. **47.82.** குன்றைக் குடை கவிழ்ந்த கோபாலர் - கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்து மக்களையும் ஆநிரைகளையும் பாதுகாத்த கண்ணன். **47.83.** பூரித்து - மனம் மகிழ்ந்து. **47.88.** ஏகலாம் - செல்லலாம். மயக்கமில்லை - மனதில் குழப்பமில்லை. **47.86.** கோவே - அரசே. **47.88.** போங்கோ - செல்லுங்கள். **47.89.** மன்று சடையாமல் - மன்றத்தார் சடைந்து போகாமல்.

---

சு.சொல் : 1. தான்சூள 2. வசசிரப்பும் 3. கார்க்க 4. கவிள்த்த 5. கோபலர் 6. பேகலாம் 7. யினிமேல் 8. வளைத்து 9. மகிள

The army gathered all around.
The elephants, horses, and chariots lined up.

**Finding Paricittu on the throne, the Pāṇṭavars feel happy**

Tarmar and brothers had an eyeful
Of the beauty of the throne, the visiting kings
And Paricittu's lordly looks.
"He is the one to guard our land!
Sure there's no fear hereafter.
Even if we go he'll rule the land.
Tirumāl gracing, just rule he'll give.
All our dejections and anxieties
Are gone and there is no more sorrow.
We'll go to Kōpālaṉ who once used
A mountain as an umbrella.
There's no confusion now!" they felt proud.

**The Pāṇṭavars tell Paricittu about their going to *Vaikuṇṭam***

They called Paricittu to their side, said,
"Fearing nothing rule the world O dear king!
When we all towards *Vaikuṇṭam* go,
Do bid us farewell, O blessed one!
Without losing heart wish us well.
With a heart joyous do send us off!"

## பரிசித்துவின் துயர மொழிகள்

விம்மல் பொதுமலுடன் வெகுண்டுபரி சித்துவுந்தான்
செம்மல் மலர்விழியால்[1] திரண்டுபரி சித்துவுக்கு

அய்யரே யென்னைவிட்டு ஐவருந்தான் போனாக்கால்
உய்வேன்காண் நானு முடைந்திடைந்து தான்போவேன்

விட்டுயெனைப் பிரிந்தால் விளம்பவோ யான்பாவி
மட்டுப்படாத செல்வம் வாழ்வுதனை[2] யிழந்து

என்னை நிறுத்தியிப்போ யேகினீ ராமாகில்
முன்னை விதிப்பயனோ முடிந்த விதிவசமோ

தந்தையரைப் பெற்றவர்கள் தாரணியை யாண்டிருந்து
விந்தையுட நீங்கள் மேதினியைத் தானிழந்து[3]

நடந்து செடத்தோடே நாம்போறோ மென்றுசொன்னால்
துடந்து வருவேனான் தூரமே போனாலும்

கட்டிலிருக்கவே நீங்கள் காவலரேதான் போனால்
விட்டிருக்கப் போமோதான் வித்தகரே யென்னாலே

சடத்தையிங் கேபோட்டுத் தப்பியுயிர் போனாலும்
சடத்துக்குண் டானதெல்லாந் தான்கரும மேமுடித்து

மறந்திருப்பேன்[4] கண்டீரே மானிலத்தோர் புத்திசொல்ல
இறந்து[5] சடமொழிந்தால்[6] யெனக்குக் கிலேசமில்லை

உயிரோடே[7] நாம்போறோ முலகாளுமென்று[8] சொன்னால்
தயிரோடே[9] நீர்பிரிந்த தன்மைபோ[10] லாவேனோ

**47.91.** விம்மல் பொதுமலுடன் - மன்றத்தார் வருத்தத்தால் அழுது, விம்மி, மனவருத்தத்துடன். வெகுண்டு - மனத்தால் கோபம் கொண்டு. **47.92.** செம்மல் - சிறந்தவன்; அரசன் எனினும் அமையும். திரண்டு - கண்ணீர் திரண்டு. **47.93.** போனாக்கால் - போவீர்களேயானால். **47.94.** உய்வேன் காண் - நான் உய்வேனோ; உய்யமாட்டேன் என்ற பொருளில். இடைந்து - நிலை தாழ்ந்து. **47.95.** விளம்பவோ - கூறத்தான் முடியுமோ. **47.97.** ஏகினீராமாகில் - சென்றீர்களேயானால். **47.99.** தந்தையரைப் பெற்றவர்கள் - தந்தையாகிய அடிமன்யுவைப் பெற்றவர்கள். தாரணி - உலகம். **47.100.** மேதினி - உலகம். **47.101.** செடத்தோடே - உடம்புடனே. போறோம் - போகிறோம். **47.102.** துடந்து - 'தொடர்ந்து' என்பதின் பேச்சுவழக்கு. **47.103.** கட்டிலிருக்கவே - அரச கட்டில் இருக்கவே. காவலர் - அரசர்கள். **47.104.** விட்டிருக்க - உங்களை விட்டுப் பிரிந்து இருக்க. **47.106.** கருமம் - இறப்புச் சடங்குகள். **47.107.** மானிலத்தோர் புத்தி சொல்ல - இவ்வுலகத்தோர் அறிவுரையும் தேறுதல் உரைகளும் கூற. **47.107.** கிலேசமில்லை - வருத்தமில்லை. **47.110.** தயிரோடே நீர் பிரிந்த தன்மை போல் - தயிரிலிருந்து நீர் பிரிந்தால் அது எவ்விதம் பயன்படாது ஒழியுமோ அது போல்.

---

சு.சொல் : 1. விழியால் 2. வாழ்வுதனை 3. தானிளந்து 4. மரந்திருப்பேன் 5. இரந்து 6. சடமொளிந்தால் 7. உயிறோடே 8. முலகாழுமென்று 9. தயிறோடே 10. தண்மைபோ

### The sad speech of Paricittu

Shocked, Paricittu's words got choked.
At once, tears welled up in his eyes.
"Iyer, if you five leave me and go,
Will I survive? Into pieces I'll break.
My position will get lowered, sure.
The agony of your absence
Can ever be deseribed? I'm sinful!
Leaving unspeakable wealth behind,
Leaving me here, away you go!
Is it *karma* or the finishing fate?
O father of my father, you ruled the land!
It's so strange that you go, leaving the world.
Going to walk away with your bodies, you say.
Follow will I no matter how far.
Leaving the throne behind O lords you go
O learned ones how can I be?
Leaving the body here life alone goes.
All rites needed for the dead one I'll do
As advised by all, please do stay.
If died and your bodies gone, sad I won't feel.
'Alive we go; rule the world'. you say,
Then useless I'll be like water in the curd[1].

1. If water separates from curd it (water) in normally thrown away as tasteless, useless

ஊரிருக்க நாடிருக்க யுத்தசனந் தன்னிலுள்ள
பேரிருக்க நீர்போற பேச்சறி யேனை

எந்தவகை யென்று யெனக்குநீர் சொல்லுமினி
அந்த விசேளம் அறியத்தான்[1] கேட்டு

### தர்மர் பரிசித்துவின் மனத்தைத் தேற்றுதல்

மைந்தன்மகன் மனசு மலையாமல் வார்த்தைசொல்லிக்
கந்துமலர்க் கையாலே கட்டி யரவணைத்து

முகந்து மடியில் வைத்து முதுகு தனைத்தடவி
சுகந்த மணிந்து சோபமிகத் தான்தீர்ந்து

மகன்தன் குழந்தை[2] மனசுவர வார்த்தைசொல்லி
அமத்தியிரு மென்று யரவணைத்துக் கொண்டாடிச்

சமத்தன்பரி சித்துவுந்தான் சாந்தமாய் நல்லதென்று
செல்லுமென்று நல்வசனம் செப்பினா னம்மானை

### தர்மர் மன்னர்களுக்கும் அறிவுரை கூறுதல்

மற்றுமுள்ள[3] மன்னர் மகுடமுடி வேந்தருக்கும்
புத்தியுடன் சொல்லிப் புகுந்தார் மனைதனிலே

### குந்தியைப் பாண்டவர்கள் வணங்கித் தங்கள் எண்ணம் கூறுதல்

தாயா ரிருக்குமந்த தனிமா ளிகைதனிலே
ஆயா னிருக்கு மாசனத்தின் முன்னேகி

விழுந்து நமஸ்கரித்து வேந்தருந் தம்பியரும்
அழுந்தத் தழுவி[4] ஐவரையு முத்தமிட்டு

**47.111.** உத்த சனம் - உற்ற மக்கள். **47.112.** போற - போகிற. **47.113.** எந்த வகை என்று எனக்கு நீர் சொல்லும் - எந்த வகையில் நீங்கள் என்னைப் பிரிந்து செல்வது நியாயமென்று கூறுங்கள். **47.114.** விசேளம் - சிறப்பு; இங்கு ஏளனப் பொருளில். **47.115.** மைந்தன் மகன் - தங்கள் மைந்தனாகிய அபிமன்யுவின் மகன்; பரிசித்து. மலையாமல் - திகைத்துப் போகாமல். **47.116.** கந்துமலர் கை - நறுமணம் வீசும் மலர் போலும் மென்மையான கை. **47.117.** முகந்து - தலையை முகந்து. **47.118.** சுகந்தம் அணிந்து - சந்தனத்தைத் தடவி. சோபம் - சோர்வு. **47.119.** மகன் தன் குழந்தை - தன் மகனான அபிமன்யுவின் குழந்தை; பரிசித்து. **47.120.** அமத்தியிரும் - மனத்துள் அமைதியாக இரும். **47.121.** சமத்தன் - சமர்த்தன். **47.122.** செல்லுமென்று - செல்லுங்கள் என்று. **47.124.** மனை - அரண்மனை. **47.125.** தாயார் - குந்தியைக் குறித்தது. **47.126.** ஆயான் - தாய். ஏகி - சென்று. **47.127.** வேந்தர் - தர்மர்.

---

சு.சொல் : 1. அரியத்தான் 2. குளந்தை 3. மத்துமுள்ள 4. தளுவி

Town, State, and loving people are all there.
You have a good name, why should you go?
Tell me why you should go away.
Let me also that grand reason know!"[1]

**Tarmar consoles Paricittu**

Tarmar spoke to console his son's son.
With love he hugged him with fragrant hands,
Cuddled, placed on lap, caressed his back,
Smeared sandal paste, ridding his fatigue
And spoke comforting wordsto him.
He soothed him, hugged, and assuaged him.
Smart Paricittu got pacified.
At last agreed for their going away.

**Tarmar advises kings**

To other kings and crowned monarchs
He gave advice; and entered the house-
The palace where their mother stayed.
Reached where their mother was seated.
Fell at her feet the king and the brothers.
She hugged them tight and kissed the five.

1. Paricittu is sarcastic.

சூழவே மைந்தர் துயருத் திருக்கையிலே
தாழ்மொழி[1] பேசித் தன்மருந் தம்பியரும்
தாயே சரணஞ் சலிப்பொன்றும் பேசாமல்
ஆயேநீ யெங்களுக்கு அம்புடனே யின்பமதாய்
மாயோ னிடந்தனிலே வைகுண்டஞ் சேர்வதற்கு
நீயேகு மென்றுசொல்லி நெத்தியிலே நீறணிந்து[2]
சந்தோச மாகத் தானனுப்ப வேணுமினி
எந்தாயே வேறொன்று மெண்ணாம லன்புடனே
அனுப்புவீ ரென்று ஐவருமே தான்கேட்டு

## குந்தியின் வருத்த மொழிகள்

தனுப்பெரிய தாயாருஞ் சம்பி முகம்வாடி
எனைப்பிரிந்து மக்கா யென்னையுந்தா னிங்கேவிட்டு
நடப்பதற்கோ நீங்கள்வந்து நன்றா யுபசரித்தீர்
நடையத்து நானும் நரைத்துவுடல் தழன்று[3]
கூனி விழிமயங்கி[4] கோலூன்றி யேதிரிகில்
வானீ ரொழுகி[5] வயசு சரியாகி
உடலுந்தளன்று வூணு மிருந் தான்குறைந்து
படரு மிருமல்வெகு பாசத் திளைப்புடனே
முகமுஞ் சுரித்து முழுங்கால்[6] பிடிப்பாகிச்
சுகமுஞ் சுகமறந்து[7] தோற்றமது வேறாகி

**47.129.** துயரத்திருக்கையிலே - வைகுண்டப் பயணத்தை எவ்விதம் கூறுவது என மிகுந்த துயரத்துடன் இருக்கின்ற பொழுது. **47.130.** தாழ் மொழி பேசி - தாழ்ந்த குரலில் பேசி. **47.131.** சலிப்பொன்றும் - மனம் வருத்தம் அடையும் படியான தொன்றும். **47.134.** நெத்தி - 'நெற்றி' என்பதின் பேச்சுவழக்கு. நீறு - திருநீறு. **47.135.** வேணும் - வேண்டும். **47.138.** தனுப் பெரிய தாயார் - பெரிய உடம்பினை உடைய தாய்; குந்தி. சம்பி - முகம் சாம்பி; ஒடுங்கி. **47.139.** மக்கா - 'மக்களே' என்பதின் பேச்சு வழக்குச் சொல். **47.141.** நடையத்து - நடப்பதற்கும் இயலாமல். தழன்று - தளர்ந்து **47.142.** கூனி - உடலில் கூனல் விழுந்து. திரிகில் - திரிகின்ற நிலையில். **47.143.** வானீர் - வாயிலிருந்து சுரக்கும் உமிழ்நீர். வயசு சரியாகி - 'மரணம் வரும் தருவாய் வரை வாழ்ந்தாகி விட்டது' என்ற பொருளில். **47.144.** தளன்று - தளர்ந்து. ஊண் - உணவு. **47.145.** பாசத்துடன் இணைப்பு - மிகுந்த இணைப்பு நோய். **47.146.** சுரித்து - முகத்தில் சுருக்கங்கள் உண்டாகி. முழங்கால் பிடிப்பு - வயதின் காரணமாய் முழங்கால் பொருத்துகளில் உண்டாகும் ஒரு வகை நோய்.

---

சு.சொல் : 1. தாள்மொளி 2. நீரணிந்து 3. தளன்று 4. விளிமயங்கி 5. றொழுகி 6. முளங்கால் 7. சுகமரந்து

Perturbed as to how to tell the plan,
Tarmar, brothers in a low voice spoke.
"Mother we surrender at your feet.
Without telling anything that hurts,
O mother speak something pleasantly.
To go to Kaṇṇaṉ at *Vaikuṇṭam*
Give us leave, apply holy ash
On our foreheads, and send us with joy.
Oh mother, give no room for further thought.
Please, send us with joy"; said the five.

**The sad utterances of Kunti**

Fell the face of the mother, corpulent.
"To leave me alone here, children, and
To walk off did you speak so sweet?
I can't walk, my body's gone weak.
With a bent back, tired eyes, I walk with a stick.
I drible and my time is ripe.
Body weakened, food and life dwindled.
With a killing cough and wheezing painful,
Wrinkled face and rhcumatic pain.
Health is gone, and my appearance has changed.
Heart broken, my body's youth is gone.

உள்ளுடைந்து மேனி யுடலும் பசைகழன்று[1]
வெள்ளுடலு மாகி மெய்யு மிகத்தழன்று

ஆக்கை குலைந்துமிப்பா யவதிவரு மன்னாளில்
தீக்கடனும் நீர்க்கடனுஞ் செய்து முடிக்காமல்

போறமென்ற[2] புண்ணியரே புத்திரரே மித்திரரே
வாறமென்று[3] மக்களுடன் மண்ணில் விழுந்தழுது

தந்தையரு மில்லாமல் தனித்துநா னுங்களையும்
சிந்தை மயங்காமல் சிறியோர்[4] பெரியோராய்[5]

ஆகுமட்டுந் தான்வளர்த்த அன்னையல்லோ யெந்தனையும்
சாகவிட்டுப் போகச் சம்மதியோ யுங்களுக்கு

### துர்வாச முனி தந்த வரத்தைக் குந்தி கூறுதல்

அந்தநா ளெந்தனுட அன்னை பிதாவிடத்தில்
குந்திமா தேவியென்று குழந்தையாய்[6] நானிருந்தேன்

சொல்லரிய வேதத் துருவாசமா முனிவன்
வெல்லரிய குந்திபுர மீதிலெ வந்தளவில்

எங்களையர்[7] கண்டு பிருமென்று ஆதரித்தார்
அங்கவருந் தங்கி யமர்ந்திருக்கும் நாளையிலே

அஞ்சு வயதான யாரணங்கு கையாலே
மிஞ்சுமொரு சமையல் விதமாகத் தான்முடித்து

அன்னம் படைத்தால் அமுதுகொள்வோங் கையாலே
என்ன ரிஷிசொல்ல யெங்களையர் யெந்தனையும்

**47.148.** உள்ளுடைந்து - மனம் மிகவும் உடைந்து. பசை கழன்று - இளமையில் உடலில் காணப்பட்ட பசுமை மாறி. **47.149.** மெய் - உடல். **47.150.** ஆக்கை - உடம்பு. அவதி - துன்பம். **47.151.** தீக்கடன், நீர்க்கடன் - மரணச் சடங்குகள். **47.152.** போறம் - 'போகிறோம்' என்பதன் பேச்சுவழக்குச் சொல். மித்திரர் - நண்பர். **47.153.** வாறம் - 'வருகிறோம்' என்பதின் பேச்சுவழக்குச் சொல். **47.154.** தந்தையர் - பாண்டவர்களின் தந்தை; பாண்டு. **47.155.** சிந்தை மயங்காமல் - அறிவில் தளர்ச்சி கொள்ளாமல். **47.156.** ஆகுமட்டுந்தான் - ஆகுகின்ற காலம் வரையில்தான். **47.157.** சம்மதியோ - சம்மதமோ. **47.158.** எந்தனுட - என்னுடைய. **47.161.** வெல்லரிய - வெல்வதற்கு அருமையான. **47.164.** அஞ்சு - 'ஐந்து' என்பதின் பேச்சு வழக்கு. ஆரணங்கு - அழகிய பெண். **47.166.** அன்னம் - சோறு. **47.167.** ரிஷி - துர்வாச முனிவர். எங்கள் ஐயர் - எனது தந்தை.

சு.சொல் : 1. களன்று 2. தளன்று 3. போரமென்ற 4. வாரமென்று 5. சிரியோர் 6. பெறியோராய் 7. குளந்தை 8. யெங்களையற

My body has paled, it's become weak.
My wasted body much pain awaits.
Without performing my last rites
With fire and water[1], for your mother dear,
You say you're going, eh, my sons?"
Said she'd go too, fell on the ground and cried.
"Without your father[2] I brought you up.
Without getting bewildered, I
Brought you up as men small and big.
Brought you up as great as I can.1
Leaving me to die a lonely death, if you go,
Is it fair, tell me, O my dear sons?"

**Kunti speaks of the blessing given by Turvācar, a *riṣi***

"Once upon a time with my parents
I was a child named Kunti Devi.
Turvācar, a *riṣi* great,
An exponent of ancient *vēdas*
Once visited Kuntipuram,
A city that could not be defeated.
My father entreated him to stay.
During when he was staying there-
'If a girl aged five with her own
Hands cooks and serves delicious food,
I'll eat eat and stay here' the *riṣi* said.

1. The mandatory rites a son is supposed to do for his mother after her death. 2. Pāṇṭu was invalid

அவர்க்குப் பணிவிடைசெய் யம்மா யெனவுரைத்தார்
இவர்க்கு மனசுவர யானும் இளையாமல்[1]

அன்புடனே தான்சமைத்து யமுது படைத்தேனென்று
இன்புடன் பசிதீர்ந் தேகியதோர் நாளையிலே

சந்தோசம் வந்துமுனி தனித்து யெனையழைத்து[2]
மந்திரமோ ரைந்து மகிழ்ந்துரைத்தா[3] ரெந்தனக்கு

வேதமுனி யுரைத்த வித்தைதனை வைத்திருந்தேன்
நீதமுள்ள பாண்டவர்தா னித்தியதாம் பூலமிட

கண்ணாலஞ் செய்தார்கள் கருத்துடனே வுண்மைகொண்டு
மண்ணாள நீங்கள் வருவதற்கு மார்க்கமதாய்[4]

உங்களையர் தன்னிடத்தி லுண்மைசொல்லி யான்கேட்க
அங்கவர்தான் சொன்னதொரு அன்பான மந்திரத்தால்

வேண்டித் தவமிருந்து மேதினியில் புத்திரரை
ஆண்டியுட சொல்படிக்கு அன்பாக வுங்களையும்

ஈன்று முலைகொடுத்து யெப்போதும்[5] வாழ்ந்தீரென்றார்
தோன்றுமொரு மந்திரமுஞ் சொல்லிமுறை முறையாய்[6]

அப்படியே தப்பாமல் வரச்சொல்லி மீறாமல்
இப்படியே யுங்களைத்தா னீன்றெடுத்தே னென்றுசொல்லித்

## ஐவர்களைப் பிரிய மனமின்றி குந்தியுரைத்தல்

தாயாதிக் காரர் சதிகேடர் ராச்சியத்தில்
மாயாதே யுங்களையும் வளர்த்தே னிதுவரையும்

**47.168.** பணிவிடை - தொண்டு. **47.169.** மனசு வர - மனம் மகிழும்படியாக. **47.171.** ஏகியதோர் - சென்றதோர். **47.173.** மந்திரமோர் ஐந்து - ஐந்து வகையான மந்திரங்கள். **47.174.** வேதமுனி - வேதங்களில் வல்ல துர்வாசமுனி. **47.174.** வித்தை - துர்வாசமுனிவர் கொடுத்த ஐவகை மந்திரங்கள். **47.175.** நீதமுள்ள - மேன்மையுள்ள. பாண்டவர் - பாண்டுவாகிய மன்னர். தாம்பூலம் - திருமணத்தில் வழங்கப்படும் வெற்றிலை பாக்கினைக் குறித்தது. **47.176.** மார்க்கமதாய் - வழியாய். **47.180.** மேதினி - உலகம். **17.181.** ஆண்டியுட; முனியினுடைய; இங்குத் துர்வாச முனிவரைக் குறித்தது. **47.182.** முலை கொடுத்து - பால் கொடுத்து. **47.186.** தாயாதிக்காரர் - உரிமை பங்கு உடையவர்; இவண் திருதராட்டினனைக் குறித்தது. சதிகேடர் - சூழ்ச்சிக்காரர்கள்; இவண் திருதராட்டினனையும் அவர்கள் புத்திரர்களான கௌரவர்களையும் குறித்தது. **47.187.** மாயாதே - மாய்ந்து போகாமல்.

சு.சொல் : 1. விளையாமல் 2. யளைத்து 3. மகிள்ந்து 4. மர்கமதாய் 5. யெப்போதும் வாள்ந் 6. முரையாய்

When *riṣi* said thus my father bid me
To do service to the *riṣi* great.
Unhesitatingly with love
I cooked his food and he got satisfied.
When he was about to go, sated,
Pleased, the *riṣi* took me aside.
Pleased, then he taught me *mantiras* five.
I secretly kept the *mantiras* taught by him,
Got betrothed to Pāṇṭu, the great
And got married to him by and by.
To enable you to come to rule
I told the truth to him, and sought his permission.
With love he taught me one *mantira*
Following the words of the *riṣi* with care
I gave birth to you, suckled and you survived
The *mantiras*, repeatedly I used.
Following the method once again
I gave birth to children, that's all of you.
In the evil state of your agnates,
Losing not heart, till now I brought you up.
How could you think of leaving me?

என்னைவிட்டுப் போக யெழுந்ததோ உங்கள்மனம்
அன்னையென்று சொல்லி அருகிருந்து போற்றாமல்

பிள்ளையில் லாத பெருமலடி தானாகிக்
கிள்ளையில் லார்போலே கிலேசமுத்து வாடுவேனோ

குந்திமக்கள் இவரென்று குவலையமெல் லாமறிய
முந்தித் தவமிருந்து முந்நூறு[1] நாள்சுமந்து

பெற்றெடுத்த தாய்வயற்றில் பெருந்தணலைத் தான்மூட்டி
வைத்துமிப்போ போறோமென்று வாய்வீணும் பேசுவரோ

ஈன்றெடுத்த யென்வயறு யெரியவோ யென்னிடத்தில்
தோன்ற வெனக்குத் துயர்வருத்த வந்தீரோ

மக்களல்ல வெந்தனுக்கு மாற்றான்போல் வந்தீரோ
பக்கமுள்ளர் பேருதவி பண்ணுவரோ[2] யெந்தனுக்கு

தன்மரே வீமர் சகாதேவர் தம்பியரே
நன்மையிது தானோ நகுலா யருச்சுனரே

இன்மைதனில் பாவ மென்னளவு வந்ததுவோ
சென்ம மெடுத்தேனே சிரிப்பார்க்குள் ளானேனே

இந்த விதிவசந்தா னென்தலையிலே விதித்தான்
மைந்தரில்லை யென்று வகுத்தெழுதி விட்டானோ

அருமையுடன் பெற்றெடுத்த ஐவரே தம்பியரே
பெருமையோ வுங்களுக்குப் பேசவந்த காரியந்தான்

இத்தனையுஞ் சொல்லி யிரைந்தழுதாள் குந்தியம்மாள்
கத்தனையே நொந்தழுதாள் கண்ணீர்க ளாறோட

### தர்மர் குந்தியிடம் ஆறுதலுரை கூறிச் சம்மதம் பெறுதல்

தண்ணீர்தனை வாங்கித் தாய்முகத்தை யேதுடைத்துக்
கண்ணீர்தனைத் துடைத்துக் கவலைதன்னை நீவிடென்று

47.191. கிள்ளை - கிளை; உறவு. கிலேசமுத்து - ஒரு வகை உயர்சாதி முத்து வகை. 47.192. குவலையம் - உலகம். 47.194. தணல் - நெருப்பு. 47.195. போறோம் - 'போகிறோம்' என்பதின் பேச்சு வழக்கு. 47.197. தோன்ற - பிறக்க. துயர்வருத்த - துயரத்தைத் தருவதற்காக. 47.198. மாற்றான் - எமன். 47.199. பக்கமுள்ளர் - பக்கத்திலுள்ளவர்கள்; சுற்றத்தார் எனினும் அமையும். 47.202. இன்மை - இம்மை; இப்பிறப்பு. என்னளவு - என்னிடத்தில். 47.207. பேசவந்த காரியம் - நாங்கள் ஐவரும் வைகுண்டம் போகிறோம் எனக் கூற வந்த சொற்கள். 47.209. கத்தன் - இறைவன்.

சு.சொல் : 1. முன்னூறு 2. பண்ணுவறோ

Not staying by side esteeming me,
You make me a woman childless
Will I suffer as one sans kins?
For world to know, Oh children of Kunti,
As if I was performing *tapas*,
I carried you for three hundred days.
Now why throw live coals on that stomach?
Using useless words like 'going off'
Puts on fire the stomach that once carried you.
Have you come here to needle me?
Have you come as strangers and not sons?
Will people even nearly help me like you?
O Tarmar, Vīmar, Cakātēvar!
Brothers, Nakular, and Arccuṉar!
Is what you do fair by any means?
My previous sins are tormenting now!
I have become the butt of ridicule.
God has written this fate on my head.
Has he written that my sons I'll lose?
O! my five sons, with pride I gave you birth.
Is the topic you came to talk of
Respectably, suitable for you?"
Saying all these Kunti cried aloud.
She cried, blaming God, tears running like streams.

**Tarmar consoles Kunti, gets her consent**

Tarmar took water and wiped his mother's face.
He wiped of the tears asking her to rid grief.
"O my mother please lift us up.

எந்தனுட மாதாவே யெங்களையு மீடேற்ற
வந்தகலி தன்னில் மாயாம லெங்களையும்

சத்திய வாண்மை தவறாமலே காத்து
நித்தியமு மிங்கே நீணிலத்தில்[1] தானிருந்தால்

புத்தி கலங்கிப் பொறிகலங்கிப் பொய்யாமல்
பத்தி கலங்கிப் பஞ்சவர்கள் கொஞ்சமதாய்

மெய்வார்த்தை சொல்லி விரதம் பிடித்தவர்கள்
பொய்வார்த்தை சொல்லிப் புலையராய்[2] மானிலத்தில்

சிரிக்க வுடம்பெடுத்துத் திரியாம லெங்களுக்கு
விரிக்கும் பரலோக மெய்ப்புடனே தான்சேர

துதிக்கும் படியாய்த் துயரமத்து நீர்தாமும்
விதிக்கும் படியாய் விளம்புவீரே மாதாவே

உனக்குப்பரி சித்துவுந்தான் யுகந்தபிள்ளை யெங்களைப்போல்
தனக்குத்தான் வேணுமென்று சர்வபாக்கி[3] யத்துடனே

அன்னசுற்ற[4] மெல்லாம் அருகிருந்து போற்றிசெய்ய
சொன்னபடி கேட்டுத் துரைமக்கள் தானிருக்க

ஆனா லுனக்கு அச்சுதனார் தன்பாதம்
வாணாள்[5] முடிந்து வரும்போது நாரணரும்

நாங்களுங் கூட நடந்தெதிரே வந்தழைத்து[6]
பாங்குடனே வைகுண்டம் பதியிலே நீயிருந்து

முன்னேபோய் நாங்கள் முற்றுந்[7] தனதாகி
அன்னே யிருப்போ மழவேண்டாந் தாயேநீ

தாயே தவங்குலைந்து தவங்கெட்டுப் போகாமல்
நீயே துணையாக நேசமுடன் புத்திசொல்லித்

**47.212.** எந்தனுட - 'என்னுடைய' என்பதின் பேச்சு வழக்கு. ஈடேற்ற - உயர்ந்த நிலைக்குச் செல்ல. **47.213.** கலி - கலியுகம். **47.214.** கார்த்து - பாதுகாத்து. **47.219.** புலையர் - கீழ்ச் சாதியர். **47.221.** விரிக்கும் பரலோகம் - விரிந்து காணப்படும் தேவலோகம். மெய்ப்புடன் - உண்மையுடன். **47.222.** துதிக்கும்படியாய் - எல்லோரும் வணங்கும் படியாய். துயரமத்து - துயரமற்று; வருத்தம் தீர்ந்து. **47.223.** விளம்புவீரே - அனுமதி அளிப்பீரே. **47.225.** வேணுமென்று - வேண்டுமென்று. **47.226.** அன்னசுற்றம் - நெருங்கிய உறவினர்கள். **47.228.** அச்சுதனார் - திருமால். **47.233.** அன்னே - அன்னையே.

---

சு.சொல் : 1. நீனிலத்தல் 2. புலையறாய் 3. சறுவபாக்கியத் 4. அன்னசுத்த 5. வாணால் 6. வந்தளைத்து 7. முத்துத்

The mischievous magic of *kali* starts.
Safeguarding truth and manliness,
If on this earth we stay for long
Our minds will go astray.
We, the Pāṇṭavars will lose our piety.
We, who as a vow once spoke the truth
Now, telling lies as *Pulayars*[1] do,
Would be holding us up to ridicule.
We want to reach heaven with dignity.
Pray so and you get rid of grief.
Say yes to all that I have asked for.
Paricittu too is dear to you.
He with all blessings by your side will remain.
All kith and kin would help you out.
To you service they will all do.
When your time ends to Kaṇṇaṉ feet
You come; along with Nārāyaṇar
We will be there to welcome you.
With grace you'd stay at *Vaikuṇṭam.*
We'll go before you and stay there.
Waiting for you, don't cry O! mother!
Our *tapas* is getting disrupted.
Before it goes waste O! mother
Be our ally, with love guide us.

1. Very mean, degraded people.

கன்மக் கலியுகத்தைக் கடந்து கரையேற
தன்மந் தவறாமல் தாயே சலியாமல்
அக்காலஞ் சென்று அழைக்கவந்த காலனிடம்
சிக்காமல் நீயுஞ் சிந்தை மகிழ்ந்தருளி
இறப்பதுவு[1] மெய்யாகு மிருப்பதுவும் பொய்யாகும்
சிறப்பிதுகாண்[2] மாதாவே செல்வர்தனை யனுப்பும்
ஆகாயம் பூமி யந்தரமு முள்ளளவும்
போகாது தர்மம் புகழும் பெரிதாகும்
எனக்குமென் தம்பியர்க்கு[3] மிடமு மினிமேலும்
உனக்கு மிருக்க வுதவியே நாங்களுந்தான்
இடம்பிடித்து மங்கே யில்லிடமுந் தான்சமைத்து
உடம்பிடிக்கை பண்ணி வுலகளந்தார் தன்னிடத்தில்
வீற்றிருக்க[4] வேண்டி விரும்பி யனுப்பிவிடும்
நேற்றிருந்தா ரின்றிருக்க நிச்செயமில் லாமுடலை
சதமில்லை நம்வாழ்வு[5] சதமேயவட மம்மா
நிதமுஞ்சிவ பூசை நீயறிவு தப்பாமல்
அவடஞ் சதமென்று யாற்றுமத்தை சுத்திபண்ணி
இவடஞ் சதமில்லை யெங்களையுந் தானனுப்பும்
மாதாவே தாயே மனங்கள் சலியாமல்
நீதா னனுப்புமென நீதியுடன் பாதமதில்
வீழ்ந்தார்[6] சரணமென்று மெய்மகிழ்ந்து[7] தாயாரும்
தாழ்ந்துமன[8] மேங்கித் தம்பியரே போமெனவே

**47.236.** கன்மக் கலியுகம் - கர்ம வினைகளை அதிகரிக்கும் கலியுகம். **47.137.** தன்மம் - தர்மம். **47.237.** சலியாமல் - மனம் தளர்ந்து போகாமல். **47.239.** சிக்காமல் - அகப்படாமல். **47.241.** செல்வர்தனை - செல்வந்தர்களாகிய பாண்டவர்களாம் எங்களை. **47.242.** அந்தரம் - வானம். **47.246.** இடம்பிடித்து - வைகுண்டத்தில் இடம்பிடித்து. **47.247.** உடம்பிடிக்கை - 'உடன்படிக்கை' என்பதின் பேச்சு வழக்கு. **47.249.** நிச்செயம் - 'நிச்சியம்' என்பதின் பேச்சுவழக்கு. **47.250.** சதமில்லை - உறுதியில்லை. அவடம் - அவ்விடம்; வைகுண்டம். **47.252.** ஆற்றுமம் - ஆத்துமம்; ஆன்மா. **47.258.** நீறு தரித்து - திருநீற்றினை அணிவித்து. நெடியோன் - திருமால். **47.260.** காரும் - பாதுகாத்திடும்.

சு.சொல் : 1. இரப்பதுவு 2. சிரப்பிதுகாண் 3. தம்பியற்கு 4. வீத்திருக்க 5. நம்வாள்வு 6. வீள்ந்தார் 7. மெய்மகிள்ந்து 8. தாள்ந்துமன

To live through *kali yukam* wherein
The effects of *karma* is on increase.
Keep *dharma*, don't get fed up.
As Kālaṉ[1] come when your time is up.
With a happy heart you come to us.
Death is definite, and the life is unreal.
Great it is O mother, if you send us off!
As long as the earth, sky, and space remain
There'll be *dharma*, its fame will increase.
There'll be place for me and my brothers.
To get you a place there we will help.
Finding a place for us we'll get it fixed.
We'll firm up a deal with the Lord over there.
He is the one who with three steps measured the worlds.
We'll sit with him there, and so send us with joy.
Those alive yesterday, and dead today.
Unpredictable is this body.
It's not ours for ever, that's[2] our place
Perform *pūjai* daily without fail.
Thinking it is our refuge real,
Thereby purify the soul within.
Here, the stay is not eternal and so give us leave.
O mother, without getting worried,
You send us to the Feet of justice[3]."
Saying so they at the feet of their mother fell.
Pleased, she came down, and allowed them to go.

1. Yamaṉ, the god of death. 2. Kaṇṇaṉ 3. The mother of the Kauravars.

### குந்தி பாண்டவர்கள் வைகுண்டம் செல்ல சம்மதித்தல்

நீறு தரித்து நெடியோனையே நினைந்து
வேறுவினை வராமல்[1] வேதநா ராயணரே

காருமென்று வாழ்த்திக் கைநீறு தானளித்து
சேருமுந்தன் பாதந் திருமாலே ஐவரையும்

என்றுகுந்தி[2] மாதேவி இயல்புடனே தானனுப்ப
மன்னுபுகழ்[3] காந்தாரி மனைநோக்கியே நடந்தார்

### காந்தாரியைக் காண பாண்டவர்கள் செல்லுதல்

காந்தாரி வீற்றிருக்கும்[4] கனகமணி மாளிகையில்
புகுந்தா ரிவர்கள் புதியமணி மண்டபத்தில்

கண்டா ரடிபணிந்தார் காந்தாரி யம்மனையும்
கண்டமைந்த ரைவரையுங் கட்டி யரவணைத்து[5]

### காந்தாரி பாண்டவர்களை வரவேற்றல்

மைந்தருக்கு நல்ல வார்த்தையுப சாரமுடன்
அய்ந்தருப்போல் தானிருந்த ஐவரையுங் கொண்டாடிச்

சிந்தை மகிழ்ந்துருகித் தேன்மொழியாள் தானிருக்க
அந்த மொழியறிந்து ஐவருந்தான் மார்க்கமதாய்

### தர்மர் தம் எண்ணத்தைக் காந்தாரியிடம் கூறுதல்

எந்தாயே மாதாவே யிப்போது யெங்களையும்
சந்தோச மாகவும்நீ தானனுப்ப வேணுமினி

கலியன் பிறந்ததுவுங்[6] காரணங்கள் வந்ததுவும்[7]
சலியாம லெங்களையுந் தானே யனுப்பிவிடும்

வைகுண்டஞ் சேர்வதற்கு வாழ்த்தி[8] விடைதாரும்
கைகொண்டு நீர்வறளுங் கலியி லுழலாமல்

**47.263.** மன்று புகழ் - சபை நிறைந்த பெரியோர் புகழும். மனை - அரண்மனை. **47.264.** கனகமணி மாளிகை - பொன்னும் மாணிக்கமும் ஒளிரும் மாளிகை. **47.266.** காந்தாரியம்மன் - காந்தாரியாகிய தெய்வத்திற்கு இணையான தாய். **47.268.** உபசாரம் - விருந்து உபசாரம். **47.269.** அய்ந்தருபோல் - ஐந்து தாரு மரங்களைப்போல்; தாரு மரமாவது தேவதாருமரம் என்னும் கற்பகமரம். **47.274.** காரணங்கள் - மண்ணுலகை விட்டுப் பிரிந்து வைகுண்டம் செல்வதற்கான காரணங்கள். **47.277.** நீர்வறளும் - நீர் வறண்டு போய்விடும். உள்ளாமல் - உள்ளாகாமல்.

சு.சொல் : 1. வறாமல் 2. என்றுகுந்த 3. மன்றுபுகள் 4. வீத்திருக்குங் 5. யுரவணைத்து 6. பிரந்தவுங் 7. வந்தவும் 8. வாள்த்தி.

### Kunti agrees to send the Pāṇṭavars off to *Vaikuṇṭam*

"Holy ash wearing, think of Kaṇṇaṉ.
O Vēda Nārāyaṇaṉ, save these children
From any evil that may befall!"
She blessed and offered the holy ash.
Let Lord Kaṇṇaṉ guide your feet!"
Pacified Kunti let them go.
Then they walked to the house of famed Kāntāri[1].
In Kāntāri's gem studded house,
Into the new jewelled *maṇṭapam* they entered.
They fell at the feet of mother Kāntāri.
She hugged the five sons who respects paid.
She welcomed the five like *Taru*[2] trees.
The woman of sweet words remained in joy.
Gauging her mood, the five softly said,

### Tarmar tells about his intention to Kāntāri

"O my mother, all of us now,
You should send off with happiness.
Kali is born, and reasons have cropped up.
Without losing heart send us off.
Bless us to reach *Vaikuṇṭam* safe.
Escaping famine, caused by *Kali*."
When Tarmar said so, Kāntāri lost heart.
Saying nothing, not vacillating, said,

1. *Tēvatāru*, a kind of pine tree. 2. Hundred Kauravars.

என்றுதன்மர் கேட்க யேங்கியே காந்தாரி
ஒன்று முரையாமல் ஊசலிட்டுப் பேசாமல்

### தர்மரின் கூற்றைக் கேட்ட காந்தாரியின் வருத்த மொழிகள்

என்னிடத்தில் நீங்கள் ஏதுக்குவந் தீர்காண்
உங்கள் தனைநம்பி யுற்றதுணை யென்றிருந்தேன்

மாபாவி தன்னிடத்தில் மைந்தரென்று வந்தீர்காண்
பூபால ரைவரைத்தாம் பொருளென்று நானிருந்தேன்

நூற்றுவரு மாண்டிறந்து[1] நொந்திடைந்து மண்மீதில்
காத்திருந்து நானுங் கால முடியுமட்டும்

நீங்கள் துணையென்று நீணிலத்தில்[2] நானிருக்க
நாங்கள் பயணமென்று நன்றாய் மொழியுரைத்தீர்[3]

முன்செய்த தீவினையோ மூதாக்கள் செய்ததுவோ
பின்செய்த தீவினையோ பெருமாள்தன் கற்பனையோ[4]

அந்தமைந்தர் நூற்றுவரும் ஆசழிந்து போனாலும்
இந்தமைந்தர் போதுமினி யிங்கே நமக்குதவி

ஆமென்று நம்பி ஐவர் துணையெனவே
நாமொன்று தானினைக்க நடுவிருந்தான் தன்சியல்தான்

தானேமுடிந்த தற்குத் தம்பியரே யேதுசொல்வேன்
நானேது செய்வேன் நாயகமே தம்பியரே

நாளுஞ்[5] சரியல்லவோ நடையுடையும் பேதகமாய்
வாழும் புவியைவிட்டு வருவது மங்காச்சு

போங்கால மெந்தனுக்கு புத்திரரு மில்லாமல்
சாங்கால மானபின்பு தம்பியரே யென்னைவிட்டு

**47.278.** கேள்க்க - கேட்க. **47.279.** ஊசலிட்டு - தன் நிலையில் மாறுபட்டு. **47.283.** பூபாலர் ஐவர் - அரசர்கள் ஐவராம் பாண்டவர்கள். **47.284.** நூற்றுவர் - கௌரவர்கள் நூற்றுவர். நொந்திடைந்து - மனம் மிகவும் வருந்தி. **47.285.** காலமுடியும் - உயிர்வாழும் காலம் முடிகின்ற வரையும். **47.286.** நீணிலம் - நீண்ட இவ்வுலகம். **47.288.** மூதாக்கள் - மூதாதையர்கள். **47.289.** கற்பனை - கட்டளை. **47.290.** ஆசழிந்து - அற்பமாய் அழிந்து. **47.293.** நடுவிருந்தான் - எல்லோர்க்கும் நடுநாயகமாக இருப்பவன்; இறைவன். சியல் - 'செயல்' என்பதின் பேச்சுவழக்கு. **47.294.** ஏது - என்ன. **47.296.** சரியல்லவோ - சரியாக அமையவில்லையோ. பேதகமாய் - மாறுபாடாய். **47.297.** ஆச்சு - 'ஆயிற்று' என்பதின் பேச்சுவழக்கு. **47.298.** போங்காலம் - போகும் காலம்; இறக்கும் காலம். **47.299.** சாங்காலம் - சாகும் காலம்.

---

சு.சொல் : 1. மாண்டிரந்து 2. நீனிலத்தில் 3. மொளியுரைத்தீர் 4. கற்பினையோ 5. நாமுஞ்சரி

### The sad utterances of Kāntāri

"Why did you come to me, my sons?
Trusting, I thought you were my help.
As sons to this great sinner you've come.
The five kings, I considered as my support.
I was broken hearted, as the hundred died.
I was so hopeful that on this earth
You are my help till my end comes.
Your going away is a nice thing to speak of.
My evil *karma* now visits me, it seems!
Or is it the *karma* of my ancestors?
Is it my doing, or His wish?
Those sons hundred met with silly death,
Then, you were sons to help me out I thought.
Yes, these five sons are my only help.
When we propose, He disposes!
O sons, now what is there to say?
What shall I do my Lord, O sons dear?
The days aren't good; astray go all.
Now, leaving of the world you talk of!
Breft of children when I die,O sons
Should you leave me at the time of my death?

ஏகினீ ராமாகில் யெந்தனுக்கு வேறுதுணை
ஆகிலுமோ காணேனான் அய்வரே யென்றழுதாள்

பெற்றும் பெறாமல் பிறர்சிரிக்கப்[1] போவேனோ
சற்று[2] மிரங்காமல் தன்மரேபோ றோமென்றீர்

மாளக் கொடுத்த மனச்சலிப்புத் தான்தீற்றாய்
ஆழக் குழிதனிலே[3] அமுழந்தவிட்டுப் போறீரோ

பக்கத் துணையுமில்லை பரிந்தழவும் பிள்ளையில்லை
துக்கத்துணை யிருக்கச் சொல்லிவிட்டுப் போறீரோ

ஆரா ரிருந்தாலும் ஆனைகட்டி வாழ்ந்தாலும்[4]
தாராரு மைவரைப்போல் சகாயமெனக் குண்டாமோ

செய்யுஞ் சடங்கதுதான் தீக்கடனும் நீர்க்கடனும்
கையுங் கணக்குங் கடனுங் கழியாமல்

போக வெனவுரைத்தீர் புத்திரரே யிப்போது
யேக வெளிபார்த்து யிருந்து புலம்பாமல்

பாசமுட னீங்கள் பாதிவான் யோசினையாய்
வாசனைசேர் தன்மித்தரே மகனே யுரையுமென்றாள்

## தர்மரின் மறுமொழி

அந்த மொழிகேட்டு அன்புடனே தன்மிதரும்
வந்தவழி[5] சொல்லுகிறேன் மாதாவே நீர்கேளீர்

என்னுடைய தன்பிறவி[6] யேற்றதொரு நூற்றுவரும்
மன்னுகுரு வாசாரி மகுடமுடி மன்னவரும்

**47.300.** ஏகினீர் - சென்றீர். **47.301.** அய்வர் - ஐவர்; பாண்டவர். **47.302.** பெற்றும் பெறாமல் - குழந்தைகள் நூறு பேரைப் பெற்றும் அவர்கள் மாண்டமையால் குழந்தை பேறு அவற்றவள் போல். **47.304.** மாளக்கொடுத்த மனச்சலிப்பு - மாண்டு போன கௌரவர்களால் ஏற்பட்ட மனத்தளர்ச்சி. தீற்றாய் - தீர்த்தாய். **47.305.** போறீரோ - போகிறீரோ. **47.307.** துக்கத்துணை யிருக்கச் சொல்லி - துன்பத்தையே பக்கபலமாக எனக்கு இருக்கச் சொல்லி. **47.308.** ஆர் - 'யார்' என்பதின் பேச்சுவழக்கு. ஆனை - 'யானை' என்பதின் பேச்சுவழக்கு. **47.309.** தாராரும் ஐவர் - மலர்மாலை ஆர்க்கின்ற ஐவர்களாகிய நீங்கள். சகாயம் - உதவி. **47.310.** தீக்கடன், நீர்க்ககக்டன் - இறப்புச் சடங்குகள் சிலவற்றைக் குறிப்பன. **47.311.** கடன் - கடமை. **47.313.** ஏகவெளி - அண்டவெளி. **47.314.** பாதி வான்யோசினை - மனத்துள் பகுதி அளவு வானோலகம் செல்ல வேண்டும் என்ற யோசனையுடன். **47.319.** மன்று குருவாசாரி - புகழ் பொருந்துகின்ற குலகுருவாகிய துரோணாச்சாரியார்

சு.சொல் : 1. பிரர்சிரிக்க் 2. சத்துமிரங் 3. குளிதனிலே 4. வாள்ந்தாலும் 5. வந்தவளி 6. தன்பிரவி

When you go who will be my help?
O my five sons, how can I bear it?
Though had children now I'm childless!
I'll be an object of ridicule!
Pitiless, Tarmar you say you go.
You cured me of my mental agony.
You caused the death of my children hundred.
Now pushing me in a deep pit you go,
With none by my side to look me after,
And cry for me when I'm in despair.
You go, making grief company mine.
Whoever stays, however rich they may be
Will it be like the help from the five?
The water- fire rites are a must.
Any of those rites not performing,
Sons you say you are going now.
Aiming not at the vacant space,
Your mind yearns for the other world.
O famed sons, Tarmar, tell me what?"

**Tarmar's reply**

Listening to her words with love Tarmar, said
"O Mother I'll tell of my story!
My all able brothers hundred,
Famed guru Turōṇāccāriyār,
Many crowned kings along with him

உற்றதொரு மைத்துனன் உம்முடன்பிறந்த[1] சுற்றமுதல்[2]
பற்றறவே கொன்று. பாராண்டே னான்பாவி

ஆண்டுமுகிந் ததுகாண் அவர்களுடன் நான்போக
வேண்டுமிது காலம் விதியும் வளிவசமாய்

காலஞ் சரியாகிக் கலியுகமும் வந்ததுகாண்
கோலஞ் சமைந்திருந்த கூற்றுஞ் சமைந்ததுகாண்

இனிமேல் கலியுகத்தி லிருந்தோமே யாமாகில்
அனியாய மேலாகி அகந்தைமிக வுண்டாகும்

இடும்புங் குலைகளவு மெகத்தாள முண்டாகும்
நெடும்புவியில் முன்னிலுள்ள நீதி நடவாது

அந்தத் துவாபரயுகத்தி லான தயவுதண்மை
இந்தக்கலி யுகத்தில் எய்யாது தானதர்மம்[3]

நன்றிசெய்வோ மென்றால் நமக்கறிவு வேறாகும்
குன்றிவிடும் புத்தியிது குறுகுங் கலிகாலம்

ஆனதினால் தாயே யடியேன் பயந்துவந்தேன்
தானதவ மிழந்து[4] தர்மரென்ற[5] பேரும்

பேருந் தவமும் பெருமையுந்தான் போகாமல்
காருமின்று தாயேநீ கற்புநிலை குன்றாமல்

உந்தனுக்கு நல்ல வுதவிசெய்யப் பாலருந்தான்
மைந்தன வீமன் மகன்பரிசித்[6] துண்டெனவே

**47.320.** உற்றதொரு மைத்துனன் - ஜெயத்திரதன்; கௌரவர்களின் தங்கையாகிய துச்சலையின் கணவன். **47.321.** பற்றறவே - ஆசை அற்றுப்போகும் படியாகவே. நான் பாவி - 'உறவினர், குரு முதலானோர்களைப் போரில் கொன்றமையால் நான் பாவியானேன்' என்றவாறு. **47.322.** ஆண்டு முகிந்தது - நான் நாடு ஆண்ட காலம் முடிந்துவிட்டது; என் வாழ்வின் காலம் முடிந்தது எனினும் அமையும். **47.323.** வளி - காற்று. **47.324.** காலஞ் சரியாகி - துவாபரயுக காலமும் முடிவுக்கு வர. **47.325.** கோலம் - அழகு. கூற்று - எமன். அமைந்தது - வாய்த்தது. **47.327.** அனியாயம் - அநியாயம். அகந்தை - ஆணவம். **47.328.** இடும்பு - துன்பம். குலை - 'கொலை' என்பதின் பேச்சு வழக்கு. **47.328.** எகத்தாளம் - இடையூறுகள். **47.330.** தயவு - இரக்கம். தண்மை - குளிர்ச்சி. **47.331.** எய்யாது - நடக்காது. **47.332.** அறிவு வேறாகும் - அறிவு மாறுபடும். **47.333.** குன்றிவிடும் - குறைந்துவிடும். குறுகும் - அணுகும்; நெருங்கும் **47.337.** காரும் - பாதுகாத்திடுங்கள் **47.338.** பாலன் - இளையவன். **47.339.** அவீமன் மகன் - அபிமன்யுவின் மகன்.

சு.சொல் : 1. உம்முடன் பிரந்த 2. சுத்தமுதல் 3. தற்மம் 4. மிளந்து 5. தற்மரென்ற 6. மகன்பசிற்

Brother-in-law[1], many kith and kin-
Sinner, I killed all, and ruled the world.
And got all desire drained of me.
To join them my time has come.
It's time for me and fate is active.
*Tuvāpara yukam* ended and *kali* has come.
To us there was sole beauty once.
Lord Yamaṉ[2] has come to stalk his claim.
If we live in *kali yukam* further,
Pride, and resulting injustice will prosper.
Sufferings, murders, set backs will increase.
Ancient justice will be no more.
Compassion, and kindness of *tuvāpara yukam*
Along with noble philanthropy
Will not be there in the *kali yukam*.
While we aim at the good, mind will change and
Bad will become our attitude.
In *kali yukam* mind is bound to become narrow.
Hence O mother, I came in fear of
Losing my position and name.
Name, goodness, greatness not losing
Save us mother, your greatness guarding.
To help you out there's the goodly child;
There is sonof Apimaṉyu.
There is also Paricittu with
Kings, crowned monarchs with army of men
Lords, nobles with great many men,
He is there to look after you.

1. Jayattirataṉ, husband of Tuccalai, sister of the Kauravars. 2. God of Death.

வேந்தர் மகுடமன்னர் வீரர்பரி வாரமுடன்
சேர்ந்ததுரை மக்களுடன் சிறந்த[1] தளத்துடனே

இருக்கிறா ருந்தனக்கு ஏவல் புரியவென்றே
உருக்கமா யெங்களைநீர் ஒன்றும் பறையாமல்[2]

வாக்குத்தத்தரம் பாராமல் மனசுதடு மாறாமல்
நோக்குமெங்கள் பேரில் நோகாமல் நல்வசனம்

சொல்லி யனுப்புந் துரோபதையு மெங்களையும்
மெல்லியரே யெங்களுக்கு விடைதாரு மென்றுரைத்தார்

## காந்தாரி விடை தருதல்

ஐவருந்தான் கேட்டருள ஆனதொரு[3] காந்தாரி
மெய்வருந்தி நன்றாய் விரும்பி விடைகொடுத்தாள்

## பாண்டவர்கள் காந்தாரியிடம் விடை பெறுதல்

விடைவாங்கி ஐவருந்தான் விழுந்து நமஸ்கரித்து
அடைவோங்காண் வைகுண்ட மச்சுதனார் தம்மிடத்தில்

## பாண்டவர் பாஞ்சாலியுடன் வைகுண்ட யாத்திரையைத் தொடங்குதல்

வென்று கலியுகத்தை விட்டுவெளி யில்வந்தோம்
இன்று பிரிந்தோம் இனிமேல் கிலேசமில்லை

நமக்குப் பயமுமில்லை நடப்போ மனந்துணிந்து
சுமக்கும் சுமைவிட்டு துன்பமெல்லாந் தான்கழித்துக்

கேட்டவரந் தருவாய் கிருஷ்ணா யுனக்கபையம்[4]
நாட்டமுட னாங்கள் நல்வழி[5] யறிந்து[6]

**47.341.** துரை மக்கள் - மேன்மக்கள். சிறந்த தளத்துடன் - சிறந்த கூட்டத்துடன். **47.343.** உருக்கமாய் - மிகுந்த அளவு மனம் இளகும்படியாய். பறையாமல் - 'கூறாமல்' என்ற பொருளைத் தரும் மலையாளச் சொல். **47.344.** தத்தரம் - தடுமாற்றம். மனசு - மனம். **47.345.** நோகாமல் - மனம் வருந்தாமல். **47.346.** துரோபதை - திரௌபதி. **47.347.** மெல்லியர் - மெல்லிய இயல்பினள்; காந்தாரி. **47.353.** இன்று பிரிந்தோம் - 'கலியுகத்தில் வாழுகின்ற வாழ்க்கையை விட்டு இன்று பிரிந்தோம்' என்ற பொருளில். கிலேசம் - துன்பம். **47.355.** சுமக்கும் சுமை - அரசாட்சி, உறவினர் பேணல் மற்றும் இன்னோரன்ன உலகியல் வாழ்க்கை பாரங்கள். கழித்து - நீக்கி. **47.356.** அபையம் - அடைக்கலம்.

சு.சொல் : 1. சிரந்ததளத் 2. பரையாமல் 3. யானதொரு 4. கிஸ்டிணாயுனக்கபையம் 5. நல்லவளி 6. யரிந்து

Pitying us saying nothing amiss,
With no confusion in words and heart,
In good words give us leave, we entreat you.
Along with Tiroupatai send us off.
O tender woman give us leave!"
When the five thus requested, Kāntāri
Bade them farewell with pain at heart.

**The Pāṇṭavars bid farewell to Kāntāri**

Taking leave, the five fell at her feet:
"Were off to *Vaikuṇṭam*, O Kaṇṇaṉ!
Out of *kali!* We are victorious!
Off we are! There's no grief hereafter!
There's no tear, let's with courage walk,
Leaving behind our loads and grief.
O Kriṣṇa our wish bless us with!
Finding our path with eagerness

வாட்டமற வாறவர்க்கு மாயவனே நீதுணையாய்
தேட்டமுடன் வந்துனது திருவுளமே காப்பாயே
வழித்துணையாய்[1] நில்லுமையா மாலே சரணமென்று
களித்து மனம்மகிழ்ந்து கண்ணர் தனைநோக்கி
நாற்றிசையும் பார்த்து நமஸ்கரித்து நன்றாகத்
தோஸ்திரமுஞ் சொல்லித் துணிந்து நடக்கலுற்றார்.

### கண்ணனைத் துதித்துப் பாண்டவர்கள் உரைத்தல்

**விருத்தம்**

48. மாத்திரைப் பொழுதா னாலு மாயனை மறந்து[2] பாரில்
கோத்திரத் துடனே கூடிக் குலாவுதல் நினையோம் நாங்கள்
பாத்திர மறந்து வேத பரகெதி பெறவே வாறோம்
சூத்திரத் துடனே வந்து துணை செய்வாய் கரிய மாலே.

49. நாடி நடந்து தான்வாறோம் நாடும் பதியும் விட்டேகிக்
கூடி நடந்து வழியேதான்[3] குறித்துத் திசையைத் தானோக்கி
வாடி யிடைத்து மறுகாமல் மனமே தானா யுள்புகுந்து
தேடித் திகைத்து நில்லாமல் செவ்வே நடத்தும் திருமாலே.

50. சித்தன் போக்குஞ் சிவன்போக்குஞ் சீவன் போக்கும் போலாகி
மத்தன் போக்கும் மதன்போக்கும் வானத் திருந்த மலைப்போக்கும்
கத்தன் போக்குங் காரணங்கள் விண்டார் வண்டார் கொண்டாரோ
சத்தம் போக்கோ யினிப்போக்கோ சமைய மினிவர கோபாலா.

**47.358.** வாட்டமற - துன்பம் நீங்க வேண்டி. வாறவர்க்கு - வருகின்றவர்களுக்கு. **47.359.** தேட்டமுடன் - பேராவலுடன். **47.361.** களித்து - சந்தோஷம் கொண்டு. **47.363.** தோஸ்திரம் - வணக்கம். **48.1.** மாத்திரைப் பொழுது - கை நொடி, கண்ணிமைப்பு என்னும் மிகச் சிறிய கால அளவு. **48.2.** கோத்திரம் - வம்சம். குலாவுதல் - சேர்ந்து திரிதல். **48.4.** சூத்திரம் - உபாயம். **49.1.** பதி - வீடு; ஊர் எனினும் அமையும். விட்டேகி - விட்டுப் பிரிந்து. **49.3.** வாடியிடைந்து - நடை தளர்ச்சியால் உடல் வாடி, மனந்தளர்ந்து. மறுகாமல் - குழம்பாமல் **49.4.** செவ்வே - செம்மையாகவே. **50.1.** சித்தன் - சித்து வேலைகளைச் செய்பவன்; சித்தர் மரபினன். **50.2.** மத்தன் - உன்மத்தன்; பித்தன். அமலை - பார்வதி. **50.3.** கத்தன் - சிவன். விண்டார் - மேன்மையடைந்தார். **50.4.** சத்தம் போக்கோ - 'ஓசையை விடுத்து போகவா' என்ற பொருளில். வரகோபாலா - திருமாலே.

---

சு.சொல் : 1. வளித்துணையாய் 2. மரந்து 3. வளியேதான்

We come to get rid of our grief.
O Kaṇṇaṉ with care come and guard!
O Lord[1] be of guidance on our way!
Our refuge you are!" saying so,
Ecstatic he looked heaven wards.
To directions all he paid respects.
Sung songs of praise, and with courage walked.

**The Pāṇṭavars invoke Kaṇṇaṉ**

"Living on earth we'll not think of,
Forgetting Kaṇṇaṉ for a second.
Shedding body, a silly vessel,
We come to get eternal bliss.
Come with apt plans to help us O Kaṇṇaṉ!
Leaving our dwelling, and state in search of you we come.
Walk with us towards the direction aimed.
Enter us and save us from wavering.
Do guide us when our ways are lost.
The ways of *Cittaṉ*[2] and that of Civaṉ
Are similar to the life in us[3].
The ways of madmen and those of cupid,
In heaven, the ways of Amalai[4] are similar.
Civaṉ's ways who can decipher
Or predict? To get to you now

1. Tirumāl - Kaṇṇaṉ. 2. One capable of spiritual magic, belongs to *Cittars*. 3. That is, like life, it cannot be predicted. 4. Pārvati, the consort of lord Civaṉ.

51. சரணஞ் சரணங் கோபாலா சாமி சரணந் தருவாயே
கரணங் குறிகள்[1] புலன்குணங்கள் காமக் குரோத[2] மணுகாமல்
திரண மிதுவே செடமாகத் திரவி யிதுவே பெரிதாக
மரண மறியா துடலாக்கி வந்தாட்[3] கொள்ள வருவாயே.

52. வழியில்[4] பயங்கள் தடையிடைகள் மற்று முளதோர் விக்கினங்கள்
தெளியப் படுத்தி யடியார்கள் திகைத்து மலைத்து நில்லாமல்
பழிகள்[5] வினைக ளணுகாமல் பால்போ லுள்ளம் பூரணமாய்
வெளியி லறிவு[6] விளைவாக்கி வெளியே வருவாய் பெருமாளே.

53. கருத்தைப் பொருளாய்த் திறப்படுத்திக்[7] கன்மக்க சட்டை யறுத்தெறிந்து
திருத்தி யறிவை[8] நிலைநிறுத்தித் திருந்தாப் புலனை வேரறுத்துக்
குருத்தைக் கொழுந்தை முனைகூட்டிக் கொளுவோம்[9] பிறவகைப்[10] படுத்தி
இருத்தி நடத்தி வழிகூட்டி யிருத்தும் பெரிய பெருமாளே.

54. நானோர் வசன மல்லாது ரண்டு மிகவே சொல்லறியேன்
தானோர் தானே தானாக தனக்கே தானே நினவாகி
ஏனோ யெனைநீர் யாட்கொண்டால் எயகத்தி லெவர்க்குந்[11] தெரிந்தரிய
வானோ ரறிய வழிகாட்டி வருவாய் பெரிய பெருமாளே.

55. தேச மிழந்து[12] செகமிழந்து சேனைத் தளங்கள் தானிழந்து
வாச மிழந்து மனையிழந்து மைந்த ருடனே பதியிழந்து
பாச மொழிந்து பகையொழிந்துன் பாத மலரே பொருளாகி
நேச மிகுந்த நினவதிலே நின்றே யுகந்த பெருமாளே.

**51.1.** கரணம் - அபயம். **51.2.** கரணம் குறிகள் - ஐம்புலன்களினால் ஏற்படும் பாவ அடையாளங்கள். **51.3.** திரணம் இதுவே - தருணம் இதுவே. செடம் - உறுதி, திரவி - திரவியம். **52.1.** இடைகள் - இடையூறுகள். விக்கினங்கள் - துன்பங்கள். **52.3.** வினை - வஞ்சகம். **52.4.** அறிவு விளைவாக்கி - அறிவினை பெரியதாக்கி. **53.1.** கருத்து - மன எண்ணம். திறப்படுத்தி - வலிமைப் படுத்தி. கன்மக்க சட்டை - கர்மவினையினால் ஏற்பட்ட உடலாகிய சட்டை. **53.2.** திருந்தாப் புலன் - நல்வழிகளில் ஒழுகக் கூறியும் அவ்வழிகளில் செல்லாத ஐம்புலன். **53.3.** குருத்து, கொழுந்து - இவண் இறை சிந்தனைகளைக் குறித்தது. கொளுவோம் - அகப்படுத்திக் கொள்ள மாட்டோம். **54.1.** ரண்டு - 'இரண்டு' என்பதின் பேச்சு வழக்கு. மிகவே சொல்லறியேன் - மிகுதியாக வேறுபடுத்தி அறிய மாட்டேன். **54.3.** ஆட்கொண்டால் - ஆட்சி செய்து கொண்டால். எகம் - ஜெகம்; உலகம். **55.1.** சேனைத் தளங்கள் - படை கூட்டங்கள். **55.2.** வாசம் - இருப்பிடம். மனை - வீடு. பதி - அரசாட்சி. **55.4.** நேசம் மிகுந்த நினவு - பாசம் மிகுந்த நினைவு.

---

சு.சொல் : 1. குரிகள் 2. குறோத 3. வந்தாள்4. வளியில் 5. பளிகள் 6. லரிவு 7. திரப்படுத்திக் 8. யரிவைநிலை 9. கொழுவோ 10. பிரவகை 11. லெவற்குந் 12. மிளந்து

Wordless[1] should we become O Kaṇṇaṉ?
O Kaṇṇaṉ, our refuge, we surrender!
O Lord save us from delussions caused
By senses, mind and amorousness.
O Lord come to make us one with you,
Making our body deathless.
On our way lead us through
Obstacles and hindrances so that we don't falter,
Save us from slander, evil deeds.
Make our hearts as pure as white milk.
To further our knowledge come O Lord!
Make our wishes materialize.
Get rid of the effects of *karma*.
Stabilize our knowledge, correcting it.
Routing out senses that do not learn,
Thoughts of God let us always have.
Be with us and lead us on O Lord!
I know nothing of double talk.
We always remain what we are.
We are just memories of our own selves,
For all on earth to know the fact
That to me you have succour given.
Come guide us so that the celestials know too.
Losing together land, world, and army,
Losing our land, fame, house, and sons,
Losing love, enmity we know your Feet are
Only real, it is what my mind longs for.

1. Understanding one's insignificance renders those on the way of salvation speechless.

56. ஐவருந் துணிந்து வாறோ மவடமே கதிதா னென்று
தெய்வமே பொருளென் றெண்ணி தெரிசனை காணக் கண்கள்
மெய்வளர் திருமால் பாதம் வேண்டிவை குண்டஞ் சேர
கைதாரு மாலே போற்றி கயிலையங் கடவு ளானே.

57. ராகவா முகுந்தா போற்றி ராசகோ பாலா போற்றி
ஏகமாய் நின்றாய் போற்றி எம்பெரு மாளே போற்றி
லோகநா யகனே போற்றி நூல்மறை தெரிந்தாய் போற்றி
நாகமேல் துயின்றாய் போற்றி ராமனே போற்றி போற்றி.

58. மந்திரப் பொருளே போற்றி வழுத்தினான் துதித்துப் போற்றி
தந்திரத் துடனே யெந்தன் தம்பிமார் நாலு பேரும்
ஐந்தரி குழலி நாளு மைவரோ டாறு பேரும்
சந்திர வரைவை குண்டம் தன்னையே நோக்கி வாறோம்.

59. அரிகரி ராமா ராமா அச்சுதா நந்த கோபா
கரியமா லுந்தி பூத்த கார்முகில் மேக வண்ணா
பெரியவர் நந்த கோபா பிரமனைப் பெற்ற மாயா
உரியவர் பஞ்ச வர்க்கு யுகந்தவர் வாறோம் வாறோம்.

## பரிசித்து பாண்டவர்களைத் தொழுதல்

**நடை**

60. பஞ்சவர்கள் ஐவருமாய்ப் பாசத் துரோபதையும்
கஞ்சமலர் வைகுண்டங் காணவென்று தானடந்தார்

56.1. அவடம் - 'அவ்விடம்' என்பதின் பேச்சு வழக்கு. 56.2. தெரிசனை - தரிசனம். 56.3. மெய்வளர் - உண்மை வளர்கின்ற. 56.4. கைதாரும் - உதவி செய்யும். கயிலையங் கடவுளாமே - கயிலை மலையில் இருக்கின்ற சிவபெருமானே. 57.3. லோக நாயகன் - உலகத்திற்குத் தலைவன். நூல் மறை - வேத நூல்கள். 57.4. நாகம் - பாம்பு; இங்கு ஆதிசேடனைக் குறித்தது. 58.1. மந்திரப் பொருள் - வேதங்களுக்குள் பொருளாய் நின்றவன். வழுத்தினான் - எல்லாராலும் புகழப்பட்டவன். 58.2. தந்திரம் - மிகு மகிழ்ச்சி. 58.3. ஐந்தரி குழலினாள் - ஐந்து பாகமாகப் பிரிக்கப் பெற்ற கரிய குழலினை உடையவள்; பாஞ்சாலி. 58.4. சந்திர வரை - சந்திர லோகத்தின் எல்லை. 59.2. உந்தி பூத்த கார்முகில் மேக வண்ணா - வயற்று தொப்பூழில் தாமரையைப் பூக்கச் செய்த கரிய மழை முகில் மேகத்தின் வர்ணத்தவனே; திருமாலே. 59.3. பிரமனைப் பெற்ற மாயா - பிரம்ம தேவனைப் பெற்ற மாயவனே. 59.4. உரியவர் பஞ்சவர் - உரிமையுடைய பஞ்ச பாண்டவர்கள். 60.1. பாசத் துரோபதை - பாசம் மிகுந்த திரௌபதை. 60.2. கஞ்ச மலர் வைகுண்டம் - தாமரை மலர் போன்ற வைகுண்டம்.

With courage, we five come to you,
Thinking you are the ultimate goal.
We come to you knowing you are Permanence,
To see and fall at your feet where truth prospers.
Give a helping hand so we reach *Vaikuṇṭam*.
Help us O Lord, who in Kailai live.
I adore you Rākavaṉ, Mukuntaṉ
Rājakōpālaṉ[1], the Unique One.
The Lord of the world, expert in *Vēdas*
Rāmaṉ who, on snake reclines,[2] I adore.
O Meaning of all *Mantiras*[3] I do worship you.
I,with happiness, with brothers four, and the
One who wears her hair in plaits five,
Come to *Vaikuṇṭam* via *Cantira lōkam.*
Hari! Hari! Rām! Rām! O Accutaṉ!
O Nantakōpālaṉ! Kariyamāl[4] with
Body resembling very dark clouds!
O Nantakōpaṉ who Pirammanŝ[5] begot.
O Pāṇṭavar's favourite, here we come!

**Paricittu pays respects to thePāṇṭavars**

The Pāṇṭavars five and loving Tiroupatai
Walked to *Vaikuṇṭam* lotus resembling.

1. Different names of Kaṇṇaṉ. 2. Ati Cēṣaṉ, the snake bed of Viṣṇu. 3. The meaning of *Vēdas*.
4 All, names of Kaṇṇaṉ. 5. The god of creation, one of the Holy Trinity.

நடந்ததொரு பஞ்சவரை நல்லபரி சித்துவுந்தான்
துடந்து வழிவிட்டு[1] தொழுது நமஸ்கரித்து

### பிற மன்னர்கள் பாண்டவர்களைத் தொழுதல்

சேனை படைத்தலைவர் செகவேந்த ருள்ளோரும்
ஆனபரி சித்துமிக ஐவரையுந்தான் தொழுது

வந்தார்க ளத்திபுரம் மகுடமுடி மன்னரெல்லாம்
நொந்தா ரிடைந்தார் நோக்கி மனமுழன்றார்[2]

### அஸ்தினாபுரத்து மக்கள், மன்னர்களின் வருத்த மொழிகள்

காசினியோ ரெல்லாங் கலங்கி மனம்வேறாய்
வாசனைசேர் ஐவர் வனம்போனா ரென்றுசொல்லி

கோவென் றபையமிட்டுக் கொற்றவரைக் காணாமல்
பாவமே யென்று பரிதவித்து[3] நிற்பாரும்

ஐயோ சிவனேநான் ஐவரையுந் தானிழந்து[4]
மெய்யோ புவியில் விரும்பி யிருப்போமோ

மன்னர் மன்னரெல்லா மனைதனிலே தானிருந்து
தென்னவனைக் காணாமல் தேடி நினைப்பாரும்

ஆரிருந்து மாவதென்ன ஆனைகட்டி வாழ்ந்தாலென்ன
காராரு மைவரைப்போல் காசினியில் கிட்டாதே

போன வழிபார்த்துப் புலம்பித் தவிப்பாரும்
தானவரே யென்று தலைவிரித்து நிற்பாரும்

வஞ்சவினை செய்தோமோ மாபாவி யானோமோ
பஞ்சவரே யுங்களுக்குப் பாவிகளு மானோமோ

**60.3.** பஞ்சவர் - பாண்டவர். **60.4.** துடந்து - 'தொடர்ந்து' என்பதின் பேச்சு வழக்கு. **60.5.** செக வேந்தர் - உலகத்து அரசர்கள். **60.7.** அத்திபுரம் - அஸ்தினாபுரம். **60.8.** நொந்தார் - மனம் வருந்தினார். இடைந்தார் - நிலைகுலைந்தார். உழன்றார் - செய்வதறியாது திகைத்தார். **60.9.** காசினி - உலகம். **60.11.** அபயம் - ஓலம். **60.12.** பரிதவித்து - செய்வது அறியாது திகைத்து. **60.14.** மெய்யோ - உண்மையோ. **60.15.** மனை - அரண்மனை. **60.16.** தென்னவன் - பாண்டிய மன்னன்; இங்குத் தருமரைக் குறித்தது. **60.17.** ஆரிருந்தும் - யார் இருந்தாலும். ஆனை - யானை. **60.18.** காராரும் ஐவர் - கார் மேகம் போலும் குளிர்ச்சியான கொடையாளர் ஐவர்; கருமை நிறத்தார் எனினும் அமையும். **60.20.** தானவர் - வித்தியாதரர்; இவர்கள் தேவசாதியருள் ஒரு வகையினர்; இவண் தருமரைக் குறித்தது. **60.20.** தலைவிரித்து நிற்பார் - இது மக்களின் பரிதாப நிலையை உணர்த்தும் மெய்ப்பாட்டை உணர்த்தியது. **60.21.** வஞ்சவினை - வஞ்சகம்.

---

**சு.சொல் :** 1. துடந்துவளி 2. முளன்றார் 3. பரதவித்து 4. தானிளந்து

Good Paricittu followed the
Pāṇṭavars and his respects paid.

**Other kings pay respects**

Army commanders, kings of the world and
Paricittu, worshipped the five.
Returned to Astiṉāpuram all the kings:
Grieved, felt sorry and lost their hearts.

**The sad utterances of the subjects and the kings at Astiṉāpuram**

The people of the world with broken hearts:
"Alas! the famed five have to forest gone!"
Said thus and in agony cried out.
Seeing not the kings they in confusion stood.
"O Civaṉ losing the great five!
How can we think of life on earth?"
Many a king of kings stayed at home
Yearning to meet, but only their absence felt.
"What use if all others are present?
Owning elephants matters nothing.
Getting such kings, the cool tempered ones
Is very difficult on this earth!",saying so,
Some looked towards the direction and cried
"Alas! Tarmar!" some dishevelled, said
"Did we do evil, are we sinners?
O Pāṇṭavar, are we sinners to you?

உங்களையும் விட்டு யுலகி லிருப்போமோ
எங்களையும் விட்டு யெழுந்தருளிப் போவீரோ

ஊரிருக்கச் சேனை யுலகுகளுந் தானிருக்கச்
சீரிருக்க நீங்களிந்த தேச மிழந்தீரோ[1]

பாரிருக்கச் செல்வம் பரிகரிகள் தானிருக்கத்
தாரிருக்கு மார்பா தனஞ்செயனே யிங்கிலுள்ள
பேரிருக்க நீரும் பரதேசம் போவீரோ

மாட மிருக்க மனவிமக்கள் தானிருக்க
கூட மிருக்க குடியிழந்து போவீரோ

தாழ்வில்லா[2] செம்பொன் சகலசெம்பொன் தானிருக்க
வாழ்வில்லா[3] வாழ்விழந்து[4] வனவாசம் போவீரோ

தன்மரே வீமர் தனஞ்செயனே தம்பியரே
நன்மைசெய்து நீங்கள் நாடிழந்து போவீரோ

துடியிடையாள் சோர துரைமக்கள் தான்சோர
அடியெடுத்து வைத்து அவனிவிட்டுப் போவீரோ

குந்தியம்மாள் தானிருந்து குமாரர்களைத் தானினைந்து
அந்திசந்தி தேடி அழுதகுரல் கேட்கலையோ

வேதர் விதித்த விதியின் படியெனவே
மாதா வழுதகுரல் வைகுண்டங் கேட்கலையோ

சாந்த தமருந் தன்கிளையுஞ் சுற்றமுடன்[5]
காந்தாரி கூவென்று கதறினது[6] கேட்கலையோ

காலங் கலியுகத்தைக் கடந்து வழிகூடிக்
கோலங்கள் கொண்டு கூட்டோடே போவீரோ

**60.25.** சேனை - படை. **60.26.** சீர் - செல்வம். **60.27.** பரி - குதிரை. கரி - யானை. **60.28.** தாரிருக்கு மார்பர் - மலர்மாலையை அணிந்த மார்பினர். தனஞ்செயன் - அர்ச்சுனன். இங்கிலுள்ள - இங்கேயுள்ள. **60.29.** பேரிருக்க - மக்களாகிய நாங்கள் இருக்க. நீரும் - நீங்களும். பரதேசம் - வைகுண்டம். **60.31.** கூடம் - வீடு. குடியிழந்து - குடிமக்களை இழந்து. **60.36.** துடியிடையாள் சோர - துடி என்னும் இசைக்கருவி போல சிறுத்த இடையினை உடைய பாஞ்சாலியானவள் வருந்த. **60.37.** அவனி - உலகம். **60.38.** குமாரர் - மக்கள். நினைந்து - நினைத்து. **60.39.** அந்தி சந்தி தேடி - மாலைப்பொழுதில் வீதிமுனை தோறும் தேடி. **60.40.** வேதர் - பிரம்மன். **60.42.** சாந்த தமர் - சாந்த குணமுடைய சுற்றத்தார். கிளை - உறவினர். **60.43.** கூவென்று - அழுகை குரல் குறித்த ஒலி குறிப்புச் சொல். **60.44.** வழி கூடி - வழியினைக் கடந்து. **60.45.** கூட்டோடே - கூண்டோடே.

---

சு.சொல் : 1. மிளந்தீரோ 2. தாள்வில்லா 3. வாள்வில்லா 4. வாள்விளந்து 5. சுத்தமுடன் 6. கதரினது

Without you how can we live on earth?
Leaving us how could you go away?
When there are town, army, world and
Greatness, for you why did you leave this land?
World, wealth, horses, elephants were there.
O Taṉañceyaṉ, wearing garlands, when we,
So many are here why should you go?
When huge houses, wife, children are there,
When your house is here why should you go?
When gold of quality is there,
Losing such a life, why to forest?
O Tarmar, Vīmaṉ, Taṉañceyaṉ,!
O Brothers you did good, then how can you lose the land?
O shapely waisted one, feeling sad,
All lordly people feeling sorry,
Step by step have you left this world?
Kunti, remembering her sons cried-
Haven't you heard it at street corners?
It may be the dictate of Lord Pirammaṉ but
Your mother's sobbings haven't reached you?
With nice kin and all those around,
When Kāntāri cried aloud for you,
Didn't that crying in your ears fall?
After the *kali yukam* passes, will you
Take all of us in our pleasant forms?

கூடுவிட்டுப் போன குருகுலத்து மன்னரென்று
நாடுள்ள மட்டுமிது நடக்குமென்று போனீரோ

மெய்கொண்ட ஐவரென்று மேதினியோர் கொண்டாட
வைகுண்டஞ் சே(ரவே) துணிந்து போனீரோ

ஆனா லினிமேல் ஐவர்செயல் உண்டெனவே
மானா பிமானமுடன் வாழ்வோர்[1] புவிதனிலே

என்றுமன்னர் கூடி யிருந்தமன்னர் மந்திரிமார்
சென்றுபரி சித்துமனந் தேற்றி யுபசரித்துப்

## பிற நாட்டு மன்னர்கள் பரிசித்துவைத் தேற்றுதல்

பூலோகந் தாங்கும் புரந்தரனே யிப்போது
ஆலோசனைகள் பண்ணி அழவேண்டா[2] மென்றமர்த்தி[3]

வழிவசமாய் நாளும் மனதை மிகத்தேற்றிக்
களிகூர்ந் திருமெனவே காவலருங் காத்திருந்தார்

## பரிசித்துவின் வருத்தவுரைகள்

காத்திருந்த மன்னரையும் காவலர்கள் தங்களையும்
பாத்திருந்து சொல்வான் பரிசித்து வேந்தனுந்தான்

குந்தியம்மாள் பாட்டியவள் கூவென் றழுதசத்தம்
புந்தி கலங்கி பொறிகலங்கிப்[4] போகுதய்யோ

## பரிசித்துவின் வேண்டுகோள்

அந்த மனக்கவலை யாவரும்போய் ஆற்றுதற்கு
எந்தனுட னீங்கள் எழுந்தருளு மென்றுரைத்தார்

அந்தமொழி[5] கேட்டு அரசர்மன்னர் தான்கூடி
வந்துகுந்தா தேவி மனச்சலிப்புத் தான்தீர்த்துப்
பூந்தார்கள் மாளிகையில் பூவைசலிப் பாற்றவென்று

60.48. மெய்கொண்ட - உண்மையைக் கொண்ட. மேதினியோர் - உலகோர். கொண்டாட - புகழ்ந்து கூற. 60.54. புரந்தரன் - அரசன். 60.55. அமர்த்தி - ஆறுதல் செய்து. 60.56. வழி வசமாய் - முறைமையோடு. 60.57. களிகூர்ந்திரும் - மிகவும் மகிழ்ச்சியாய் இருந்திடுங்கள். காவலர் - அரசர். 60.59. பாத்திருந்து - பார்த்திருந்து. 60.61. புந்தி - புத்தி; அறிவு பொறி - ஐம்பொறிகள். 60.63. எந்தனுடன் - என்னுடன். 60.65. மனச் சலிப்பு - மன வருத்தம். 60.66. பூவை - பூ போன்ற பெண்ணை; குந்தியை. ஆற்ற - தீர்க்க.

சு.சொல் : 1. வாள்வோர் 2. அளவேண்டா 3. மென்றமத்தி 4. பொரிகலங்கி 5. அந்தமொளி

O king of *Guru* clan!
Why did you leave your own residence?
You hoped it would last till the state lasted.
For world to say the five are truthful,
To *Vaikuṇṭam* with courage you went?
From now on referring to the act of the five
The people will live with dignity."
Thus said the assembled kings, and ministers.
They thus consoled Paricittu, the king.

**Kings from other countries console Paricittu**

"O king who now supports the world,
Don't cry thinking of things gone" said they.
"Properly consoling your heart
Be happy " said kings and waited.

**The sad utterances of Paricittu**

Looking at kings, monarchs all
King Paricittu spoke to them thus,
"The shrill cry of grandma Kunti
Makes me lose my head O kings!"

**The request of Paricittu**

"To console the grieving grandmother,
Go with me to my house, "he said.
Listening to his words all the assembled kings,
To get Kunti out of her grief deep,
Entered her mansion to console her
And advised her not to grieve.

வேண்டா மெனத்தீர்த்து வீற்றிருந்தா[1] ரம்மானை
காண்டா வனமெரித்தோன் கண்ணுதலோன் தன்புதல்வன்

## பரிசித்துவின் ஆட்சி

பார்வேந்தர் போற்ற பரிசித்து வேந்தனுந்தான்
தார்வேந்தர் கொண்டாடத் தாரணியை யாண்டிருந்தோர்

தேசக் குறிப்பு தெரிந்து யெடுத்தெழுதி
வாசல் குடிதழைக்க மனுநீதி தப்பாமல்

அரசருட சீமை யடங்க லெடுத்தெழுதி
விரசுப் படிக்கு மிகுதியாய்த் தானிகுத்தி

மன்ன ரைமச்சர்களும்[2] மந்திரிமார் தங்களுக்கும்
அன்னசொர்ன மாடை ஆபரணந்தா னீய்ந்து

ஆனைபரி யுள்ள அடங்கலுக்கு[3] மிப்படியாய்ச்
சேனை தளந்தனக்குஞ் செல்லும்படி யெழுதி

வாசல் வழிகள்[4] மனமாத்த முள்ளதுக்கும்
ரோசிப்படி சிலவு ரொக்கமாய்த் தானடத்தி

வேதியர்க ளந்தணர்கள் வீரசைவ பூசுரர்க்கும்[5]
ஓதிய தபோதனர்க்கும் உள்ளபடிதான் கொடுத்து

நீதிவழு காமல் நெறிமுறமை தப்பாமல்
சாதி முறைகள் தலைகுலைந்து போகாமல்

**60.68.** காண்டாவனம் எரித்தோன் - அக்கினி தேவதையின் வேண்டுகோளுக்கு இணங்க காண்டாவனத்தை எரித்தவன்; அர்ச்சுனன். கண்ணுதலோன் - அபிமன்யுவைக் குறித்தது. **60.69.** பார் வேந்தர் - உலகத்து அரசர்கள். **60.71.** தேசக்குறிப்பு - நாட்டின் அரசாட்சி நெறிமுறை குறிப்புகள். **60.72.** வாசல் குடி தழைக்க - குடிமக்களின் வீடுகளிலெல்லாம் செல்வம் பெருக. **60.73.** சீமை - நாடு. அடங்கல் - குத்தகை. **60.74.** விரசு - நெருங்கி. தானிகுத்தி - அரண்மனை பண்டகசாலையை நிரப்பி. **60.76.** அன்னசொர்னமாடை - உணவு, பொன் மற்றும் ஆடை. ஈய்ந்து - கொடுத்து. **60.77.** ஆனை - யானை. பரி -குதிரை. **60.78.** சேனை தளம் - படைக்கூட்டம். செல்லும்படி - உத்தரவானது செல்லும் படியாக. **60.79.** மனமாத்தம் உள்ளதுக்கும் - மனமாற்றம் உள்ளவற்றுக்கும். **60.80.** ரோசிப்படி - கணக்கு வழக்குகளின் படி. சிலவு 'செலவு' என்பதின் பேச்சுவழக்குச் சொல். **60.81.** வீரசைவ பூசுரர் - வீரசைவ சமயத்தைச் சார்ந்த பூசாரியர். **60.82.** ஓதிய தபோதனர் - வேதம் ஓதுகின்ற தவத்தினர். உள்ளபடிதான் கொடுத்து - செல்வத்தைப் பண்டாரகத்திருந்து நிறைவாகக் கொடுத்து. **60.83.** நீதி வழுகாமல் - நீதி நெறிமுறைகள் வழுவாமல். நெறிமுறமை - நெறிமுறைமை **60.84.** தலைகுலைந்து - முறைமாறி.

---

சு.சொல் : 1. வீத்திருந்தா 2. சர்களு 3. யடங்கலுக்கு 4. வளிகள் 5. பூசுரற்கும்

## The rule of Paricittu

Son of one who burned Kāṇṭakavaṉum,
Son of Apimaṉyu he was.
All the kings praised Paricittu.
He was ruling the world so well.
He got rules, laws, written down.
There was an increase of wealth in the subjects' houses.
Not violating the *edicts of Maṉu*,
Measuring and registering
The land of the king in detail he did.
Filling the granary to the brim,
To kings ministers and nobles
Giftd food, gold, and beautiful clothes.
He took census of horses, and elephants.
He made this applicable to the army.
He built gates and laid many roads.
He kept proper accounts for an
Austere expenditure of the state.
The *Vētiyars*, *Brahmans*, *Vīracaivar*[1]
Priests, *Veda* chanters were provided with, amply
His was a rule of law and justice.
He kept intact the caste system.

1. A sect of saivites.

அகுதிபர தேசிகளும் அபயமென்று[1] சொல்லாமல்
பகுதியு மாறிலொன்று[2] படியேடு தப்பாமல்

தெய்வத் தலங்கள் சிறப்புடைய[3] பூசைகளும்
ஐவ ரிருந்ததிலும் அதிகமாய்க் கொண்டாடிக்

கொலுவி லிருந்தார் குவலையங்கள் போற்றிசெய்ய
வலுவுடைய வீமன் மகனுடைய சிங்காரம்

## மக்கள் பரிசித்துவைப் புகழ்ந்துரைத்தல்

ம்ன்மதனா மென்று வாழ்த்துஞ்[4] சிலபேர்கள்
தன்ம னிவனென்று சாற்றுவர்தான் சிலபேர்கள்

வில்லியுட பேரன் விசையன்கா ணென்பாரும்
சொல்லில் வீமன் துரந்தரீக ரென்பாரும்

நல்ல சகாதேவன் ராசன்கா ணென்பாரும்
வல்ல புகழ்நகுலன்[5] மன்னன்கா ணென்பாரும்

ஐவர் குலந்தனக்கு அரசுநிலை யென்பாரும்
சைவர் சமயந் தழைக்கவந்தா[6] னென்பாரும்

குருகுலத்தில் வந்த குலக்கொழுந் தென்பாரும்
பெருகுந் தமிழ்வளரும்[7] பிரபலன்கா ணென்பாரும்

கனக நிதிகொடுக்குங் கர்ணன்கா ணென்பாரும்
தனஞ்செயனார் பேரனுக்குத் தனதுபதி யென்பாரும்

**60.85.** அகுதி - 'அகதி' என்பதின் பேச்சுவழக்கு. பரதேசி - பண்டாரம். அபயம் - அடைக்கலம். **60.86.** பகுதியும் ஆறிலொன்று - வருமானத்தில் ஆறிலொரு பகுதி வரிப்பணமாகவும். படியேடு தப்பாமல் - படிக்கின்ற ஏட்டிலுள்ள நியாயங்கள் தவறாமல். **60.88.** ஐவர் இருந்ததிலும் - பாண்டவர்கள் ஐவர்கள் இருந்த காலத்தை விடவும். **60.89.** கொலுவிருந்தார் - அரியணையில் இருந்தார். குவலையம் - உலகம். **60.90.** வலு - வலிமை. அவீமன் மகன் - அபிமன்யுவின் புதல்வன். சிங்காரம் - அழகு. **60.92.** தன்மன் - தர்மர். **60.93.** வில்லியுட பேரன் - வில்லாட்சியில் வல்ல அர்ச்சுனனின் பேரன்; பரிசித்து. விசையன் - விஜயனாம் அர்ச்சுனன்; பரிசித்துவைக் குறித்தது. **60.94.** துரந்தரீகர் - அரசர். **60.95.** ராசன் - அரசன். **60.96.** வல்ல புகழ் - மிகுந்த புகழ். **60.97.** ஐவர் குலந்தனக்கு அரசு நிலை யென்பாரும் - பாண்டவர்கள் ஆட்சி செய்த அரசுக்கு இணையான ஆட்சி எனக் கூறுகின்றவர்களும். **60.99.** குருகுலம் - பாரதர் குலம். குலக்கொழுந்து - குலத்தினைச் செழிக்க வைக்க வந்த கொழுந்து போன்றவன். **60.100.** தமிழ் வளரும் - இங்குத் 'தமிழை வளர்க்கும்' என்ற பொருளில். பிரபலன் - பிரபலமானவன். **60.101.** கனகநிதி கொடுக்கும் - பொன்னினைத் தானம் கொடுக்கும். கர்ணன் - கொடை கொடுப்பதில் சிறந்தவன். **60.102.** தனஞ்செயன் - அர்ச்சுனன். பதி - இருப்பிடம்.

சு. சொல் : 1. அபையமென்று 2. மாரிலொன்று 3. சிரப்புடைய 4. வாள்த்துஞ் 5. புகள்நகுலன் 6. தளைக்கவந்தா 7. தமிள்வளரும்

Refugees, mendicants were never in need.
Taxes were one sixth of the income.
Following to letter the edicts,
He caused *pujas* in divenely temples.
He did more than what the five ever did.
The handsome son of Apimaṉyu[1]
Stayed in state for the world to praise.

**People praise Paricittu**

Some praised that Maṉmataṉ[2] he was.
Some said he was Tarmar himself.
Some said he was Vijayaṉ's[3] fitting grand son
In keeping words he was king Vīmaṉ, they said.
Some said he was like good Cakātēvaṉ.
Some said he was like kingly Nakulaṉ.
Some said his rule equalled that of the five.
Some said he came so that the world
Could prosper and some were saying
He glorified his *Guru* clan[4].
Some said that he made Tamil grow.
He gifted gold like Karṇaṉ[5] some said.
It was the fitting place for the
Grandson of Taṉañceyaṉ said some.

1. Son of Apimaṉyu, Paricittu. 2. Cupid. 3. Arjuṉaṉ. 4. The clan of Partan. 5. The eldest son of Kunti, who abandoned him. As a foundling was in the service of the Kauravars.

இராசாதி ராசனிவன் ராசசிங்க னென்பாரும்
பேரரச னிவனென்று பூரித்து நிற்பாரும்
சீரான்[1] சொல்வகைக்குச்[2] சீமான்கா ணென்பாரும்

மீதான செல்வம் விளங்கவந்தா னென்பாரும்
ஆதார மாய்ப்புவியை ஆளவந்தா னென்பாரும்

வங்கிஷக் கட்டு வரம்பழிந்து போகாமல்
அங்கிஷங் காக்கவந்த[3] ஆண்பிள்ளைகா ணென்பாரும்

எல்லோரும் வாழ்த்தியினி[4] யெண்ணமில்லை யென்றுசொல்லி
பல்லோரும் போற்றிமிக பார்த்திபன்போல்[5] வீத்திருந்தான்

## பரிசித்துவின் ஆட்சியில் நாட்டுச் சிறப்பு

தேசமெங்குங் கொண்டாடச் சிங்கா தனத்திருந்து
இராசனென்னும் லோகம் நடத்தும்படி கேளீர்

நந்தவனத் தோப்பும் நாலுதிக்கும் வாசமதாய்
சந்தனச் சோலைகளும் தானெங்குஞ் சூழ்ந்துநிற்க[6]

செண்பகச் சோலைகளும் செங்கழுநீர் பூத்துநிற்கப்
பண்பான தென்கிளநீர் பலதிக்குஞ் சூழ்ந்துநிற்க

பூமரங்க ளெங்கும் பூத்துச் சொரிந்துநிற்க
மாமரங்க ளெங்கும் வளமாய்ப் பழஞ்சொரிய[7]

கோங்கு கமுகுபுன்னை குவிந்தெங்குஞ் சூழ்ந்துநிற்க
ஓங்கு பலாமரங்கள் உலககெங்குங் கொண்டாடக்

கன்னல் கதலி கதிர்குலைகள் நின்றிலங்கச்
சென்னல் வயலுஞ் செந்தாமரை மலரும்

**60.103.** இராசாதிராசன் - அரசர்களுக்கு அரசன். ராசசிங்கன் - அரசர்களுள் சிங்கம் போன்றவன். **60.104.** பூரித்து - மகிழ்ந்து. **60.105.** சீரான - சிறப்பான. சீமான் - தலைவன். **60.106.** மீதான செல்வம் - அதிகமான செல்வம். விளங்க - செழிக்கச் செய்ய. ஆதாரம் - அடிப்படை. **60.108.** வங்கிஷக் கட்டு - வம்சத்தின் கட்டுப்பாடு. வரம்பழிந்து - ஒழுக்கம் கெட்டு. **60.109.** அங்கிஷம் - வம்சம். **60.110.** எண்ணமில்லை - சிந்தனை செய்து புகழ்வதற்கு ஒன்றுமில்லை. **60.111.** பார்த்திபன் - அரசன்; பரிசித்துவைக் குறித்தது. **60.113.** லோகம் நடத்தும் படி - உலக அரசாட்சியை நடத்தும் முறை. கேளீர் - கேட்பீர். **60.114.** நாலு - நான்கு. வாசம் - நறுமணம். **60.116.** செண்பகம் - ஒரு வகை மரம். **60.117.** தென்கிளநீர் - இளநீர் காய்க்கும் தென்னைகள். திக்கு - திசை. **60.120.** கோங்கு, கமுகு, புன்னை - சில வகை மரங்களின் பெயர். **60.122.** கன்னல் - கரும்பு. கதலி - வாழை. கதிர்குலைகள் - ஒளி விடும் பழக்குலைகள். இலங்க - சிறக்க. **60.123.** சென்னல் வயல் - செந்நெல் வயல்

சு.சொல் : 1. சீறானசொல் 2. வகைகு 3. கார்க்கவந்த 4. வாள்த்தியினி 5. பாத்திபன் 6. சூள்ந்துநிற்க 7. பளஞ்சொரிய

King of kings, he was lion like said some.
Some felt ecstatic that he was a great king,
Who was known for his proper speech.
Some said he came to cause an increase in wealth.
Basically he came to rule right some said.
From ruin protecting the clan
Alone he came to save." some said.
To the praise of all, the king
Paricittu was ruling the land.

**The greatness of Paricittu's rule**

The country celebrating, he sat on the throne.
In the country where he ruled
Fragrant gardens and groves were aplenty.
Sandal tree gardens were all around.
There were blossoms of *cenpakam*[1] flowers.
Groves of coconut trees were all around.
Trees showering flowers were everywhere.
Mangoes ripe were falling from huge trees.
The place was thick with *koṅku, kamuku,*
*Puṉṉai,*[2] and tall jack trees were everywhere.
Sugar canes, plaintains were aplenty there.
Paddy fields rich and lotus flowers abounded.

1. King. 2. Kinds of tree.

செல்வமுடன் நேசச் சிறப்பு[1] மறசிறப்பும்
வில்லைவனஞ் சூழ[2] வீத்திருக்கும் லெச்சிமியும்

பூங்கா வனமும் புதியமலர்ச் சோலைகளும்
பாங்கான வாவிகளும் பதியும் பதிசிறப்பும்

கோபாலன் தன்பேரன் கொற்றவன்போல் வீற்றிருந்து
பூபால்னா யிருந்து பூலோக மாளுகையில்

## பரிசித்து பவனி வருதல்

மந்திரிமார் வந்து வாசலிலே காத்துநிற்க[3]
தந்திரிமா ரெல்லோருஞ் சரணமென்று போற்றிநிற்க

மன்ன னிருக்க மண்டலத்தோர் காத்துநிற்க
தென்னவர்கள் வந்து தெண்டனிட்டுக் காத்திருக்க

அரசரோடு காவலர்கள் யானை பரிரதமும்
முரசொலிக ளார்ப்ப[4] முடிமன்னர் சூழ்ந்துநிற்க

கிடிபிடிக ளார்ப்ப கெடிமன்னர் சூழ்ந்துநிற்க
துடியதிரப் போர்மன்னர் துரைமக்கள் காத்திருக்க

காளமொடு பேரிகைகள் கனத்தப்புத் தான்முழுங்க[5]
தாளமொடு மல்லாரி சங்குத் தொனிமுழுங்க

கைத்தாள மேளம் கடல்போல் மிகமுழுங்க
மத்தளம்[6] பம்பை மணிகள் மிகமுழுங்க

60.124. நேசச் சிறப்பு - அன்பு சிறப்பு. அறசிறப்பு - அறச்செயல்களால் உண்டாகும் சிறப்பு. 60.125. வில்லைவனம் - வில்வமரங்கள் சூழ்ந்த காடு. வீத்திருக்கும் - வீற்றிருக்கும். லெச்சுமி - இலட்சுமி. 60.127. பாங்கான வாவி - அழகான குளம். பதி - இருப்பிடம். 60.128. கோபாலன் பேரன் - கண்ணனுடைய பேரன்; பரிசித்து. கொற்றவன் - அரசன். 60.129. பூபாலன் - பூமியை ஆள்பவன்; பரிசித்து. 60.131. தந்திரிமார் - படைத்தலைவர்கள். 60.132. மண்டலத்தோர் - நாட்டை ஆள்கின்றவர். 60.133. தென்னவர்கள் - தென்னாட்டினர். 60.133. தெண்டன் - அடிபணிந்து. 60.134. காவலர் - வீரர். பரி - குதிரைப் படை. ரதம் - தேர்ப்படை. 60.135. முரசொலிகள் ஆர்ப்ப - முரசிலிருந்து கிளம்பும் ஒலிகள் ஆரவாரம் செய்ய. 60.136. கிடிபிடி - 'கிடுபிடி' என்னும் ஒருவகை இசைக்கருவி. 60.136. கெடிமன்னர் - கீர்த்தி வாய்ந்த மன்னர். 60.137. துடி - ஒரு வகை பறை. துரை மக்கள் - மேன் மக்கள். 60.138. காளம் - 'எக்காளம்' என்னும் ஒரு வகை ஊதுகுழல் இசைக்கருவி. பேரிகை, தப்பு - சில வகை பறைகளின் பெயர்கள். 60.139. தாளம், மல்லாரி, சங்கு - சில வகை இசைக்கருவிகளின் பெயர்கள். தொனி - ஓசை. 60.140. கைத்தாளம் மேளம் - கையினால் தாளமிடும் ஒரு வகை இசைக்கருவி. 60.141. மத்தளம், பம்பை, மணி - சில வகை இசைக்கருவிகள்.

சு.சொல் : 1. சிறப்பு 2. சூள 3. கார்த்துநிற்க 4. ளாற்ப 5. தான்முளங்க 6. மத்தாளம்

Wealth, love, and greatness and goodness,
Lakṣmi[1] with *vilvam*[2] were everywhere.
Many gardens full of flowers fresh,
Beautiful ponds, residences great were there.
Thus grandson of Kaṇṇaṉ
Was ruling the land as a great king.

**Paricittu goes on a procession**

At door steps ministers stood waiting,
Army commanders paid obeisance.
Governors from many regions waited.
The Southerners[3] with reverence waited.
Kings, guards, elephants chariots and
Crowned kings waited as drums were beating.
*Kiṭipiṭi*[4] sounded and famed kings, and
Nobles to beating of *tuṭi*[5] waited.
*Ekkāḷam, pērikai, tappu*[6]
Sounded with *mallāri*, conch, *and tāḷam.*[7]
*Mēḷam*[8] sounded like the roaring sea.
*Mattaḷam, pampai,*[9] and bells were sounding.

1. Kinds of trees. 2. Goddess of wealth 3. Kings from South India. 4. A musical instrument. 5 - 9. Musical instruments.

சேகண்டி யிடக்கையொடு தித்தியுந் தான்முழுங்க
அகமண்டி லம்போல் அரசன்கொலு விருக்க

ஆலத்தி[1] பெண்கள் அலங்கார மாகநிற்க
சாலத்திரு விளக்குச் சமுகத்தே[2] சூழ்ந்துநிற்க

மெல்லிநல்லாள் கையால் வீசறி[3] சுழற்றிநிற்க[4]
வல்லி மருங்கிடையார் மதுரகவி பாடிநிற்க

மின்னனைய பெண்கொடியார் வெண்கவரி வீசிநிற்க
பொன்னணிசேர் மாதரெல்லாம் பூமாரி தான்சொரிய

பாவாடை வீசப் பாவாணர் கொண்டாட
நாவாணர் கீதங்கள் ரர்கமுறை[5] பாடிநிற்க

கொற்றக்குடை நிழற்றக் குப்பக் குழலுடனே
மத்தகெச மீதேறி மன்னன் பவனிவர

ஆலவட்டஞ் சூழ்ந்துவர அதிவீரர் முன்னடக்க
பீலவட்டஞ் சூழநல்ல பேரணிகள் முன்னடக்க

சந்திர காவியிடால் தானெருங்கி சூழ்ந்துவர
இந்திர விமானமது யிணையாய் நெருங்கிவர

சாந்து சபாதுடனே சாம்பிறாணி தான்வீச
ஏந்துந் தனமாதர் யிருபுறமு[6] மாடிவர

**60.142.** சேகண்டி - ஒரு வகை இசைக்கருவி. தித்தி - ஒரு வகை ஊதுகுழல். **60.143.** அகமண்டிலம் - அகன்ற உலகம். கொலு - அரியணை. **60.144.** ஆலத்தி - கண்ணேறு கழிக்கும் ஒருவகை சடங்கு. **60.145.** சால - மிகுதியாக. **60.145.** சமுகம் - அரசன்; பரிசித்துவை குறித்து. **60.146.** மெல்லிநல்லாள் - மெல்லிய இயல்புடைய பெண்கள்; பணிப்பெண்கள். **60.147.** வல்லி மருங்கிடையார் - கொடி போலும் சிறுத்த இடை உடைய மகளிர். மதுரகவி - இனிய பாடல்கள். **60.148.** வெண்கவரி - வெண்சாமரம். **60.149.** பொன்னணி சேர் மாதர் - பொன்னாலாகிய ஆபரணங்களை அணிந்த பெண்கள். பூமாரி தான் சொரிய - பூவினை மழை போல பொழிய. **60.150.** பாவாடை - அரசன் நடக்கும் பாதையில் சீலை விரிக்கும் சடங்கு; பாடலின் இனிய மணம் எனினும் அமையும். பாவாணர் - புலவோர். **60.151.** நாவாணர் - நாவினால் பாடுவதில் வல்லவர். **60.152.** கொற்றக்குடை நிழற்ற - அரசனது வெண்கொற்றக் குடை நிழல் செய்ய. குப்பக்குழல் - மிகுதியான ஊதுகுழல். **60.153.** மத்த கெசம் - மதம் பொருந்திய யானை. **60.154.** ஆலவட்டம் - விசறி. அதிவீரர் - முதன்மையான வீரர். **60.155.** பீலவட்டம் - பீலிவட்டம்; மயிற்தோகையிலான விசறி. **60.156.** சந்திரகாவியிடால் - சிவந்த அரக்கு நிறமுடைய ஆடைகள்; இது மங்கலத்தையும், மேன்மையையும் குறித்தது. **60.158.** சாந்து - ஒரு வகை நாசிமணப் பொருள். சபாது - 'சவ்வாது' என்பதின் பேச்சு வழக்கு. **60.159.** தனம் - மார்பு.

---

சு.சொல் : 1. ஆலத்தி 2. சமுகத்லே 3. வீசரி 4. சுளற்றி நிற்க 5. ராகமுறை 6. யிருபுரமும்

With *cēkaṇṭi,*[1] *titi*[2] made music.
Thus the great king sat in state.
Women carrying *āratti*[3] stood in style.
Tender women were fanning him.
Slender waisted belles sang sweet songs.
Pretty damsels fanned with *kaviri*[4].
Bejewelled women were showering flowers.
To walk, carpets were spread, and bards sang praises.
Able singers rendered sweet songs.
Parasol providing shade, pipes,
On elephants back were playing sweet.
The king in style on procession came.
*Alavaṭṭams*[5] were abounding.
Valiant soldiers walked in front.
Peacock feather fans were carried along.
Columns of soldiers walked in front.
Women wearing *cantirakāvi*[6]
Walked in groups and the planes of Intiraṉ
In closeness to the procession[7] flew,
Perfumes, civet, and frankincense there were.
Full breasted belles on both sides danced.

1 & 2. Musical instruments. 3. A rite to get rid of the evil eye. 4. A hair fan formed of the tail of the yac used for fanning idols at temple festivals. 5. A large circular fan (made of cloth, fragrant roots or palm leaf) taken in front of the procession of idols of deities, kings and great persons. 6. A kind of red cloth. 7. The procession was so grand that even Intiraṉ's plane participated.

கட்டியங்கள் கூற கனவிருது நின்றார்ப்ப[1]
கெட்டியிவ னெனவே கெம்பீர மாகவெகு

பட்டணமுஞ் சுத்தி பவனி வலமாகக்
கட்டழக[2] னென்றுமிகக் காசினியோர் கொண்டாட

பார்த்து மனமகிழ்ந்து[3] பரிசித்து மன்னனையும்
மாற்றலர்கள் போற்றிசெய்ய மன்னன் பவனிவந்தான்

## பரிசித்து அரியணையில் இருத்தல்

வந்து கொலுவில் மகாராசன் போலிருந்தான்
சந்துபயில் சாஸ்திரங்கள் தான்கேட்க வேணுமென்று

## சாஸ்திரம் கேட்கப் பரிசித்து விழைதல்

வேதியரைத்தா னழைக்க[4] மிக்கபரி சித்துவந்தான்
ஓதினான் தூதுவன்போய் ஒருநொடியில் வாவெனவே

## தூதுவன் வேதியரை அழைத்தல்

அந்தணர்கள் தன்தெருவி லாராய்ந்து[5] தூதுவனும்
கொந்தலரும் வேதியனார் குடிலி லிருந்தவனைக்

கண்டு நமஸ்கரித்துக் காவலரே வேதியரே
ஆண்ட பெருமா னழைத்துவரச் சொன்னார்காண்

## வேதநூலுடன் வேதியர் அஸ்தினாபுரம் வருதல்

என்றுசொல்ல வேதியரும் யேதென் றெழுந்திருந்து
நின்று மடவாரை நிமிசத்திலே யழைத்து

புஸ்தகத்தைத் தானெடுத்துப் பூவையரே நீகொடுவா
வித்தகமாய்ப் பெண்கொடியாள் விரைய எடுத்துவந்தாள்

60.160. கட்டியங்கள் - புகழ் உரைகள். கனவிருது - மிகுதியான பட்டப்பெயர்கள். 60.161. கெட்டி - கெட்டிக்காரன்; திறமைசாலி. 60.165. மாற்றலர்கள் - பகைவர்கள். 60.167. சந்துபயில் சாஸ்திரங்கள் - சமயங்களில் ஒழுகும் மக்கள் படிக்கின்ற வேத சாஸ்திரங்கள். வேணும் - வேண்டும். 60.168. வேதியர் - அந்தணர். 60.169. ஓதினான் - கூறினான். 60.170. தெருவில் ஆராய்ந்து - தான் தேடிச் சென்ற அந்தணரை அத்தெருவில் ஆராய்ந்து. 60.171. கொந்தலரும் - பூங்கொத்துகள் மலரும். குடில் - குடிசை. 60.173. ஆண்ட பெருமான் - நம்மை ஆளுகின்ற பெருமான்; பரிசித்து. 60.175. மடவார் - பெண்கள். 60.176. புஸ்தகம் - வேத புஸ்தகம். 60.177. வித்தகமாய் - நம்மையுண்டாகும் படியாக. விரைய - விரைவாக.

சு.சொல் : 1. நின்றார்ப்ப 2. கட்டளகனென்று 3. மகிழ்ந்து 4. னளைக்க 5. லாறாய்ந்து 6. மாமறைபோரைத்

Proclaimed were the titles and praises of the king.
As they said he was talented,
Around the town he grandly went.
People praised him as the most handsome.
Looking at him pleased every one.
To the praise of even antagonists,
Paricittu in procession came.

**Paricittu is seated on the throne**

He was seated on throne like a great king.
He wanted to listen to the holy scriptures.
Paricittu bade a messenger to bring
The *Vētiyar* in a jiffy.
The messenger searched in the Brahmans' street.
He found one in a hut of flowers.
He paid respects and said, O *Vētiyar,*
Our lord, the king sent me to bring you."
As he said so the *Vētiyar* got up.
He called in a hurry the woman within .
He asked her to bring the relevant books.
She soon brought the books he wanted.
The exponent of *vēdas* took the books and
Reached the beautiful Hastinapuram fort.

வந்ததொரு புஸ்தகத்தை மாமறையோர்[1] தான்வாங்கி
அந்தமுள்ள கோட்டை அத்திபுரந் தன்னில்வந்தார்

## வேதியர் பரிசித்துவிடம் வினாவுதல்

பரிசித்து வேந்தனையும் பாங்குடனே வந்துகண்டார்
தெரிசித்து யட்சதையுஞ் சிவம்பண்ணித் தானெடுத்து

அரசர்க் கரசே அரசர் பெருமாளே
முரசக் கொடி யுடைய முடிபொருத்த மன்னவனே

என்னைவரச் சொன்ன இயல்வேதெனக் கேட்டான்
முன்னைப் பயனு முடிந்த இரகசியமும்

## பரிசித்துவின் பதிலுரை

நாளும்பல வேறா ராசி[2] பலகணமும்
கோளும்[3] பகையும் குவலையமுங் காசினியில்

ஆளும்[4] புவியும் அரசியற்கை செங்கோலும்
வாழும் பதியும் மனப்பொருத்த முள்ளதெல்லாம்

பார்த்துரையு மென்று பரிசித்து இராசனுந்தான்
வார்த்தை சொலக்கேட்டு மாமறையோ[5] னூலாய்ந்து

## வேதியர் கிரகநிலைகளை ஆராய்தல்

ஆராய்ந்து பார்த்து அளவிட்டுச் சாஸ்திரத்தை
நேராய் மனைகீறி நிட்செயமாய் சாஸ்திரத்தை

**60.178.** மாமறையோர் - வேதத்தில் பெரிய அந்தணர். **60.179.** அந்தமுள்ள - அழகுள்ள. **60.179.** அத்திபுரம் - அஸ்தினாபுரம். **60.181.** தெரிசித்து - தெரிசனம் செய்து. அட்சதை - மங்கல அரிசி. **60.181.** சிவம்பண்ணி - செயம் பண்ணி; உயர்வு செய்து எனினும் அமையும். **60.183.** முரசக் கொடி - பாண்டவர்களின் வம்சக் கொடி. முடிபொருத்த - கிரீடம் அணிந்த. **60.184.** இயல்வேதென - காரணத்தின் தன்மை யாது என. **60.185.** முன்னைப் பயன் - சிறு பிராயத்தில் வேட்டைக்குச் சென்றவிடத்து முனிவரை அவமானப்படுத்தி, அவர் கழுத்தில் பாம்பினை அணிவித்ததால், அவர் இட்ட சாபத்தின் பயன். முடிந்த இரகசியம் - சாவம் நெருங்கி வருகின்ற இரகசியம். **60.186.** பல வேறா ராசி - பல வகைப்பட்ட ராசிகள். கணம் - கூட்டம். **60.187.** கோள் - புறஞ்சொல். குவலையம் - உலகம். **60.189.** பதி - நாடு. **60.190.** பார்த்துரையும் - கோள் நிலைகளைப் பார்த்துக் கூறுங்கள். **60.191.** நூலாய்ந்து - வேத சாஸ்திர நூல்களை ஆராய்ந்து. **60.192.** அளவிட்டு - கிரகநிலைகளை அளவிட்டு. **60.193.** நேராய் மனை கீறி - சிறப்பாகக் கிரக நிலைகள் தங்கும் மனை அமைப்பை அமைத்து நிட்செயமாய் - நிச்சயமாய்; உறுதியாய்.

சு.சொல் : 1. மாமறையோரைத் 2. ராசிபல 3. கோழும் 4. ஆழும் 5. மாமறையோ

### *Vētiyar* questions Paricittu

He came in the presence of Paricittu.
He offered *aṭcatai*[1] after prayers and said,
"O king of kings, my very great lord!
O crowned king with a drum in the royal banner!
Why did you order me to come?"

### Paricittu's reply

"The effects of the deeds done in the past,[2]
The secret of the curse and its effects,
Of enmity, worldly affairs,
Of ruling the land, the king's rule, justice
Residence, all appropriate things,
Do study and tell!" said king Paricittu.
Hearing his words the Brahman referred to the book.
Studied deeply, and calculated the planets' position,
And studied the sure science.
Studying deep, he found out facts
Analysed names, zodiacal signs

1. Rice grain mixed with turmeric powder sprinkled on those to be blessed. 2. Refers to the curse of the sage when Paricittu as a boy put a dead snake around his neck.

ஓராமலே யவனும் ஒச்சநிலை பார்த்துப்
பேரை விளக்கிப் பேதியா ராசிநிலை[1]

ராசி பிரித்து நட்சேத்தி ரம்பிரித்து
ஆசிபலன் தாரகைகள் அடவுடனே தான்பார்த்துப்

பலவறைகள் தான்பரப்பிப் பலசாஸ்திரம் பிரித்து
அலகுநிலை நிறுத்தி யட்டதிக்குந் தான்பார்த்துத்

திசைகள் பதினாறுந் தெளிந்து வகைபிரித்து
இசையாக கிரணங்கள் இலக்கணங்கள் தான்பார்த்துச்

## வேதியர் கிரகநிலைகளால் மன்னனுக்குத் துன்பம் வருமெனல்

சொல்லுகிறான் வேதியனுந் துரைமகனுந் தான்கேட்கச்
செல்லுமொரு காலமதில் தீவினைக ளுண்டாச்சு

கேளுங்காண் மன்னவனே கிருபையுடன் சாஸ்திரத்தை
வாழுங் குருகுலத்து மன்னவனே யுன்னுடைய

ராசிப் பொருத்தம் நவக்கிரகந் தான்பார்க்கத்
தேசி ரதமுமல்ல சேனைத் தளமுமல்ல

உடமைகட மைபணி யுற்பத்தி தானுமல்ல
திடமுடைய செம்பொன் திரவியமுந் தானுமல்ல

மாடமொடு கூட மனையாட்டி மைந்தரல்ல
ஆண்டவரே யும்முடைய ஆற்றுமத்தி லோர்வினைதான்

சென்மச் சனியுந் தேகத்தில் வல்வினையும்
கன்மச் சிறு வினையுங் காலபிலன் பொல்லாது

**60.194.** ஓராமலே - ஆராயாமலே. ஒச்ச நிலை - ' உச்ச நிலை' என்பதின் பேச்சுவழக்கு. **60.195.** பேர் - பெயரை. பேதியர் - தரித்திரர்; வெண் முனிசாபத்தால் பரிசித்துவைக் குறித்தது. **60.196.** ராசி - மேஷம் முதலாய் மீனம் ஈறாய் உள்ள பன்னிரு ராசிகள். நட்சத்திரம் - அஸ்வினி முதலாய் ரேவதி ஈறாம் உள்ள இருபத்தியேழு நட்சத்திரங்கள். **60.197.** ஆசிபலன் - இருக்குமிடத்தின் பலன். தாரகை - நட்சத்திரங்கள். அடவு - முறை. **60.198.** பலவறைகள் - நவக்கிரகங்கள் நிற்கும் நிலையைக் காட்டும் கிரக அட்டவணை. **60.199.** அலகுநிலை - கிரகங்களின் நுட்பமான வேறுபாட்டு நிலை. அட்டதிக்கு - எட்டு திசைகள். **60.201.** இசையாக - பொருத்தமாக. **60.202.** துரைமகன் - அரசன்; பரிசித்துவைக் குறித்து. **60.204.** 'கிருபை - இரக்கம். **60.205.** குருகுலம் - பாண்டவர் குலம். **60.206.** நவக்கிரகம் - ஒன்பது கிரகங்கள்; சூரியன் முதலாய் கேது ஈறாய் உள்ள கிரகங்கள். **60.207.** தேசி ரதம் - குதிரைகள் பூட்டப்பட்ட தேர். சேனைத்தளம் - படைக்கூட்டம். **60.209.** திடமுடைய - வலிமையான. **20.210.** மாடம் - அரண்மனை. மனையாட்டி - மனைவி. **60.211.** ஆற்றுமம் - உயிர். வினை - தீவினை. **60.212.** சென்மச் சனி - பரிசித்து பிறந்த ராசியில் சஞ்சரிக்கும் சனிக்கிரகம் இவண் சென்ம சனி எனப்பட்டது; இந்த கிரகநிலை குறிப்பிட்டவர்களுக்குக் கெடுதல் விளைவிக்கும் என்பது நம்பிக்கை. **60.213.** கன்மம் - கர்மம். காலபிலன் - காலத்தின் பலன்; 'பிலன்' இவண் பேச்சு வழக்குச் சொல்.

சு.சொல் : 1. றாசிநிலை

Studied deepplanetary position, zodiac[1]
The resulting effect, and and stars,[2]
Planetary tables consulted he.
He refferred to many scriptures old.
Minutely he calculated
Positions of the planets in the sky;
Measured all the eight directions;
Directions sixteen he listed, studied;
Proper prediction rules he studied.

### *Vētiyaṉ* predicts troubles to the king

Said *Vētiyaṉ* to the attentive king,
"Once upon a time there were bad deeds.
O king listen to the scriptures with grace!
O King who belongs to the *Guru*,
The ever existing clan!
I studied your zodical signs,
And positions of planets nine.
It is not chariots with horses.
It is not your mighty army.
Belongings, duty, production, no!
Solid gold, huge wealth, they are not!
Huge houses, wives or children, no!
O lord there's a crisis in your life!
Saturn in your birth sign, will cause
Evil effects in your body, the results of *karma*.
Hold it clear, your time is bad!

1. Twelve zodiacal signs. 2. Twenty seven stars.

செவ்வாயுட தோஷந் தென்னவனே போதாது
கவ்வாவி யாழன் கருதுபன்னிரண் டில்வந்தான்

மாதமொரு நாளில் வருகுதுகா ணித்தோசம்
போதா துமக்குமிப்போ புண்ணியரே யென்றுமிகத்

தத்து வருகுதுகாண் தந்திரமாய் நீயிருந்து
இற்றுடனே தானிருந்து இதமாகத் தானொளித்துத்

## வேதியர் அரவத்தால் பரிசித்துவுக்கு மரணமெனல்

தப்பி யிருக்க சமர்த்துண்டோ யாமாகில்
ஒப்புடனே சொல்லுகிறேன் உண்மைதனை நீர்கேளும்

விடவரவு தான்தீண்டும் வேகமுடன் சாபமதால்
அடவுடனே தான்தீண்டு மதுநாலு மாசத்தையிலே[1]

சர்ப்பத்தி[2] னாலேதான் சாவுனக்குத் தப்பாது
உற்பத்தியா கவும்நா னுரைத்தேனான் சாஸ்திரமும்

என்றுமறை[3] வேதியனு மெழுந்தருளித் தான்போனான்
ஒன்றுமனம் விள்ளாமல் உள்ளுடைந்து புண்ணாகி

## பரிசித்துவின் மனக் கலக்கம்

என்செய்வோ மென்று யிதுக்குவகை யேதெனவே
முன்செய் தீவினையோ முடிந்ததுகா ணென்றுசொல்லி

பெரியோர்கள் சாபம் பின்னே துடர்ந்ததய்யோ
தெரியாமல் நாம்நினைத்த தீவினையால் வந்தகுற்றம்

**60.214.** செவ்வாய் தோஷம் - நவக்கிரகங்களில் ஒன்றான செவ்வாய் கிரகத்தால் ஏற்படும் துன்பம். இதனால் மாங்கல்ய தோஷம் உண்டாகும். தென்னவன் - இவண் பரிசித்துவைக் குறித்தது. **60.215.** கவ்வா வியாழன் - துன்பம் தரும் வியாழன் என்னும் நவக்கிரகம். கருது பன்னிரண்டு - 'ஜாதகத்திலுள்ள ராசி சக்கரத்தில் வியாழன் 12வது இடத்தில் உள்ளதால் எச்செயலும் விரயம் ஆகும்' என்ற பொருளில். **60.216.** வருகுது - 'வருகிறது' என்பதின் பேச்சு வழக்கு. **60.217.** போதாதுமக்கு - 'கிரக நிலைகளின் படி இப்பொழுது நேரம் சரியில்லை' என்ற பொருளில். **60.218.** தத்து - உயிருக்கு ஆபத்து ஏற்படுத்தும் கண்டம்; நேரம். தந்திரம் - கூர்த்த அறிவு. **60.219.** இற்றுடனேதான் - இன்றையிலிருந்துதான். **60.220.** சமர்த்து - திறமை. **60.222.** விடவரவு - விஷம் பொருந்திய பாம்பு. **60.223.** அடவுடனே - மிகுந்த நுணுக்கத்துடனே. நாலு - 'நான்கு' என்பதின் பேச்சு வழக்கு. மாசம் - 'மாதம்' என்பதின் பேச்சு வழக்கு. **60.224.** சர்ப்பம் - பாம்பு. தப்பாது - தப்ப முடியாது. **60.225.** உற்பத்தி - தோற்றம். **60.226.** மறை வேதியன் - வேதங்களைக் கற்ற அந்தணன். **60.227.** விள்ளாமல் - கூறாமல். **60.228.** இதுக்கு - இதற்கு. **60.230.** துடர்ந்தது - 'தொடர்ந்தது' என்பதின் பேச்சு வழக்கு.

---

சு.சொல் : 1. மாஸதையிலே 2. கற்பத்தி 3. என்றுமரை

O king, the evil effects of Mars are bad!
Jupiter is troublesome in the twelth house.
Within a month this evil comes.
Time is bad for you O good king!
A crisis approaches and deftly
You should avoid it with much care.
Then you could escape from it cleverly.
Fact it is, listen to what I say.
A venomous snak'ell bite, as cursed.
With tact it will bite with in four months.
Death from the snake is sure for you, see!
My science tells me this and this is fact."
Saying thus the Brahman left the place..
Not knowing what to say, heart broken,
The king thought, " what to do, how to excape?
The past evil deeds are paying me back.
The curse of the greatman follows me now.
Not knowing consequences I once played and
This, now crisis has come to me.

## பரிசித்துவின் உபாயம்

போக்க நினைவு பொருத்தமுடன் பார்க்கவென்று
வாக்கான மந்திரிமார் மன்னவரைத் தானழைத்து[1]

நமக்கு வருங்கருமம் நாட்டமுடன் ஈண்டுமது[2]
உனக்குத் தெரிய வுரைக்கிறேன் மன்னவரே

சனிபகவான் போதாது சர்ப்பமுந்தான் தீண்டுமென்னை
இனிமே லுபாயம் யிதுக்கு வகைகேளும்[3]

கார்க்கடலுக் குள்ளே கம்பமது தானூன்றி
நீர்மேல் சவுக்கை நிறுத்தியே. கால்நாட்டிச்

சுத்திவரக் காவல் சூழ நிரைநிரையாய்
வைத்தே யிருந்து வகையாகத் தப்பிவித்து

வரலாம் நொடியில் மாளிகையுண் டாக்குமென்றார்
பரம ரகசியமாய் பாரிலுள்ளோர் காணாமல்

## கடலில் மாளிகை எழுப்புதல்

அந்தப் படியே அலைகடல்மேல் மாளிகையும்
மந்திரிமார் தான்முகித்து வந்துசொன்னார் மன்னனிடம்

## செனமேசனிடம் அரசப் பொறுப்பைப் பரிசித்து ஒப்படைத்தல்

மன்னன்பரி சித்துவுந்தான் மைந்தன்சென மேஷனையும்
தென்னவர்கள் மந்திரிமார் சேரவர வழைத்து[4]

நான்போ யிருந்து வருமளவு மிராச்சியத்தைத்
தான்போ யிருந்துகொண்டு சட்டஞ் செலுத்துமென்று

மைந்தன் செனமேசனுக்கு மன்னருக்குந் தானுரைத்து
இந்தமொழி[5] யுரைத்து யேகினர்கா ணம்மானை

**60.233.** வாக்கான - பொருத்தமான. **60.237.** உபாயம் - வழி. **60.238.** கார்க்கடல் - கறுத்த கடல். கம்பம் - தூண். **60.239.** சவுக்கை - இளைப்பாறும் இடம். **60.240.** சுத்தி வர - சுற்றி வர. நிரை நிரையாய் - கூட்டம் கூட்டமாய். **60.241.** தப்பிவித்து - மரணத்தின் பிடியிலிருந்து தப்பி. **60.245.** முகித்து - முடித்து. **60.246.** செனமேஷன் - செனமேசெயன். **60.247.** தென்னவர் - தென் நாட்டு அரசர்கள். **60.249.** சட்டம் செலுத்து - ஆட்சி செலுத்து. **60.251.** ஏகினார் - சென்றார்.

---

சு.சொல் : 1. தானளைத்து 2. நீண்டுமது 3. கேழும் 4. வளைத்து 5. இந்தமொளி

### Ministers devise a plan

To escape the impending danger
Called he ministers to his side, and said,
"An evil end is to befall me.
I tell this for all you to know.
Favourable is not lord Saturn.
A serpent is to bite me soon.
There's a ruse to escape, it seems.
Create a pillar in the dark sea,
On it a square place for me to rest,
On all sides many groups guarding it,
This way I can save myself.
Build such a castle in a jiffy
Very secretly, no one knowing."
A castle soon on high seas was built.
The ministers came reporting it.

### Paricittu hands over the kingship to Jeṉamējeyaṉ

Paricittu, called Jeṉamējeyaṉ,
His son, with ministers, and kings, said,
"Till I come back look after the state.
Rule with justice." telling so
King Paricittu went away.

### பரிசித்து கடல் மாளிகையில் தங்குதல்

கடலி னடுவே கப்பலெல்லாஞ் சூழ்ந்துநிற்க[1]
அடவுடனே கார்கடலில்[2] ஆகாயப் பந்தலிட்டு

படவு சுரிப்பு பலதிசையுங் காவலுமாய்
இடைவிடாக் காவலதாய் எச்சரிக்கை யுச்சிதமாய்

வைத்து நடுவே வகையாக வீற்றிருந்தான்[3]
கைத்த விடவரவு கார்க்கோட னானவனும்

### கார்க்கோடன் பரிச்சித்துவைத் தேடுதல்

முன்னாள் பழிவாங்க[4] முகூர்த்தமது வந்துதென்று
இன்னாள்ப் பயணம் யிவனெங்கே யெனவெழுந்து

நாடுநகர் தேடி நன்னகரிதான் தேடிக்
காடுகள்தான் தேடிக் காவலன்றா னெங்கேயென்று

உலாவித் திரிந்து வூரெங்குந் தான்தேடிக்
கலாபற்றுக் கார்க்கடல் மேலிருப்பா னென்று

### கார்க்கோடன் பரிசித்துவின் இருப்பிடம் அறிதல்

ஊரி லிருக்குமந்த வுள்ள சனங்களெல்லாம்
பாரில் பலர்கூடிப் பரம ரகசியமாய்ப்

பட்டணத்தி லுள்ள பலசனங்க ளுள்ளோரும்
திட்டமுட னிவ்வசனஞ் செப்புகின்றா ரெல்லோரும்

### கடற்கரைக்குக் கார்க்கோடன் வருதல்

உரைக்கும் வசனம் உலகத்தில் கேட்டிருந்து
திரைகடலை நோக்கிச் சீறரவு தான்போக

**60.253.** அடவு - பாதுகாப்பு. ஆகாயப்பந்தலிட்டு - கடலுக்கு மேல் பந்தல் அமைத்து. **60.254.** படவு - படகு. சுரிப்பு - கவசம். **60.255.** உச்சிதமாய் - உயர்ந்ததாய். கைத்த விட அரவு - கோபங்கொண்ட விஷப்பாம்பு. கார்க்கோடன் - பரிசித்துவைத் தீண்டுவதற்கு வர இருக்கும் பாம்பின் பெயர். **60.258.** முகூர்த்தம் - நேரம். வந்துதென்று - 'வந்ததென்று' என்பதின் பேச்சுவழக்கு. **60.261.** காவலன் - அரசன்; பரிசித்து. **60.263.** கலாபற்று - கலப்பற்று; மரக்கலம். கார்கடல் - கருத்த கடல். **60.264.** சனம் - ஜனம்; மக்கள். **60.267.** திட்டமுடன் - உறுதியுடன். **60.269.** சீறரவு - சீறும் தன்மையுள்ள பாம்பு.

சு.சொல் : 1. சூள்ந்து 2. காற்கடலில் 3. வீத்திருந்தான் 4. பளிவாங்கு

In mid sea with surrounding ships,
Safely on the sea a *pantal* was built.
Boats, armours guarding on all the sides,
There was a vigilant guard.
He sat at the centre feeling safe.

**Kārkkōṭaṉ[1] searches for Paricittu**

Angered, the venomous snake, Kārkkōṭaṉ
Found the time had come for the old revenge.
On journey he went in search of the king.
Town, country, he searched all places.
He searched forests for Paricittu.
Wandering about, he searched the city.
"May be he is in ship on the dark sea." he thought.
He heard the people in town gossipping.
They whispered secretty to one another.
All the people living in the town
Spoke positively about the king's whereabouts.
Hearing them speak in such a vein,
Towards the sea went the hissing snake.
Came to the sea shore the angry snake.
The huge snake near the big sea came and mused,

1.The snake, destined to bite Paricittu.

வருகுதுகாண் கோபமுடன் வாளரவு மந்நேரம்[1]
பெருகு கடலருகே பெருநாகம் வந்துநின்று

## பரிசித்துவைத் தீண்டக் கார்க்கோடன் உபாயங்கள் தேடுதல்

நீடிய தூரம் நிலையாச் சமுத்திரத்தில்
ஓடியொழித்[2] திருக்கு முத்தமனைத் தீண்டுதற்கு

உபாய மென்னசெய்வோ மொருத்தனையுங் காணோமே
காயமிட்ட கப்பலுக்குள் காண்போமோ கார்க்கடலில்

தோணி படவு சுரிப்புடைய தன்கோலம்
வாணிபங்கள் செய்யும் வளமைபோ லெடுப்போமோ

சம்பன் சுருபமதாய்த் தானே யெடுப்போமோ
கம்பமதா யிப்போ கார்க்கடலில் செல்வோமோ

பட்சியாய்ச் சென்று பறந்து[3] விழுவோமோ
கட்சிக் கரியகருங் காகமாய்ச் செல்வோமோ

பாம்பாய் மிதந்து பழுதறவே செல்வோமோ
நான்போக வேநினவு நால்வகையுங் காணோம்
பார்த்துமிக நாகம் பரிசித்தைக் கொல்வதற்கு

என்னவடி வெடுத்து மிளக்கமொன்றுங் கண்டுதில்லை
மன்னவனைக் கொல்ல வகையொன்றுங் காணாமல்

## கார்க்கோடன் எலுமிச்சை வடிவமெடுத்தல்

தனதுபோல் நாளும் சற்பினைதான் செய்வதற்கு
மனது பிரியமுடன் வாரி யெடுத்தணைத்து

**60.270.** வருகுது - வருகிறது. **60.271.** பெருகு கடல் - பெரிய கடல். **60.272.** நீடிய தூரம் - நீண்ட தூரம். **60.273.** உத்தமன் - சான்றோன்; இங்குப் பரிசித்துவைக் குறித்தது. **60.274.** உபாயம் - வழி. ஒருதன் - ஒருத்தன்; இடைக்குறை. **60.275.** கபாயமிட்ட - பாதுகாப்பாக முடப்பெற்ற. **60.276.** தோணி - கப்பல். படவு - பாகு. சுரிப்பு - கவசம். **60.277.** வளமை போல் எடுப்போமோ - வேடத்தைப் போல செய்யலாமா. **60.278.** சம்பன் சுருபதம் - மேன்மை தாங்கிய பெரியோர் வடிவம். **60.279.** கம்பம் - தூண். **60.280.** பட்சி - பறவை. **60.281.** கட்சிக்கரிய - கரிய பறவைக் கூடு. **60.282.** பழுது - குற்றம். **60.283.** நால்வகை - இங்கு 'எந்த வழியும்' என்கிற பொருளில் வந்தது. **60.284.** நாகம் - பாம்பு. **60.285.** வடிவு - வடிவம். இளக்கமொன்றும் - 'பரிசித்துவின் பாதுகாப்பில் தளர்ச்சி ஒன்றும்' என்கிற பொருளில். கண்டுதில்லை - காண முடியவில்லை. **60.287.** சற்பினை - சற்பனை; சதி. **60.288** பிரயமுடன் - ஆசையுடன்.

சு.சொல் : 1. மன்னேரம் 2. ஓடியொளித் 3. பரந்துவிழு

### Kārkkōṭan̲ plans variously to bite Paricittu

"Long way into the wavy sea,
Gone into hiding that honest one.
To bite him I have to find a way.
Shall I see him inside covered ships,
Boats, big and small, armours all around.
Shall I go as if to trade some thing?
Shall I go as a respectable man?
Shall I go floating as a log?
Shall I go there flying as a bird?
Shall I go as a very dark crow?
Shall I go floating as a snake?
To go there I don't find a way!"
Planning the snake to kill Paricittu,
Whatever shape he might take though,
Could not find a way to kill the king.

### Kārkkōṭan̲ takes the form of a lemon

He plotted to take a form that
One would embrace to heart's joy,
Smell and touch the face with it."
He wondered which fruit it could be.
Which fruit is sour to taste;
The mere thought of it making
One's teeth set on edge,
The sight of which fruit gives joy to all,
Which , one will touch the eyes with,
Which is divine satisfying all senses-
Analysing thus he decided on the lemon at last.
Kārkkōṭan̲ , the form of a lemon took.

### Kārkkōṭan̲ floats to the sea mansion in the form of a lemon

Taking the fruit-form he jumped into the sea,
Floated alone and carefully moved.

முகந்து மணங்கொண்டு முகத்தோ டரவணைக்க
மிகுந்தகனி யேதென்று விசாரிக்கும் அளவில்

தின்றால் புளித்திருக்குந் தின்னவென்றால் பல்கூயும்
கண்டால் களிகூறுங் கண்மலரில் தானணையும்

திவ்விய மானதொரு தேவகனி தானாகும்
துவ்விய தாமென்று தோற்றி நினைவுகொண்டு

இலுமிச்சம் நற்கனிதான் இன்பமுடன் தோன்றுகையால்
வலுமிச்ச மாக வடிவெடுத்தான் கார்க்கோடன்

### கார்க்கோடன் கனியுருவில் கடல்மாளிகை நோக்கி மிதத்தல்

கனியுருபங் கொண்டு கடலில் குதித்திறங்கித்[1]
தனியே மிதந்து தடையாவே போகலுற்றார்

### காவலர்கள் கனியைக் கண்ணுறுதல்

கப்பல்தனைச் சுத்திக் காத்திருந்த[2] காவலர்கள்[3]
தெப்பமென[4] வோர்கனிதான் தெரியுதுகா ணென்பாரும்

### கனியைக் கண்ட காவலர்களின் கூற்றுகள்

அந்தா வருகிதுகாண் அதிசெயம்பா ரென்பாரும்
வந்தா லெனக்கென்று மற்கெட்டி நிற்பாரும்

எனக்கென்று சொல்லி இச்சித்து நிற்பாரும்
நான்கண்டே னென்று நகைத்துச் சிரிப்பாரும்

ஆர்கண்டா லென்ன அமையா தொருவருக்கும்
பார்கொண்ட அரசன் பரிசித்து வேந்தனுக்கு

**60.289.** மணங்கொண்டு - மணத்தை விரும்பி ஏற்று. **60.290.** விசாரிக்கும் - எண்ணும். **60.291.** தின்றால் - சாப்பிட்டால். தின்னவென்றால் - சாப்பிட்டதாக இருப்பின். கூயும் - 'கூசும்' என்பதின் பேச்சுவழக்கு. **60.292.** களி - மகிழ்ச்சி. கண் மலரில் தானணையும் - கண்ணின் கரு விழியிடத்திலே சென்று பொருந்தும். **60.293.** திவ்வியமான - மேன்மையான. தேவகனி - தெய்வத்தன்மை பொருந்திய பழம். **20.294.** துவ்வியதாம் - ஐம்புலன் நுகர்ச்சிக்கு உரியதாம். தோற்றி - தோன்றி. **60.295.** இலுமிச்சம் - 'எலுமிச்சம்' என்பதின் பேச்சு வழக்கு. **60.296.** வலுமிச்சம் - வலுவான எலுமிச்சம் பழம். கார்க்கோடன் - பாம்பின் பெயர். **60.297.** உருபம் - 'உருவம்' என்பதின் பேச்சு வழக்கு. **60.298.** தடையாவே - கவசமாகவே. **60.299.** சுத்தி - 'சுற்றி' என்பதின் பேச்சுவழக்கு. **60.301.** அந்தா வருகிது - 'அதோ வருகிறது' என்பதின் பேச்சு வழக்கு. **60.302.** மற்கெட்டி - பிடிவாதமாய். **60.303.** இச்சித்து - விரும்பி. **60.305.** ஆர் கண்டாலென்ன - 'யார் பார்த்தால்தான் என்ன?' என்ற பொருளில்; 'ஆர்' என்பது யார் என்பதின் பேச்சு வழக்கு. **60.305.** அமையாது - கிடைக்காது.

சு.சொல் : 1. குதித்திரங்கி 2. கார்த்திருந்த 3. காவலர்க 4. தெற்பமென

### Guards see the fruit

The guards around the floating ships:
"There's a floating fruit. "they said.

### Speech of the guards who saw the fruit

"How strange! there comes a fruit " some said.
"When it comes, it is mine. " quarrelled some.
"It is mine " some said, and eagerly stood.
"There it is! " some said laughingly.
"Doesn't matter who found it, it's for none.
To Paricittu, the king of the worlds

தக்குமே யல்லாது தானெவர்க்குங்[1] கிட்டாது
சிக்குமோ யுங்களுக்குத் தேவகனி யென்பாரும்

இப்படியே சொல்லி இசலி வெகுசனங்கள்
நிற்பளவில் சம்பிரம் நிலையரச சமுத்திரத்தில்

அலையிலடி பட்டு அய்ந்தய்ந்து தான்குதித்துக்
குலைசெய்ய வாறதொரு[2] குருமா தளங்கனிதான்

### காவலர்கள் கனியை எடுத்துப் பரிசித்துவை நோக்கிச் செல்லுதல்

ஒதுங்கி விலகி ஒருயிடமும் போகாமல்
பிதுங்கி நெகிழாமல்[3] பிடித்தார் பழந்தனையும்

எடுத்த கனியதனை யின்பமுற யெல்லோரும்
அடுத்த கனியதனை யல்லோருந் தான்பார்த்து

யோசனைகள் பண்ணி யொருமித்து யெல்லோரும்
இராசனுக்கா மென்று நடந்தார் சமூகமதில்[4]

மன்னன் பரிசித்து மகாராசன் தன்கொலுவில்
தென்னவர்கள் காரியப்பேர் சென்று தொழுதேத்தி

### கனியின் பெருமை பற்றி காவலர்கள் மன்னனிடம் கூறுதல்

ஆண்டவனே யெங்கள் அரசர் பெருமானே
கண்டறியாத காட்சியெங்கள் கையில்வந்து சிக்கியதே

நீண்டவனே நாங்களிந்த நீனிலத்தில் கண்டதில்லை
புண்டரீக மார்பா புவிராசே யுன்யோகம்

**60.307.** தக்கமே - தகுதியாகுமே. கிட்டாது - கிடைக்காது. **60.309.** இசலி - சிறுசிறு வாக்குவாதங்கள் செய்து. **60.310.** சம்பிரம் - எலுமிச்சம் பழம். **60.311.** அய்ந்தய்ந்து - அசைந்து அசைந்து. **60.312.** குலை - கொலை. குரு மாதளங்கனி - தலைமையிடம் பெற்ற தளதளப்பான கனி; எலுமிச்சம்பழம். **60.316.** அல்லோரும் - 'எல்லோரும்' என்பதின் பேச்சுவழக்கு. **60.317.** ஒருமித்து - ஒன்று சேர்ந்து. **60.318.** இராசனுக்காம் - மன்னவன் பரிசித்துவுக்கு ஆகும். சமூகமதில் - மன்னன் முன்னிலையில். **60.319.** கொலு - அரண்மனை. **60.320.** தென்னவர்கள் - தென்நாட்டு மன்னர்கள். காரியப்பேர் - ஊழியர்கள். தொழுதேத்தி - வணங்கி, புகழுரைகள் கூறி. **60.323.** நீண்டவனே - நீண்ட புகழையுடையவனே. நீனிலம் - நீணிலம்; நீண்ட உலகம். **60.324.** புண்டரீக மார்பா - தாமரை மலர் போலும் சிவந்த மார்பனே; திருமகள் உறையும் மார்பினை உடையவனே எனினும் அமையும். புவிராசே - உலகத்து அரசனே.

சு.சொல் : 1. தானெவற்கு 2. வாரதொரு 3. நெகிளாமல் 4. சமுகமதில்

It belongs and to no one else.
Can you get such a divine fruit?" some said.
Thus they were engaged in quarrels petty.
As they were thus, the lemon floating,
Was being tossed in the waves of the sea.
The juicy fruit came with murder intent.

**Guards pick the fruit and to Paricittu go**

They saw to it, that it didn't dodge their grip.
Squeezing it not, they held it lightly.
They picked the fruit for the joy of all.
All of them had a look at the fruit.
They thought for a while, and a consensaus was reached:
"Its' for the king!" they in his presence went.
Paricittu was sitting in state.
The servants went and paid respects.

**The guards speak of the greatness of the fruit**

"O lord king! Our good saviour!
Something strange has come to our hands.
O lord, we've never seen such a thing!
O king with a chest of lotus colour!

அதிசெயமாய்க் கண்டெடுத்தோம் ஐயா தொருவருக்கும்
விதிசேரு மார்பா வெகுயோக முந்தனுக்கு

வந்து தெனவேதான் வாழ்த்தியே[1] யெல்லாரும்
சந்து பயில்மன்னன் தார்வேந்தன் தன்னிடத்தில்

கொண்டாடியே யவர்கள் கொடுத்தார் கனியதனைக்
கண்ட துரைராசன் கனபிரிய மாய்மகிழ்ந்து[2]

## மன்னன் கனியை கண்ணிலொத்தல்

நல்ல கனியென்று நகைத்து முகமலர்ந்து
செல்வ மகன்வாங்கிச் செந்தா மரைமுகத்தில்

## கனியின் வடிவிலுள்ள நாகம் மன்னனைத் தீண்டி மறைதல்

ஒத்தினான் கண்ணிலதை யூடுருவ நாகமது
கொத்தினான் சீறிக்[3] குதித்தான் கடல்தனிலே

பழிநமக்கு[4] வந்துதென்று படவரவு தானினைந்து
வழிகூடி யேநடந்து மறைந்ததுவே[5] வாளரவம்

## பரிசித்துவின் மரணம்

விதியின் பயனை விலக்கலா மென்றுசொல்லி
மதியுடனே வந்தொழித்த மன்னவனும் பட்டுவிட்டான்.

## விதியின் வலிமை

**விருத்தம்**

61. விதியின் பயனை விலக்கவென்று விரும்பி யொருவன் அந்நாளில்[6]
அதிய தலையைத் தான்சிரைத்து அகன்று பிழைத்து வருவோமென்று

**60.326.** விதி சேரு மார்பா - செல்வம் சேர்ந்த மார்பனே. **60.328.** சந்துபயில் மன்னன் - சமயங்கள் பலவற்றைக் கற்றுணர்ந்த மன்னன்; பரிசித்து. **60.329.** கனி - எலுமிச்சங்கனி. **60.330.** கனபிரியம் - மிகுந்த விருப்பமுடன். **60.331.** நகைத்து - சிரித்து. **60.332.** செல்வமகன் - செல்வத்தில் சிறந்த மகன்; பரிசித்து. செந்தாமரை முகம் - சிவந்த தாமரை மலர் போன்ற முகம்; உவமைத் தொகை. **60.333.** ஊடுருவ நாகமது - எலுமிச்சம் பழத்தில் வடிவிலிருந்த பாம்பானது சீற. **60.335.** வந்துதென்று - வந்ததென்று. படவரவு - படம் விரித்து ஆடும் பாம்பு. **60.336.** வழி கூடியே - பாதையில் விரைந்தே. அரவம் - பாம்பு. **60.338.** பட்டுவிட்டான் - மாண்டு விட்டான். **61. 2.** அதிய தலை - அதிக முடியுடைய தலையை.

---

சு.சொல் : 1. வாள்த்தியே 2. மகிள்ந்து 3. சீரித் 4. பளிநமக்கு 5. மரைந்ததுவே 6. அன்னாளில்

Your luck, this strange thing we have found!
O lucky one, fortune to you
Has come!" wishing so, all of them
With flourish gave the fruit,
To the learned who wore garlands.
Seeing it king was immensly pleased.
"A good fruit!" rejoiced the king,
His lotus like face brightering up.
He then touched the eyes with the fruit.
The snake that the fruit was hissed,
Bit him and jumped into the sea.
"Sin I've earned!" reflected the hooded snake.
It hurried away and disappeared.

**Death of Paricittu**

The one who came determined
To overcome fate fell down dead.

சதியே வருவ தறியாமல் தால[1] நிழலில் போயிருக்க
விதிதான் மொட்டைத் தலைதனிலே விழுமாம் பனையின் கனிதானே.

## பரிசித்துவின் மரணத்தால் மன்னர்கள் வருந்துதல்

62. தலையில் விதித்த விதிதனக்குத் தலையைச் சிரைத்தோன் பட்டதுபோல்
அலையி லொளித்த பரிசித்து அமர்ந்தா னரவின் விசத்தாலே
குலையே செய்த குலைபாவங் குலையா முடிந்து தெனவேங்கி
மலையாதிருந்த மன்னரெல்லா மலைந்தே யலைந்து குலைந்தாரே.

## மன்னர்கள் பரிசித்துவின் மரணம் குறித்துச் செனமேசெயனுக்குச் செய்திதரல்

63. ஏங்கினார் முகங்கள் வாடி யென்செய்வோ மென்று சொல்லித்
தாங்கினார் மன்னன் தன்னைத் தளமெல்லா மபைய மென்று
தூங்கினார் மன்ன ரெல்லாந் துயரமும் வேறு வேறாய்
ஓங்கிய செனமே சனுக்கு ஓலைதா னெழுதி னாரே.

நடை

64. பட்டுக் கிடந்தாதொரு பரிசித்து வேந்தனையும்
கட்டாக வைத்துநன்றாய்க் காவலுடன் போற்றி
சாந்து புனுகுநல்ல சவ்வாதுசந்[2] தனந்திமிர்ந்து
பூந்துகிலும் பூமலரும் பூமணமும் வாசனையும்
போமெனவே நல்ல பொட்டகத்தி லேயிருத்தித்
தாமென் றிருக்குகின்ற தளமெல்லாந் தான்குலைந்து

61.3. சதி - சூழ்ச்சி. தால நிழலில் - ஆலமரத்தின் நிழலில். 61.4. விதிதான் - விதியினால். பனையின் கனி - பனம்பழத்தின் கனி. 62.1. சிரைத்தோன் - முடியை எடுத்தோன். பட்டது - மாண்டது. 62.2. அலையில் ஒளித்த - அலையினை எழுப்பும் கடலில் மறைந்திருந்த. அமர்ந்தான் - மடிந்து போனான். 62.3. குலை - கொலை. குலையே செய்த குலை பாவம் - பண்டு காட்டில் வேட்டையாடும் பொழுது பாம்பினைக் கொன்ற பாவம். 62.4. மலையாதிருந்த - 'திடமாக இருந்த' என்ற பொருளில். 63.1. ஏங்கினார் - மிகுதியாக வருந்தினார். 63.2. தளமெல்லாம் - கூட்டமெல்லாம். 63.3. தூங்கினார் - சோர்ந்தார். 63.4. ஓங்கிய - புகழால் ஓங்கிய. செனமேசன் - செனமேசெயன்; பரிசித்துவின் புதல்வன். ஓலை - கடிதம். 64.1. பட்டு கிடந்த - இறந்து கிடந்த. 64.2. கட்டாக வைத்து - பாதுகாப்பாக வைத்து. 64.3. சாந்து, புனுகு, சவ்வாது, சந்தனம் - இவை சில வகை நறுமணப் பொருட்களைக் குறித்தது. 64.4. பூந்துகில் - பூப்போன்ற மெல்லிய ஆடை. 64.5. போமெனவே போய்விடும் என்றே. பொட்டகம் - 'பெட்டகம்' என்பதின் பேச்சுவழக்குச் சொல். 64.6. தளம் - கூட்டம். குலைந்து - சிதறி.

சு.சொல் : 1. தால்நிளலில் 2. நல்லசவாதுசந்

### The power of fate

To overcome the fate a man did plan.
Hoping to escape, tonsured his head.
Knowing not his awaiting fate,
Went and sat under a banyan tree.
Fate befell in banyan fruit's form on his head.
It fell like a fruit of palm and he died.

### Kings mourn the death of Paricittu

Of fate, like the one experienced by
The man who had tonsured his head,
Paricittu who hid in the sea,
Died of the vonom of the snake.
Sin of killing the snake had visited rightly
The king and he fell a victim, they reflected.
The strong willed kings were shattered.
With fallen faces helpless they felt.
They held the king in their hands,
Immersed as they were in deep grief.
A letter they despatched to Janamējeyan.
The body of dead Paricittu
They all preserved and guarded well.
Applied civet, sandal, perfumes,
Gossamer dress and flowers fragrant.
To retain fragrance placed it in a box.
Got scattered were the broken hearted crowd.

முன்னே யெழுதிவிட்டார் முடிபொருத்த மன்னனுக்குப்
பின்னே பயணமென்று பெருங்கடலை விட்டகன்று

### செனமேசெயனுக்குத் தூதன் செய்தி கொண்டு செல்லுதல்

ஓலை தனைக்கொண்டு ஒருநொடியில் தூதுவனும்
சேனை தலைகுலைய செனமே ராசன்முன்னே

தெண்டனிட்டுத் தூதன் சென்னி கவிழ்ந்துரைப்பான்[1]
தொண்டனுக்குச் சொல்லத் துணியுமோ யென்கோவே

### செனமேசெயன் வருந்தி அழுதல்

என்றோலை தன்னை யெடுத்துமுன்னே வைக்கலுற்றான்
நின்றோலை வாசகத்தால் நிலத்திலேதான் விழுந்து

மண்ணதிர விண்ணதிர வயற்றி[2] லறைந்துகொண்டு
கண்ணீக ளாறோடக் கதறி[3] யழுதலுற்று[4]

### பரிசித்துவின் உடலைக் கொண்டு வர மன்னன் ஆணையிடுதல்

வந்ததொரு தூதுவனை வகையே தெனக்கேட்டு
அந்த விபரமெல்லாம் அவன்வகையாய்ச் சொல்லியபின்

கேட்டுச் செனமேசன் கிலேசமிக வுண்டாகி
நாட்டும்புகழ்[5] மன்னனையே நாழிகையி[6] லிங்கேதான்

கொண்டுவர வேணுமென்று கொற்றவனுந் தானுரைத்தான்
தெண்டு சிவிகையின்மேல் தென்னவனைத் தானெடுத்து

**64.7.** முடி பொருத்த மன்னன் - மகுட முடிசூடிய மன்னன்; செனமேசெயன். **64.8.** பின்னே பயணம் - உடனே பயணம். **64.10.** சேலை தலைகுலைய - உடுத்தியிருந்த ஆடை நிலைகுலைய; தூதுவனின் வேகத்தைக் குறித்தது. **64.11.** தெண்டனிட்டு - அடிபணிந்து. சென்னி - தலை. **64.12.** தொண்டன் - அடிமை; இங்குத் தூதுவனைக் குறித்தது. கோ - அரசன். **64.17.** வகையேதெனக் கேட்டு - பரிசித்துவின் மரணம் எவ்விதம் நடந்தது எனக்கேட்டு. **64.18.** வகையாய் - முறையாய். **64.19.** கிலேசம் - துன்பம். **64.20.** நாட்டும் புகழ் மன்னன் - மிகுந்த புகழை இவ்வுலகில் நிலைநாட்டியவன்; பரிசித்து. நாழிகை - அறுபது விநாடிகள் கொண்ட ஒரு கால அளவு. **64.22.** தெண்டு சிவிகை - தண்டு சிவிகை; பல்லக்கு. தென்னவன் - தென்னாட்டு அரசன்; இங்குப் பரிசித்துவைக் குறித்தது.

---

சு.சொல் : 1. சென்னிகவிள்ந் 2. வயற்றிலரைந்து 3. கதரியழு 4. தலுத்து 5. நாட்டும்புகள் 6. நாளிகை

To the crowned king they informed presently.
And on a speedy journey set the sails.

**Message is taken to Jaṉamējeyaṉ**

Message carrying, the man went with speed,
Dishevelled, met Jaṉamējeyaṉ
Knelt in front, with bowed head said he,
"O king what can this slave tell you?"

**Jaṉamējeyaṉ sheds tears**

Taking the letter he placed in front of the king.
Reading the message, the king fell on ground.
Sky and earth reverberating he beat his belly.
Tears streaming, he wailed in intense grief.

**King orders body of Paricittu be brought**

He asked of details from the messenger.
After, in detail he described
Jaṉamējeyaṉ felt sad.
In no time the body of king of glory
Be brought, the king did command.
Carrying the body in a palanquin,
They arrived at the Hastiṉapuram.

## அத்தினாபுர மக்களின் வருத்தவுரைகள்

வந்தார்க ளத்திபுரம் மன்னனையே கொண்டேகி
சந்தான மான சனங்கள் விழுந்தலறி[1]

மனைவிமக்கள் சுற்றமெல்லாம் வந்து விழுந்தலறிக்
கொவென்ற சத்தக் குரல்களையுந் தானமர்த்தி[2]
நில்லென் றமர்த்தி நினையாதெல் லாம்நினைந்து

## செனமேசெயனின் சபதம்

அழுது பரதவித்தும் ஆவதுதா னொன்றுமில்லை
பழுதுசெய்து போனதொரு பாம்பு தனைவதைத்து

எந்தன் பிதாவை யெழுப்புவதே யல்லாது
அந்த விசந்திரும்ப யானதெல்லாஞ் சேகரித்து

எழுப்பினா லாண்பிள்ளைகாண் இல்லாவிட்டால் பெண்ணெனவே
மழுப்பி யழுதால் வருமோ வுயிர்தானும்

தந்தையரை வைத்துச் சமர்த்தாகத் தானிருந்தான்
விந்தையுடனே வேள்வி விதமாய் நடத்தலுற்றான்

## வேதியர்களின் யாகம்

சாத்திரத்துக் குள்ள தளபாட முள்ளதுவும்
சூத்திரமாய்ச் சேகரித்துச் சூழ்த்திரை[3] வளைத்து

வேதியரைத் தானழைத்து[4] வேணதெல்லாந் தான்கொடுத்து
ஓதிய வேதமதி லொன்றுங் குறையாமல்[5]

சொல்லு முயிர்திரும்பச் சூட்டுமென்றார் வேதாந்தம்
கல்லு முருகிவிழக் கதித்ததொரு மந்திரத்தால்

**64.23.** அத்திபுரம் - அஸ்தினாபுரம். கொண்டேசி - கொண்டு சென்று. **64.24.** சந்தானமான - சிறந்த பரம்பரையைச் சார்ந்த. **64.26.** கோ - அழுகை ஒலிகுறிப்புச் சொல். அமர்த்தி - நிறுத்தி. **64.27.** நினையாது - நினைக்காது. **64.28.** பரதவித்து - பரிதவித்து; வருந்தி. **64.29.** பழுது - தவறு. வதைத்து - கொன்று. **64.32.** எழுப்பினால் ஆண்பிள்ளை - 'என் தந்தை பரிசித்துவின் உடலில் சென்ற பாம்பின் விடத்தைச் சேகரித்து எடுத்து நான் மீண்டும் அவரை உயிர்ப்பித்தால் மட்டுமே ஆண்பிள்ளை ஆவேன்' என்ற பொருளில். **64.33.** மழுப்பி - செய்ய வேண்டிய காரியத்தை முறையாகச் செய்யாமல். **64.35.** விந்தை - வியப்பு. **64.36.** தளபாடம் - முழுமையாக. **64.37.** சூழத்திரை வளைந்து - சுற்றிலும் திரைச்சீலையால் மறைத்து. **64.38.** வேணதெல்லாம் - வேண்டியதை எல்லாம். **64.40.** உயிர் திரும்ப சூட்டும் - பாம்பினால் எடுக்கப்பட்ட உயிரை மீண்டும் மீண்டும் தரும்படி செய்யுங்கள். வேதாந்தம் - வேதம். **64.41.** கதித்ததொரு - எழுச்சிமிகுந்ததொரு.

சு.சொல் : 1. விழுந்தலரி 2. தானமத்தி 3. குளத்திரை 4. தானளைத்து 5. குரையாமல்

### The sad utterances of the subjects of Hastinapuram

The subjects fell down and cried.
Wife, children, kith and kin fell down crying.
The king pacified the distraught.

### The vow of Janamējeyan

He asked the people not to lose their hearts.
"Crying in distress helps no one.
Killing the snake that wrought the evil,
And bringing my father back to life,
Taking the venom out of his body -
Were I not to do this, man I'm not at all,
A woman let me be taken for!
Crying doesn't bring back life gone."
Keeping his father's body secure
He, a worthy *yakña*[1] raised.

### The *yakña* by *vēdic* priests

Janamējeyan summoned the *vēdic* priests.[2]
Handed them all they needed,
They fixed curtains around the venue.
The priests chanted all *mantirams,* omitting none
"Bring back the life gone!", bade the king.

1. Worship with sacred fire on an altar. 2. Exponents in *Vēdas*.

உற்பத்தி யாகவுந்தான் ஓமஅனல் தான்மூட்டிச்
சர்ப்பத்தை[1] வெந்துவிழத் தாக்குமென்றார் மந்திரத்தை

ஆமென்று வேதியரும் அந்தணருந் தான்கூடி
ஓமென் றவர்கள்மிக ஓமத்தீ மூட்டினரே

ஆகத்தீ மூண்டிதுகாண் அண்ட கடாகமட்டும்
சாகத்தான் சர்ப்பந் தவிடு பொடியாக

நீறாக வெந்து நெருப்புத் தணலாக
வேறாகிச் சர்ப்பமது வெந்துநீ றாகுதற்கு

## வேள்வித்தீ அரவைத் தீண்டுதல்

எங்கே யெனத்தேடி எழுந்தத்துகா ணக்கினியும்
அங்கே யரவமது அக்கினிக்கு மாத்தாமல்

## அரவு அக்கினியால் துயரமடைதல்

ஈரே முலகமட்டும் எங்கெங்குந் தான்தேடிப்
பாரேழுந் தானலைந்து படவரவு மாற்றாமல்

மேலயர்ந்து நாகம் வெருவிப் பயந்தோடிக்
காலோய்ந்து தானோடிக் கனலில்வளை பட்டிடைந்து

பார்த்த விடமெல்லாமம் பரந்தெழுந்த அக்கினியாம்
ஆத்த முடியாமல் அயிரா பதத்தனிடம்

## அரவு இந்திரனிடம் அடையமடைதல்

ஓடிச்சிங் காசனத்தி- லூடே நுளைந்துகொண்டு
நாடியே சீர்பாதம் நமஸ்கரித்துத் தெண்டனிட்டு

**64.42.** ஓம அனல் - வேள்வித்தீ. **64.43.** விழத்தாக்கும் - விழும்படியாகத் தாக்கி அழியுங்கள். **64.45.** ஓமென்றவர்கள் - 'ஓம்' என்று மந்திரத்தை உச்சரித்தவர்கள். **64.46.** ஆகத்தீ - ஆகம நெருப்பு. மூண்டிது - மூண்டது. அண்டகடாகம் - உலகம் முழுமையும். **64.48.** தணல் - நெருப்புக் கணல். **64.51.** ஆத்தாமல் - 'ஆற்றாமல்' என்பதின் பேச்சுவழக்கு; தாங்கமுடியாமல். **64.53.** பார் - உலக்ம். படவரவு - படம் விரித்தாடும் பாம்பு. **64.54.** நாகம் - பாம்பு. வெருவி - அஞ்சி. **64.55.** காலோய்ந்து - வேகமாக ஓடியதால் கால்கள் தளர்ந்து. **64.55.** கனலில் வளை பட்டு - நெருப்பின் வளையத்தில் சிக்கி. இடைந்து - வருந்தி. **64.57.** அயிராபத்தன் - 'ஐராவதம்' என்றும் வெள்ளையானையை ஊர்தியாக உடையவன்; இந்திரன். **64.59.** சீர்பாதம் - மேன்மையான இந்திரனின் பாதங்கள்.

---

சு.சொல் : 1. சற்பத்தை

"Chant *mantirams* that melt down stones.
Raise holy fire hot and scorching
And say the spells that draw the serpent into the fire!"
Assenting , thepriests and Brahmans
Chanted *Ōm* and the holy fire lit.
Huge the loftly filames did spread widely around.
To burn to ashes the snake that bit.
Burn to ashes and turn it to dust.
The fire leapt up in search of the snake.
The snake couldn't stand the searing heat,
To fourteen worlds the snake ran for safety.
Worlds seven couldn't give it shelter.
In trepidation and alarm in ran.
Fatigued, at length into the ring of fire it was caught.
The fire was raging as for as eyes could see.
Refuge the serpent sought from the One
Who had Ayirāvatam[1] as his mount.

**The snake goes to Intiraṉ[1] for refuge**

It hid in mortal fear, under his throne,
Fell at his feet and respects paid.

1. Intiraṉ, king of the celestial beings. He is supposed to travel on a white elephant.

அபைய மபையமுனக்கு அடைக்கலங்கா ணென்றுசொல்லி
உபைய மெனைக் காரும் உத்தமனே யென்றலறித்

### அரவு இந்திரனிடன் நடந்தவை கூறல்

தெய்வேந்திரன் சபையில் சென்றே யிருந்தமையால்
ஐவருட பேரன் ஆனபரி சித்துவைநான்

முற்பழிசெய்[1] தானெனவே முயன்றவனை நான்தேடிப்
பிற்பழிநான்[2] கேட்டு பிராணனையும்[3] வாங்கிவிட்டேன்

அந்த பழிகேட்க அடியேனை யேதுடர்ந்து
இந்தச் சினமேசன் என்மீதி லக்கினியை

ஏவினான் தாங்குதற்கு யென்னால் முடியாது
தாவியே வந்தடைந்தேன் சரணமெனைக் காரும்

### இந்திரன் செனமேசெயனைத் தூதன் மூலம் அழைத்தல்

என்றரவம் சொல்ல இந்திரனு மப்போது
மன்றலருந் திண்புயத்தான் மன்னன்சின மேசனுக்கு

இந்திரனுஞ் சீட்டெழுதி யேவினான் தூதுவனை
அந்தரத்தே தூதுவனும் அரைநொடியி லேயோடி

### தூதுவன் செய்தி உரைத்தல்

சீட்டைக் கொடுத்துமிகச் செய்திசொன்னான் தூதுவனும்
நீட்டதனைப் பார்த்து நெறிசேர்[4] சினமேசன்

### செனமேசெயனுக்கு இந்திரன் அறிவுரை

நம்மிடத்தில் வந்தோரை நாமே வதைகள்செய்தால்
தம்மிடத்தில் வந்தோரைத் தான்கொல்வ ரோபுவியில்

**64.61.** உபையம் - உதவி. காரும் - 'பாதுகாத்திடும்' என்ற பொருளிலமைந்த பேச்சுவழக்கு சொல். **64.63.** ஐவருட பேரன் - ஐவர்களாம் பாண்டவர்களின் பேரன். **64.64.** முற்பழி செய்தான் - முற்காலத்தில் பழிச்செயல் செய்தான். **64.65.** பிராணன் - உயிர். **64.66.** துடர்ந்து - 'தொடர்ந்து' என்பதின் பேச்சுவழக்கு. **64.67.** சினமேசன் - செனமேசெயன். **64.71.** மன்றலரும் திண்புயத்தான் - வாசனை வெளிப்படும் வலிமையான தோள்களையுடையவன்; செனமேசெயன். **64.72.** சீட்டு - கடிதம். **64.73.** அந்தரம் - வானவெளி. **64.75.** நீட்டு - கடிதம். நெறிசேர் - உயர்ந்த நெறிமுறைகளில் ஒழுகுகின்ற.

சு.சொல் : 1. முற்பழி 2. பிற்பழி நான் 3. பிறாணனையும் 4. நெரிசேர்

"You're my refuge, give me asylum.
Succour me, lord!" it burst into wails.

**The snake tells Intiraṉ what had happened**

In the court of Intiraṉ the snake spoke:
"Paricittu, the grandson of the five
Once harmed us; I went in search of him.
I took revenge by taking his life.
To avenge his death following me
Jaṉamējeyaṉ caused the fire,
Set it on me. I couldn't stand it.
I came rushing here, save me, you're my refuge!"

**Intiraṉ sends for Jaṉamējeyaṉ**

As the snake said so, Intiraṉ, to king
Fragrant, strong armed Jaṉamējeyaṉ
Sent a note through a messenger.
Through the sky, the messenger in no time reached the king.
Gave the note and conveyed the message.
Jaṉamējeyaṉ, the just, read it.

**Intiraṉ's advice to Jaṉamējeyaṉ**

"We shouldn't kill those who surrender to us.
Who'd kill those who seek asylum?

முன்னாள் தவமிருந்த முனிவன்மேல் நாகமதை
மன்னாகொன் றுன்தந்தை மாமுனிவன் மேல்போட்டான்

கோபம் போறாமல்முனி கூறினான்[1] துர்சாபம்[2]
புவனேசா வுனக்குப் போவென்று சொன்னார்காண்

அந்தமுனி சாபமது அருகே குடியிருந்து
வந்த விதிவசந்தான் வருமளவும் பாத்திருந்து

எழுந்து முகிந்ததுகாண் இம்மட்டே யல்லாது
கொழுத்து கலிவந்து கூட்டுகின்ற காலமது

சமையமிது வென்று சர்ப்பமுந்[3] தீண்டினது
அமையுமோ யுன்னால் அமையா தமையாது

யாகத்தைத் தானமர்த்தி[4] யாற்றுமென்றார்[5] கோபமதை
வாகொற்ற யாகம் வளர்த்தாயே யாமாகில்

ஏகமாய்ப் பற்றி[6] எரியும் புவனமெல்லாம்
நாகத்துக்கு மட்டும் நடவாது யிச்செய்தி

அண்ட முதலாய் அகண்டமுத லட்டதிக்கும்
விண்டலமும் வெந்து வெளியாய் முடிந்துவிடும்

உனக்கு நிலையுமில்லை உலகத்தி லிப்பொழுது
எனக்கு நிலையுமில்லை இந்திரன் பட்டமும்போம்

செத்தோர்[7] பிழைப்பதுண்டோ தேசத்தி லுள்ளோரில்
மத்தாருஞ் சொல்லா மயக்கத்தை விட்டுவிடும்

**64.80.** பொறாமல் - பொறுத்துக் கொள்ள முடியாமல். துர்சாபம் - துன்பம் தரும் சாபம். **64.81.** புவனேசா - புவனத்திற்கு ஈசன் போன்றவனே. போவென்று - போகவென்று. **64.83.** வருமளவும் - விதி நிறைவேறும் காலம் வரும் வரையிலும். பாத்திருந்து - 'பார்த்திருந்து' என்பதின் பேச்சு வழக்கு. **64.84.** முகிந்தது - முடிந்தது. **64.85.** கொழுத்து கலி - வலிமையான கலி காலம். **64.87.** அமையுமோ யுன்னால் - 'விதியை வெல்ல உன்னால் முடியுமோ' என்ற பொருளில். **64.88.** அமர்த்தி - நிறுத்தி. ஆற்றும் - மனதை அமைதிப்படுத்தும். **64.89.** வாகொற்ற யாகம் - வாகாய் அமைந்த யாகம்; 'வாகொற்ற' என்பது பேச்சு வழக்குச் சொல். **64.90.** ஏகமாய் - முழுமையாய். புவனம் - உலகம். **64.91.** நாகம் - பாம்பு. இச்செய்தி - யாகத்தீயால் பாம்பினைச் சாகச் செய்யும் முயற்சி. **64.92.** அண்டம் - உலகம். அட்ட திக்கு - எட்டு திசைகள். **64.93.** விண்டலம் - விண்ணுலகு. வெளி - வெற்றிடம். **64.94.** நிலையுமில்லை - 'நிலையான இருப்பிடமும் ஆட்சியும் இருக்கப் போவதில்லை' என்ற பொருளில். **64.95.** போம் - 'போகும்' என்பதின் இடைக்குறை. **64.97.** மத்தாரும் - மற்ற எவரும். மயக்கம் - மனத் தடுமாற்றம்.

---

சு.சொல் : 1. கூரினான் 2. துற்சாபம் 3. சற்பமுந் 4. னமத்தி 5. யாத்துமென்றார் 6. பத்தி 7. செத்தோர்பிளை

O king, once your father killed a snake.
He placed it around the neck of a *riṣi* in *tapas*.[1]
Angered, the sage pronounced a curse
On the king and asked him off.
The curse of the *riṣi* lay in wait
Till the time came for the fate to act.
It is the cause; its not only that;
It's time for the mighty *kali*[2] to act.
It is time that the snake did bite.
Can you defeat fate! Oh! No! No!
End the *ñāṉa* and pacify yourself.
If you continue this *ñāṉa*,
The whole wide world in flames will go.
It will not burn the snake alone.
Earth, space, sky and the directions eight
Heaven too will to ashes it'll burn.
To an end'll come your own rule too!
I'll too lose and my title[3] will go.
Has one ever come back from death?
As advised, you rid of this confusion.
Inter your father, do funeral rites and
Grandly do rule the world." the note said.

1. A deep meditation to achieve something. 2. *kali yukam*. 3. Title as Intiraṉ, king of the celeslial beings.

தந்தைதனை யடக்கிச் சாஸ்திரமுந் தான்முகித்து
விந்தையாய்த் தானிருந்து மேதினியை யாளுமென்றார்[1]

### தந்தைக்குரிய இறுதிக்கடன்களைச் செனமேசெயன் செய்தல்

வாசவனார் தன்சீட்டு வாசகத்தை மீறாமல்
ராசன் சினமேசன் நல்லதென்று சம்மதித்து
தேறித்[2] தெளிந்து தெய்வமே யென்றுசொல்லி

மந்திரி மாரும் மகுடமுடி வேந்தருடன்
தந்திரமாய்த் தான்கூடிச் சடங்கு தனைமுடித்து

மாதானம் பூமி வஸ்திரந்தா னங்கொடுத்துக்
கோதான மீய்ந்தான் கொற்றவன் தன்கையாலே

சடங்கு முடித்தான் சாஸ்திரத்தி லுள்ளபடி
அடங்கா கிலேசமெல்லாம் ஆறித்[3] தெளிந்தபின்பு

### பிற நாட்டரசர்கள், அமைச்சர்கள் செனமேசெயனுக்கு முடிசூட்டுதல்

மன்ன ரமைச்சருடன் மகுடமுடி வேந்தருடன்
தென்னவர்க ளெல்லாஞ் சினமேசர் ராசனுக்குப்

பட்டந் தரித்துப் பாராளு[4] மென்றுசொல்லித்
திட்டப் படுத்திச் செகவேந்தர் காத்திருந்தார்

### பரிசித்துவுக்குச் சாபமிட்ட முனிவர் சாபவிமோசனம் தர எண்ணுதல்

இருக்குந் தருவாயில் ஏலவே சாபமிட்ட
வருக்கமுள்ள மாமுனிவர் மன்னர்பரி சித்துவையும்

நாகமது தீண்டுகையா லிராசன் மடிந்திருவான்
சாகுமுன்னே சென்றுமிப்போ சர்ப்பத்தின்[5] தன்விசத்தைத்

**64.98.** சாஸ்திரம் - வேத முறைப்படியான ஈமச்சடங்குகள். முகித்து - முடித்து. **64.99.** விந்தையாய் - மேன்மையாய். மேதினி - உலகம். **64.100.** வாசவனார் - புகழ் மிகுந்தவர்; இந்திரன். சீட்டு வாசகம் - கடிதச் செய்திகள். **64.102.** தேறி - மனத்தை அமைதியடையச் செய்து. **64.104.** தந்திரமாய் - கூட்டமாய். சடங்கு - ஈமக்கிரியை சடங்கு. **64.105.** மாதானம் - செல்வ தானம். வஸ்திரம் - ஆடை. **64.106.** கோதானம் - பசு தானம். **64.108.** அடங்கா கிலேசம் - தாங்கமுடியாத துன்பம். **64.110.** தென்னவர் - தென்னாட்டு அரசர்கள். சினமேசர் - செனமேசெயன். **64.111.** பாராளும் - நாட்டை ஆளும். **64.112.** திட்டப்படுத்தி - மனத்தை உறுதியடையச் செய்து. செகவேந்தர் - உலகத்து அரசர்கள். **64.113.** ஏலவே - ஏற்கனவே. **64.114.** வருக்கமுள்ள - ஒழுக்கத்தில் சிறந்த. **64.116.** இப்போ - 'இப்பொழுது' என்பதின் பேச்சுவழக்கு.

---

சு.சொல் : 1. யாழுமென்றார் 2. தேரித் 3. ஆரிதெளிந் 4. பாராளு 5. சர்ப்பத்தின்

### Jaṉamējeyaṉ performs the final rites for his father

King Jaṉamējeyaṉ, the gloried , heeded
The advice on the note that was sent.
He did come out of his confusion.
He prayed to god and with ministers
And all crowned kings he did complete
The funeral rites; he gifted with his own hands
Wealth, land, clothes, and cows.
He completed the rites that the *śāstras* had prescribed
And got out of his very deep grief.

### Other kings, ministers crown Jaṉamējeyaṉ as king

Kings, ministers and crowned monarchs
Southerners[1], crowned Jaṉamējeyaṉ
As king, bidding him to rule.
They made him strong and stayed with him.
At this juncture the sage virtuous,
Who had once cursed thought, "Paricittu,
The king would die of serpent bite.
Before he dies I'd go and get the
Venom of the snake out and save the king.
I'll leave him there to rule the world."

1. Kings from the South.

திருப்பி விசந்தீர்த்துத் தென்னவனைத் தானெழுப்பி
விருப்பமுடன் வைப்போம் மேதினியை யாளுமென்று[1]

## அரவம் முனியிடம் வினாவுதல்

தன்சாபந் தீர்க்க தவசி வருகையிலே
அன்பான சர்ப்பம் வழியி[2] லெதிர்வருமாம்

எதிராக வந்ததொரு யேற்ற தவசிதன்னைச்
சதிராக நோக்கந் தலமெங்கே யென்றுரைத்தார்

## முனிவரின் பதிலுரை

நாகமது கேட்க[3] நற்றவசி[4] யேதுசொல்வார்
லோக முழுதாளும் ரூபமதன் தன்னையொப்பாம்

இருக்கும்பரி சித்துவுக்கு யென்னுடைய சாபமதாய்
பெருக்க விஷந்தீண்டிப் பிடிக்க வருகுதென்று

தீர்த்து விசந்தன்னைத் திருப்பிவிட வேணுமென்று
யேத்துந் திசைநோக்கி யேவந்தோங் கண்டீரே

## பரிசித்துவின் மரணத்தை அரவம் கூறுதல்

யென்று முனிசொல்ல இடைந்துடந்து கார்க்கோடன்
நின்று மயங்கி நெடுமூச்சுக் கொண்டேகி

படவரவு தீண்டிப் பரிசித்து ராசனுந்தான்
செடமழிந்து[5] பாரில் தீக்கொளுத்திச் சுடர்விட்டார்

சாம்பலது குவித்துச் சடங்குமுதல் செய்தொழிந்தார்
ஏன்போதீர் என்றரவ மெதிராகச் சொல்லியபின்

**64.117.** தென்னவன் - 'பரிசித்து'வைக் குறித்தது. **64.119.** தவசி வருகையிலே - தவமுனிவர் வரும்பொழுதிலே. **64.122.** சதிராக நோக்கும் தலம் எங்கே - 'எந்த இலக்கை குறிவைத்து செல்கிறீர்' என்ற பொருளில். **64.123.** ஏது - என்ன. **64.124.** லோகம் - உலகம். ரூபமதன் - அழகிய மன்மதன். **64.125.** சாபமதாய் - சாபத்தால். **64.126.** பெருக்க விஷம் - பெருகிய விஷம். வருகுது - 'வருகிறது' என்பதின் பேச்சு வழக்கு. **64.128.** ஏத்தும் திசை - வணங்கும் திசை. **64.129.** இடைந்துடைந்து - மனத்தில் குழம்பி, வருத்தம் கொண்டு. கார்க்கோடன் - நச்சுப்பாம்பின் பெயர். **64.132.** செடமழிந்து - உடலால் அழிந்து. தீக்கொளுத்தி - உடலை நெருப்பால் கொளுத்தி. **64.133.** செய்தொழிந்தார் - செய்து முடித்தார். **64.134.** ஏன் போதீர் - ஏன் போகிறீர்.

---

சு.சொல் : 1. பாரமென்று 2. வழியிலெதிர் 3. கேள்க்க 4. நற்வசி 5. செ[illegible]ளித்து

**Snake Kārkōṭakan̲'s questions to the sage**

The snake met the holy sage and questioned him
As to where he was going presently.

**The Sage's Reply**

As the snake asked, the goodly sage replied,
"I had once cursed Paricittu,
The ruler of the world, Man̲matan̲[1] like.
Time's now that he is bit by the snake.
To get him rid of the venom
I have come here, O snake you see!"

**The serpent tells about Paricittu's death**

As the sage said the snake[2] in sadness stood,
Paralysed, it felt giddy and sighed.
"A hooded snake bit Paricittu.
He died and was to ashes burned.
Heaping the ashes, all the rites were performed.
Why should you go now?" said the snake.

1. God of love - cupid, supposed to be very beautiful. 2. By name Kārkōṭan̲.

### முனிவரின் மன வருத்தம்

மெய்யோயென் சாபம் வினையாய் முடிந்ததுகாண்
ஐயோ அரசிறக்க லாமோ புவிமீதில்

நம்மால் அரசனுக்கு நாசம்வந்த தாகையினால்
சும்மா விடலாமோ தோசம் நமக்குவரும்

### பரிசித்துவுக்கு உயிர்தர முனிவன் எண்ணுதல்

அத்தி யடக்கி யதுசாம்ப லானாலும்
சுத்தமாய் நாமுந் துரைமகனை யுண்டுபண்ணித்

திக்கெல்லாம் போற்றிடவே தேசத்தை யாளுமென்று[1]
வைக்கலா மென்று மனந்துணிந்து வந்தேன்காண்

இல்லா தெனக்கு ஈடேத்தம் வாராது
பொல்லாத சாபம் பொருந்த வுரைத்துவிட்டேன்

வாக்கினால் கண்ணால்கையால் மனசாறச்[2] செய்தபாவம்
வாக்கினால் கண்ணால்கையால் மனசாறத் தீரவென்று

தீராதே போனால் திருவுளத்துக் கேறாது
வாராத சீவனையும் வரவழைத்துச்[3] சாம்பலையும்

உருவாய் வருத்தி வுயிரை யுடல்பொருத்திக்
குருவினுட மந்திரத்தால் கொள்ளலாங் காரியமும்

### தன்னால் தீண்டிக் கரியும் மரத்தை உயிர்பெறச் செய்ய அரவம் கூறல்

என்றுமுனி சொல்ல யியல்பான நாகமது
ஒன்றுமறி யாமல் உரைத்தாயே மாமுனியே

**64.135.** மெய்யோ - உண்மையோ. **64.138.** தோசம் - குறை. **64.139.** அத்தி - அஸ்தி; மனித உடலை எரித்தப் பிறகு கிடைக்கும் சாம்பல். **64.140.** துரைமகன் - மேன்மையான மனிதன்; பரிசித்துவைக் குறித்தது. **64.141.** திக்கு - திசை. **64.143.** இல்லாதெனக்கு - பரிசித்துவை உயிர்ப்பிக்க முடியாத எனக்கு. ஈடேத்தம் - 'ஈடேற்றம்' என்பதின் பேச்சுவழக்கு; கதிமோட்சம். **64.145.** மனசாற - அடிமனத்தின் ஆழத்தோடு; மனதிற்கு நன்றாகத் தெரிந்தே. **64.147.** தீராதே - தீர்ந்து போகாமல். உளம் - உள்ளம். **64.149.** உருவாய் வருத்தி - உருவமாக வரும்படி செய்து. **64.150.** குருவினுட - குருவினுடைய கொள்ளலாம். காரியமும் - 'பரிசித்துவுக்கு உயிர் கொடுக்கும் முயற்சியைச் செய்து முடிக்கலாம்' என்ற பொருளில்.

---

சு.சொல் : 1. யாமுமென்று 2. மனசார 3. வரவளைத்து

### The sage feels sad

"Oh dear! in sorrow has ended my curse!
Alas! how on earth can the king die?
I can't leave now, evil effects I'll have!
Though to ashes he was reduced,
As whole I can bring him back to life and
Ask him to rule the world to the praise of all.
With a resolve I came to effect these.
If not, I'll no salvation have.
An evil curse I uttered once.
What, by words, eyes, hands, I'd knowingly done,
By words, eyes, hands, must be undone by me.
If I leave, doing this not, God won't like it.
I'll bring back the life that never comes back once gone.
From the ashes I'll make the body and to life I'll bring.
With blessings of my *guru* this can be done!"
As the sage said so, the snake spoke thus,
"O great sage in ignorance you spoke!

நாமொன்று சொல்லுகிறோம் நமக்கிசைய நீர்தாமும்
ஆமென்று செய்தால் அதிசெயமா மென்றறிவோம்[1]

மாமரமும் பூத்து வடுவுடனே காய்கனியாய்ப்
பூமரந்தா னிற்கிறதைப் புகையறியத் தீண்டுகிறேன்

பற்பமாய்ப் போன பசிமரந்தா னானதையும்
உற்பத்தியாக உயர்மரம்போ லாக்கிவைத்தால்

செத்தவனுந் தான்பிழைப்பான்[2] செகத்திலுள்ளோர் கொண்டாட
வித்தகனே மாமுனியே மெய்யென்று நானறிய

## மாமரத்தைத் தீண்டி அரவம் கரிய வைத்தல்

சர்ப்பமது[3] சொல்ல சந்நாசி[4] ஓமெனவே
கற்பமா மரத்தைக் கடிவையு மென்றுரைத்தார்

உரைத்தமொழி[5] கேட்டு ஒருமித்து நாகமது
இரைந்தரவஞ் சீறி[6] இவருடைய கோபமதாய்

வாய்பிளந்து கவ்வியந்த மாமரத்தைத் தீண்டியதே
காய்கனிக ளுள்ள கப்புக் கவுர்களெல்லாம்

## மாமரத்துக்கு முனிவர் உயிர் தருதல்

வெந்துநீ றானதொரு விருச்சமெனு மாமரத்தை
சந்துபயில் மாமுனிவன் தழைமரம்போ லாக்கிவிட்டார்

அப்போதுமா முனியை அரவமது கொண்டாடி
இப்போது நம்பழிக்கு[7] யீடாகப் பண்ணிவைத்தோம்

**64.153.** நாமொன்று சொல்லுகிறோம் - 'நான் ஒரு காரியத்தை உன்னிடம் கூறுகிறேன்' என்று கார்க்கோடகன் என்ற பாம்பு உரைத்தவாறு. இசைய - பொருந்தும் படியாக. **64.155.** வடுவுடனே - சிறு காய்களுடனே. **64.156.** புகையறிய - நெருப்பில் புகைந்து போகும்படியாக. **64.157.** பற்பம் - பஸ்பம்; சாம்பல். பசிமரம் - அக்கினியால் கரிந்து போன மரம். **64.158.** உற்பத்தியாக - மீண்டும் உயிர்ப்பித்துத் தரும் நிலையில். **64.160.** வித்தகன் - மிகுந்த அறிவுள்ளோன். **64.161.** சந்நாசி - 'சந்நியாசி' என்பதின் பேச்சு வழக்கு. ஓமெனவே - ஆகட்டும் என்றே. **64.162.** கற்ப மாமரம் - பூவும் பிஞ்சுவுமாக சூல் கொண்ட மாமரம். கடிவையும் - கடித்து வையும். **64.163.** ஒருமித்து - சம்மதித்து. **64.164.** அரவம் - பாம்பு. இவருடைய - வசிட்ட முனிவர் மேல் உள்ள. **64.166.** கப்புகவர் - மரத்தின் கிளைகள். **64.167.** விருச்சம் - விருட்சம்; மரம். **64.168.** சந்து பயில் - சமயங்களைக் கற்ற. தழைமரம் - செழிப்பான மரம். **64.169.** கொண்டாடி - புகழுரைகள் கூறி. **64.170.** இப்போது நம்பழிக்கு யீடாகப் பண்ணி வைத்தோம் - 'சிவபெருமானின் திருவிரலில் மோதிரமாய் இருக்கின்ற காலத்தில், விரலில் தன்னை அறியாமல் விஷத்தை இறைவன் விரலில் கக்கி அதற்கு பரிகாரமாய் மண்ணுலகம் வந்து முனியின் மூலம் மரத்தைத் தளிர்க்க வைத்த' நிகழ்வை இவ்வரி புலப்படுத்துகிறது.

---

சு.சொல் : 1. மென்றறிவோம் 2. பிளைப்பான் 3. சற்பமது 4. சன்னாசி 5. உரைத்தமொளி 6. சீரி 7. பளிக்கு

I'll tell you what, if you can do
As I ask you to, wonder it'll be.
This mango tree with fruits and flowers'
I'll bite, so that it goes up in smoke.
After the green tree turns to ashes,
If you bring it back to life as its now
The dead will live for the world to wonder.
O learned sage, then, I'll believe you!"
The snake spoke so and the sage assented.
He asked the snake to bite the rich green tree.
Listening to the sage, the snake agreed and hissed
In anger, resembling that of the sage.[1]
It opened his jaws wide and bit the tree.
All the branches with fruits, raw and ripe
To ashes were reduced ; the learned sage
Brought it back to life as it was before.
All praises, the snake celebrated him.
"Good deed's done, compensating the bad.[2]

1. Vaciṭṭar. 2. When it was a ring in the finger of Lord Civaṉ, it injected poison into Him. To compensate, it was born on earth and through the sage caused the charred tree to come back to life.

அட்டமா நாகமதில் யானொருத்தன் தானாகும்
இட்டமுட னீயும் எழுப்புவாய் மாமுனியே

எங்களதி காரமென்று யெண்ணமெல்லாம் போக்காகும்
திங்களொளி ரத்தினமணி[1] சிரசி லிருந்தெடுத்துப்

பெரியவரா மென்றுமிகப் பேராய்வந்தான் கொடுக்க
அரியமணி வாங்கி அருந்தவசி போயினரே

நாகமணி யீய்ந்து நடந்ததுகா ணம்மானை
ஏகக்கயி லாசமதில் யீசருடன் சந்நிதிக்கே

## செனமேசெயனின் நல்லாட்சி

சென்றரவம் போனதற்பின் சினமேசன் தானிருந்து
அன்றலர்ந்த தாமரைபோல் ஆதித்தன் தன்வடிவாய்

இருந்து சிலகாலம் இந்திரனைப் போலிருந்து
திருந்துபுகழ்[2] கொண்டதொரு திறல்விசையன்[3] தன்பேரன்

தேசமொரு குடைக்கீழ்[4] செங்கோல் மனுநீதி
வாசமிகு பூவுலகில் மன்னவர்கள் போற்றிசெய்ய
ஏகசிங் காசனத்தில் இருந்தான்கா ணம்மானை.

**விருத்தம்**

65. பஞ்சவர் பேர னென்னும் பரிசித்தை விசங்கள் தீண்டித்
துஞ்சின தாகை யாலே சுதர்சின மேசன் தன்னை
மிஞ்சவே யரசு வைத்து வேந்த-ரும்மைத் தானும்
அஞ்சலென் றடிகள் போற்றி அவனியி லிருந்தா ரன்றே.

**64.171.** அட்டமாநாகம் - எட்டு பெரிய பாம்புகள்; அவை அநந்தன், வாசுகி, தக்கன், கார்க்கோடகன், பதுமன், மகாபதுமன் சங்கபாலன், குளிகன் என்பன. **64.173.** அதிகாரம் - ஒழுங்குமுறை. **64.174.** திங்களொளி ரத்தினமணி - சந்திரனைப் போல ஒளிர் விடுகின்ற நவரத்தினங்களில் ஒன்றான மாணிக்கம். **64.175.** இகப் பேராய் வந்தான் - இவ்வுலகில் சாபத்துடன் வந்தவன்; கார்க்கோடன் என்னும் பாம்பு. **64.176.** தவசி - தவமுனி. **64.178.** ஏக - செல்ல. கயிலாசமதில் ஈசருடன் சந்நதி - பாம்பானது சாபத்தை இவ்வுலகில் பிறந்து தீர்த்துக் கொண்டமையை இத்தொடர் உணர்த்தியது. **64.180.** ஆதித்தன் - சூரியன். **64.182.** திறல் விசையன் - திறமையான அர்ச்சுனன். பேரன் - கொள்ளுப்பேரன்.. **64.184.** வாசமிகு - புகழ் மிகுந்த. **64.185.** ஏக சிங்காசனம் - ஒப்புமை கூற முடியாத மிகப் பெரிய சிம்மாசனம். **65.1.** பஞ்சவர் - பாண்டவர். **65.2.** துஞ்சினது - மாண்டு போனது. சுதன் சினமேசன் - இளவரசனான செனமேசெயன். **65.4.** அஞ்சலென்று - அஞ்ச வேண்டாம் என்று. அவனி - உலகம்.

---

சு.சொல் : 1. ரற்றினமணி 2. திருந்துபுகள் 3. திரல்விசையன் 4. குடைக்கீள்

I am one of the great eight snakes.[1]
O sage from the curse release me please!
Our rule goes the way our thoughts do go."
From its head it took a ruby that shone
Like the rays of the moon.
The snake that came to the earth with
A curse gave it to the great sage.
Taking the rare ruby, the sage went off.
Giving the ruby off' the snake went to
Kailāsh,[2] the sanctun of the supreme God.

**The Noble rule of Jaṉamējeyaṉ**

After the snake was gone, Jaṉamējeyaṉ
Like a fresh lotus, remained, shining like the sun.
Like God Intiraṉ he stayed for awhile.
The great grandson of the famed Vijayaṉ,
Whole country under one rule regined.
Just, following the *edicts of Maṉu*
In glory ruled the world, all kings praising.
From a great throne he was ruling.
As the snake bit Paricittu
The grandson of the Pāṇṭavars died.
The prince, Jaṉamējeyaṉ
Outshining all in glory took over.
He advised the subjects not to fear.
They paid respects to him as he ruled.

1. They are, Anantaṉ, Vasuki, Takkaṉ, Kārkōṭaṉ, Patumaṉ, Mahā Patumaṉ, Caṅka Pālaṉ, Kuḷik
2. Mount Kailāsh, the abode of Lord Civaṉ.

66. இப்படி யநேக[1] காலம் இருந்தர சியற்கை செய்து
சொல்படி[2] தவறா வாண்மை சேர்வர் நடத்தல் செய்து
முப்படி ஞாயம் போலே முன்னவ னிவனா மென்ன
அப்படி யிருந்து பாரில் அவனியை யாளும் நாளில்.

67. ஆகம வேத ஞானம் அருந்தமிழ்க்[3] கவிதை நூல்கள்
பாகமா யுணர்ந்து கேள்க்கும் பத்திசெய் பெரியோர் தன்பால்
போகவும் வரவுந் தண்மை புகழது மதுர மோங்க
ஏக சிங்கா சனத்தில் இருந்துடன் வாழும் நாளில்.

நடை

68. பார்த்தன்[4] வாழவீமன் பாலன் பரிசித்துவுட
யேற்ற தொருபாலன் இராசன் சினமேசன்

சீற்றமுடன்[5] பாரில் செங்கோ லதிகாரம்
தோற்றமுள்ள நீதி துலங்கு மாமதிபோல்

கத்துங்[6] கடல்சூழும் காசினியெல் லாம்விளங்க
முற்றும் நவமணிபோல் முளைத்தெழுந்த ரற்றினம்போல்

வந்தான்காண் ராசன் மன்னன் சினமேசன்
விந்தமலர் போல விச்சிதமாய்ச் சிங்காரம்

தங்கி யிருக்குந் தாழ்மணி மார்பன்
பொங்குபுகழ்[7] பூரணமாய்ப் பூலோக நாயகமாய்

இறைமுறைமை[8] யாறிலொன்று எள்ளளவு மீறாமல்
புரையுடைய தன்மரெனப் பூலோக மாளுகிறான்

66.1. அரசியற்கை - அரசு ஆட்சி முறைமை. 66.3. முப்படி ஞாயம் - முன்னால் கூறப்பட்ட நூல்களிலுள்ள நியாயம். முன்னவன் - முதன்மையானவன்; இங்குச் செனமேசெயனைக் குறித்தது. 66.4. அவனி - உலகம். 67.1. ஆகமம் - ஆகம நூல். 67.2. பாகமாய் - பக்குவமாய். கேள்க்கும் - கேட்கும். பத்தி - பக்தி. 67.3. தண்மை புகழது - குளிர்ச்சி வாய்ந்த புகழ். மதுரம் ஓங்க - இனிமையுடன் சிறக்க. 68.1. அவீமன் பாலன் - அபிமன்யுவின் புதல்வன். 68.3. சீற்றமுடன் - அரசாணை செலுத்தும் முறையால் சினத்துடன். 68.4. துலங்கும் - விளங்கும். மா மதி - பெரிய சந்திரன். 68.5. கத்துங் கடல் - ஒலிக்கும் கடல். 68.6. அரற்றின போல் - ஒலித்ததைப் போல. 68.8. விந்த மலர் - தாமரை மலர். விச்சிதமாய் - சிறப்பாய். சிங்காரம் - அழகு. 68.9. தாழ்மணி மார்பன் - நீண்ட மணி மாலையைக் கழுத்தில் அணிந்த மார்பினன். 68.10. பூரணமாய் - முழுமையாய். பூலோக நாயகம் - உலகத்திற்குத் தலைவன். 68.11. இறைமுறைமை - வரிவிதிப்பு நிலை. எள்ளளவு - 'எள்' என்னும் சிறு தானிய அளவு; இங்கு 'சிறிதளவு' என்பதை மிகைப்படுத்த ஒப்புமை கூறப்பட்டது. 68.12. புரையுடைய - உயர்ச்சியுடைய. தன்மரென - தர்மரைப் போன்று.

சு.சொல் : 1. அனேக 2. சொல்ப்படி 3. அருந்தமிள் 4. பாத்தன்வாள் 5. சீத்தமுடன் 6. கற்றுங் 7. பொங்குபுகள் 8. இரைமுரைமை

Ruling thus he was there for sometime.
Keeping words, conducting himself well,
Advice from ancient books following.
"Our leader is a pioneer!"
People praised him so as he ruled.
He had knowledge of the scriptures
And chaste Tamiḷ poems too.
To experts in these and pious elders
For knowledge, the king went.
In glory he was ruling the land.
Pārttaṉ's son was Apimaṉyu; his son
Paricittu's worthy son, king
Jaṉamējeyaṉ with vigour and
With authority ruled the land.
Justice unfailing, like the cool big moon
On earth surrounded by the noisy seas;
Like precious gems, a gem of gems,
King Jaṉamējeyaṉ,lotus like went about.
Wearing very long chains on his chest,
Glory embodied, as the lord of the world
One sixth of produce he collected
As taxes, never any more.
Like famed Tarmar he was ruling the land.

## அத்தினாபுரத்திற்கு வியாசமுனி வருதல்

அத்தினா புரத்தில்நன்றாய் அரசாழும் நாளையிலே
சத்திய வாண்மை தவறாத வேதமுனி

நாற்றிசையுங்[1] கொண்டாட நன்னகரிதன் னில்வந்தான்
வாழ்த்தி யடிபணிந்தார் மகுடமுடி மன்னரெல்லாம்

## செனமேசெயன் முனியை வரவேற்றல்

இருக்குந் தறுவாயில் இளவரசு தான்முழங்க
உருக்கமுடனே முனியை யுண்மையுடனே தொழுது

போற்றிச்சின மேசன் பூரித் தகமகிழ்ந்து[2]
ஏத்திச்சிங் காசனத்தில் இருத்தியே தான்வணங்கிக்

கனிவகைகள் சர்க்கரைதேன் கற்கண்டு சீனிமுதல்
இனியபலாக் கனியும் இன்பமுள்ள மாங்கனியும்

வாழைக்[3] கனியும் மாதளையின் தன்கனியும்
தாழைக் கனியுஞ் சகலகனி யுள்ளதெல்லாம்

கொண்டுவந்து வைத்துக் குருவே சரணமென்று
தொண்டுபண்ணி நின்றான் தொழுது மிகவணங்கி

நல்லவே தவமுனிவன் ராசனையுங் கொண்டாடி
வல்லதொரு மாங்கனிதேன் வாரி யமுதுசெய்து

தாபமது தான்தீர்ந்து தபோதனரும் வீற்றிருந்தான்[4]
ஆவ லுடனே யரசன் மனம்மகிழ்ந்து[5]

நாகரிக மானதொரு ராசன் சினமேசன்
தாகமுடன் வேதமுனி தன்னிடத்தில் வந்துநின்று.

68.14. வேதமுனி - வியாசர். 68.15. கொண்டாட - புகழ்ந்துரைக்க. 68.17. இருக்குந்தறுவாயில் - அவ்விதம் அரசாட்சி நடந்து கொண்டு இருக்கும் பொழுதினில். முழங்க - வாழ்த்தொலிகள் எழுப்ப. 68.18. உருக்கமுடன் - மனஎழுச்சியுடன். 68.19. பூரித்து - மன மகிழ்வால் இறும்பூது எய்தி. 68.23. மாதளை - 'மாதுளை' என்பதின் பேச்சுவழக்கு. 68.24. தாழைக்கனி - தென்னை மரத்துக்கனி; தேங்காய். 68.26. தொண்டுபண்ணி - ஊழியம் செய்து. 68.27. ராசன் - செனமேசெயன். கொண்டாடி - புகழ்ந்துரைத்து. 68.28. வல்லதொரு - கிடைப்பதற்கு அருமையானதொரு. அமுதுசெய்து - உண்டு. 68.29. தாபம் பசியால் ஏற்பட்ட துன்பம். தபோதனர் - தவ வல்லமை மிக்கவர்; வியாசர். 68.32. தாகமுடன் - ஆசையுடன்.

---

சு.சொல் : 1. நாத்திசையுங் 2. மகிள்ந்து 3. வாளை 4. வீத்திருந்தான் 5. மகிள்ந்து

### Sage Viyācar goes to Hastiṉāpuram

From Hastiṉāpuram, he was ruling well.
The *vēdic* sage of words who was just,
For all to cheer, once came to the good town.
All crowned kings paid respects, fell at his feet.

### Jaṉamējeyaṉ welcomes the sage

The king cheered up by the people,
With true love, paid respectsto the sage.
With reverence praised and with a joyful heart
Placed the sage on the throne and obeisance paid.
Fruits, sugar, honey, rock candy,
Sweet jack fruits and juicy mangoes,
Fruits of palm and many more fruits,
He brought and placed before the sage and said,
"O *guru* you're our very refuge!"
He paid obeisance and by his side he stood.
The holy sage appreciated the king.
He partook honey, mangoes and the tasty food.
Fatigue gone, relaxed, he sat down.
With eagerness, the joyful and
Civilized king Jaṉamējeyaṉ
By the side of the sage went.

## முனியின் பெருமையைச் செனமேசெயன் கூறல்

விருத்தம்

69. பாரத முடியு முன்னாள் பயின்றதோர் வேத மெல்லாம்
மேர திலாதி யாக விநாயகன் கோடு கொண்டு
சீரது சிறக்கக்[1] கீர்த்தி[2] செகந்தன்னி லுதித்த வேந்தன்
போரது முடிய வென்றே புகன்றது தேவர் தாமே.

70. குருகுலத் தரசர்க் கெல்லாங் குருவென வந்து தோன்றிக்
கருவுரு வகுத்துக் காட்டிக் காசினி யாளு மென்று
அருகுதா னிருத்திப் புத்தி அறிவுடன்[3] புத்தி சொல்லிப்
பெருகுசீர் புவனந் தன்னில் பொரும்பகை வருவ துண்டோ.

71. அஞ்சலென் றமர்த்தி யேநீர் அறிவினால் விபரஞ் சொல்லித்
துஞ்சியே போகா வண்ணந் துயரது தீர்ப்ப தன்றி
மிஞ்சவும் பகைசெய் வாரோ வேதமா முனியே யுந்தன்
வஞ்சமே வஞ்ச மல்லால் மற்றொன்றால் முடியு மோதான்.

## வியாசர் முக்காலத்துப் பயனையும் உரைத்தவர் எனல்

நடை

72. எத்திசையுங் கொண்டாடு மெங்கள் குலத்தரசே
சத்திய வாண்மை தவறாத மாமுனியே

சீரான ஐவருடன் சிறந்ததிரி[4] யோதனைப்
பாராழும்[5] நாளில் பகைகளொன்றும் வாராமல்[6]

தாராள[7] மாகத் தன்மருடன் தம்பியரும்
பேரான[8] பூதலத்தில் பிசகுசற்றும்[9] வாராமல்[10]

69.2. மேரதில் - மேரு என்றும் மலையினிலே. கோடு - கொம்பு; தந்தம். 69.3. சீரது சிறக்க - பெருமைகள் சிறக்க. கீர்த்தி -புகழ். 70.1. குருகுலம் - பாண்டவர் குலம். 70.2. கருவுரு வகுத்துக் காட்டி - ஆட்சி நடத்தும் நுட்பங்களை விளக்கிக் கூறி. 70.3. அருகுதான் - பக்கத்தில்தான். 71.1. அமர்த்தி - சமாதானம் செய்து வைத்து. 71.2. துஞ்சியே - மடிந்தே. 71.3. மிஞ்சவும் - மீண்டும். 71.4. வஞ்சமே வஞ்சம் - 'மகாபாரதப் போரினை உன்னால் தவிர்க்க முடியும் என்ற போதிலும் நீ அதை நடக்கும்படி செய்தாய்' என்ற பொருளில். 72.3. சீரான - சிறப்பான. திரியோதனன் - துரியோதனன். 72.6. பேரான பூதலம் - மிகச் சிறப்பு வாய்ந்த உலகம். பிசகு - தவறு.

சு.சொல் : 1. சிரக்கக் 2. கீற்தி 3. அளிவுடன் 4. சிரந்த 5. பாறாழும் 6. வாறாமல் 7. தாறாள 8. பேறானபூ 9. பிசகுசத்தும் 10. வாறாமல்

### Ja<u>n</u>amējeya<u>n</u> speaks about the greatness of the sage

"You learned *the Vēdas* before the Bharath war.
At Mēru when Vināyaka<u>n</u> was writing with his tusk,
Our great sage said that the war would end.
As the king was born to the glory of the earth.
*Guru* you were to the *Guru* clan.
You explained the techniques of governance.
Keeping kings by the side, advising them.
If so, how could there be enmity?
'Fear not'! you detailed them with intellect.
You saved many from death, thereby mitigating grief.
Will someone again dare to battle?
Oh great *vēdic* sage to your shrewd
Cunning is there one to match at all?
O, great Lord of our clan, who
All those on the earth in esteem hold.
O manly sage of words who is just!
Along with the five[1], the great Turiyōta<u>n</u>a<u>n</u>
When were ruling, there were no foes.
Generously Tarmar and the brothers were ruling
The glorious earth without faults.
Couldn't you have brought an order there?

1. With accuracy you predicted the future happenings.

மார்க்கப் படுத்திவைக்க வாராதோ தேவருக்குத்
தீர்க்கமுடன்[1] முன்னாள் திரிகாலத் துள்ளபலன்

### வியாசர் விநாயகரைக் கொண்டு பாரதம் எழுதியவர் எனல்

இன்ன படியெனவே யீசுரர்முன் தானுரைத்தீர்
சொன்னமொழி[2] தப்பாமல் தோற்றினது மேருவினில்

எழுதும் விநாயகனே என்றிறையோன் தான்கூறத்[3]
தொழுது விநாயகனார் சொன்னதொன்றுந் தப்பாமல்

ஒருகொம் பொடித்தெழுதி யூணிவைத்தார் உங்களுரை
பெருகு புகழ்வேத வியாசரென்று பேருமிட்டு

### பிற பெருமைகளையும் சனமேசெயன் கூறுதல்

நிகரில்லா வேதாந்தம் நிலைகண்டு நின்றோனே
பகருமொழி[4] கேளாத பேருமுண்டோ பாருலகில்

குருகுலத்தோர்க் கெல்லாங் குருவான மாவிருசி
அருகிருந்து புத்திசொல்லும் ஆயனு மாயிருந்து

விண்ணம் வராதபடி வேதியரே சொன்னீரால்
மன்னவக ளெல்லாரும் வாளாதிருப் பர்களே

### கௌரவர்களும் படைகளும் அழிந்தமைக்குச் சனமேசெயன் வருந்துதல்

எந்தவித மோகிருபை[5] ஏதென் றறியேனே
உந்தன் மனதிலுற்றது ஒருவருக்குந் தோன்றாது

வஞ்சனைகள் செய்தீரே மாமுனியே யிப்போது
உன்செயலே யல்லாது உலகத்தில் வேறுமுண்டோ

72.7. மார்க்கப்படுத்தி - நெறிமுறை படுத்தி. வாராதோ - செய்ய முடியாதோ. 72.8. தீர்க்கமுடன் - உறுதியுடன். திரிகாலம் - முக்காலம்; அவை இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்பன. 72.9. ஈசுரர் - ஈஸ்பரன்; விநாயகர். 72.10. தோற்றினது - தோன்றியது. 72.13. ஊணி வைத்தார் - ஊன்றி வைத்தார்; 'கல்வெட்டென பொறித்தார்' என்றும் அமையும். 72.14. பேர் - பெயர். 72.15. நிலைகண்டு - எல்லையைக் கண்டு. 72.16. பகருமொழி - கேட்கும் மொழி. 72.17. மாவிருசி - பெரிய ரிஷி; வியாசர். 72.18. ஆயன் - ஆசான்; குரு; 'ஆயன்' என்னும் சொல் குமரிமாவட்டத்தில் ஆசானைக் குறிக்கும் பொருளில் பெருவழக்காக வருவது. 72.19. விண்ணம் - பின்னம்; குறைவு. வாளாதிருத்தல் - அமைதியாக இருத்தல். 72.21. கிருபை - கருணை. 72.22. மனதிலுற்றது - மனதில் இருப்பது. தோன்றாது - தெரியாது. 72.23. வஞ்சனைகள் செய்தீரே மாமுனியே - 'இனி என்ன நடக்கப் போகிறது என்பதைத் தெரிந்திருந்து அதை மறைத்து வஞ்சனை செய்தீரே' என்ற பொருளில். 72.24. சியல் - செயல்.

---

சு.சொல் : 1. தீற்கமுடன் 2. சொன்னமொளி 3. தான்கூற 4. பகருமொளி 5. கிறுபை

"Lose not a word spoken on the Mēru
Write down everything, Vināyakaṉ." said the Supreme God.
Worshipping, Lord Vināyakaṉ
Leaving not a word you said
Broke one tusk and your words wrote down.
'Great Vēdic Viyācar', He named you.
You fathomed the unfathanable *vēdas*.
On earth is there one who doesn't heed you?
O *guru* of the *Guru* clan!
O great sage stay by our side and advise us!
Pray, be our guru and from faults guard us.
When you speak, kings in silence will heed.
About your compassion I know not.
What is on your mind no one knows.
Now you're hiding things from us O sage!
Is there action apart from that of yours?

தேறார்த் துரோணர்மிகு சொல்லுங் கிருபாசாரி
தாரார்திரி யோதனனுந் தம்பியொடு நூற்றுவரும்

மற்றுமுள்ள மன்னர் மகுடமுடி வத்தனரும்
சுற்றமொடு ராசா துரைமக்களுள் ளோரும்

எண்ணவொண்ணாச் சேனை யெழுகுருணி தானதளமும்
மண்ணாசையு மறந்து மாண்டிறந்து போனதெல்லாம்
உன்னாலே யல்லால் ஒருவர்மேல் குற்றமுல்லை

தெரியவகை யாகச் செப்பினீ ராமாகில்
பிரியா திருந்துமிகப் பேதமற்று வாழாரோ[1]

## பாண்டவர்கள் வைகுண்டம் ஏகியதின் காரணத்தைச் செனமேசெயன் வினாவுதல்

இறந்தாரே[2] நூற்றுவர்கள் யிருந்தாரே பஞ்சவர்கள்
சிறந்திருந்த[3] பஞ்சவர்கள் செடத்தோடே யிப்போது

விந்தைகிரி வைகுந்தம் மேவியே போனார்கள்
அந்தவகை யெனக்கு அறியவேசொல்[4] லுமென்றார்

சொல்லுமென்று கேட்ட துரையைமுனி நோக்கி
அல்லலறச் சொல்லுகிறேன் யான மொழியதுகேள்[5]

## வியாசரின் பதிலுரை

மூண்ட வுலகிலுள்ள முன்னாளில் உள்வினையை
மீண்டொ ருவராலும்[6] விலக்குவா ருண்டோதான்

**72.25.** தேறார் - துணிய மாட்டார். துரோணர் - பாண்டவர் மற்றும் கௌரவர்களுக்குக் குருவாக இருந்து கல்வி மற்றும் வித்தைகளைக் கற்றுக் கொடுத்தவர்; பாரதப் போரின் போது கௌரவர்கள் சார்பில் போர் செய்தவர். கிருபாசாரி - இவரும் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் வித்தைகளைக் கற்றுக் கொடுத்தவர். **72.26.** தாரார் - மலர் மாலை ஆர்க்கின்ற. திரியோதனன் - துரியோதனன். **72.27.** மகுடமுடி வத்தனர் - கிரீடம் அணிந்த மன்னர்கள். **72.29.** எண்ணவொண்ணா - எண்ணுதல் செய்ய முடியாத; நினைத்துப் பார்க்க முடியா எனினும் அமையும். குருணி - ஓர் அளவு. தான தளம் - படைக்கூட்டம். **72.32.** வகையாக - முறையாக. செப்பினீர் - கூறினீர். **72.33.** பிரியாதிருந்து - பாண்டவர்களும் கௌரவர்களும் ஒருவர் மீது ஒருவர் பகை கொள்ளாதிருந்து. பேதமற்று - வேறுபாடு இல்லாமல் வாழாரோ - வாழ்ந்திருக்க மாட்டாரோ; வாழ்ந்திருப்பார் என்ற பொருளில். **72.35.** செடம் - உடம்பு. **72.36.** விந்தை கிரி - வியப்பு தரும் மலை. **72.38.** துரை - செனமேசெயனைக் குறித்தது. **72.39.** அல்லற - மனத்துள் உண்டாகிய துன்பம் தீரும் படி. மொழியது - கூறுகின்றதை. **72.40.** மூண்டவுலகு - பெரிய உலகு. உள்வினை - ஊழ்வினை.

சு.சொல் : 1. வாளாரோ 2. இரந்தாரே 3. சிரந்தாரே 4. அரியவேசொல் 5. மொளியதுகேள் 6. வறாலும்

Turōṇar who could no decision make,
Kirupācāri who things could tell,
Turiyōtaṉaṉ wearing garlands, his brothers
A hundred, many other crowned kings,
Relatives, kings and nobles all
And a numberless army, losing desire,
Are dead and gone and you are the cause.
No one else can be blamed for it.
Had you advised them properly,
Won't they have lived divisionless?

**Jaṉamējeyaṉ enquires of the reason for the Pāṇṭavars going to *Vaikuṇṭam***

After the hundred[1] had perished,
The Pāṇṭavars who in grandeur lived
With their bodies to the strange hill, *Vaikuṇṭam* went.
Do tell us about it O sage!"
The sage looked at the king who asked the question.
"I'll tell, so you get rid of your grief.
Listen well to the words of wisdom.
In the world how can anyone
Alleviate the effects of *karrna*?

1. Kauravars.

ஆகையி னாலே அவர்கள்செய்த தீவினையால்
மாய்கையாய் வந்து வளைந்ததுகாண் மன்னவனே

என்றுமுனி தானும் எடுத்துரைத்த செய்தியெல்லாம்
நின்றுசென மேசன் நினவாகத் தான்கேட்டு

### வியாசர் உரை கேட்ட செனமேசெயன் பதில்

நினையாதெல் லாம்நினைந்து நெடுமூச்சு விட்டேகித்
தினையைப் பனையாக்கித் திரணமதை மேர்வாக்கிக்

கைக்குங்கை யில்லாமல் கால்வேறு தலைவேறாய்
மெய்க்குமெய் யில்லாத விகடமதைத் தான்மூட்டி

ஆட்டிவைத்துப் பாவைதன்னை யாடவிட்டுப் பாத்திருந்து
கோட்டிமிகப் பண்ணியெந்தன் குலத்திலுள்ளோ ரத்தனையும்

கூட்டித் தணலைக் கொளுத்திவிட்ட[1] சூத்திரந்தான்
மூட்டிவினை செய்த முனியேயினிக் கேளும்[2]

### விதிப்பயனின் விளக்கத்தைச் செனமேசெயன் கேட்டல்

தன்மரென்று பேரெடுத்துத் தாரணியி லில்லாமல்
கன்மமே செய்தவரைக் காசனியில் தன்மரென்றால்

என்னவென்று சொல்லி யெடுத்துரைப்பே னும்மிடத்தில்
தண்மையு மற்றுச் சனமு மினமுமற்று

இன்மைதனில் தானவர்கள் யெல்லோரும் மாண்டி(ருந்தார்)
வன்மம் பிடித்து வதைசெய்த மாபாவி

இருந்தரசை யாளாமல் என்னிதென்றும் பாராமல்
வருந்தாமல் வைகுண்டம் வானேறிப் போனதென்ன

72.43. மாய்கையாய் - மாயமாய். வளைந்தது - சுற்றியது. 72.45. நினைவாக - பொறுமையாக. 72.47. தினை - ஒரு வகை சிறிய தானியம். திரணம் - துரும்பு; புல் எனினும் அமையும். மேர்வாக்கி - மேரு மலையாக மாற்றி; 'மேர்' என்பது மேரு என்பதின் திரிந்த வடிவம். 72.49. மெய் - உடம்பு. விகடம் - வேற்பாடு; பிரிவு. 72.50. ஆட்டி வைத்து - 'சண்டையிட வைத்து' என்ற பொருளில். பாவை - பொம்மலாட்ட பொம்மை. பாத்திருந்து - 'பார்த்திருந்து' என்பதின் பேச்சு வழக்கு. 72.51. கோட்டி - துன்பம். 72.52. தணல் - நெருப்பு. சூத்திரம் - உபாயம். 72.53. வினை - கெடுதல் செயல். 72.54. தாரணி - தரணி; உலகம். 72.55. கன்மம் - தீய செயல்கள். 72.57. தண்மை - குளிர்ச்சி. சனமும் இனமும் - மக்களும் உறவினர்கள் கூட்டமும். 72.58. இன்மைதனில் - இவ்விடத்தில்தான். 72.59. வன்மம் - சூழ்ச்சி. வதை - உயிர்க்கொலை. மாபாவி - வருத்தத்தால் முனிவர் வியாசரை இவ்விதம் செனமேசெயன் கூறினான்.

---

சு.சொல் : 1. கொழுத்திவிட்ட 2. கேழும்

Because of the evil deeds they did,
The effects of which as magic caught them."
The great sage thus explained in detail, which
Janamējeyan, stood listening to.

**Janamējeyan's reply**

He thought unthinkable thoughts and sighed.
He said,"You made a mere mole hill a mountain
And could make mere grass a Mēru.
Because of you people had their
Hands, legs and heads severed.
You created false divisions among people.
You pulled strings; like puppets they played.
You watched with glee as they grew mad.
You gathered all of my ancestors,
Your tricks had seen them to ashes turn.
O sage who caused all this evil, listen!
Men like Tarmar don't live here anymore.
If we call an evil doer Tarmar
What an I say and explain to you?
With no peace and no kith and kin
Here in this place they all had died.
Vowing so you exterminated all.
You great sinner, you killed them all.
They, not ruling by staying here,
Why went to *Vaikuṇṭam* painlessly?

## வியாசர்மீது சௌமேசெயன் வருந்தியும் சினந்தும் உரைத்தல்

சொல்லுங்காண் மாமுனியே தோற்றவே யெந்தனக்கு
வெல்லும் விதியும் விதிப்பயனுங் காணேனே

தோற்றதுகாண் எந்தனக்குத் தோச முகக்கெனவே
ஏற்றும் விபரமினி யொன்றுங் காணேன்

பொறையுடைய[1] தன்மரென்றும் பொய்சொல்லா மெய்யரென்றும்
நிறையுடையார்[2] ஆமாகில் நீருரைத்த புத்திதன்னைக்

கேளாரோ சற்றுங் கிருபையுடன் பாராரோ
வாழாரோ[3] பாரில் மைந்தருடன் செல்வமும்

தின்மைசெய் தோர்மாண்டு தேசமதை யிழந்தார்[4]
நன்மைசெய் தோர்பாராண்டு நாளு மிருக்கரிதாய்

ஏன்தான்பதி யிழந்து[5] ஏகினார் வைகுண்டமதில்
நான்தான் புவியாள ஞானமோ யெந்தனக்குப்

பாரதப்போ ருண்டுபண்ணி பகைமுடியு முன்னாளில்
மேர்புதனில்[6] தானெழுதி விட்டவரும் நீரல்லவோ

நினைத்தபடி முடிக்க நீர்துணிந்தீ ரல்லாது
மனங்கள் தன்னைப் புண்ணாக்கி வகுத்துரைக்க வேணு(மட்டும்)

புத்திதன்னைச் சொல்லிப் பொருந்த நினையாமல்
சத்துருவாய் மாமுனியே சற்பினைகள்[7] செய்தீரே

தாராரும் வேந்தர் சமரில் முடிந்ததெல்லாம்
பார்ராய் முனியேகேள் பாவமெல்லா முந்தனக்குச்

சாராமல்ச்[8] சார்ந்திதுகாண் தப்பாது சொன்னேனே
தீராதபாவ[9] மிதுசெய்தீர் காண்மா முனியே

72.62. தோற்றவே - தெளிவு பிறக்கவே. 72.69. தோசம் - குறை. 72.65. ஏற்றும் - மனம் ஏற்றுக் கொள்ளுபடியான. 72.66. பொறை - பொறுமை. 72.67. ஆமாகில் - ஆகுவாரேயானால். 72.68. கேளாரோ - கேட்கமாட்டாரோ; 'கேட்பார்' என்ற பொருளில். கிருபை - இரக்கம். 72.70. திண்மை - வலிமை. 72.71. இருக்கரிதாய் - இருப்பதற்கு அருமையாய். 72.72. பதி - நாடு. 72.73. ஞாயம் - நியாயம். 72.75. மேர்பு - 'மேரு' மலை. 72.76. நினைத்தபடி முடிக்க - பாரதப்போரை நினைத்தப்படி முடிக்க. 72.77. வேணுமட்டும் - வேண்டிய அளவு. 72.78. பொருந்த - மனத்துள் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் ஏற்பட்ட பகையைப் பொருத்த. 72.79. சத்துரு - பகை. சற்பினைகள் - சதி கேடுகள்; வஞ்சகம் எனினும் அமையும். 72.80. சமர் - போர். 72.82. சார்ந்திது - 'சார்ந்தது' என்பதின் பேச்சு வழக்கு.

---

சு.சொல் : 1. பொரையுடைய 2. நிரையுடைய 3. வாளாரோ 4. யிளந்தார் 5. யிளந்து 6. மேற்புதனில் 7. சற்பிளைகள் 8. சாறாமல்ச் 9. தீறாதபாவ

O great sage tell me so I learn!
I can't see ways to win the fate, its effects.
If that were the case, won't he heed
Your advice with compassion, tell me?
It seems the evil effects are those of yours.
An acceptable explanation for it, I don't get.
The patient Tarmar never tells lies.
If that were the case, won't he heed
Your advice with reverence, tell me?
If it were so he would be living now,
Here, with children and a huge wealth?
Those evil doers lost land and died.
But the doers of good, why could not rule?
Why did they renounce and went to *Vaikuṇṭaṁ*?

### வியாசர் நீ விதியை நோகாமல் என்னை நொந்தது ஏன் எனல்

என்றுசென மேசன் இவ்வார்த்தை தானுரைக்க
நன்றுகா ணென்று நகைத்துமுனி யேதுசொல்வார்

தம்பியரே யிப்பிடிநீர் சமர்த்தாகப் பேசினதால்
எம்பியரே கேளும் இதமாகச் சொல்லுகிறேன்

வெம்பியெனை யுரைத்தாய் விட்டகுறை பாராமல்[1]
நம்பியுயிர் வாங்கும் நமன்தனையும் நோகாமல்

தலையிலெழுதி வைத்த சதுரமுகனை நோகாமல்
குலைசெய்யும் ருத்திரனை கூர்ந்துநீர் சொல்லாமல்

மாய்கைபலர் செய்யு மாயனையும் நோகாமல்
தாய்கமாக நம்மைச் சலித்துமிகச் சொன்னீரே

ஊழிவிதி யெனவே யொருமித்துச் சொல்லாமல்
காளிபெலி கொண்ட கதையுற்றுப் பாராமல்

பத்தியா யென்மேல் பருஞ்சுமையைத் தானேற்றி
முத்துஞ்சுமை தலையாய் மொழிந்தீர்[2] வகையாய்ச்

சுத்தும்வினை யவர்க்குஞ் சூழ்ந்ததையே[3] சொல்லுகிறேன்
கொற்றவனே கேளுமென்று[4] கூறலுற்றார்[5] மாமுனியும்

### கௌரவர்கள் தனது அறிவுரை கேளாது நடந்தமையை வியாசர் கூறல்

மன்னாகேள் நூற்றுவர்க்கும் வாய்த்ததன்ம ராயருக்கும்
முன்னாளில் புத்தி மொழிந்திலையே[6] யென்றுரைதீ

**72.85.** நன்றுகாண் – 'நீ கூறுவது நன்றாக இருக்கிறது' என்ற பொருளில். **72.86.** தம்பியர் - இங்குச் செனமேசெயனைக் குறித்தது. சமர்த்தாக - திறமையாக. **72.87.** எம்பியரே - என் தம்பியே. **72.88.** வெம்பி - மனக்குழப்பத்தில் ஏற்பட்ட வேதனையால். **72.89.** நமன் - எமன். **72.90.** சதுர முகன் - நான்கு முகங்களை உடையவன்; பிரம்மன்; 'சதுரப்பாடுடையவன்' எனினும் அமையும். **72.91.** குலை - 'கொலை' என்பதின் பேச்சு வழக்கு. ருத்திரன் - சிவன். **72.92.** மாய்கை - சூழ்ச்சி. மாயன் - கண்ணன். **72.93.** தாய்கமாக - முதன்மையாக. சலித்து - வெறுத்து. **72.94.** ஊழிவிதி - ஊழ்வினை. **72.95.** காளி பெலி கொண்ட கதை - அழிவுக்கு காரணமாகத் திகழும் சக்தி பலி கொண்ட நிகழ்வு; பாண்டவ கௌரவர் சேனை அழிவுக்குக் காளியே காரணமெனல். **72.96.** பத்தியாய் - முறையாய். பருஞ்சுமை - மிகுந்த சுமை **72.97.** முத்தும் - 'முற்றும்' என்பதின் பேச்சு வழக்கு. **72.98.** சுத்தும் - 'சுற்றும்' என்பதின் பேச்சு வழக்கு. வினை - விதி. **72.100.** தன்மராயர் - தர்மர். **72.101.** மொழிந்திலை - கூறாது விட்டீர்.

சு.சொல் : 1. பாறாமல் 2. மொளிந்தீர் 3. சூள்ந்ததையே 4. கேழுமென்று 5. கூரலுற்றார் 6. மொளிந்திலையே

For me to rule do I have enough knowledge?
You caused the Bharath war to end.
Sitting on the Mēru[1] you could decide on things.
You tried to end it as you had planned.
Sure you would have hurt their hearts.
Showing them the ways and advising them,
You could have brought them together, no?
But foe as you were, you divided them.
Great many kings in the war deceased.
See, O sage, aren't these things, sins of you?
I rightly said these things impartially.
O sage, the sin of yours can not be absolved!"

1. A mountain.

துய்ந்தவர்க்குப் புத்தி சொன்னதுவுமுண்டு கண்டீர்
நய்ந்தவருங் கேளாமல் நம்மையவர் தான்மீறிச்[1]

சூதுங் களவுந் துர்புத்தி[2] வஞ்சனையும்
வாதுமயிர் பிடியு மற்கட்டுங் கற்பினையும்

தாயாதி பாராட்டிச் சற்பினைகள் தான்விளைத்து
வாயாத ஞாயம் மற்றுங் கவடுசெய்து

உள்வஞ் சனைகள் உபாயம் மிகநினைந்து
கள்வரொரு நூற்றுவரும் காரூடமே பெரிதாய்

உபகாரஞ் செய்ததுபோல் உடந்தையாய்த் தானிருந்து
அபசாரஞ் செய்யும் அநியாய நிஷ்டூரம்[3]

வஞ்சனையே முற்றுமிக மாபாவி தானினைந்து
பஞ்சர்கள் சற்றுமிகப் பகையாதொ டுங்கிநிற்க
அஞ்சினபேர் வாழ்ந்தார்[4] அகந்தைசெய் தோர்தான்மறைந்தார்[5]

நடக்கும்புத்தி யுள்ளதெல்லாம் நாமவர்க்குத்[6] தானுரைத்தோம்
அடக்கமவர்க் கில்லையே அகந்தையே யல்லாது

## துரியோதனின் துர்புத்தி

சொன்னபடி கேட்பார்கள் தூயதொரு பஞ்சவர்கள்
என்னதான் சொன்னாலும் இவன்கேளான் மாபாவி

வாதுசொல்லி பஞ்சவரை வகையாய் வரவழைத்துச்
சூதுபொருது கொண்டு துரத்திவிட்டான் மாபாவி

**72.102.** துய்ந்தவர் - துன்பமுற்றோர். **72.104.** துர்புத்தி - மோசமான அறிவு. **72.105.** வாது - வீண் வாதம் செய்தல். மயிர் பிடி - 'ஒருவொருக்கு ஒருவர் தலைமயிரைப் பிடித்து அடித்துக் கொள்ளுதலை' குறித்தது. மற்கட்டு - மற்போருக்கு நின்றாற் போன்ற பிடிவாதம். கற்பினை - சதி. விளைத்து - செய்து. **72.107.** வாயாத ஞாயம் - பொருந்தாத நியாயம். கவடு - சூழ்ச்சி. **72.109.** கள்வர் ஒரு நூற்றுவர் - வஞ்சக மனம் படைத்த கௌரவர்கள். காரூடம் - ஞான வகைகளுள் ஒன்று. **72.111.** அபசாரம் - மோசமான செயல்கள். நிஷ்டூரம் - கொடுமை. **72.112.** முற்றுமிக - மிகுதியாக வளர. மாபாவி - கொடிய பாவி; துரியோதனன். **72.113.** பஞ்சவர் - பாண்டவர். பகையாதொடுங்கி - கௌரவர்களிடம் பகை கொள்ளாமல் பணிந்து. **72.114.** அஞ்சின பேர் - நீதி நியாயங்களுக்கு அஞ்சி வாழ்ந்தோர்; பாண்டவர். அகந்தை - மமதை. **72.118.** இவன் கேளான் - இவன் கேட்க மாட்டான்; இவன் என்றது துரியோதனனை. **72.119.** வாது - தர்க்கம். **72.120.** சூது - சூதாட்டம்.

சு.சொல் : 1. தான்மீரி 2. துற்புத்தி 3. நிஸ்டூரம் 4. வாள்ந்தார் 5. தோர்தான்மரைந்தார் 6. நாமவற்குத்

As Jaṉamējeyaṉ said these words,
"How unfair!" the sage laughed and spoke.
"O brother you cleverly spoke!
My brother[1], listen to what I have to say.
I'm deeply hurt because you said
That I was the cause for all these things.
Not faulting Yamaṉ[2] who takes one's life,
Not faulting Pirammaṉ[3] who decides one'sfate,
Not faulting the scheming Māyaṉ[4],
You faulted me and in hatred spoke.
Not saying it's just an act of fate,
Not caring to look into the
Sacrificees Kāḷi[5] did claim,
You weighed me down, laying blames on me!
You spoke much of the encircling evil.

1. Not a relationship, sometimes used as an endearing or mocking term. 2 God of death. 3. God of creation 4. Viṣṇu. 5. War goddess.

### பாண்டவர்களின் துயரநிலை

கானகத்தே திரிந்தார் கண்ணுக்கு மெட்டாமல்
தானதவம் மேலாய்த் தன்மம் பெரிதாகி

ஞானசிவ கதைகள் நற்கோவில் நல்வசனம்
மானமவி மானமுடன் வனவாசமே திரிந்து

### கண்ணன் பாண்டவர்களுக்குத் துணையிருத்தல்

அங்கொரு துன்பம் அநியாயமே[1] நினைந்து
எங்குந் திருமால் இவர்வசமே தானிருந்து

காத்தார்[2] வினைதீர்த்தார் காயாம்பு மேனியனார்
ஏத்தார் முழுதுமிவர் ஈடேறப்[3] பஞ்சவர்கள்

### துரியோதனன் பாண்டவர்களுக்கு நாடு தர மறுத்தல்

காட்டி லிருக்குங் கசடனுக்கு வேளைவரில்
தாட்டீக மாகவில்லி தற்காற் றிவ்ன்தனையும்

மீட்டவனைக் கூட்டி வெளியேற விட்டாலும்
நாட்டில்வா ரேதேயென்று நடுங்க மொழிந்திடுவான்[4]

தீதுசெய்தான் பாவி திரியோதரன் தானும்
ஏது மறியா திருப்பார்கள் பஞ்சவர்கள்

பொறுத்தா[5] ரரசாண்டார் பொங்கினார் காடுறைந்தார்
ஒறுத்தார்கள்[6] பஞ்சவர்கள் உறைந்தார்கள் நூற்றுவர்கள்

**72.121.** கண்ணுக்கு மெட்டாமல் - கௌரவர்கள் கண்ணுக்கும் தெரியாமல். **72.122.** தன்மம் - தர்மம். **72.124.** மானம் அவிமானமுடன் - 'வாழ்க்கை நிலை தாழ்ந்த பொழுதும் மானமுடனும் பெருமையுடனும்' என்ற பொருளில். **72.125.** துன்பம், அநியாயமே நினைந்து - 'பாண்டவர்களுக்கு வனத்தில் ஏற்படும் துன்பம் மற்றும் நியாயத்திற்குப் புறம்பான செயல்கள் நடைபெறுவதை நினைத்து' என்ற பொருளில். **72.127.** வினை - துன்பம். காயாம்பு மேனியனார் - காயம் பூ போலும் நீல நிறமுடைய மேனியை உடையவர்; கண்ணன். **72.129.** கசடன் - கீழ் மக்கள்; துரியோதன் பாண்டவர்களைக் கூறியது. வேளை - வனவாசம் முடிந்து நாடு திரும்பும் வேளை. **72.130.** தாட்டீகம் - தாட்டிகம்; அகந்தை. வில்லி தற்காற்று இவன் தனையும் - 'வில்லினை உடையவனாகிய கண்ணன் தன்னைக் காத்ததுடன் பாண்டவர்களைப் பாதுகாத்து' என்ற பொருளில். **72.136.** ஒறுத்தார் - தண்டித்தார்.

---

சு.சொல் : 1. அனியாயமும் 2. கார்த்தார் 3. ஈடே ரப் 4. நடுங்கமொளிந் 5. பொருத்தாரா 6. ஒருத்தார்கள்

### Kaṉṉaṉ helps the Pāṇṭavars

Kaṉṉaṉ knew that they would face troubles and
Injustice and hence he stayed with them always.
The *kāyām* flower coloured guarded and saved them.
He took upon himself the duty of
Guarding the Pāṇṭavars from troubles.

### Turiyōtaṉaṉ refuses to give the state back to the Pāṇṭavars

When times came for the people who were
Lying low in the forest, Kaṉṉaṉ, the archer
Did proudly guide and take them to town.
Turiyōtaṉaṉ told them not to enter the town,
In a voice that would make one tremble.
Knowing nothing about it thepoor Pāṇṭavars stayed.

அகந்தையழிந் திதுகாண் ஐவர்மேல் குற்றமில்லை
இகந்தனிலே சூதுபண்ணி இப்புவியில் மாண்டார்கள்

இப்படியே வந்ததற்கு என்னைநிபஞ் சொன்னாயே
சொற்படியே கேட்டறிந்து துற்புத்தி விட்டாரோ

### வியாசர் செனமேசெயனிடம் கூறுதல்

தம்பி செனமேசா தார்வேந்தே நீர்தானும்
வெம்பி மனமிடைந்து விடவிடவுஞ் சொன்னாயே

கேட்டீரோ ஞாயங் கேடுகெட்டார் தன்விசளம்
போட்டீரோ புத்தி புலையாட்டாய்ப் பேசுகிறீர்

இவ்வசனம்[1] மாமுனிதான் எடுத்துரைத்த ஞாயமதை
அவ்வசனங் கேட்டு ஆசனசென மேசன்

### நீர் இருசாராருக்கும் அறிவுரை கூறாமை ஏன் என செனமேசெயன் கூறுதல்

வாரீர் முனியேயுன் மந்திரமுந் தந்திரமும்
பாரீர் புவிதனிலே பஞ்சவர்க்கும்[2] நூற்றுவர்க்கும்

விண்ணமது வாராமல் விற்பனமா யுள்புகுந்து
தன்மைகள்[3] பாராட்டித் தாக்கியே சொன்னீரால்[4]

இத்தனைக்கும் உத்திரங்கள் ஏதொன்றும் வாரதில்லை
கத்தனேபா ராமல் கண்காட்சி பார்த்துவிட்டீர்

சுத்தமுந்தன் கோத்திரத்தைத் துன்பம்வந்து சூழாமல்[5]
சித்தமதில் சற்றிரக்கம்[6] திரணமதுக் கில்லாமல்

உறைந்தார் - மாண்டார். 72.138. இகம் - பூமி. சூது - சூழ்ச்சி. 72.139. நிபம் - காரணம். 72.140. துற்புத்தி - கெடுதல் தரும் அறிவு. 72.142. வெம்பி - மனம் வருந்தி. விட விடவும் - தேளின் நஞ்சு போல. 72.143. ஞாயம் - 'நியாயம்' என்பதின் பேச்சு வழக்கு. விசளம் - துன்பம். 72.144. புலையாட்டாய் - புலையரைப் போல; கீழ் மக்களைப் போல எனினும் அமையும். 72.145. மாமுனி - வியாசரைக் குறித்தது. 72.146. ஆசன செனமேசெயன் - அரியணையில் வீற்றிருக்கும் செனமேசெயன். 72.149. விண்ணம் - துன்பம். விற்பனம் - வியப்பு. 72.150. தாக்கியே - இடித்துரைத்தே. சொன்னீரால் - கூறியிருந்தால். 72.151. உத்திரங்கள் - விளைவுகள். 72.152. கத்தன் - இறைவன். கண்காட்சி பார்த்துவிட்டீர் - பொழுதுபோக்கு போல நிகழ்வுகளைப் பார்த்தீர். 72.153. முகுந்தன் - திருமால். 72.154. சித்தமதில் - மனத்திடத்தில். திரணமதுக்கில்லாமல் - புல் அளவுக்குக் கூடயில்லாமல்.

---

சு.சொல் : 1. இவ்வசன 2. பஞ்சவற்கும் 3. தண்மைகள் 4. சொன்னிறால் 5. சூளாமல் 6. சத்திரக்கம்

Those who had patience ruled; the angry ones perished.
The Pāṇṭavars punished and the hundred died.
Pride was destroyed as the five were faultless.
The plotters did perish at last.
It is so but you blamed me for all.
Did those evil ones forsake their evil designs,
Listening to the words of me?
O brother, kingly Jaṉamējeyaṉ
As you are heart broken you spewed
Venom like a scorpion deadly.
Have you heard of fairness and
The grief of the wretched?
Are you out of tune with the times,
That you speak like low-born people?"
As the great sage spoke in fairness,
Jaṉamējeyaṉ sitting on the throne listened,said
"O, come on sage! with your *mantiras* and *tantiras*
You could have entered the minds of
The Pāṇṭavars and the hundred,
Could have ensured there was no trouble, no grief.
Had you advised them strongly chiding
This much sorrow won't have resulted.
O lord not doing so, you just watched!
Without love and care at heart you allowed
Your relatives to suffer so much.

இருந்த தவசியுனக்கு இன்பதுன்ப மிரண்டுமில்லை
அருந்தவசி யாயிருந்து அற்பந்தய வில்லாமல்

அவர்களுக்குக் காலபெலம் அன்றுநீர் சொல்லாமல்
இவர்களுக்குக் காலபெலம் இதமுடன்நீர் சொல்லாமல்

இருந்ததினால் மாண்டார்கள் யாதொன்றுந் தோற்றாமல்
வருந்தினா லேதுமது வாரார் கருமமுண்டோ

## விதியின் வலிமையை நீயே உணருவாய் என வயாசர் கூறுதல்

வேந்தனிவை சொல்ல வேதமுனி யென்சொல்லுவார்
பூந்தே ருடைய போர்வேந்தே யிப்போது

யாகம்வளர்க் கவென்று அரசேநினைந் தாயே
பாகமுடன் யாகம் பலிக்குதுகா ணுந்தனக்கு

ஏற்றவிரு மகற்றி இயல்பாய்ப் பிடிக்குதுகாண்
மாற்ற யுனக்கு வகையுண்டோ யாமாகில்

என்னைசலித் தூதுவும் எள்ளளவுங் குற்றமில்லை
பின்னையுனக்குத் தெரியும் பிரமை யினால்

உள்ளபடி சொன்னோங்காண் உற்பனமா யுங்களுக்கு
வள்ளலறிய வென்று வழுத்தினோ மிவ்வசனம்

போறோம் புவிவேந்தே பொன்னுலகந் தான்சேர
வாறோ மினுமேலும் மன்னாவுன் தன்னிடத்தில்

என்றுசொல்லி மாமுனியும் ஏகினார்கா ணம்மானை
அன்றுசென மேசன் அவரைநமஸ் கரித்து

## செனமேசெயனின் ஆட்சி

அனுப்பிச்சில காலம் ஆண்டிருந்தான் பூலோகம்
தனுப்பிடித்த கையான் தாரார்சென மேசன்

72.156. அற்பந் தயவு - சிறிது கூட இரக்கம். 72.157. காலபெலம் - காலத்தின் வலிமை; 'பெலம்' என்பது பலம் என்பதின் பேச்சுவழக்கு. 72.157 & 158. அவர்கள், இவர்கள் - இவை முறையே பாண்டவர்களையும் கௌரவர்களையும் குறித்தது. 72.160. வாரார் - மாண்டவாகள் வரமாட்டார்கள். 72.162. பூந்தேர் - பூவினால் அலங்கரிக்கப்பட்ட தேர். 72.164. பாகமுடன் யாகம் பலிக்குது காண் உந்தனுக்கு - 'யாகம் செய்யும் வேளையிலே விதியினால் உண்டாகக் கூடியது உனக்கு நடக்கப் போகிறது' என்ற பொருளில். 72.165. ஏற்ற அவிர் - மேன்மையான, யாகத்தில் விழையும் அவிர்ப்பாகம். 72.167. சலித்தூதுவும் - சலித்த நிகழ்வுகளில்; 'சலித்ததும்' என்பதின் பேச்சு வழக்குச் சொல். எள்ளளவு - சிறிதளவு. 72.168. பின்னை - பிறகு. பிரமை - அறிவு மயக்கம். 72.169. உற்பனம் - உண்மை. 72.170. தனு - வில் தாரார். - மலர் மாலை ஆராவரிக்கின்ற.

O sage, you have neither sorrow nor joy!
Though a great sage, you have little pity.
You never warned the Kauravars of
Their bad time and so they all perished.
Now your feeling sad won't bring
The dead back to life."
When the king spoke thus the sage said,
"O king with a beautiful chariot
Adorned with pretty flowers!
Now, you are thinking of conducting a *yakñam*[1]
Inspite of the *yakñam*, fate will act.
Even after receiving *avir*[2], it will catch you.
It's but natural as you'll see.
Your wearying of me is fair,
If only I have power to change fate.
Yours is hallucination, as you'll find soon.
I spoke truth to you as such, see!
God is my witness as I spoke these words
O king, I leave for that golden world[3] now!
I will come again to your court, O king!".
Saying thus the great sage went away.
Jaṉamējeyaṉ paid his respects.
He was ruling the world for sometime.

**Jaṉamējeyaṉ's rule**

Jaṉamējeyaṉ, wearing garlands
With a mighty bow in his hand

1. Worship with sacred fire on an altar. 2. The food sacrificed in the holy fire for gods. 3. Heaven.

### யாகம் வளர்க்க செனமேசெயன் முடிவெடுத்தல்

யாகம் வளர்க்கவென்று அவனியெல்லாந் தானறிய[1]
செகமானது தனிலே செல்லுந்தள பாடம்

வரவேணுமென்று சொல்லி மந்திரிமார் தன்னுடனே
துரைவேந்தன் தானுஞ் சொல்லுற்றா ரம்மானை

### யாகம் வளர்க்க அடிப்படையானவற்றைச் செய்தல்

திறமுடைய[2] மந்திரிமார் தேசத்திலுள் ளோரும்
பரவசன மாக வேந்தன்சொல் படிக்கு

அந்தப் படியே அவனிதனிலே யிருந்து
இந்தத்தள பாடம் விதவிதமா யுள்ளதெல்லாம்

சீராகச்[3] சேகரித்துத் தெய்வப்பிரா[4] மணர்கள்
நேராக ஆயிரம்பேர் நெருப்பாக[5] முள்ளோரை

வாகுடனேதா னழைத்து[6] வளர்ப்பதற்கு யாகமதை
ஆகுதிகள் செய்ய ஆவினுட நெய்யாக

நூறுகுடம் நெய்யும் நொடிக்குமுன்னே தானழைத்து
வீறுடனே யாகம் வேதியரேசெய் யுமென்று

சாலையது முடித்து சதிராகப் பந்தலிட்டு
ஆலயமாய்ச் சூதானம் அந்தணருந் தானிருக்க

விலாசமா யுண்டுபண்ணி விதானித்தா ரொருநொடியில்
பிலாசுமரம் பிளந்து பலகைவகை சோடினையாய்

**72.178.** செகம் - உலகம். தளபாடம் - ஒரு செயலைச் செய்து முடிக்கத் தேவையான உபகரண்ங்கள். **72.182.** பரவசனம் - மேன்மையான சொற்கள். **72.186.** நெருப்பாகம் உள்ளோர் - அக்கினியில் முறையாக யாகம் வளர்ப்பதில் வல்லவர். **72.187.** வாகுடன் - பொருத்தமுடன். **72.188.** ஆகுதி - யாகத்தில் வளரும் நெருப்பு. ஆ - பசு. **72.189.** நொடிக்குமுன்னே - கையால் ஒரு நொடியோசை எழுப்புவதற்கு முன்பாகவே. **72.190.** வீறு - பெருமை. **72.191.** சாலை - வேதசாலை. சதிர் - அழகு. **72.192.** சூதானம் - பாதுகாப்பு. **72.193.** விலாசமாய் - அகலமாய். விதானித்தார் - அழுகு படுத்தினார். **72.194.** பிலாசு மரம் - 'பலா மரம்' என்பதின் பேச்சு வழக்கு. பிளந்து - மரத்தை வெட்டிப் பலகை அறுத்து. சோடினையாய் - சரிவர இணைத்து; அழகு படுத்தி எனினும் அமையும்.

---

சு.சொல் : 1. தாளரிய 2. திரமுடைய 3. சீறாகச் 4. தெய்வப்பிறா 5. நெறுப்பாக 6. னளைத்து

Wanted to conduct a great *yakñam*.
He ordered his ministers to collect
All the things needed for the *yakñam*.
All the able ministers of the state,
Obeying the great words of the king
Followed his order and collected
All the things needed for the *yakñam*
A thousand holy Brahmans,
Who were experts in *yakñam*
Were asked to raise the holy fire.
Cow's ghee a hundred pots they got
For the offfering, in no time.
They asked the priests to pray with force.
They constructed a prayer hall, a *pantal*.
The Brahmans stayed there guarding it as a temple.
In a jiffy they created huge structures.
Cutting a juck tree they made different things.

அரசு பிலாமா யிலுப்பை ஆல்விறகு தெர்ப்பையுடன்[1]
புரசுமுத லுள்ள புங்குசங்கு வேணதெல்லாம்

## யாகத்தைச் செனமேசெயன் தொடங்கி வைத்தல்

சேகரித்து வைத்து செனமேசன் தான்மூழ்கி[2]
யாகத் தடியில் அந்தணரைத் தெண்டனிட்டு

வேதியருக் கெல்லாம் வெண்பத் திரங்கொடுத்து
நீதியுட னினைந்து நிறுபாக முள்ளதெல்லாம்

அக்கினி களுண்டுபண்ணி ஆகுதிகள் தான்கொடுத்து
மெய்க்கினிய மந்திரங்கள் வேதியர்கள் தான்துதிக்கச்

சூழவே[3] தானிருந்து சொல்லுவார்கள் மந்திரங்கள்
வாழவீமன்[4] பேரனையும் வாகுடனே தானழைத்துப்[5]

பலகைதனைப் பரப்பிப் பரிசித்து வேந்தனுக்கு
இலகுரத்தின[6] ஆசனத்தில் இப்போயிருக்க வென்றார்

## யாக நெருப்பு வளருதல்

பூசைசெபம் பண்ணுமென்று[7] புகழ்ந்தார்கள் வேதியர்கள்
நேசமுட னிருந்து நேமனிஷ்டை[8] யின்படியே

வாசனையாய்ச் செப்புமென்று வகுத்துரைத்தார் வேதியர்கள்
ஆசனத்தின் மீதிருந்து அட்சதையுந் தான்வாங்கி

யாகமதை நோக்கி அன்புற்றுத் தானிருந்தார்
வாகொற்ற தெர்ப்பையது வாங்கியிருக்க லுற்றார்

**72.195.** அரசு - அரச மரம். பிலா - பலா மரம். மா - மா மரம். இலுப்பை - இலுப்பை மரம். ஆல் - ஆல மரம். விறகு - இவண் யாகத்தில் இடுவதற்குரிய மரத்துண்டுகளைக் குறித்தது. தெர்ப்பை - ஒரு வகை புல். **72.196.** புரசு - பலாச மரம். புங்கு - புங்கை மரம். சங்கு - சங்குமரு என்னும் வேம்பு மரம். வேணதெல்லாம் - 'வேண்டியதெல்லாம்' என்பதில் பேச்சு வழக்கு. **72.198.** தெண்டனிட்டு - அடிபணிந்து வணங்கி. **72.200.** நிறுபாகம் - நிருவாகம்; செயல்முறை. **72.201.** ஆகுதி - ஓமத் தீயில் நெய் வார்த்தல்; 'பலி' எனினும் பொருந்தும். **72.202.** மெய்க்கினிய - காதுக்கு இனிய. **72.204.** அவீமன் பேரன் - அபிமன்யுவின் பேரன்; செனமேசெயன். வாகுடன் - பொருத்தமுடன். **70.205.** பலகை - வேள்விப் பலகை. **72.206.** இப்போ - இப்பொழுது. **72.208.** நேமநிஷ்டை - நியம முறைகளின் படியான நம்பிக்கை. **72.209.** வாசனையாய் - புகழுடன். செப்பும் - கூறுங்கள். **72.210.** அட்சதை - மங்கல அரிசி. **72.212.** வாகொற்ற - 'வாகுற்ற' என்பதின் பேச்சு வழக்கு; ஒழுங்கான.

சு.சொல் : 1. தெற்பையுடன் 2. தான்முள்கி 3. சூளவேதா 4. வாள்வீமன் 5. தானளைத்து 6. இலகுரற்றின 7. புகள்ந்தார்கள் 8. நேமனிஸ்டை

Peepul[1] jack, mango, *iluppai*[2]
Banyan cut to size and *tarppai*[3]
*Purasu*[4], *puṅkai*[5] and neem wood,
Were all collected for the *yakñam*.
Jaṉamējeyaṉ, before the Brahamans,
In front of the holy fire knelt.
He gave white clothes to all the vedic scholars.
They lit the holy fire, made sacrifices.
The Brahmans chanted melodious *mantras*,
That were pleasant to the ears.
Sitting around the holy fire,
The Brahmans chanted the *mantras*.
They placed a *yakñam* plank for Paricittu too.
They called Jaṉamējeyaṉ and
Asked him to sit on a gem studded seat.
The priests asked him to do the *puja*.
They asked him to chant the *mantras*
With devotion, following the scriptures.
Sitting on the seat, he got *aṭcatai*"[6]
And with devotion watched the *yakñam*.
He held a bunch of *tarppai* in his hand.

1. Ficus religiosa - forming one of the nine kinds of wood used in burnt offerings. 2. A kind of a tree. 3. A type of grass. 4 & 5. Types of trees. 6. Rice soaked in turmeric water to be sprinkled in the holy fire at the appropriate time.

அளவுமதி யாக அக்கினியுந் தானெழுந்து
புளகமாய்த்தான் வளரும் பூவாணர் எக்கியமும்

எக்கியத்துக் கேற்ற இதமானநெய்க் குடமும்
முக்கியமாய்ச் செய்து முடித்துவரும் யாகமதில்.

## செனமேசெயனின் செயல்

**விருத்தம்**

73. முன்னாள் முனிவன்சொல் படிக்கு இயல்பாய் யாகந்தனி யேதான்
இன்னாள் மயக்கவரு வதற்கு இயல்பாய் மறையோர் போயிருந்து
சொன்னான் வேதயா கமதில் தூக்க மிகவே துயின்றயர்ந்து
தன்னால் மயங்கிவீ ழாமல் சன்னைச்செய் தான்தார் வேந்தன்.

## அந்தணன் நெருப்பில் விழுதல்

74. ஐயோ மறையோ[1] னக்கினியில் அயர்ந்தே[2] விழுவானென் றெண்ணி
கையால் தெர்ப்பைதனைக் கொண்டு கழுத்தில் தொடவே வேதியனும்
வெய்யபுலி தான்பாய்ந்து தென்று வெருவிப்பயந்[3] துமறை யோதும்
நெய்யிலெ ரியுஞ்சுடர் தனிலே நேராய்விழுந் துநிமர்ந் தானே.

## அந்தணன் உறக்கம் கொள்ளாதிருக்கச் செனமேசெயனின் செயல்

**நடை**

75. அருகிருந்து சாஸ்திரங்கள் அனுஷ்டிக்கும்[4] வேளையிலே
ஒருவன் மயங்கி ஓமத்தீமுன் னிலையாய்

அசதிவந்து பார்ப்பான் அயர்ந்துகண்ணைத் தான்மூடி
நித்திரை கொண்டு நிலத்தில்விழு வார்போல்
மித்திரமாய் பார்ப்பான் மெய்பதறிக்[5] கொண்டலைந்து

**72.213.** அளவு மதியாக - முழு சந்திரனைப் போல. **72.214.** புளகமாய் - பார்ப்பவரைப் பிரமிக்க வைக்கும் படியாய். பூவாணர் - பூலோக அரசன்; செனமேசெயன். எக்கியம் - யாகம். **73.2.** மயக்க வருவதற்கு - குழப்ப வருவதற்கு. மறையோர் - வேதியர். **73.3.** வேதயாகமம் - வேதம் மற்றும் ஆகமம். தூக்க மிகவே - வேத, ஆகமங்களைத் தொடர்ந்து ஒய்வின்றி ஓதுவதால் தூக்கம் மிகுந்து வரவே. துயின்று - தூக்கம் கொண்டு. **73.4.** சன்னைச் செய்தான் - உணர்வு பெற செய்தான்; புளகாங்கிதம் அடையச் செய்தான் எனினும் அமையும். **74.1.** அயர்ந்து - தளர்ச்சியால். **74.2.** தெர்ப்பை - தருப்பைப்புல். **74.3.** வெய்ய புலி - மிகுந்த கொடுமையான புலி. வெருவி - அஞ்சி; திடுக்கிட்டு எனினும் அமையும். **74.4.** நிமிர்ந்தான் - நெருப்பில் விழுந்து வெந்து மாண்டான். **75.1.** அனுஷ்டிக்கும் - கடைபிடிக்கும். **75.2.** ஓமத்தீ - யாக அக்கினி. **75.3.** அசதி - சோர்வு. பார்ப்பான் - அந்தணன்; இங்கு மறை ஓதுபவனைக் குறித்தது. **75.5.** மித்திரமாய் - சிநேக பாவத்துடன். மெய்பதறி - உடல் பதறி.

சு.சொல் : 1. மரையோ 2. அயந்தே 3. வெறுவிப்பயந் 4. அனுஸ்டிக்கும் 5. மெய்பதரி

The fire rose like the full moon.
In the *yakñam* of Jaṉamējeyaṉ,
The fire rose wonderously.
Pots of ghee were poured into the fire
And the important *yakñam* was conducted.
The *yakñam* was conducted
As per the advice of the sage.
One Brahman, sitting by the fire
Grew tired and felt very sleepy.
The king tried to wake him up,
So that he did not fall into the fire.
Afraid that the Brahman would fall down,
The king touched him with the *tarppai*.
The sleepy Brahman mistook it for a tiger,
Got frightened out of his wits and
Fell into the fire that rose high,
As plenty of ghee was poured in.
The Brahman was burned to death.
When they were performing the rites by the fire
One Brahman by the fire giddy grew.
As fatigue overtook him, he closed his eyes.

உறங்கித்தலை[1] கவிழ்ந்து[2] ஒந்தானசைந் தாப்போல்
திறங்களு[3] மற்றலைந்து தேகம்விழு வதுபோல்

அந்தவுறக் கமதில் ஆனதொரு சொற்பனங்கள்
வந்தவழி[4] தன்னில் வலியகடுவாய் புலியும்

எதுக்க மறித்து இவனைவதை செய்வதற்கு
அதுக்கி விழித்து அதட்டிப்பய முறுத்திப்[5]

பிடிக்கின்றது போலே பிராமணனுந் தான்பயந்து
நடுங்கிவுடல் பதறி[6] நஞ்சுண்ட மீன்போல்

இருக்குந் திறமதனை இளவரசு தானிருந்து
வருக்கமுள்ள யாகம் வளர்க்கவந் திருந்தோம்

அதுக்கு விகாரம் அந்தணனு மிப்போது
எதுக்க யிருந்து இசைகேடு தான்முடிய

பார்த்திருக்கப் போகாது பாவம்வரு மென்றுசொல்லி
ஏத்திருக்குந் தெர்ப்பையினால்[7] இவன்சன்னை பண்ணவென்று

## செனமேசெயன் செயலால் அந்தணன் நெருப்பில் விழுந்து மடிதல்

நீட்டினான் தெர்ப்பையினால் நினைவுவரு மென்றுசொல்லிக்
காட்டில் புலிபாய்ந்ததென்று கலங்கிவுடல் பதறி[8]

(மா)ட்டினான் தீயில் மடிந்தான் பிராமணனும்
ஆட்டிக் குதித்து அந்தணனுந் தீயில்விழக்[9]

## செனமேசெயனின் வருத்தமும் சித்தம் கலங்கிய நிலையும்

கண்டு செனமேசன் கலங்கி முகம்வாடிப்
பண்டு வியாகர் பகர்ந்த[10] மொழிபடிக்கு

75.6. உறங்கி - தூங்கி. ஒந்தான் அசைந்தாப் போல் - ஓணான் என்னும் விலங்கு தலையை அசைத்தாற் போல. 75.7. திறம் - வலிமை. அற்றலைந்து - குறைந்து வருந்தி. 75.8. சொற்பனம் - கனவு. 75.9. வலிய - பலம் பொருந்திய. 75.10. எதுக்க - 'எதிர்க்க' என்பதின் பேச்சு வழக்கு; எதிராக. வதை - கொலை. 75.11. அதுக்கி - அடித்து. விழித்து - பார்த்து. 75.14. இருக்குந் திறமதனை - இருக்கின்ற செயல் தன்னை. இளவரசு - செனமேசெயன். 75.15. வருக்கமுள்ள - மேன்மையான. 75.16. அதுக்கு - அதற்கு. விகாரம் - மாறுபாடு; கெடுதி எனினும் அமையும். 75.17. இசை கேடு - புகழுக்குக் கெடுதி. 75.19. ஏத்திருக்கும் - பொருந்தியிருக்கும். 75.20. தெர்ப்பை - தருப்பைப் புல். நினைவு வரும் - 'தூங்குதலிருந்து விடுபட்டு விழிப்பான்' என்ற பொருளில். 75.23. ஆட்டிக் குதித்து - நெருப்பின் வெம்மையினால் உடம்பை ஆட்டி குதித்து. 75.25. பண்டு - முன்னாளில். வியாகர் - வியாசர். பகர்ந்த மொழி - கூறிய மொழி.

சு.சொல் : 1. உரங்கித்தலை 2. கவிள்ந்து 3. திரங்களு 4. வந்தவளி 5. முருத்தி 6. பதரி 7. தெற்பை 8. பதரி 9. தீயில்விளக் 10. பகர்ந்தமொளி

Started sleeping and was about to fall down,
He slept with a bowed head like a garden lizard.
He lost his balance and it seemed he'd fall.
In the sleep he had frightful dreams.
In dream he saw a tiger blocking his way.
It was about to maul and kill him,
Rolling its eyes which frightened him much.
Atlast the tiger caught the Brahman in his dream.
His body shivered like a poisoned fish.
The king noticed the sleeping Brahman.
He thought, "Here we are for a great *yakñam*
It seems the Brahman has come to hinder it.
He sure is going to tarninsh my fame.
Allow it to happen, I can not!
If I allow this, a great sin
It will be for me! Act I must."
With the bunch of *tarppai* in his hand,
He prodded the sleeping Brahman slightly.
The Brahman dreaming of the tiger in the forest,
Though that it had jumped on him presently.
He started shivering all over and
Fell into the fire in front of him.
The Brahman perished in the leaping flames.
Jaṉamējeyaṉ stood aghast.
He was shattered and his face fell.
He thought, "Alas! as Viyācar predicted
I have earned sin, causing confusion

வந்துதுகாண் பாவம் மதியை விலக்கிவைக்கத்
தந்திதுகாண் பாவபலன் சனியன் மிகப்பிடித்து

வெந்துமன மிடைந்து விறுமையது தான்பிடித்து
இந்துவில் லாத இருளதுபோல தான்மூடி

மாய்கை பிடித்து மனுநீதியே மறந்து[1]
பேய்பிடித்த வாறதுபோல்[2] பிரமைகொண்டா னம்மானை

### மன்னர்களின் வருத்தம்

மன்னன் செனமேசன் மாய்கைபிடித் திருக்கத்
தென்னவர்க ளெல்லாந் தீவினையோ யென்றுசொல்லி

ஆறாத துயரம் அருந்துயரம் வந்துதென்று
நீறாக வெந்து நெஞ்சமெல்லாம் புண்ணாகி

என்செய்வோ மென்று ஏங்கிப் பரிதவித்து
முன்செய்த் தீவினையோ முனியினுட சொல்படியோ

வந்தவிதி மதியோ மகாதேவர் கற்பனையோ[3]
எந்தவித மோதான் இடைகூறு வந்துதென்று

### மன்னர்கள் செனமேசெயனுக்கு மருத்துவம் பார்த்தல்

செய்யுமருந்து கள்தான் தேசத்திலுள் ளதெல்லாம்
வையுமென்று பண்டிதர்கள் வைத்த மருந்தாலும்

சற்றுங்குண மில்லாமல் தலைசுத்தி யாடுகையால்
பித்துக்[4] கலங்கிப் புலம்புகிறா னென்றுசொல்லி

75.26. வந்துதுகாண் - நடந்து விட்டதே; 'வந்துது' என்பது வந்தது என்பதின் பேச்சு வழக்கு. 75.26. மதி - அறிவு. 75.27. தந்திது - தந்தது. பாவபலன் - விதியினால் ஏற்பட்ட பாவபலன். சனியன் - சனிக் கிரகம். 75.28. வெந்து மனம் இடைந்து - மனம் வருந்தி, புண்ணாகி. விறுமை - பிரமை; மூளையில் ஏற்படும் குழப்பத்தைக் குறித்தது. 75.29. இந்து - சந்திரன். 75.30. மாய்கை - மாயம். 75.31. பேய் பிடித்த வாறது போல் - பேய் பிடித்த ஒருவரின் நிலையினைப் போல். 75.33. தென்னவர் - தென்நாட்டு அரசர்கள். 75.34. ஆறாத துயரம் - நீங்காத துன்பம். வந்துதென்று - 'வந்ததென்று' என்பதின் பேச்சு வழக்கு. 75.35. நீறாக வெந்து - சாம்பலாகும்படி வெந்து. 75.36. பரிதவித்து - பரிதாபம் கொண்டு. 75.37. முனியினுட - முனிவர் வியாசருடைய. 75.38. விதி மதி - விதியின் திறம். மகாதேவர் - சிவபெருமான். கற்பனை - கட்டளை. 75.39. இடைகூறு - 'இடையூறு' என்பதின் பேச்சு வழக்கு. 75.41. வையுமென்று - செய்து உடம்பில் பூசுங்கள் என்று. 75.42. தலைசுத்தி யாடுகையால் - தலைசுற்றி ஆடுகின்ற காரணத்தினால். 75.43. பித்து - பயித்தியம்.

சு.சொல் : 1. மரந்து 2. வாரதுபோல் 3. கற்பணையோ 4. பிற்று

To my intellect, I am lost!
The evil effects of my sin are upon me.
Saturn[1] has well caught hold of me!"
He was shattered, his mind, confused
Became dark and empty like a moonless sky.
Encompassed by *māya*, as if possessed
He forgot the *edicts of Maṉu.*
He thought his life was in shambles.
Jaṉamējeyaṉ was in despair.
Southern kings wondered if it was evil.
They said inconsolable grief
Had come to stay and felt very sad.
Heart broken, they wondered what to do.
"Is it divine retribution for some past misdeeds?
Or is it caused by the curse of the sage?
Is it fate? Or is it the grand design of God?
How come this hindrance now came to being?"
As they thought so Jaṉamējeyaṉ
Felt very giddy in his head.
All the medicines in the state
That were prescribed by the doctors
Could not cure the king in a stupor.
They said, "He's gone mad and he blabbers."

1. Planet Saturn is supposed to give one troubles when it is in certain positions in the zodiacal chart.

கலிங்கமது வுரைத்து கண்ணிலிட்டுந் தீரவில்லை
பலிக்கநசி யம்விட்டு பார்த்தாலு மொன்றுமில்லை

தலைமில்குடோ ரியிட்டு தைலந்தனைத் தேய்த்துக்
கலையுதில்லை பித்தம் காலவினை யென்பாரும்

## மாந்திரீகத்தால் குணப்படுத்த முயலுதல்

மருள்பிடித்து தென்று மந்திரங்கள் சொல்வாரும்
இருள்பிடித்து தென்று இயந்திரங்கள் கட்டிவைப்பார்

## பூசை மற்றும் தர்ம காரியங்கள் செய்து பார்த்தல்

செய்யாவினோத மெல்லாருஞ்[1] செய்தலுற்று[2] யெல்லோரும்
ஐயோசிவனே யென்று அபயமிட்டு நிற்பாரும்

மயேசுரர் பூசை மறையோர்க்குப்[3] போசனமும்
வெய்யோனுக் குள்ளே விளங்கவே பொங்கலிட்டு

அகுதிபர தேசியர்க்கு அன்னமிகக் கொடுத்துத்
தகுதியுடன் தானதர்மம்[4] நேமமுடன் கோவில்குளம்

சாஸ்திரங்க ளுள்ளதெல்லாஞ் சாலைமட மந்தணர்க்குச்
சித்திரமாய்ப் பூசை செய்வாரனு தினமும்

நால்வேத சாஸ்திரமும் நாளும் விளங்கிவர
பால்தயிர்கள் நெய்கள் பருப்புமுத லரிசி

**75.44.** கலிங்கம் - பேய் கும்மட்டிக்காயிலிருந்து எடுத்த ஒரு வகை மை. **75.45.** பலிக்க நசியம் விட்டு பார்த்தல் - பேய் முதலிய தொந்தரவுகள் இருப்பின் அவற்றை நீக்கச் செய்யும் நசிய மந்திரம் முதலியன செய்து பார்த்தல். **75.46.** குடோரியிட்டு தைலந்தனைத் தேய்த்து - மயக்கம்; மனக்குழப்பம் முதலியவற்றால் பாதிக்கப்பட்டவர்களுக்குத் தலையைக் கீறி, நோய்களைக் குணப்படுத்தும் ஒரு வகை சித்த வைத்திய முறைப்படி தைலம் தேய்த்து. **75.47.** கலையுதில்லை - பித்தம் தெளியவில்லை. கால வினை - மோசமான காலத்தால் ஏற்பட்ட விளைவு. **75.48.** மருள் - பித்து. பிடித்துதென்று - 'பிடித்ததென்று' என்பதின் பேச்சு வழக்கு. **75.49.** இருள் - துர் காற்று மற்றும் கறுப்பன் முதலிய துர் தெய்வங்கள். இயந்திரம் - மாந்திரீகம் செய்து செம்புத்தகட்டில் வரையும் இயந்திரம். **75.50.** செய்யாவினோதம் - பிற சாதாரண மக்களால் செய்ய இயலாத விநோத செயல்கள். **75.52.** மயேசுரர் பூசை - சிவ பூசை. மறையோர் - வேதம் ஓதும் அந்தணர். போசனம் - உணவு. **75.53.** வெய்யோன் - சூரியன். **75.54.** அகுதி பரதேசியர் - அகதியர் துணை யாருமற்ற பரதேசிகள். அன்னம் - உணவு. **75.55.** நேமமுடன் - பொருத்தமுடன். **75.56.** சாலை மடம் - அந்தணர்களின் அறச்சாலை; இருப்பிடம். **75.57.** சித்திரமாய் - அழகாய்.

---

சு.சொல் : 1. மெல்லாரு 2. செய்தலுத்து 3. மரையோர்க்கு 4. தானதற்மம்

They applied *kaliṅkam*[1] paste on his eyes
But it did prove ineffective.
They performed *naciyam*[2] *mantras,*
To no avail and applying
*Kuṭōri*[3] and oil on the head.
Did not cure his madness; so some said,
"It is the effect of his evil times!"
Thinking he went mad some prescribed cures.
Some said that he was under evil
Influences and made him wear amulets.
They performed all sorts of strange things.
"O Lord Civaṉ!" some in grief cried.
There were *pūjas* for the supreme god.
Cooking it before the sunrise,
Free food was served to many
Vēdic scholars who assembled there.
They served free food for orphans and mendicants.
They religiously followed the scriptures.
They visited temples around.
The Brahmans in their hall of worship
Performed *pūjas* everyday.
They chanted the four *Vēdas* and scriptures daily.
Measureful of milk, curd, ghee, pulses and rice
Were suplied to the Vēdic scholars daily.

1. A kind of inky paste taken from the unripe fruit of a tree. 2. Special *mantras* charted to get rid of evil spirits like ghosts etc. 3. A Siddha treatment in which they scratch the head, apply oil to cure the possessed.

வாகாய் மறையோர்க்கு[1] மாறாமல் நித்தியமும்
பாகாய் முறைப்படியே படியளந்து அந்தணருக்குத்

தானதவஞ் செய்து தவிப்பார் தவிப்பாற்றி
ஞானசிவ பூசை நடத்துவார் தாட்சியற

## கண்ணனிடம் பிரார்த்தனை செய்தல்

தேசத்திலுள் ளோர்கள் சிறந்தசின[2] மேசனுக்கு
வேசத் திரிந்து மெய்மறந்து கைசோர்ந்து

பாருலகந் தாங்கும் பரிசித்து மைந்தனுக்குக்
காருலவு மேனியரே கண்ணரே யிப்போது

தீதுசெய்யக் காரியமேன் செய்த தவக்குறையோ[3]
வாதுசெய்த மாமுனியும் வாறார்கா ணிப்போது

## வியாசர் மீண்டும் அஸ்தினாபுரம் வருதல்

பரராச மாமுனிவன் பயின்றதொரு புத்திரனும்
சரராசி வேத சகலகலை வல்லவனாம்

வேதவியா கமுனி மேதினியிலே நடந்து
போதகமா யத்தி புரந்தனிலே வந்தார்காண்

## மன்னர்கள் வியாசரிடம் வேண்டுதல்

வந்தமுனி பாதமதை மன்னரெல்லாந் தான்வணங்கி
இந்த விகாரமிவர்க்கு வந்த கன்மவினை

தீர்த்தருள வேணும் சினமேச ராசனுக்குக்
கார்த்தருள வேணும் கடவுளரே காரணரே

**75.60.** வாகாய் - முறையாய். **75.61.** பாகாய் - பாங்குடன். படியளந்து - நாழி நிரம்ப தேவைப்பட்ட பொருள்களை அளந்து. **75.62.** தவிப்பார் - பரிதவிக்கின்றவர். **75.63.** தாட்சியற - தாழ்ந்த நிலைமை மாற; இங்குச் செனமேசெயனின் பித்துப்பிடித்த நிலை தாழ்ந்த நிலையாகச் சுட்டப்பட்டது. **75.65.** வேசத்திரிந்து - அலங்காரம் திரிந்து. மெய்மறந்து - உடலிடத்துள்ள நினைவு இழந்து. **75.67.** காருலவு மேனியர் - கருத்த நிறமுடைய மேனியை உடையவர்; திருமால். **75.68.** தீது செய்ய - பித்து பிடித்துப் போகுமளவும் கொடுமை செய்ய. காரியமேன் - காரணம் என்ன. **75.69.** வாது செய்த - தர்க்கம் பேசிய. மாமுனி - வசிட்டரைக் குறித்தது. **75.73.** வியாகமுனி - வியாசர். **75.74.** போதகம் - உபதேசம். அத்திபுரம் - அஸ்தினாபுரம். **75.75.** இந்த விகாரம் - இந்த உடல் வேறுபாடு. கன்மவினை - கர்ம வினை.

சு.சொல் : 1. மரையோர்க்கு 2. சிரந்தசின 3. குரையோ

The king was charitable and alleviated
The sufferings of the downtrodden.
They performed *pūjas* for Lord Civaṉ
To get out of their bad situation.
The people of the state were perturbed;
They said" O Lord, our king Jaṉamējeyaṉ
Has lost his looks and become weak.
O Kaṇṇaṉ, the black complexioned,
Why have you harmed him?
Was there any defect in our worship?
Alas! the sage[1] who advised doesn't turn up now.

**Viyācar comes once again to Hastiṉāpuram**

The learned one, an expert in the *Vēdas,*
The one from whom the sage Parācaraṉ learned,
Sage Viyācar came walking
To enlighten all at Hastiṉāpuram.
All the kings paid respects at the sage's feet.
"Jaṉamējeyaṉ should get rid of
This suffering, this effect of fate,
O sage! the cause of all things,
Save the king, forgiving the fault

1. Vaciṭṭar.

சிறியோர்[1] ரறியாது[2] செய்தகுற்றமே பொருத்து
வெறிபோகப் பாருமையா வேதவியா கரரே

### வியாசரின் பதிலுரை

என்றுமன்னர் சொல்ல இறையோன்[3] மனமகிழ்ந்து[4]
ஒன்று மறியாமல் உரைத்தீரே மன்னவரே

நாமேது செய்வோம் நாடும் விதிதனக்குப்
போமேது செய்தாலும் போமோ விறுமையது

அல்லவே சொல்லுகிறேன் அந்தப்படி யிவன்தான்
சொல்லவே கேட்டானால் துயர்விறுமை தீர்ந்துவிடும்

### செனமேசெயன் வெண்குஷ்ட நோய்வாய்ப் படுதல்

முன்னாளில் பஞ்சவர்கள் மூண்டு சமர்பொருது
மின்னான பாரதப்போர் வென்று முடிந்தகதை

சொல்லென் றிவன்கேட்டால் சுருதியது வேதாந்தம்
மல்லென்ற போர்வீமன் வாகாய்ச் சமர்தனிலே

மத்தகெசந் தன்னை வாரிப்பிடித் தெறிய[5]
சத்த முகில்கடந்து தாண்டிவெகு வானவெளியில்

போய்ச்சுழன்று தென்று பூரித்தான் பாரதத்தில்
வாய்வுச் சுழியில் வளைபட்ட மத்தகெசம்

வாராமலங்கே மறித்து தொன்றானந் தரத்தில்
சீரான செனமேசன் செவியுறவே[6] தான்கேட்டு

**75.78.** பொறுத்து - பொறுத்தருளி. **75.79.** வெறி போக - பித்துபிடித்த நிலை போகும்படியாக. வியாகரரே - வியாசரே. **75.80.** இறையோன் - இறைவனுக்கு நிகரானவன்; வசிட்டர். **75.83.** போமேது - போக்கிடந்தான் ஏது. விறுமையது - பித்து பிடித்த நிலையது. **75.84.** அல்லவே - துன்பம் அற்றும் போகவே. **75.85.** துயர் விறுமை - துயரங்கள் மிகுந்த துன்பம். **75.86.** மூண்டு - பொருந்தி. சமர் - போர். **75.87.** மின்னான - ஒளி பொருந்திய. **75.88.** சுருதி - வேதம். **75.89.** மல்லென்ற போர் வீமன் - மல் யுத்தத்தில் வல்லதொரு பீமன். வாகாய் - பொருத்தமாய். **75.90.** மத்தகெசம் - மதம் பொருந்திய யானை. **75.91.** சத்தம் - ஓசை. தாண்டி - இதுவும் 'கடந்து' என்கிற பொருளினையே தந்து நின்றது. **75.92.** பூரித்தான் - மகிழ்ந்தான். **75.93.** வாய்வுச் சுழி - காற்றின் சுழற்சி. வளைபட்ட - சுழற்சியில் அகப்பட்ட. **75.94.** மறித்து தொன்றான் - மறிக்கப்பட்ட ஒன்றான. **75.95.** சீரான - சிறப்பான. செவியுறவே - செவியில் நன்றாக.

---

சு.சொல் : 1. சிரியோ 2. ரசியாது 3. யிரையோன் 4. மனமகிள்ந்து 5. தெரிய 6. செவியுரவே

Of us, the silly ones, cure him
Of madness, O sage Vēdic Viyācar!" they said.
When they spoke thus the godlike sage felt pleased.
"Knowing nothing you've spoken O kings!
We are helpless when fate seeks us out.
Do what we may, will madness go?
I will give advice to get rid of it.
His grief will be gone if he follows it.
In those days the Pāṇṭavars battled
Like lightening and won the Bharath war.
Jaṉamējeyaṉ once asked me about the Vēdic war.
I told that Vīmaṉ, an expert wrestler
Caught an elephant and threw it off.
It flew beyond the clouds in the sky.
Vīmaṉ was immensely pleased in the war.
The elephant went rolling and
Caught in the wind's force, it could not
Come back and it got suspended in the air."
When Jaṉamējeyaṉ heard of this,

பொய்யென்று சொன்னதினால் பொறிவெளுப்பாய்[1] மேனியெங்கும்
மெய்யென்று தூவி வெண்பொழிய்க்[2] கண்டதினால்

### நோய்கள் தீர வியாசரிடம் மன்னர்கள் உபாயம் கேட்டல்

இதுக்கு வகையேது என்றவர்கள் கேட்பளவில்
அதுக்கு வகைதான் அறிந்தோ[3] ரெடுத்துரைக்கப்

### வியாசர் உரைத்த உபாயங்கள்

புத்தி யெனவே பொருந்தி மதியுடனே
பத்தியாய்ப் பாரதத்தைப் படிப்படியா யின்னொருகால்

கேட்டீரே யானால் கிலேசமற தீர்ந்துவிடும்
நாட்டீர் சமையமதில் நடுவே நிதானமதாய்

என்றுரைக்கவே பெரியோர் இன்பமாய் வந்திருந்து
அன்றுசென மேசன் ஆமென்று பாரதத்தை

அடியைப் பிடித்து அன்பான பாரதத்தை
முடியுமட்டுந் தான்கேட்டு முத்திலுமே யாராய்ந்தால்[4]

வெள்ளையுந் தீர்ந்திடுமே வேந்த ளிவன்தனக்குக்
கொள்ளை விறுமையது கூட்டோடே போவதற்கு

ஐவ ரரசாண்டு அவனிவிட்டுத் தானேகிச்
செய்யும்புகழ்[5] வைகுண்டம் சேர்ந்தகதை தான்கேட்டால்

தீரும் விறுமையது தென்னவரே யென்றுசொன்னார்
பாரும் புதுமையிது பலிக்குஞ் சலிப்பறவே

75.96. பொய்யென்று சொன்னதினால் - கேட்கவில்லை என்று சொன்னதினால். பொறி வெளுப்பு - வெண் புள்ளிகள்; வெண் குஷ்டம் எனினும் அமையும். 75.97. வெண்பொழிய - வெண்புள்ளிகள் மிகுதியால் உடம்பில் பொழிய. 75.98. இதுக்கு - 'இதற்கு' என்பதின் பேச்சு வழக்கு. கேள்ப்பளவில் - கேட்கின்ற நேரத்தில். 75.99. அறிந்தோர் - தெரிந்தவர்கள். 75.100. புத்தி, மதி - அறிவு. 75.101. பத்தியாய் - பக்தியுடன். இன்னொருகால் - மீண்டும் ஒருமுறை. 75.102. கிலேசமற - துன்பம் முழுமையும். 75.103. நாட்டீர் - நிறுத்துவீர்; பாரதம் கேட்பதற்கான மண்டபத்தை நிதானமாய் சுத்தமாய். 75.106. அடியைப் பிடித்து - 'ஆதியோடு அந்தமாய்' என்ற பொருளில். 75.107. முத்திலுமே - 'முற்றிலுமே' என்பதின் பேச்சு வழக்குச் சொல். 75.108. வெள்ளை - வெண் குஷ்டம் என்னும் நோய். 75.109. கொள்ளை விறுமை - மிகுந்த கொடுமையான நோயாம் பித்தம் கலிங்க நிலை. 75.110. ஐவர் - பஞ்ச பாண்டவர். 75.113. பாரும் - பாருங்கள். பலிக்கும் - நடக்கும். சலிப்பறவே - துன்பம் நீங்கவே.

---

சு.சொல் : 1. பொரிவெளுப்பாய் 2. வெண்பொளிய 3. அரிந்தாரே 4. யாறாய்ந்தால் 5. செய்யும்புகள்

He called it a bluff and hence the white
Patches on his body blemishless."
When they asked him of the cure for it,
The learned one spoke of the cure:
"With mind in total concentration
If he proudly listens in stages
To the *Pāratam* once again
His problems will be soon over.
Build a *maṇṭapam* with care for the recital."
As he said so, the elders told
The king about it and he assented.
The sage said," If he listens to *the Pāratam*
From the beginning to the end
And analyses it thoroughly
The king will get rid of the white patches.
To get rid of his killing madness
He should listen to the story
Of the rule of the five great ones
And their departure to *Vaikuṇṭam*.
If he does, his madness will go, O kings!
It's so strange but it will happen,
All his sufferings will be over.

கரும்பட்டு போற்றிக கழுத்துடனே தான்கேட்டால்
அரும்பட்டும் வெண்பட்டாய் ஆகுமது தப்பாது

அப்போ விறுமை அகன்றுவிடுங் கண்டீரே
இப்போது கேளும் இன்புற்றுத் தானிருந்து

என்றுசொல்லி மாமுனியும் ஏகினர்கா ணம்மானை
நன்றுகா ணென்று நமஸ்கரித்தா ரெல்லாரும்

### சினமேசெயன் பாரதம் கேட்க அமர்தல்

ஆமென்று சம்மதித்து அரியோ மெனவேதான்
ஓமென்று ராசன் உற்றசின மேசனுக்கு

வைகுண்ட அம்மானை வாகுடனே தான்கேட்கச்
செய்கின்ற சாஸ்திரங்கள் செய்வித்து வேந்தனுந்தான்

அம்மானை பாடுகின்ற அந்தக் கதைதனையும்
செம்மான் தரித்த சிவனருளே யுண்டெனவே

கதைமுகங் கேட்கக் கருத்திலுற்றான் மன்னவனும்
பதையாது கேட்கப் பலநினைவு யில்லாமல்

நெஞ்ச மசையாமல் நினவுதடு மாறாமல்
அஞ்சு பஞ்சபூதம் அடக்கிப் பொறிபுலனை[1]

வேரறுத்துக் காம வெகுளிதனை விட்டேகிக்
காரறுத்து மாயக் கசடுதனை யூடறுத்து

ஏக மனதாய இருதயத்தைச் செப்பமிட்டு
ஆக முடன்கேட்க யாசன கொலுவிருந்தான்

**75.114.** கரும்பட்டு போற்றிக் கழுத்துடனே தான் கேட்டால் - கரியப் பட்டினை மிகவும் பத்திரமாகப் போர்த்திப் பாரதக் கதையைக் கேட்டால். **75.116.** அப்போ - அப்பொழுது. **75.118.** ஏகினார் - சென்றார். **75.120.** அரியோம் - திருமாலே சரணம். எனவேதான் - என்றுதான். **75.122.** வாகுடனே - பொருத்தமுடனே. **75.125.** செம்மான் தரித்த சிவன் - சிறந்த மானைக் கையில் கொண்டிருக்கும் சிவன். **75.126.** கதைமுகம் - கதையின் ஆரம்ப உரைகள். கருத்திலுற்றான் - மனதில் எண்ணினான். **75.127.** பதையாது - மனம் பதைக்காமல். **75.128.** நெஞ்சமசையாமல் - மனம் நிலைதடுமாறாமல். நினவு - 'நினைவு' என்பதின் பேச்சு வழக்கு. **75.129.** அஞ்சு - 'ஐந்து' என்பதின் பேச்சு வழக்கு. பஞ்சபூதம் - நிலம், நெருப்பு, நீர், காற்று, ஆகாயம் என்னும் ஐந்து பூதங்கள். பொறிபுலன் - உலக நுகர்வுகளுக்குரிய புலன்கள்; அவை மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்புலன்கள். **75.130.** காமம் - ஆசை. வெகுளி - சினம். **75.131.** கார் - மன இருள். அறுத்து - நீக்கி. மாயக்கசடு - உலக மாயை ஆகிய எச்சம். ஊடறுத்து - அறவே நீக்கி. **75.132.** ஏக மனதாய் - ஒரே மனதாய். **75.133.** ஆகமுடன் - உள்ளத்துடன்.

---

சு. சொல் : 1. பொரிபுலனை

Keeping his neck covered with black silk
If he listens to this recitation
The black silk will become white in colour.
His madness then will leave him sure.
You too stay listening to it with joy."
Saying thus the great sage left
After everyone paid him their respects.

**Janamējeyan sits down to listen to the story of the Pāratam**

Assenting, Janamējeyan said *Hari Ōm*!
He did proper rites for hearing
The *Vaikunta Ammāṉai*.
By the grace of Lord Civaṉ with the deer[1]
The king heard the story of the *ammāṉai*.
He, in peace registered the introduction
On his mind, with his attention not scattering.
Mind not wavering, missing no thought he listened.
He controlled the five elements.
He got his senses suspended.
He rid himself of lust and anger.
He rid the darkness of the mind.
Termed all *māya*[2] and mended his heart.
He focussed his mind with one intention
That of listening to the story being told,
The king on his throne sat in state.

1.Civaṉ is supposed to hold a deer in one of his hands. 2. (In Hinduism) the material world that people wrongly believe exists or the false appearances that things can have.

விருத்தம்

76. வேத வியாகர் முன்னாளில் விளம்பும் வசன முள்ளபடி
தேச முழுதுஞ் சிறப்புளதுந் தெளிந்து பார்க்கச் சமனிதமாய்
பூத மளைந்த தயிர்போல புவன மடந்த வகைமோசம்
நீத மிருந்தும் நெறியிருந்தும் நிலை வண்ண மொழிந்தாரே.

77. விதித்த விதியைப் பாராமல் வேத வியாகர் தனைநோக்கி
எதிர்த்து செய்தி கேட்டபலன் இப்போ நமக்குப் பலித்துதென்று
மதித்து மனதில் சினமேசன் மனது கலங்கித் தெளிந்தறிவாய்
துதித்துப் புகழ்ந்து முனிதனையும் சொன்னான் மகிழ்ந்து சொன்னானே.

78 சொல்லிய கதையைக் கேட்கச் சுத்தமாய் மனதைத் தேற்றிப்
பல்லிய வசன மெல்லாம் பரிவுடன் தெரிய நன்றாய்த்
துல்லிய மாகக் கேட்டுத் துயரற விறுமை போக
மெல்லிய பட்டுப் போற்றி வீற்றிருந் தரசன் கேட்டான்.

79. கருநிறப்[1] பட்டு போற்றிக் கதைதனை யுற்றுக் கேட்டால்
கருநிறம் வாங்கி வெள்ளை கதித்தவெண் பட்ட தானால்
வருமொரு விறுமை நீங்கி மனத்துயர்த் தீரு மென்று
குருமுனி யுரைத்த நேசங் குணமெனக் கேட்டான் மன்னன்.

## நூலாசிரியர் கண்ணனை வணங்குதல்

நடை

80. வாகுடைய பஞ்சவர்கள் வைகுண்டஞ் சேர்ந்தகதை
பாகுடைய சொல்லான் பரிசித்து வேந்தன்மகன்
சீரார் செனமேசன் சித்தமகிழ்ந்[2] தன்பாக
நேராகக் கேட்க நீலவண்ணர் காப்பாமே.

**76.2.** சமனிதமாய் - ஒப்பற்ற தன்மையதாய். **76.3.** இடைந்த - துன்பப்பட்ட. வகை - முறைகள். **76.4.** நீதம் - நன்னெறி. நிலைவண்ணம் - ஒழுகும் வாழ்க்கை நிலை. ஒழிந்தாரே - கைவிட்டாரே. **77.1.** பாராமல் - பார்க்காமல். வியாகர் - வியாசர். **77.2.** இப்போ - இப்பொழுது. **78.1.** சொல்லிய கதை - வியாசர் சொல்லிய மகாபாரத கதை. **78.2.** பல்லிய வசனம் - வியாசர் இசைத்த செய்திகள்; 'பல்லியம்' ஒரு வகை இனிய ஓசை தரும் இசைக்கருவி; இங்கு இது வியாசரின் வாய்மொழிக்கு ஒப்புமையாயிற்று. **78.3.** துல்லியமாக - தெளிவாக. விறுமை - மன குழப்பத்தால் ஏற்பட்ட நோய். **78.4.** போற்றி - 'போர்த்தி' என்பதன் பேச்சு வழக்கு. **79.2.** வெள்ளை கதித்த - வெண்மை மிகுந்த; பட்டு வெண்ணிறம் ஆனது செனமேசயனின் உடம்பில் ஏற்பட்ட வெண்குட்டத்தைத் தான் எடுத்துக் கொண்டதால் ஆகும். **79.3.** விறுமை - மனச் சோர்வால் ஏற்பட்ட புத்தி பேதலிப்பு. **79.4.** நேசம் - அன்பு; இங்கு அன்பாக வியாசர் உரைத்த பாரத கதை. குணமென - நல்லதென. **80.1.** வாகுடைய - அழகிய; ஒழுக்கம் மிகுந்த எனினும் பொருந்தும். **80.2.** பாகுடைய - இனிமையுடைய. **80.3.** சித்தம் - அறிவு.

சு.சொல் : 1. கருநிர 2. சித்தமகிள்ந்து

As Vēda Viyācar said once,
His questioning of Viyācar in anger
Was yielding effective results presently.
Janamējeyan assessed it at heart.
His confused mind got clarified.
He joyfully worshipped and praised the sage.
To listen to the story being told
The king prepared and purified his mind.
As Viyācar advised with care,
He attentively listened to the details,
So that his grief and madness would go.
He sat covering self with a thin silk.
The sage once said that the king should listen
To the story with intent true,
Covering the body with black silk.
If the black silk became white by and by
His madness and mental agony would leave.

**Author of the book invokes kaṇṇaṉ**

O the blue complexioned one! Help
The sweet tongued son of Paricittu,
The joyful Janamējeyan to hear
The story of how the handsome Pāṇṭavars
Reached the blissful *Vaikuṇṭam*.

### வைகுண்டம் சென்ற கதை பாடுவதாக ஆசிரியர் கூறுதல்

ஒதுபுகழ்[1] கதைதான் உரைக்கவே தான்கேளீர்
மாது சரசோதி வழுத்துகின்ற சொற்படியாய்[2]

மேருவில்[3] விநாயகனார் விரித்தெழுதும் வேதாந்தம்
பாரிலுள்ளோர் கேட்கப் பாடுகிறே னம்மானை

### பாண்டவர்கள், துரௌபதை ஆகியோர் கங்கை நதிக்கரை அடைதல்

ஐவர் சகாயன் அரிகேசவன் முகுந்தன்
சைவர் சகாயன் தாமோதர னிருக்கும்

அரிய வைகுண்டம் அடைவோ மெனவேதான்
உரிய தொருதன்மர் ஒருமித்துவா றோமெனவே

நடக்குகிறார் தேசம்விட்டு நன்னகரி தான்கடந்து
வடக்கு முகமாய் வடமேற் கொருபுறமாய்த்[4]

தன்மருடன் தம்பியரும் தாரார்[5] துரோபதையும்
கன்மமெல்லாம் விட்டு கங்கைக் கரையில்வந்தார்

### அனைவரும் கங்கையில் நீராடி அனுஷ்டானங்கள் முடித்தல்

கங்கை நதிகண்டு கையால் புனலருந்தி
மங்கை துரோபதையும் வாகான ஐவருமாய்

தலையில் புனல்தொ ளித்துத் தாயே சரணமென்று
அலையிலே தான்மூழ்கி[6] அனுஷ்டானமு முடித்து

### ஆசைகள் துறந்து அனைவரும் புறப்படுதல்

ஆதித்தனை வணங்கி ஐவருந்தான் அங்கிருந்து
சாதித்தார் வேற்றுருவஞ் சன்னாசி வேடமுமாய்

**80.6.** சரசோதி - 'சரஸ்வதி' என்னும் சொல்லின் பேச்சு வழக்கு. வழுத்துகின்ற - புகழ்கின்ற. **80.7.** மேரு - மேரு மலை. **80.9.** சகாயன் - உதவி புரிகின்றவன். **80.10.** சைவர் சகாயன் - 'சைவ மதத்தாருக்கும் அருள் புரிவோன்' என்ற பொருளில். **80.12.** வாறோம் - வருகிறோம். **80.13.** நடக்குகிறார் - நடக்கின்றார். நன்னகர் - சிறந்த வளம்பம் மிகுந்த நகரம்; அஸ்தினாபுரம். **80.15.** தாரார் - கழுத்திலணிந்த மாலை ஆடுகின்ற. **80.16.** கன்மம் - கர்மம். **80.17.** புனல் - நீர். **80.20.** அலையிலேதான் - கங்கை நதியின் நீர் அலையிலேதான். அனுஷ்டானம் - நித்திய கர்ம விதிகள். **80.21.** ஆதித்தன் - சூரியன். **80.22.** சாதித்தார் - நிறைவேற்றினார். சன்னாசி வேடம் - சந்நியாசியின் உருவம்.

---

சு.சொல் : 1. ஓதுபுகள் 2. சொற்பபடியாய் 3. மேர்வில் 4. புறமாய் 5. தாறார்துறோ 6. முள்கி

**The author says he is singing about the story of the journey to *Vaikuṇṭam***

Listen to this famed story being rendered
Goddess Caracvati, herself praising the words.
As on mount Mēru Lord Vināyakar
Writes down these vedic explanations.
For the people of the world I sing this *ammāṉai*

**The Pāṇṭavars and Troupati reach the banks of the Ganges**

Harikēcavaṉ, Mukuntaṉ, is
Always the helper of the five.
To reach the abode of Tāmōtaraṉ
Who always graces the 'saivites',
Tarmar decided to walk on,
Leaving his good town behind.
Went he Northwards and North-Westwards.
Tarmar, his brothers and Troupati
Leaving behind their *karma's* effect,
Came to the banks of the river Ganges.

**They bathe in the Ganges performing religious ceremonies**

Seeing the Kaṅkai they drank from their hands.
Womanly Troupati and the five,
Sprinkling the river water on their heads,
Said, O mother Kaṅkai! you're our refuge!"
They dipped into the water and performed the rites.
Worshipping the suṉ, the famed five
Took the form of sanyasins.

சார்ந்த மரவுரியுஞ் சடைமுடியுந் தான்தரித்துப்
பார்ந்தமாய் வேடம் பருவமுடன் தான்முடித்துப்

பாராசை தானுமற்று பைங்கொடியார் தன்னைவிட்டு
ஓராசை தானுமற்று உத்தமன்ன ராசைவிட்டு

மாதாவி னாசைவிட்டு மந்திரிமார் தன்னைவிட்டு
மீதான கானகத்தில் விரையவே சென்றனர்காண்

## கலியனின் அதர்ம நெறி வருகை

அப்போது மாயன் அவர்மனதைத் தேற்றுதற்கு
இப்போ தெதிரே இவர்காணவே கலியன்

தன்னுடைய மாதாவின் தலையில் சுமடேத்தி
மன்று மனைவிதன்னை[1] வார்புயத்தின் மீதேற்றி

## கலியனின் முறையற்ற செயல் குறித்த தன்மர் உரை

வந்தவனைக் கண்டு மன்னுதர்மர் தானகைத்து
இந்தவகைத் தம்பியரே ஏதோ சகாதேவர்

கண்டோம் புதுமை கலியுக மானதினால்
அண்டர் பெருஞ்சுமையை அன்னைதலை மீதேற்றிப்

பெண்டிர் தனைத்தோளில் பெருமையென வைத்துவந்தான்
பண்டு[2] மொழிதவறில்[3] பழுதுவருமே நமக்கு

மானகரை விட்டு வகையாய்ப்[4] பிழைத்தோமே
ஆனதம்பி மாரே அரிகேசவன் பதத்தை

**80.24.** பார்ந்தமாய் - பாந்தமாய்; ஒழுங்காய். **80.25.** பாராசை - உலகத்து ஆசை. **80.26.** உத்த - 'உற்ற' என்பதன் பேச்சு வழக்கு. **80.28.** மீதான - பெரியதான. **80.30.** கலியன் - கலியுகம்; இங்கு உருவு் கொண்டு வந்தமையால் கலியன் என்றழைக்கப்பட்டான். **80.31.** சுமடு - சுமை. ஏத்தி - 'ஏற்றி' என்பதின் பேச்சு வழக்கு. **80.32.** வார் புயம் - நுண்மையான தோள். **80.33.** நகைத்து - ஏளனமாக நகைத்து. ஏதோ - எதனால். சகாதேவர் - கோள் மற்றும் கிரக நிலைகளின் ஓட்டத்தைக் கணிப்பதில் பாண்டவர்களில் இவர் வல்லவர்; ஆதலின் தருமர் இவரிடம் வினாவினார் என்க. **80.36.** அண்டர் பெருஞ்சுமை - இடையர்கள் கன்று முதலிய பெருஞ்சுமைகளைத் தம் தோள் மீது சுமந்தாற் போல். **80.38.** பண்டு மொழி தவறில் - பழமையான நீதி, நியாயம் தன்னைத் தவறவிடின். பழுது - குற்றம். மானகர் - மாநகர்; பெரிய நகர்; அஸ்தினாபுரம். **80.41.** பிறகே - பின்னால். **80.42.** குன்றா மனம் - தளர்ச்சியடையாத மனம்.

---

சு.சொல் : 1. மன்விதன்னை 2. பண்டுமொளி 3. தவரில் 4. வகையாய்ப்பிளைத்

With barks of trees as dresses and matted hair,
They changed their forms so fittingly.
They got rid of desire for lady and land.
Breft of desires they left the good state.
They rid themselves of mother's love.
And that of the ministers good..
In the big forest they hurried along.

**The advent of *Kali*[1]**

Kaṇṇaṉ to make their minds very strong
Caused *Kali* to come in front of them.
While *Kali's* mother was carrying
A heavy load on her frail shoulders,
He was carrying his wife on his back.[2]

**Tarmar comments on *Kali's* wrong doing**

Seeing him come thus Tarmar laughed.
"Look at this O brothers, Cakātēvaṉ!
Such a strange thing happens cause it's *kali yukam*.
He has placed a heavy load on his mother's head.
But he carries his woman on his shoulders..
He behaves as if it's a very great deed.
If we don't follow the wise old sayings,
We will surely into troubles get.
We could survive out of that great city[3]
O brothers! think intently of the feet of Kaṇṇaṉ!
Lose not your hearts, have faith in Kaṇṇaṉ"

1. *Kali yukam*. 2. It implies that during the *kali yukam* one's mother would be ignored whereas his wife would be celebrated 3. Hastināpuram.

நன்றாக யுச்சரித்து நம்பியே யென்பிறகே[1]
குன்றா மனதுடனே கோபால ருண்டெனவே

### அனைவரும் கானகம் அடைதல்

தார்மருவுந் தம்பியர்க்குச் சாதகமாய் வார்த்தைசொல்லிச்
சீராருங் கானகத்தில் சென்றுபுக்கா ரம்மானை

### கானகத்தின் வெம்மை

கல்லு முருகிவிடும் கடுவிடமும் வந்துவிடும்
புல்லும் புகைநிலமும் போய்புகுந்தா ரம்மானை

### தர்மர் க்ண்ணனை வேண்டுதல்

மேவலர்கள் தன்பதமும் மின்னனையார் தன்பதமும்
பூவிலு மெல்லியதாள் பொறாமலுந்தா னேதுரைப்பார்

**விருத்தம்**

81. தேக மிழந்து வாராமல் செடத்தை மிகவே தான்சுமந்து
ஆக மகிழ்ந்து வருவோர்தன் னடியே[2] சுடுமோகோ பாலா
தாக மிகுந்த தவிப்பிளைப்புஞ் சார்ந்த யுடலில் தயவுசெய்து
மேகஞ் சிறந்த மேனியனே விடைதா நந்த கோபாலா.

82. ஒன்று மறியோம் பொருளறியோம்[3] உன்னை யல்லால் துணையறியோம்
நன்று மறியோந் தீதறியோம் நந்தா முகுந்தா நரசிங்கா
அன்று சகாய மிருந்திருந்து அடியார் தங்க ளிடர்தீர்த்தாய்
குன்று மனங்கள் குன்றாமல் குடிகார் நந்த கோபாலா.

**80.43.** தார் மருவும் - மலர்மாலை பொருந்தும். சாதகமாய் - இணக்கமாய். **80.45.** கடுவிடம் - கொடுமையான விஷம். **80.47.** மேவலர் - தன்மேல் மிகுந்த விருப்பம் கொண்டோர்; பாண்டவர். பதம் - அழகு. மின்னனையார் - மின்னல் போல் ஒளியினை உடையாள்; திரௌபதை. **80.48.** பூவிலு மெல்லிய தாள் - பூவினை விடவும் மென்மையான பாதம். பொறாமல் - வேதனையினைத் தாங்காமல். ஏது - என்ன. **81.1.** வாராமல் - வராமல். செடம் - உடம்பு. **81.2.** ஆகம் - உள்ளம். **81.3.** தாகமிகுந்த - தண்ணீர் தாகம் மிகுந்த. இளைப்பு - உடல் தளர்ச்சி. **81.4.** மேகஞ் சிறந்த மேனியனே - நீல வண்ணத்தால் திகழும் வான நிறத்திலும் சிறந்த உடல் நிறம் கொண்டேனே; திருமாலே. விடை தா - "உடம்பை கீழப் போட்டு வைகுண்டம் வர அனுமதி தா" என்ற பொருளில். **82.3.** சகாயம் - உதவி. இடர் - துன்பம். **82.4.** குன்று மனங்கள் - நடக்கின்ற துன்பத்தால் வருந்தும் மனங்கள். குடிகார் - குடிகளைக் காப்பாய்.

சு.சொல் : 1. பரிகே 2. தனடியே 3. ளரியோம்

Uttering these soothing words to
His brothers he went with them into
The very dense and deep forest.

**Tarmar prays to Kaṇṇaṉ**

As the tender feet of the brothers
Who journeyed towards the feet of
The One who likened the lightning,[1] hurt,
Tarmar prayed, for, he could not
Stand the suffering of his brothers.
"Not leaving our bodies behind,
We carry it along with us.
Will their feet hurt whose hearts are joyful?
Thirst, gasping, and tiredness plague these bodies.
To leave these behind and come to you,
O Lord Kaṇṇaṉ kindly bless us!
We know nothig; the meaning for none.
But for you,we know no other help.
We don't know good from bad.
O Nanta, Mukunta, Naraciṅka[2]!
Once you got our problems solved.
Lord, save us from our sagging spirits!

1. Kaṇṇaṉ. 2. Different names for Kaṇṇaṉ.

83. அடியார்க் கிடறு வாராமல் அருகே வருவாய் பிரியாமல்
வடிவேல் கரத்தான் மாமனென்றும் மாயா நேச முடனேதான்
கடுவாய் மிருக மகன்றோடக் கடிய சுரங்க ளணுகாமல்
நெடியோ னெனவே வந்தருள்வாய் நீயே நந்த கோபாலா.

84. உருவா யுருவி லுருவேநீ உடலில் புகுந்து தனதாக
வெருவாய் குழறி வுரையாமல் வேறோர் கவனம் நினையாமல்
கருவாய் மயல்கள் பிடியாமல் காற்றாய் கொற்ற சிறைக்கெதிர்முன்
வருவா யடியார் வைகுண்டம் வரவே நந்த கோபாலா.

85. மனது வெறுமை பொல்லாது மாயாக் குரங்கு வலுசேட்டை
எனது பலவு மென்றெங்கும் யென்றென் றெங்கும் பொறிபுலனைத்
தனது தனதா யெண்ணாமல் தானே தானாய்த் தனித்துமனம்
உனது பதியே கெதியாக உதவும் நந்த கோபாலா.

## பாண்டவர்கள் கண்ணனைத் தொழுது வனத்துள் நடத்தல்

நடை

86. கலக்கமில்லா தெங்களையுங் கண்ணுதலே காத்தருள்வீர்
மலக்கமதை விலக்கி வெளிகாட்டி யெங்களையும்

நடத்தும் பெருமாளே நாங்களொன்றுந் தானறியோம்
சடத்துக்குள் வாழும் தத்துவமே போற்றியென்று

83.1. இடறு - துன்பம். 83.2. வடிவேல் கரத்தான் - கூர்மையான வேலினைக் கரத்திலே கொண்டவன்; முருகன். மாயா நேசம் - குறைதலில்லாதத அன்பு. 83.3. கடுவாய் - ஒரு வகை கொடிய காட்டு விலங்கு. கடிய சுரம் - கொடிய சுர நோய்; காய்ச்சல். 84.1. உருவாய் உருவில் உருவே - 'தனித்த உருவமாகவும், உருவமற்றும் திகழ்கின்ற தன்மையினனே' என்ற பொருளில். 84.2. வெருவாய் குழறி - அச்சத்தால் நா குழறி. வேறோர் கவனம் - மற்றுமொரு சிந்தனை. நினையாமல் - நினைக்காமல். 84.3. மயல்கள் - மயக்கம். பிடியாமல் - பிடிக்காமல். கொற்ற சிறைக்கு எதிர் முன் - காற்று அடித்து எங்களைச் சிறை பிடிப்பதற்கு முன்பாக. 84.4. அடியார் - இங்குத் திரௌபதையும் பாண்டவர்களையும் குறித்தது. 85.1. வெறுமை - துயரம்; மனத்துள் நிரம்பிய சூனியம் எனினும் அமையும். மாயாக் குரங்கு - மாயத் தன்மைகள் செய்யும் குரங்கு. சேட்டை - சேஷ்டை; சிறுபிள்ளைத்தனச் செயல்கள். 85.2. பொறிபுலன் - ஐம்புலன். 85.3. தனது தனதாய் - ஆத்துமாவுக்கான உடமை என்று. தானே தானாய் - ஐம்புலன்கள் தம் உலக நுகர்ச்சியால் தானே ஆன்மாவாம் என்று. 85.4. உனது பதி - திருமாலே! உனது இருப்பிடமாகிய வைகுண்டம். 86.1. கலக்கமில்லாது - எவ்வித துன்பமும் வந்து அணுகாமல். கண்ணுதல் - சிவன்; ஆசிரியர் இவ்விடம் சிவனையும் திருமாலையும் ஒருவராய்க் கொண்டார். 86.2. மலக்கம் - கலக்கம். வெளிகாட்டி - பாதையினைக் காட்டி. 86.4. சடத்துக்குள் வாழும் தத்துவம் - உடம்பிற்குள் வாழும் தத்துவப் பொருளாம் இறைவன்.

O Lord Kaṇṇaṉ guard your children!
Lord, save your followers from sorrow.
Come closer and always be with us.
O uncle, your love for us is unfailing!
With a sharp spear in your hand
Make wild beasts run away from us.
Save us from the severe fevers.
Please come and grace us O Lord!
You, the form and formless, enter us.
Save us from blabbering in fright.
Help us not to think anything else but you.
Save us from the cutting wind.
Do come to take us to *Vaikuṇṭam.*
Monkey like, an aimless mind is evil;
It's capable of mighty mischief.
Sparing us from confusion O Lord[1] save us!
Save us from vagueness and show us the way.
We know nothing O Lord guide us.
O Lord who permeates all things
We pay obeisance to you, bless us!"

1. *Kaṇ nutal* - an eye on the forehead. Lord Civaṉ. The author here considers Civaṉ and Viṣṇu as one.

நடந்தார் வனந்தனிலே நாராயணா[1] வெனவே
மடந்தையுடன் ஐவருமாய் மலர்ப்பாதந் தசனோகச்

சோலைநிழ லில்லாத சுடுவனங்க ளானதொரு
பாலைவனங் கடந்து பஞ்சவர்க ளப்பாலும்

### கதிரவன் மறைவு

அருள்முனிவர் வாழும் ஆச்சிரமம் தான்பார்த்து
இருளுருண்டு வாரதினால் இரவியுமோ போய்மறைந்தான்[2]

### அனைவரும் இரவினுள் நடத்தல்

கார்மேவு வல்லிருளில் காவலர்க ளைவருமாய்
பார்மீதிலே வழுக்கும் பாறைவழி[3] யேநடந்து

கொள்ளிக்கு விள்ளாத கூரிருளிலே யலைந்து
தள்ளி[4] வழிநடக்கச் சற்றுந் தெரியாமல்

### தருமர் துயரமுறுதல்

மனதிடைந்து புண்ணாகி மாயோனைத் தானினைந்து
கனலில் மெழுகதுபோல் கானகத்திலே யுழன்று

தம்பிமார் தன்துயரம் தானறிந்து[5] தன்மருமே
எம்பிமார் தன்னினைவு இனியறிவோ மென்றுதன்மர்

பார்த்தனுடன் நால்பேரும் பாஞ்சாலி தன்னையுந்தான்
ஏற்றதொரு வுற்பனங்கள் இனிக்கூறக்[6] கேளுமென்று[7]

### தன்னை நீக்கிப் பிறரை நாடு திரும்ப தருமர் கூறுதல்

தம்பியரை நோக்கித் தன்மருந்தா னேதுசொல்வார்
வெம்பிக் கலியால் வெருண்டுபயந் தைவருமாய்

86.6. நோக - வேதனையை ஏற்படுத்த. 86.7. சுடுவனம் - பாதத்தைச் சுடுகின்ற நிழலற்ற காடு. 86.10. இருள் உருண்டு வாரதினால் - இரவு விரைந்து வருகின்றமையால். இரவி - சூரியன். 86.11. கார் மேவு - கரிய இருள் போலும் பொருந்துகின்ற. காவலர்கள் ஐவர் - அரசர்களான ஐவர்; பாண்டவர். 86.12. பாறை - சிறிய குன்று. 86.13. கொள்ளிக்கு விள்ளாத கூரிருள் - எரியும் ஒளி நெருப்புக்கும் புறந் தள்ளாத கடுமையான இருள். 86.15. மனதிடைந்து - மனம் மிக வருந்தி. 86.16. கனல் - நெருப்பு. கானகம் - காடு. 86.18. எம்பிமார் தன் நினைவு - எனது தம்பியர்களின் மன எண்ணம். 86.20. உற்பனம் - உண்மை. 86.22. வெம்பி - வருந்தி. வெருண்டு - மனம் திகைத்து.

சு.சொல் : 1. நாறாயணா 2. போய்மரைந்தான் 3. பாரைவழி 4. தள்ளிவளி 5. தானரிந்து 6. இனிக்கூரக் 7. கேழுமென்று

They walked into the forest chanting Nārāyaṇa *mantra*.
With the woman the five, their tender feet hurting
Walked in the forest shadowless.
The Pāṇṭavars crossed the desert and
Saw the āsramam of a graceful sage.
The sun went down and darkness spread.
In the inky darkness the five
Kings walked over slippery rocks.
In a darkness which even light couldn't remove
They faltered and could not walk straight.

**Tarmar feels sorry**

Heart broken, Tarmar thought of Kaṇṇaṉ.
They wandered about, feeling like a fly before fire.
Tarmar was aware of his brothers troubles.
He wanted to know what crossed their minds
Of the four brothers and Pañcāli[1]
"I must hear them speak the proper truth."
Thinking thus Tarmar addressed them.
"Frightened by *kali* we, the five

1. Tiroupati.

எதிர்த்துபொர மாட்டாமல் இளைத்தோடிப் போனதினால்
துதித்துலக மெல்லாந் தூரசணிப்பார் கண்டீரே

இருந்து செயங்கொண்டு எதிர்த்து விரட்டாமல்
அருண்டு மிகப்பயந்து ஆரணியம் போய்ப்புகுந்தார்

என்றுலகஞ் சொல்லி ஏசாமா லிப்போது
மன்றுலகந் தன்னில்மிக வாழவீமன் மைந்தனுக்குச்
சென்றுதவி யாகத் திரும்பியே நால்வருந்தான்

சேர்ந்து கலந்து சென்றுதவி யாயிருந்து
ஏந்துபரி சித்துவுக்கு எதிர்த்தொருவர் வாதுசெய்து

கலியன் பிறந்து[1] கைகலந்து தர்னெருங்கி
வலியச் சருவிமிக வளைத்துபோர் செய்தாக்கால்

சிறுவன் வினையறியான் செருக்களத்தில் சென்றறியான்[2]
உறுபூசல் செய்தறியான் உற்றதொரு பேருமில்லை

தானே தனியாய்த் தயங்கி மலையாமல்
தேனேயென் தம்பியரே சேர்ந்து கலந்துகொண்டு

உற்றபரி சித்துவுக்கு வுதவியாய்ப் போயிருந்து
வெற்றிசெய்து[3] நீங்கள் விரட்டிவினை யூடறுத்துச்

செங்கோல் தழைத்தோங்கச் சிறுவன்பரி சித்துவுடன்
அங்கே யிருந்து அவனிதனை யாளுமென்று[4]

சீராருந்[5] தன்மர் தெளிந்துரைத்தா ரம்மானை
நேரா யிருந்த நேரிழையோர் நால்வருந்தான்

**86.23.** பொரமாட்டாமல் - போர் செய்யாமல். **86.24.** தூசணிப்பார் - குற்றம் சொல்லுவார். **86.25.** செயம் - வெற்றி. **86.26.** அருண்டு - திகைத்து. ஆரணிம் - காடு. **86.27.** ஏசாமல் - பழிக்காமல். **86.28.** அவீமன் மைந்தன் - அபிமன்யுவின் மைந்தன்; பரிசித்து. **86.30.** வாது - தர்க்கம். **86.32.** வலியச் சருவி - தானாக வந்து போர் செய்து. மிக வளைந்து - மிகுதியாகச் சுற்றி வளைந்து. சிறுவன் - பரிசித்துவைக் குறித்தது. வினையறியான் - செய்யும் செயல்முறையை அறிய மாட்டான். செருகளம் - போர்க்களம். **86.34.** உறுபூசல் - மிகுதியான சண்டை. உற்றதொரு பேருமில்லை - பரிசித்துக்கு மிகவும் நெருக்கமான மக்களுமில்லை. **86.35.** மலையாமல் - மலைத்து நிற்காமல். **86.36.** தேனே - தேனே என்றது இவண் பாஞ்சாலியைக் குறித்தது. **86.38.** வினை ஊடறுத்து - தீய வினைகளை அறவே ஒழித்து. **86.39.** தழைத்து ஓங்க - செழித்துச் சிறக்க. **86.40.** அவனி - உலகம். **86.41.** சீராரும் - மேன்மைகள் அனைத்திலும். சிறந்த நேரிழையோர் - சிறந்த ஆபரணங்கள் அணிந்தவர்.

சு.சொல் : 1. பிரந்து 2. சென்றரியான் 3. விறட்டிவினை 4. யாழுமென்று 5. சிராறுந்

Did not fight him back with valour.
We did shy away from the fight.
This will make the people ridicule us.
They would say, 'Not standing their ground
And driving the *kali* off,
Frightened, they into the forest fled.'
The world will abuse us thus.
To save our face you four go back
And help Apimaṉyu's son Paricittu.
You go back and stay with him as help.
As an act of *kali* if someone dares him
Be by his side and help him out.
He is but young; doesn't know the art of war.
Good experience in war, he doesn't have.
He has n't fought much, not many to help.
All alone he may get confused.
O my sweet brothers go back, join him!
Go back as help to Paricittu.
Ridding of his foes give him victory.
Making his rule great, you stay with him
Along with him you rule the world!"
Tarmar, the great thus spoke at length.

## தம்பியர்கள் பதிலுரை

மன்னாநீ ரெங்களையு மாநகரில்[1] போயிரென்றால்
அன்னாளில் நாங்கள் அபசாரஞ் செய்தோமோ

கர்த்தனுட[2] சித்தமிப்போ கலங்கினது யெந்தவிதம்
பெத்த பிதாவறியோம்[3] பின்னையொன்றுந் தானறியோம்

இந்தமட்டு மெங்களைநீர் இடுக்கிக்கொண் டேதிரிந்து
வந்த வினைக்கெல்லாம் மறுப்படா தெங்களையும்

வளர்த்த மகிமையிதோ வனந்தனிலே வந்திருந்து
அழுத்தமுட[4] னெங்களைநீர் அகலப்போ மென்றீரே

ஐயா குருகுலமே அண்ணரே யென்றழுதார்
மெய்யாக நீர்தாமும் விட்டுப் பிரிவீரோ

எங்களையும் விட்டு இருப்பீரோ தான்தனியே
திங்கள் முகவதனா செப்புகின்ற வாறேது[5]

சித்தத் துக்கோர் தீவினைகள் செய்தோமோ
சற்றிரக்க[6] மில்லாமல் தானேதான் சொன்னதென்ன

செங்கோல்செலுத் துமென்று தேவரீர் வாக்கதினால்
எங்கள்முகம் பார்த்துரைக்க எழுந்துதோ சித்தமது

கணப்பொழு தும்மைவிட்டுக் காலுந்தரிப் போமோ
சணப்பொழுது கரணாமல் தரிக்குமோ யெங்களைநீர்

**86.44.** அன்னாளில் - அந்நாளில்; உங்களோடு அஸ்தினாபுரத்தில் இருந்த அந்த நாட்களில். அபசாரம் - துர்செய்கைத்ள். **86.45.** கர்த்தனுட - இறைவனுடைய; இங்குத் தர்மரைக் குறித்தது. சித்தம் - மனவெண்ணம். இப்போ - இப்பொழுது. **86.46.** பின்னை - பிறகு. **86.47.** இடுக்கிக் கொண்டே திரிந்து - பெற்றத் தாய் குழந்தைகளை இடுப்பில் எடுத்துக் கொண்டு அங்குமிங்கும் திரிந்ததைப் போல். **86.48.** வந்த வினை - எங்களுக்குச் சிறுவர் பருவம் முதல் இப்பொழுது வரை ஏற்பட்ட துன்பங்கள். மறுப்படாது - ஒரு சிறு வடு கூட ஏற்படாது. **86.49.** மகிமை - சிறப்பு. **86.50.** அழுத்தமுடன் - மன அழுத்தத்துடன். அகலப்போ - என்னைப் பிரிந்து தள்ளிப்போ. **86.51.** குரு குலம் - குரு வம்சத்து தலைவர். **86.52.** மெய்யாக - உண்மையாக. **86.54.** திங்கள் முக வதனா - சந்திரனைப் போல குளிர்ந்த ஒளி வீசும் முகமுடையவனே; தருமரே. செப்புகின்ற வாறேது - கூறுகின்ற முறைதான் என்ன. **86.55.** சித்தத்துக்கோர் - உங்கள் மன எண்ணத்திற்கு. **86.57.** செங்கோல் செலுத்தும் - பரிசித்துவோடு இருந்து அரசாட்சியினை நடத்தும். தேவரீர் - இங்குத் தருமனைக் குறித்தது. **86.58.** எழுந்துதோ சித்தம் - மனத்தில் எண்ணம் எழுந்ததா என்றவாறு. **86.59.** கணப்பொழுதும் - சிறிது நேரங்கூட. **86.60.** சணப்பொழுது - சிறு நேரங்கூட.

---

சு.சொல் : 1. மானகரில் 2. கத்தனுடசித் 3. வரியோம் 4. அழுந்தமுட 5. வாரேது 6. சத்திரக்க

The four worthy men, bedecked with jewels
Said, " O king, you bid us back to town!
Did we ever harm you when we lived there.
How did our lord's mind get confused now?
We know no father, no one else but you.
Till now you guided us around like a mother.
From our youth till now, you saved us from harm.
Brought us up well but now in the forest,
With a hard heart you ask us away.
O leader of the guru clan!
Oh dear! Oh brother! "they all wept."
"Is it true that you want to leave us?
Can you be alone without us?
O brother what harsh words you've spoken!
Did we ever go against your will?
Then why should you speak so heartlessly.
You say that we help Paricittu to rule.
Did our sufferings cause you say so?
We can't stay away for a moment.
Seeing you not how can we stay?

அண்ணரே யெங்களைத்தான் அவனிதனில் போமெனவே
எண்ணி மனந்துணிந்து இப்போது சொன்னீரே

### தருமர் தம்பியர்களை நாடு திரும்ப மீண்டும் வற்புறுத்தல்

தம்பியருந் தானுரைக்கத் தன்மருந்தா னேதுசொல்வார்
அன்புடைய தம்பியரே ஆளுகிற[1] தேசம்விட்டு

என்பிறகே[2] வந்தால் இளவரசுக் காருமில்லை
சம்பி முகம்வாடித் தானேபரி சித்திருப்பான்

அரசு நிலைநிறுத்திய அவனிதனிலே யிருந்து
விரசுடைய அத்திபுரம் மேதினியைத் தானாண்டு

குருகுலத்தில் மன்னருட கோத்திரத்தில் தான்கூடி
மருவி யிருந்துநன்றாய் வாழுமென்று தானுரைக்க

### தம்பியர்கள் தருமர் சொல் மறுத்துக் காலில் விழுதல்

அந்த மொழிகேட்ட[3] ஆனதம்பி நால்வருந்தான்
இந்த மொழியுரைத்தீர் என்கோவே அண்ணாவி

மண்ணாசை பெண்ணாசை மற்றுமுள்ள பொன்னாசை
கண்ணான மைந்தரொடு காசினியில் பேராசை

எல்லா மனுபவித்து இப்போது யும்முடனே
செல்லாரும் வைகுண்டம் சேரவென்று தானினைந்து

வந்தோம் புவியைவிட்டு வைகுண்டஞ் சேரவென்று
சந்தோச மாய்வரவே சஞ்சலங்கள் சொன்னீரே

ஆண்டவனே யிப்போது அடியேன்கள் செய்தபிழை[4]
நீண்ட[5] புறையுடைய நெறிசேரு[6] மண்ணாவி

**86.61.** அவனி - உலகம்; இங்கு அஸ்தினாப்புரத்தைக் குறித்தது. **86.65.** என் பிறகே - எனக்குப் பின்னால்; 'பிறகே' என்பது பின்னால் என்பதின் பேச்சு வழக்கு. ஆருமில்லை - 'யாருமில்லை' என்பதின் பேச்சு வழக்கு. **86.66.** சம்பி - சாம்பி; வருந்தி. **86.68.** விரசுடைய - மேன்மையுடைய. **86.69.** கோத்திரம் - கூட்டம். **86.70.** மருவியிருந்து - பொருந்தியிருந்து. **86.72.** இந்த மொழி உரைத்தீர் - 'நாடு திரும்புங்கள் என்று எவ்விதம் எங்களிடம் உங்களால் கூறமுடிந்தது' என்ற பொருளில். **86.74.** கண்ணான மைந்தர் - கண்ணுக்கு நிகரான புதல்வர். காசினி - உலகம். **86.76** .செல்லாரும் - செல்வதற்கு அருமையான. **86.78.** சஞ்சலம் - மனக் குழப்பம். **86.79.** அடியேன்கள் - தம்பிகளாகிய அடியவராம் நாங்கள். **86.80.** புறை - 'பொறை' என்பதின் பேச்சு வழக்கு; பொறுமை.

---

சு.சொல் : 1. ஆழுகிற 2. என்பிரகே 3. மொளிகேட்ட 4. செய்தபிளை 5. நீண்டபுரை 6. நெரிசேரு

Brother how could you bring your heart
To ask us go away, leaving you?"

**Tarmar insists that they return**

When the brothers spoke thus, Tarmar said,
"O loving brothers if you come with me,
Leaving the kingdom, the prince[1] has no one.
He will feel hurt, his face would fall.
Stay where we had established our rule.
Rule the great state, Hastiṉāpuram.
Among the kingly folks of the *Guru* clan
Stay in peace and live long!" said he.
Hearing these words the goodly brothers said,
"How could you speak thus O king, our brother?
Desire for land, women, gold and children
We once had but no more of it now.
With a greed for things we've enjoyed all.
Now, with you we left the world behind
For the unattainable *Vaikuṉṭam*.
In joy we came but you had confused us.
O lord, what mistakes we, your slaves have done!
Tell us, O immensely patient and moral one!
You're our only refuge!" saying so,
They fell down and held his feet.

சரணஞ் சரணமென்று தாளிணையைப் பூண்டுகொண்டார்
சரணமென்ற தம்பியரைத் தன்ம ரெடுத்தணைத்து

## தருமர் தம்பியர்களைத் தன்னுடன் வர சம்மதித்தல்

அடிகள் மிகச்சுடவும் ஆவி தழன்றிடவும்
கடிதாய் மணல்சுடவும் காலோய்ந்து நின்றிடவும்

மாய்கை யிருளில் வழிதிகைத்து[1] நின்றிடவும்
சாய்கைவிட்டு வந்துமிகத் தட்டழிந்து நின்றிடவும்

பதியிழந்து[2] கானில் பரதேசியாய் வரவும்
அதிக பவுசிழந்து[3] அரும்பசிகொண் டேவரவும்

நீங்கள்படும் பாடுகண்டு நெஞ்சம்[4] பொறுக்காமல்
தாங்க முடியாமல் தானுரைத்தேன் தம்பியரே

இன்ப முடனீங்கள் என்பிறகே[5] வந்தவரைத்
துன்ப மதுநினைந்து சொல்லுவேனோ தம்பியரே

நாளுந்[6] திருமால் நமக்குத் துணையாக
ஆளுங்[7] குருசாமி யரியோன் பதஞ்சேர

நினைந்துவந்த நேசம் நிலைதவறா[8] தோர்மனதாய்
மனந்துணிந்து வந்தீர்களே வைகுண்டஞ் சேர்வோம்நாம்

## திரௌபதியை நாடு திரும்பும்படி தருமர் கூறுதல்

என்று தன்மர்சொல்லி ஏத்த துரோபதையை
நின்று மனமுருகி நேசமது புண்ணாகிக்

86.81. தாளிணையைப் பூண்டு கொண்டார் - தருமரின் இரு பாதங்களையும் இறுகக் கட்டிக் கொண்டார். 86.83. அடிகள் - பாதங்கள். ஆவி - உயிர். தளன்றிடம் - தளர்ச்சி அடையவும். 86.84. கடிதாய் - மிகுதியாய். காலோய்ந்து - கால்கள் தளர்ச்சி அடைந்து. 86.85. மாய்கையிருள் - மாயயிருட்டு. 86.86. சாய்கை விட்டு - இருப்பிடம் விட்டு. தட்டழிந்து - தன் நிலைமையில் தாழ்ந்து துன்பம் அனுபவித்து. 86.87. பதி - நாடு. கான் - காடு. 86.88. பவுசு - பெருமை. அரும் பசி - மிகுதியான பசி. 86.89. படும் பாடு - அனுபவிக்கும் துன்பங்கள். 86.91. என் பிறகே - என்னோடு. 86.92. துன்பமது நினைந்து - 'நான் வேண்டுமென்றே உங்கள் மனம் புண்படும்படியாக நினைத்து' என்கிற பொருளில். 86.94. ஆளுங் குருசாமி அரியோன் - நம்மை ஆளுகின்ற குருசாமியாகிய, முதல் தலைவனாகிய விஷ்ணு. 86.95. நினைந்து - நினைத்து. நிலை தவறாதோர் - தன் நிலையில் தவறாமல் ஒழுகுபவர். 86.98. நேசமது - அன்பு எல்லாம்.

சு.சொல் : 1. வளிதிகைத்து 2. பதியிளந்து 3. சிளந்து 4. நெஞ்சம்பொருக் 5. என்பிரகே 6. நாழுந் 7. ஆழுங்குரு 8. நிலைதவரா

Tarmar lifted his brothers who were at his feet.
He said," your feet getting scorched
And your spirit getting sagged,
Hot sand hurting, foot weary, you stood still.
Losing our way in the *māya* darkness,
We came here abandoning our homes.
On our way we felt lost and sad.
Breft of state, like mendicants
Losing your greatness, famished you came.
O brothers I couldn't stand your sufferings!
That is why I spoke as before.
O brothers with joy you come with me!
Will I say something to hurt you, tell?
As always Kaṇṇaṉ is our only help.
With the only purpose of reaching
The holy feet of Lord Kaṇṇaṉ you came.
We will somehow reach *Vaikuṇṭam*."

**Tarmar asks Tiroupati to return**

Tarmar turned to Tiroupati and said,
"It melts our heart when our love gets hurt.
Your soles getting scorched and eyes burning,

கால்க ளடிசுடவுங் கண்கள் பொறியெழவும்[1]
மேல்களது நொந்து மெய்சோர்ந்து கைசோர்ந்து

அருமை தலைகுலைய ஐவருடன் பின்னேதான்
பெருமை சிறுமையதாய்ப் பெண்ணரசே யிப்போது

உருமையுடன் நீவரவும் உத்தமமோ[2] பெண்ணரசே
தருமரென்ற பேரேது தயவுசற்று[3] மில்லாமல்

ஆனதினால் பெண்ணரசே அன்னையர்தா னுன்மாமி
தானவர்க்கு மாளிகையில் தனியே யிருப்பாள்காண்

மானனையீர் நீர்போய்யுன் மாமியுடன் சேர்ந்திருந்து
ஞான சிவபூசை நடத்தி யனுதினமும்

குந்தியம்மாள் தன்னிடத்தில் கோதையரே சேர்ந்திரென்றார்
அந்தமொழி[4] கேட்டு அருந்துதியு மேதுசொல்வாள்

## திரௌபதையின் வருத்த உரைகள்

மெய்யரே யெந்தனையும் வித்தகரே யிப்போது
பொய்யுரையா வேந்தேநீர் போவென்றுரைந் ததென்ன

நான்பாவி யானேனோ நாயகமே யென்றழுதாள்
தேன்பயிலு கோவேநின் சித்தத்தில் கண்டதென்ன

வாகாக யென்னை வரவேண்டா மென்றதென்ன
ஆகாப் புலைச்சி அளிபுலச்சி யானேனோ

86.99. கால்கள் அடி சுடவும் - கால்களின் அடிப் பாகம் வெம்மையால் சுடவும். பொறி எழவும் - வெம்மையால் தீப்பொறி எழவும். 86.100. மேல்கள் - உடலின் மேற்பகுதி. 86.101. தலை குலைய - முடி வாராமையால் தலைமுடி எல்லாம் குலைந்து கிடக்க. 86.103. உருமையுடன் - 'உரிமையுடன்' என்பதின் பேச்சு வழக்கு. உத்தமமோ - சரியோ. 86.104. தயவு - இரக்கம். 86.105. அன்னையர் - குந்தியைக் குறித்தது. 86.107. மான் அனையீர் - மான் போன்ற சாயலை உடையவளே. 86.110. அருந்துதி - அருந்ததி; இங்குக் கற்பின் சிறப்பால் பாஞ்சாலி அருந்ததியோடு ஒப்புமைப்படுத்தப்பட்டாள். 86.111. மெய்யரே - உண்மையை உரைப்பவரே. வித்தகர் - திறன் மிக்கவர். 86.113. நாயகமே - தலைவரே. 86.114. தேன் பயிலும் கோவே - தேன் போலும் இனிமையாகப் பேசும் அரசரே; தருமரே. சித்தம் - அறிவு. 86.115. வாகாக - பொருத்தமாக. 86.116. ஆகாப் புலைச்சி - உடன் வருவதற்குத் தகுதியற்ற புலைச்சாதிப் பெண்.

---

சு.சொல் : 1. பௌளவும் 2. உற்றமமோ 3. தயவுசத்து 4. அந்தமொளி

Your tired body hurting, your hands helpless,
Your beautiful locks getting dishevelled,
And your greatness getting lowered to low levels,
O queen, is it fair that you come with us?
How can I be called Tarmar, the just,
If I don't have any compassion for you?
O queen among the women listen:
Our mother, your dear mother in law
Stays all alone in her castle.
You go back and stay with her.
Hold *ñāṉa*[1], *Civa pūjai* daily.
O Tiroupati, with mother Kunti you stay!"

**The sad speech of Tiroupati**

After these words Aruntati[2] said,
" O my true and talented lord!
Why do you ask me to go back?
Have I become a sinner O lord?
Whats' on your mind, O my sweet lord?
Why do you say that I need not come?

1. Highly spiritual. 2.Tiroupati. Aruntati is a legendary chaste woman. Tiroupati is comparable to her.

சற்பினைக ளான சதிகேடு செய்தேனோ
கற்பழிந்து வேறே கண்டாசை கொண்டேனோ
ஐவர் துணையெனவே அன்றுமுத லின்றளவும்
மெய்வருடி யானும் விட்டுப்பிரி யாமல்
சித்தவர நடந்து சேவடியைப் பூண்டிருந்தேன்
கர்த்தனுக்கு[1] யென்னால் கசடுண்டோ யென்கோவே
இனிமே லடியாள்க்கு ஈடேறப் புத்தியென்ன
பனியான பொய்யுடலைப் பாரமென்று கொள்வேனோ
வையகத்தோர் சொல்லி மழுப்பி நகையாரோ
மெய்யகத்தில் சேர்த்து மேலும் பிரியாமல்
கார்த்தருள வேணுங் கண்ணனார் தன்னருளால்
ஏற்ற சிறைதனையே ஈடேற[2] முற்றிலுமே[3]
சீர்பாதந் தன்னில் தினமும் பணிந்துதொழ[4]
ஓர்மனதா யிங்கிருரென்று உத்தாரம் பண்ணுமென்றார்

## தருமரின் பதிலுரை

தன்மர் மனமகிழ்ந்து தையலையுங் கொண்டாடிக்
கன்மமெல்லாம் விட்டுக் கரையேறினோ மினிமேல்
சற்றுங் களங்கமில்லை தையலின்மேல் தம்பியர்மேல்
முற்றுந் தெளிந்து மோசவலை விட்டேகி
வந்தோ மினிமேல் மலைவுகள்தான் சற்றுமில்லை
சந்தோச மாச்சுதென்று தன்மர்மன மகிழ்ந்து[5]

**86.117.** சற்பினைகள் - சற்பனைகள்; சதிகள். **86.118.** வேறே கண்டாசை - பிற ஆடவர்களைக் கண்டு ஆசை. **86.120.** மெய் வருடி - உடம்பை வருடி. விட்டுப் பிரியாமல் - சிறிதும் அகலாமல். **86.121.** சித்த வர - சிறிது நேரம் கூட வர. சேவடி - சிவந்த பாதம். **86.122.** கர்த்தன் - தலைவன்; தருமரைக் குறித்தது. கசடு - மாசு. **86.123.** ஈடேற - ஆன்மா மேன்மை அடைய. **86.124.** பனியான பொய்யுடல் - கதிரவன் முன் உருகிப் போய்விடும் பனி போன்ற பொய்மையான உடல். **86.125.** மழுப்பி நகையாரோ - இது என்ன செயல் என்று சொல்லிச் சிரிக்க மாட்டாரோ. **86.126.** மெய்யகத்தில் சேர்த்து - உண்மையான நீங்கள் வாழும் இவ்விடத்திலே சேர்த்து. **86.128.** சிறை - உடம்பு. முற்றிலுமே - முழுவதுமாக. **86.129.** சீர்பாதம் - சிறப்பான திருமாலின் பாதாரவிந்தம். **86.130.** உத்தாரம் - பதில். **86.131.** தையல் - பெண்; திரௌபதி. **86.132.** கன்மம் - கர்மம். **86.133.** களங்கம் - குற்றம். **86.134.** மோச வலை - வஞ்சக வலை; இங்குக் கலியுகத்தின் வஞ்சக வலையைக் குறித்தது. **86.135.** மலைவுகள் - தயக்கங்கள்.

சு.சொல் : 1. கத்தனுக்கு 2. ஈடேரமுத் 3. திலுமே 4. பணிந்துதொள 5. மகிள்ந்து

Have I become an unwanted low caste[1] woman,
Plotting, did I ever do harm to you?
Losing chastity, did I fall for strangers?
From the beginning I held the five as my help.
I am with you through thick and thin.
I took refuge at your rosy feet,
And went wherever they went,
Now should my lord have ill will for me?
For salvation, what way this slave has?
Can I consider this dew like body as real?
Won't the world laugh at me if I do so?
Without us ever parting,
At that real, permanent place,[2]
By Kaṇṇaṉ's grace you should guard me.
Help me get free from this jail, my body!
Help me get a chance to fall daily at His feet.
Make heart, O lord, permit me to stay!"

**Tarmar's reply**

Tarmar pleased, praised Tiroupati
"Ridding *karma*, you were on safe ground.
My woman and my brothers have no fault.
They are completely out of confusion.
We are free of that wicked web.[3]
As we're through there's no more hesitations.
O! its' a blissful moment" Tarmar felt.

1. *Pulacci* - the feminine gender of *Pulayaṉ* ie the lowest caste in the caste hierarchy. 2. *Vaikuṇṭam*.
3. The worldly life.

### கதிரவன் உதயம்

அவ்விருளுந் தானீங்கி ஆதித்தன் வந்துதித்தான்
வல்லிருளும் போனதற்பின் வாய்த்தபுகழ் ஐவருந்தான்

### பாண்டவர்கள் கதிரவனைத் தொழுது பூஜை செய்தல்

எழுந்திருந்து பஞ்சவர்கள் இன்பமுடன் சூரியனை
விழுந்து நமஸ்கரித்து மென்மலர்கள் தானெடுத்துத்

தானமுடன் சந்திபண்ணி தர்ப்பணமுந்[1] தான்முடித்து
ஞானமது சிவமும் நன்மலர்கள் தான்தூவி

வெய்யோனைத் தெண்டனிட்டு மிககாண ஐவருந்தான்
மையிருண்ட கானம் வனத்தில் வழிகூடிப்

### வனத்துக் காட்சிகள்

புலிகரடி யாளிசிங்கம் பொல்லாத யானைபன்றி
நலிவுகண்டு தான்தட்டி நடந்தார் வனங்கடந்தார்

பாத்திபருங் காடுவிட்டுப் பரிவாய் வெளியில்வந்தார்
ஆத்தோரம் வந்து ஆத்துமத்தைச் சுத்திபண்ணிச்

### முனிவரைக் கண்டு ஆசி பெறுதல்

சீரான காட்டிலுள்ள தீர்த்தமது தானாடித்
தாராரு மாமுனிவர் தன்னை யடிபணிந்து

மாமுனியே நாங்கள் வைகுண்டஞ் சேர்வதற்குப்[2]
பூமேவு மேனியரே பொருந்தவிடை தாருமென்றார்

86.141. சந்தி பண்ணி - சந்தியாவந்தனம் செய்து. தற்பணம் - மந்திரம் சொல்லி நீர் இறைக்கும் ஒரு வகை சடங்கு. 86.142. ஞானமது சிவமும் - ஞானத்தினைத் தரவல்ல சிவனும். 86.143. வெய்யோன் - சூரியன். தெண்டனிட்டு - அடிபணிந்து வணங்கி. 86.144. மையிருண்ட - கரிய மையினைப் போல இருண்ட. வழி - பாதை. 86.145. யாளி - சிங்கம் மற்றும் யானை எனும் இரு வகை முகங்களின் சேர்க்கையோடு காணப்படும் ஒரு வகை விலங்கு. 86.146. நலிவு கண்டு - வருத்தம் தரும் செயல் கண்டு. தட்டி நடந்தார் - மிகுந்த காவலோடு நடந்தார். 86.147. பாத்திபர் - பார்த்திபர்; அருச்சுனன். 86.148. ஆத்தோரம் - 'ஆற்றோரம்' என்பதின் பேச்சு வழக்கு. ஆத்துமம் - உடம்பு. 86.152. பூ மேவு மேனியர் - பூ மாலைகள் பொருந்திய மேனியர்; முனிவர்.

சு.சொல் : 1. தற்பனமுந் 2. சேர்வதற்க்கு

Despelling the darkness the sun rose.
Getting up with joy the famed five
Performed *canti*'[1] and *tarppaṇam*[2].
Offering flowers, performed the *pūja*.
For Civaṉ, who would give them *ñāṉam*[3]
The five knelt before the sun at dusk
And walked the forest path in pitch darkness.
The forest abounded in tigers
Bears, *yāḷi*[4] and ferocious lions;
Elephants and wild boars roamed about.
They carefully walked and crossed the forest.
They all came out of the forest safely.
They cleansed their bodies on the banks of a river.

**They meet a sage and get his blessings**

They took bath and paid obeisance
To a sage who was sitting nearly.
They said," O great sage, bless us!
That we reach *Vaikuṇṭam* safely."

1. Performing special rites worshipping the sun, *cantiyāvantaṉam*. 2. A rite, done with sprinkling of water to propitiate the gods. 3. An extreme form of wisdom, got after much experience and meditation. 4. A mythical beast with a face that is a combination of the faces of elephant and lion.

## பாலை நிலத்தில் அனைவரும் செல்லுதல்

நல்லதென்று பஞ்சவர்கள் நடந்தார்கள் பாலைவழி[1]
வல்லதொரு கானில் வழிந்தோடும்[2] நீரதுபோல்

## பாலை நிலத்தின் கடுமை

காடுதனி லோடுங் கானலைநீ ரென்றுசொல்லி
ஓடுவா ரள்ளியுண்ண ஒண்ணுதலு மைவருமாய்

பாலை வனக்கொடுமை பார்பிளந்து நீறாகிச்
சாலையெனு மூங்கில்வனந் தானெழுந்து தூளாக

விண்ணளவுந் தீவளர்ந்து மேகமும்நீர் வற்றிடுமாம்
கண்ணும்[3] விழிக்கரிதாய்க் கடவுளே தஞ்சமென்று

## அனைவரும் மருதநிலம் அடைதல்

கண்டு பயந்துமிகக் காராரும் ஐவருந்தான்
விண்டுமால் தன்பாதம் மென்மேலு முண்டெனவே

நடந்தார் மலையாமல் நாரணரே தஞ்சமென்று
அடந்து மருதநிலம் ஆனதிலே வந்தனராம்

இருந்து தவிப்பாறி[4] எழுந்திருந்தா ரம்மானை
வருந்துமந்த ஐவருந்தான் வனமுங் கடந்தேகி

## பல இடங்களை அனைவரும் கடத்தல்

ஓடிப் பதினெட்டு யோசனையுந் தான்கடந்து
நாடித் திசைநோக்கி நடந்தார் வழிகூடிப்[5]

**86.154.** வல்லதொரு - கடுமையானதொரு. கான் - காடு. **86.155.** கானல் - பாலை நிலங்களில் வெம்மையின் மிகுதியால் தோன்றும் பொய் நீரோட்டம். **86.156.** உள்ளி - நினைத்து. ஒண்ணுதலும் - ஒளி பொருந்திய கண்ணினை உடையாளும்; திரௌபதையும். **86.157.** பார் பிளந்து - பூமி பிளந்து. நீறாகி - சாம்பலாகி. **86.158.** சாலை - இரு மருங்கும் மரங்கள் செறிந்த பாதை. **86.159.** விண்ணளவும் - வானத்தைத் தொடுமட்டும். **86.160.** விழிக்கரிதாய் - விழித்துப் பார்ப்பதற்கு அருமையாய். **86.161.** காராரும் - அழகிய தன்மையினாளும்; திரௌபதையும். **86.162.** விண்டு, மால் - விஷ்ணு; திருமால். **86.163.** மலையாமல் - திகைக்காமல். தஞ்சம் - அடைக்கலம். **86.164.** அடந்து - அடர்ந்து; நெருங்கி. **86.165.** தவிப்பாறி - இளைப்பாறி. **86.167.** யோசனை - 15 கிலோ மீட்டர் கொண்ட பண்டைய ஓர் அளவு.

சு.சொல் : 1. பாலைவெளி 2. வளிந்தோடும் 3. கண்ணும்விளிக் 4. பாரி 5. வளிகூடிப்

### They pass through a desert

The Pāṇṭavars then walked through a desert.
In the hot desert, mistaking the mirage
For running water, the woman[1] with sparkling eyes
And the five would run about for
A drink of water, soon tired they grew.
In the cruel desert earth turned into ashes.
Bamboos on the sides of their parched way
Caught fire and the flame rose to the sky,
Drying up the clouds up there.
Unable to open their eyes in the heat,
Frightened, the pretty woman and the five
Mumbled softly, "O god, you're our refuge!"
They strongly thought of the feet of Viṣṇu.
They walked undisturbed with renewed vigour,
Feeling strongly that Nārāyaṇaṉ was their refuge.
They soon reached the dense *marutam*[2] land.
They sat down, rested a while and started again.
The five torturing their selves crossed the forest.
They crossed eighteen *yōcaṉai*[3] very fast.
Towards their goal they walked swiftly.

1. Tiroupati. 2. (One of the fivefold divisions of land) agricultural tract. 3. An ancient measurement of distance equal to 15 kilo meters.

### பளிங்கு பாறையும் ஆறு பாயும் அழகும்

பத்தியா யெங்கும் பரிந்து[1] நிழலாடும்
வெற்றியுள்ள[2] வெள்ளை வெளியாகத் தான்தோன்றும்
அடுத்தோரைக் காக்கின்ற அளவற்ற சோதியது
தொடுத்து வெகுதூரஞ் சுத்தவெளி யானதொரு
பளிங்குநல்ல பாறையின்மேல்[3] பாங்குடனே தானேறிப்[4]
பொழிந்துபனித்[5] துளிபோல புனல்பொழியக்[6] கண்டனராம்
கண்ட புதுமைதன்னைக் கண்ணான தம்பியர்க்கும்[7]
ஒண்றொடிக்குங் காட்டி உய்ர்கான கங்கடந்து

### கால்கள் கொப்பளிக்க நடத்தல்

மேனிமிகக் குழைய[8] மெல்லடிகள் கொப்பளிக்கச்
சோனை மழைபொழியுந்[9] தொல்கான கங்கடந்து
வெகுதூரந் தான்கடந்து விசாரமெல்லாந் தான்தீர்ந்து
ரகுராமா வென்று நடந்தனர்கா ணம்மானை

### நெருப்பாற்றினைக் கண்ணுறுதல்

அங்கே[10] நெடுந்தூரம் ஆறு மருவிகளும்
தங்காமலே நடந்துத் தாண்டிக் கரையேறி[11]
ஓடும் நதிகடந்து உப்பாறு தான்கடந்து
சாடும் புனல்கடந்து தகையாறி நிற்பளவில்
நெடுங்கான கந்தனிலே நெருப்பாறு தான்வரவே
கடுங்கனல்தான் வாறதொரு கடுங்கொடுமை கண்டுமனம்

86.169. பத்தியாய் - பக்தியாய். பரிந்து - ஆதரவுடன். 86.170. வெள்ளை வெளி - வெண்மை நிறமான வெளி. 86.171. கார்க்கின்ற - பாதுகாக்கின்ற. சோதி - மிகுந்த ஒளி. 86.174. பொழிந்து - நீர் பொழிந்து. 86.175. கண்ணான தம்பியர் - கண் போன்ற தம்பியர். 86.176. ஒண்றொடி - ஒள்ளிய தொடி; இங்கு ஆபரணம் அணிந்த திரௌபதையைக் குறித்தது. கானகம் - காடு. 86.177. குழைய - வாடிப் போக. கொப்பளிக்க - வெம்மையினால் கால்கள் கொப்பளிக்க. 86.178. சோனை மழை - விடாமல் பெய்யும் மழை. தொல்கானகம் - பழைமையான காடு. 86.179. விசாரம் - கவலை. தாண்டி - கடந்து சென்று. 86.183. உப்பாறு - உப்பளத்தின் அருகே ஓடும் ஆறு. 86.184. தகையாறி - இளைப்பாறி. 86.186. கடுங்கனல் - கடுமையான நெருப்பு. வாறதொரு - 'வருகின்றதொரு' என்பதின் பேச்சுவழக்கு.

சு.சொல் : 1. பரிந்துநிள 2. வெத்தியுள்ள 3. பாரையின்மேல் 4. தானேரிப் 5. பொளிந்து 6. புனல்பொளியக் 7. தம்பியற்கு 8. குளைய 9. மளைபொளியுந் 10. அங்கே 11. கரையேரி

Helpfully, there were shadows around.
There was a huge open white ground.
It helped those who took shetter there,
By reflecting an immense white light.
For a long distance it was clear ground.
They climbed upon a crystal rock.
They saw water, like dew drops falling.
Tarmar showed the novelty to his
Brothers and bedecked Tiroupati.
Soon they did cross the forest.
Body tiring, their soft feet blistering
They crossed the ancient forest where
It rained incessantly and crossed
A long distance chanting Rakurām!
Resting not, they crossed many rivers and falls.
They crossed swift rivers and a salt river.
Walking for long they rested awhile.
In the dense forest they saw a river
Of fire, emitting searing heat, which made

## தருமர் ஆறு கடக்கக் கண்ணனைப் பிரார்த்தனை செய்தல்

கலங்கி மனமிடைந்து காவலர்கள் அந்நேரம்[1]
மலங்கியே தன்மிதரும் மாயோனைத் தானினைந்தார்.

**விருத்தம்**

87. ஆயனே நந்த கோபா அச்சுதா பட்சை மாலே
மாயனே சமைய மிப்போ வந்துநீர் சாக்க வேணும்
தூயனே நெருப்பு வெள்ளஞ் சுழியெறிந்[2] தோடக் கண்டேன்
நேயனே யாறு தாண்ட நெடியவர் துணைசெய் வாயே.

88. நெருப்பா[3] றுடைய வலுவேகம் நீயே யறிவாய் நானறியேன்
கருப்பா[4] றறவே கனலதனைக் கையால் அழைத்து[5] . . .
திருப்பார்க் கனலைப் புனலாக்கிச் செவ்வே[6] வழியுந் திறந்துநன்றாய்
தருப்பா லுதவுங் கோபாலா சரணஞ் சரணந் தானுனக்கே.

89. அனலா யெரிந்து வருந்தீயை அடியேன் கண்டு பயந்துநொந்து
புனலே கண்ணி லிருந்தொழுகப் புண்ணா யிருந்து புலம்புகிறேன்
கனலைப் புனலாய்க் கொண்டருளிக் கற்பித் தருள்வாய் கண்ணுதலே
எனலா யிரங்கி அடியார்முன் இனிவா நந்தா கோபாலா.

## தருமருடன் தம்பியரும் கண்ணனைத் தொழுதல்

நடை

90. மாயன் தனைநினைந்து மனதில் தியானமதாய்
நேச முடன்ஐவர் நின்று தொழும்வசனம்

**86.187.** மனமிடைந்து - மனம் வருந்தி. **86.188.** மலங்கியே - இனி செய்வது என்ன என தெரியாமல் திகைத்தே. தன்மிதர் - தர்மர். **87.2.** சமையமிப்போ - பாதுகாக்க வேண்டிய சமயமிது. கார்க்க - பாதுகாக்க. **87.3.** தூயனே - தூய உள்ளம் கொண்டவனே. திருமாலே சுழி - நெருப்பாற்று நீர்ச்சுழி. **87.4.** நேயனே - பாசம் கொண்டவனே; திருமாலே. **88.1.** நெருப்பாறுடைய வலு வேகம் - நெருப்பாற்றினுடைய வலிமையான வேகம். **88.2.** கருப்பாறறவே - நெருப்பாற்றின் மேன்மை குறையவே. **88.3.** திருப்பார்க் கனல் - அழகிய பாற்கடல் போலும் நெருப்பாறு. செவ்வே - செம்மையாக. **88.4.** தருப்பால் உதவுங் கோபாலா - பெரிய கல்லாம் கோவர்த்தன கிரியை மலையாய்ப் பிடித்து மக்களைக் காத்த கோபாலனே. **89.2.** புனலே - கண்ணீராம் பெரும் நீர். புண்ணாய் - மனமது புண்ணாகி. **89.3.** கொண்டருளி - மாற்றுதல் செய்து அருளி. கற்பித்து அருள்வாய் - கட்டளையிட்டு அருள்வாய். கண்ணுதலே - சிவன்; இங்குத் திருமாலைக் குறித்தது. **89.4.** எனலாய் - என்மீது.

சு.சொல் : 1. அன்னேரம் 2. சுளியெறிந் 3. நெறுப்பாறு 4. கறுப்பா 5. அளைத்து 6. செவ்வேவளி

The Pāṇṭavars become worried.
Nonplussed, Tarmar prayed to Kaṇṇaṉ.
Āyaṉ, Acutaṉ, Nantakōpaṉ, Paccaimāl
Māyaṉ[1], now it's time for you to come and save us.
O Pure one![2] I see a river of fire in spate.
O loving one![3], help us cross the river.
The force of the river of fire you know, I know not!
To lessen the force of the fire touch it with your hands,
Making it like the divine sea of milk.[4]
O help us Lord,our only help you are!.
The scorching, searing fire frightened me, your slave.
Hurt, tears like rivers falling from my eyes, I lament!
Convert the fire into water O lord of three eyes.[5]
Pitying, come before these slaves of yours O Lord!
Meditating on Kaṇṇaṉ with love,
The stranded five uttered these words:

1. Names of Kaṇṇaṉ 2 & 3. Kaṇṇaṉ. 4. Lord Viṣṇu is supposed to be resting in a sea of milk. 5. The third eye being on the forehead.

அரிராம ராமாநீ ஆபத்துக் காத்தருள்வாய்
விரிக்கடலி லேதுயின்ற வித்தகா அரிராமா

வடமலைக் கோபாலா வந்துநீ காத்தருள்வாய்
கடலடைத்த மாயவனே காவலுந்தன் காவலய்யா

மதகரியைத் தான்காத்த மாதவெங்கி டேசுரனே
இதுவே சமையமய்யா எங்களைநீர் காப்பதற்குப்

பச்சைமா லென்றுரைக்கப் பாவங்கள் நீங்கிடுமே
அச்சுதனே கோபாலா ஆயனே யென்றுசொன்னால்

விக்கினங்க ளில்லாமல் விலக்குவா யிக்கணமே
அக்கினியு மந்நேரம் அறிவுடனே தான்விலகி

மற்றுமந்த அக்கினிதான் வழிவிலகி[1] யப்பாலே
உத்த மருகனுக்கு ஒதுங்குகின்ற மாமியைப்போல்

விலகி வழிவிடவே விரைந்துஐவர் தானடந்தார்
இலகுபுகழக்[2] கினிவிட்டு ஏகினார்கா ணம்மானை

## தருமர் தம்பியரிடம் கூறுதல்

அவ்வனத்தை விட்டு அநேகநெடுந் தூரம்
எவ்வனமு மாயுதமும் இக்கோல மாய்நடந்தால்

பாவ மகலாது பார்த்தவர்க்கு[3] மேறாது[4]
செவ்வையொற்று நாம்நடந்தால் திருமா லுதவிசெய்வார்

90.4. விரி கடல் - விரிந்தகன்ற கடல்; இங்குப் பாற்கடலைக் குறித்தது. துயின்ற - பள்ளி கொண்ட. 90.5. வடமலை - திருப்பதி என்னும் திருமால் உறையும் மலையின் பெயர். 90.6. கடலடைத்த மாயவன் - மச்ச அவதாரம் எடுத்து கடலடைந்த திருமால். 90.7. மதகரியைத் தான்காத்த மாதவெங்கிடேசுரன் - வலிமையான யானையாகிய கஜேந்திரன் என்பதை முதலை வாயிலிருந்து பாதுகாத்த இறைவனாகிய வெங்கடேஸ்வரன். 90.8. சமையமய்யா - தகுந்த நேரமய்யா. 90.11. விக்கினங்கள் - துன்பங்கள். 90.12. அக்கினியும் - நெருப்பாற்றில் உள்ள வெம்மையும். 90.14. உத்த மருமகனுக்கு ஒதுங்குகின்ற மாமியைப் போல் - தன் மகளைத் திருமணம் செய்த உயர்ந்த மருமகனைக் கண்டு எதிர்நில்லாது ஒதுங்கிச் செல்லும் மாமியாரைப் போல. 90.16. இலகு புகழ் - சிறந்த புகழ். அக்கினி விட்டு - அக்கினி ஆற்றினைக் கடந்து. 90.18. ஆயுதமும் இக்கோலமாய் நடந்தால் - ஆயுதங்களைக் கைகொண்டு அழகுபடுத்திய இக்கோலத்துடன் நடந்தால். 90.19. ஏறாது - நம் தவத்தின், யாத்திரையின் வலிமை புரியாது. 90.20. செவ்வையொற்று - உருவத்தில் எளிமையான செப்பம் செய்து.

சு.சொல் : 1. வெளிவிலகி 2. இலகுபுகள் 3. பார்த்தவற்கு 4. மேராது

"Save us from danger O Hari Ram!
Sleeping on the sea of milk O Hari Ram,
O Lord of the Northern[1] hills save us!
O Kaṇṇaṉ who blocked the sea[2], now help us!
O Veṅkaṭēsvaraṉ who once saved an elephant[3]
Its time for you to come and save us.
We know worshipping Kaṇṇaṉ rids one of sins.
O Accutaṉ, Kōpālaṉ, Āyaṉ[4]
Let our hurdles disappear in a jiffy.
The fire in the river then gave them way,
Like a mother-in-law who keeps distance
When she sees her good son-in-law.
They walked past the raging fire unscathed.
Away from the forest they walked.
"If we travel in beauteous forms,
Carrying our weapons our sins won't go.
Further, people who see us won't know our purpose.
In a simple attire if we travel
Lord Kaṇṇaṉ will help us sure.

1. Troupati 2. Taking the *Macca* (fish) avatar Viṣṇu once blocked the sea. 3. A devoted elephant named Kajēntiraṉ was once succoured by Lord Viṣṇu from the jaws of a crocodile. 4. All names of Kaṇṇaṉ.

வரும்நமக்கு ஞானம் வழியே புதுமையென
தன்மருந் தானினைந்து தம்பியரைத் தானோக்கித்

தாரார் புயவீமர் தம்பி யருச்சுனனே
சீராக நாமொருசொல் செப்புகிறோங் கேளுமென்றார்[1]

## ஞானம் பிறக்கத் தருமர் கூறும் உபாயம்

தம்பியரென் றெண்ணாது தமையனுமென் றெண்ணாது
நம்பியதோ ரன்னசுற்றம் நால்வகையு மெண்ணாது

பெற்றபிள்ளை யீதெனவே பிரியமுட னெண்ணாது
சுற்றமது சற்றே துணையிதுவென் றெண்ணாது

மன்னர் மகுடமுடி வர்த்தன்மரென் றெண்ணாது
தென்னர்குரு வாசாரி தேவரையு மெண்ணாது

தானவ னாமென்றுந் தவசியென்று மெண்ணாது
ஞான சிவயோகி நாதரென்று மெண்ணாது

வாது சமர்பொருதால் வந்துவிடு மிந்தமதம்
தீதுவரு மல்லாது தெளிவுவர மாட்டாது

மூர்க்கமே[2] யுண்டாகு முனையே வெகுவாகும்
தீர்க்க முடனாண்மை செய்தொழிலே[3] யுண்டாகும்

ஆசாரந் தோற்றாது அன்புசற்றும் வாராது
இராசாதி இராசன்என்றும் நவில்ரிதே யுண்டாகும்

வித்தைமதம் புத்திமதம் வேகமே யுண்டாகும்
இத்தையெல் லாங்கொண்டு ஏகுவது ஞாயமல்ல

**90.23.** தாரார் புயவீமன் - மலர் மாலை ஆரவாரம் செய்யும் படியாக மாலையணிந்த பெருந்தோள்களை கொண்ட வீமன். **90.26.** நம்பியதோர் அன்ன சுற்றம் - நம்மை நம்பி அடுத்து வாழும் உற்றார் உறவினர். **90.27.** பிரியமுடன் - அன்புடன். **90.28.** துணை - பாதுகாப்பு. **90.29.** மகுட முடிவர் - மகுடமுடி மன்னர். தன்மர் - தருமர். **90.30.** தென்னர் - அரசர். குருவாசாரி - குரு. **90.31.** தானவன் - மேன்மையானவர். **90.33.** வாது - வாக்குவாதம். சமர் - போர். மதம் - ஆணவம். **90.35.** மூர்க்கம் - பிடிவாதம். முனை - கோபம். வெகுவாகும் - மிகுதியாகும். **90.36.** தீர்க்கமுடன் - தெளிவுடன். ஆண்மைசெய் தொழில் - சராசரி ஆடவர்கள் செய்யும் தொழில். **90.37.** ஆசாரம் - ஒழுக்கம். தோற்றாது - தோன்றாது. **90.38.** நவில் அரிதே யுண்டாகும் - கூறுவதற்கு அருமையான நிலைகளையே ஏற்படுத்தும். **90.39.** வித்தை மதம் - மாயா ஜாலங்களைக் காட்டும் மதம். புத்தி மதம் - அறிவு பூர்வமாக சிந்திக்கின்ற மதம். **90.40.** இத்தையெல்லாம் - 'இதையெல்லாம்' என்பதின் பேச்சுவழக்கு. ஏகுவது - சொல்வது. ஞாயம் - 'நியாயம்' என்பதின் பேச்சுவழக்கு.

சு.சொல் : 1. கேழுமென்றார் 2. முற்கமே 3. செய்தொளிலே

And will attain *ñāṉam* on our way."
Tarmar thought thus and address his brothers,
"Strong shouldered Vimaṉ, wearing garlands,
And younger brother Arjuṉaṉ
Listen to my words of wisdom.
Consider not of younger brothers.
Consider not of elder brothers.
Think not of the many relatives.
And many more who live off us.
Don't think of your child with love.
Don't consider your kin as help.
O crowned kings, don't consider
Tarmar as a great guru of kings.
Don't consider the devas as help.
Don't consider a sage as great.
Don't consider a Civa devotee as great.
If you enter into arguments,
They are sure to bring you pride.
It will bring only evil; no clarity.
Only obduracy and anger will result.
When the work of ordinary men prospers
No moral and love will be there.
It will be difficult to find kings
Who could be called the king of kings.
There will be only magical
And logical religions
Speaking, based on these is not fair.

ஆயுதங்க ளாகாது அருந்தவசி வந்தவர்க்கு[1]
வேயுதவும் தம்பியரே வில்லுமெடுப் பாகளோ

வல்லதொரு நீள்சிலையை வாருதிமயல் போடுமென்றார்
அல்லல் தவிர்க்கும்[2] அவனே துணையெனவே

போவதுவே ஞாயம் புத்தியதுவே நமக்கு
தேவரீர் சொன்ன மொழியின்[3] படிநடப்போம்

## தருமரின் அறிவுரைப்படி ஆயுதங்களைத் தம்பியர்கள் நீத்தல்

அண்ணரே யெங்கள்சிலை ஆழ்கடலி[4] லேயெறிந்து[5]
எண்ணமா வாறோம் என்கோவே யென்றுசொன்னார்

தன்ம ருரைத்தமொழி தம்பியருந் தப்பாமல்
பொருத சிலைகொடுபோய்ப் போட்டா ரலைகடலில்

## நிராயுதராய் அனைவரும் நடத்தல்

நடந்தார் நிராயுதராய்[6] நல்லதன்மர் தம்பியரும்
கடந்தார் வெகுதூரங் காதமிரு காதவழி[7]

அப்பால் வெகுதூரம் ஆன பிரமகிரி
மெய்ப்பாக வேநடந்து விரையவெகு காதவழி

வந்து தவிப்பாறி வாணுதலு மைவருமாய்ச்
சிந்துலவுங் கண்ணுறங்கா[8] தேவியுறை நாகமது

## பூங்காவனம் வழியே செல்லுதல்

தாங்காமல் வந்துமிகச் சங்கரியைத் தான்தொழுதுப்
பூங்கா வனம்புகுந்து போனார்க ளைவருமாய்

**90.41.** அருந்தவசி - செய்வதற்கு அருமையான தவவொழுக்கம் நிற்போர். **90.42.** வேயுதவும் - பொருள் கொடுத்து உதவும். எடுப்பாகளோ - 'எடுப்பார்களோ' என்பதின் பேச்சு வழக்கு. **90.43.** வல்லதொரு நீள் சிலை - வலிமையானதொரு நீண்ட அம்பு. **90.43.** வாருதி - வாரிதி; கடல். **90.44.** அல்லல் - துன்பம். அவன் - திருமாலைக் குறித்தது. **90.48.** எண்ணமா வாறோம் - திருமாலை மட்டுமே மனதுள் எண்ணியபடியே வருகிறோம். **90.50.** பொருத சிலை - போர்களத்தில் பயன்படுத்திய வில். கொடுபோய் - கொண்டு போய். **90.52.** காதம் - ஏழரை நாழிகை கொண்ட கால அளவு; அதாவது மூன்று மணி நேரம் கொண்ட கால அளவு; **90.53.** பிரம கிரி - ஒரு மலையின் பெயர். **90.55.** தவிப்பாறி - இளைப்பாறி. வாணுதல் - ஒளி பொருந்திய கண்ணினை உடையாள்; திரௌபதி. **90.56.** சிந்துலவும் - யானைகள் உலவுகின்ற. **90.56.** தேவி - உமையவள். நாகம் - மலை; பிரமகிரி. **90.57.** சங்கரி - உமையவள்.

சு.சொல் : 1. வந்தவற்கு 2. விற்கும் 3. மொளியின் 4. ஆள்கடலி 5. லேயெரிந்து 6. நிறாயுதராய் 7. காதவெளி 8. கண்ணுரங்கா

Those engaged in deep meditation
Should not carry any weapons.
O brothers! Will those who help others by
Giving away things arm themselves with bows?
Throw the strong bow into the water! "he said.
The brothers said, "The one who alleviates
Our suffering is our true help.
Holding it this way is only fair
And it is a wise thing to do so.
We'll follow our lord's words of advice.
O brother we'd throw our bows into water!
Thinking of Him and will come back soon."
Violating not the advice of Tarmar, his
Brothers threw their bows into the water.
Weaponless, Tarmar and his brothers walked.
They walked along for two *kātams*[1]
At a distance was Pirammakiri[2]
They briskly walked for many *kātams*.
The five and the bright eyed one[3] took rest.
They passed by elephants abounding.
It was where the divine Uma[5], sleepless remained.
They stopped a while worshipping Caṅkari[6]
Through a garden they walked along.

1. An ancient time measure. 1 *kātam* = 71/2 *nāḷikai* = 3 hours. 2. A mountain. 3. Troupati. 5. Consort of Lord Civaṉ. 6. Uma.

## வழி காணப்படாமையால் அனைவரும் திகைத்தல்

அந்த வனந்தனிலே அணுகா வனமாகி
நொந்துவழி காணாமல் நொந்திடைந்து ஐவருந்தான்

மறுகித் திகைத்து மாயோனே தஞ்சமென்று
முறையிடவே[1] யந்தரத்தில் மொழிந்தனர்கா ணம்மானை

## விநாயகனை வணங்கித் துதித்தல்

வேழைமுகத்[2] தானுடைய விக்கினங்கா ணென்றுசொல்லிக்
காளைமுகில் மேனியனார் கற்பித்தா ரந்தரத்தில்

அவ்வசனங் கேட்டு யானதொரு தன்மிதரும்
இவ்வசனஞ் சொல்லி ஏறுவோ மென்றுதன்மர்

விக்கினங்கள் தீர்க்கும் விநாயகனே தஞ்சமென்று
கைக்கினிய மாங்கனிதேன் கடலைப் பயறுடனே

எள்பொரியும் நெல்பொரியும் இயல்பான சர்க்கரையும்
செப்பமுடன் முப்பழமும் திகட்டா துணவுசெய்ய

வைப்பேன் பலாச்சுளையும் வாழைப் பழந்திருத்தி[3]
அப்ப முடன்தேங்காய் அலங்கார யெள்ளுருண்டை

சீனி யரியதரம் சிறந்தஅவல்[4] பச்சரிசி
நானீய்வேன் தப்பாது நாதா யருளிச்செய்வாய்.

**விருத்தம்**

91. மூலப் பொருளே முதல்பொருளே முத்தாய் வித்தாய் முளைத்தெழுந்த
ஞாலப் பொருளே யெவ்வுயிர்க்கும் நடுவா யிருந்த நாயகமே
கோலத்துடனே யுள்ளிருந்து குருவாய் மூலக் கிழங்காய்ச்[5]
சாலத் திருத்தி யெனையாளும் தந்தி முகவா யிதுசமயம்.

**90.59.** அணுவா வனம் - எவரும் நெருங்க முடியாத வனம். **90.60.** நொந்து - மனம் வருந்தி. **90.61.** மறுகி - மனம் குழம்பி. **90.62.** அந்தரம் - வானவெளி. **90.63.** வேழை முகத்தான் - வேழ முகத்தான்; யானை முகத்தான்; விநாயகன். விக்கினம் - துன்பம். **90.64.** காளைமுகில் மேனியனார் - காளமுகில் மேனியனார்; கறுத்த மேகம் போன்ற மேனியினை உடையவர்; திருமால். கற்பித்தார் - கட்டளையிட்டார். **90.65.** முப்பழம் - மா, பலா மற்றும் வாழை என்னும் முப்பழங்கள். **90.72.** அப்பம் - ஒரு வகை இனிப்புப் பண்டம். அலங்கார எள்ளுருண்டை - அழகிய வடிவத்துடன் அமையப் பெற்றதும், எள்ளினால் செய்யப்பெற்றதுவுமான உருண்டை. **90.73.** சீனியரி அதரம் - சர்க்கரையால் செய்யப்பெற்ற 'அதிரசம்' என்னும் பண்டம். **90.74.** ஈய்வேன் - தருவேன். தப்பாது - தவறாமல். **91.3.** கோலத்துடனே - அழகுடனே. மூலக்கிழங்காய் - அடிப்படை சக்தியாய். **91.4.** சாலத்திருத்தி - சிறப்புடன் சரிசெய்து. தந்தி முகவா - தந்தத்தினை முகத்திடை கொண்டவனே; விநாயகனே.

The dense growth there was unpenetrable.
Finding no path the five got perturbed.
Upset, they said that Kaṇṇaṉ was their refuge
When they appealed Kaṇṇaṉ spoke from the sky.
The cloud coloured one[1] said from the sky
That the hindrance was from the elephant headed one.[2]
Listening to these words good Tarmar said,
That they would go on, after worshipping Vināyakaṉ.
They prayed, "O Vināyaka!, who
Gets rid of one's hurdles, you're our refuge,
Ripe mangoes, honey, tourdhal, sesame seeds,
Puffed rice and good jaggery,
The three debcious fruits[3] we'll offer you.
We'll offer jack fruits, plantains
Along with *appam*[4], coconut, sesame balls[5]
Sugar *atiracam*[6] good puffed rice and
Raw rice we'll offer, O Lord help us!"
O the Origin, the primeaval cause, that grew as a seed!
O Divine pear, O worldly cause!
O Lord who is common to all living things!
Staying within me as a *guru* and basic force
Improve and rule me O lord with tuskers![7]

1. Kaṇṇaṉ. 2. Vināyakaṉ. 3. Mango, jack and plantain, 4. A sweet meat made of rice flour. 5. A sweet preparation made with pounding sesame seeds with jaggery. 6. A sweet made of rice flour. 7. Vināyakaṉ.

92. வல்லபை தனக்கு நேசம் வைத்தயுன் சித்தம் போல
நில்லவே யென்று நேசம் நினவுடன் கலந்து பாரில்
மெல்லவே மயங்கி விட்ட வெறுமையை யகத்தி யப்பால்
செல்லவே நடத்து மய்யா திருவடி சரணந்தானே.

93. ஐந்து கரமு மொருமருப்பும் அகன்ற செவியுஞ் சிறுகண்ணும்
தொந்தி வயறும் புகர்முகமும் தூய வுடலு மிருபதமும்
தந்தி வடிவு மிருமணியும் சத்தமமொலிப்பார் மததாரை
சிந்தி யொழுக யடியார்முன் தெரிய வருவாய் கணபதியே.

## தருமர் விநாயகரை எண்ணித் தவம் புரிதல்

நடை

94. என்றுதன்மர் தானினைந்து ஏற்ற கணபதியை
நன்றாகவே யுரைத்து நாடித் திசைநோக்கி

நெஞ்சு தனில்வைத்து நேசத்தை யுள்ளிருத்தி
பஞ்சமலம் நீக்கிநன்றாய்ப் பாசத்தை யுள்ளிருத்தி

அடுக்காறு பார்த்து அகண்டவெளி தான்பார்த்து
நடுக்கா தனல்நகட்டி நடுவணையை யுள்பொதிந்து

நேசத்துக் கும்பமதில் நினைவான பூரகத்தில்
நாசித் துவாரம் நடுவணையைத் தான்திறந்து[1]

சித்து மதசித்து தெரிந்துவகை யறிந்து
சத்து மதசத்துந் தடுத்து விடையமர

92.1. வல்லபை - விநாயகரின் மனைவி. நேசம் - அன்பு. சித்தம் - அறிவு. 92.2. நேசம் - அன்பு. நினவு - 'நினைவு' என்பதின் பேச்சுவழக்கு. 92.3. வெறுமை - துன்பம். அகத்தி - 'அகற்றி' என்பதின் பேச்சுவழக்கு. 93.1. மருப்பு - தந்தம். 93.2. புகர் முகம் - யானை முகம்; புள்ளிகளையுடைய முகம். 93.3. தந்தி வடிவு - யானை வடிவு. மணி - ஓர் இசைக்கருவி. சத்தம் - ஓசை. மததாரை - மத நீர். 94.2. திசை நோக்கி - கணபதி இருக்கும் இடம் நோக்கி. 94.3. நேசம் - அன்பு. 94.4. பஞ்ச மலம் - ஆணவம், கன்மம், மாயை, வைந்தவம், திரோதாயி என்னும் ஐந்து மலங்கள். 94.5. அடுக்காறு - அடுக்காயுட்ட மூலாதாரம், சுவாதிட்டானம், மணிப்பூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்னும் ஆறாதாரங்கள். 94.6. நடுக்காது அனல் தகட்டி - நடுக்கமற்ற மூலாதாரத்துள் காணக்கிடைக்கின்ற நெருப்பினை நகர்த்தி. நடுவணை - மத்தியிலிருக்கின்ற உள்ளொளி. 94.7. கும்பம் - நெற்றி. பூரகத்தில் - பிராணாயாமத்து முறையில். 94.9. சித்து - பேரறிவு. 94.10. சத்து - என்றும் நிலைபெற்றிருக்கும் பொருள். விடையமர - வலிமையோடு நிலைபெற்றிருக்க

சு.சொல் : 1. தான்திரந்து

O Lord show us your love like the on
You have towards Vallapai.[1]
Ridding us of our mental torpor,
Help us proceed further.
Your holy feet is our refuge!
With five arms, one tusk, very wide ears,
Pot belly, elephant head, pure body, two feet,
Elephant form and two bells ringing,
With *matam*[2] flowing Lord Vināyakaṉ
Appear before us, your devotees!"
Saying so Tarmar turned to the
Direction where Lord Vināyakaṉ was.
Worshipped him with folded hands.
With bubbling love at heart he got
Rid of man's five great faults.[3]
He found the six power centres.[4]
He moved the fire up the power centres.
He kept the fire within well covered,
On the forehead in the *pūrakam.*[5]
He opened the mostrils' central point

1. Consort of Vināyakaṉ, 2. Juice from the male elephant's temples when in rut. 3. Āṇavam, *kaṉmam, māya,* varuthavam, thirothaic. 4. *Mūlātāram,cuvātiṭṭāṉam, maṇipūrakam, anākatam, vicutti, āññai.* 5. *Piraṇāyāmam* method of deep breathing.

ஆராய்ந்து தேடி ஐம்புனலை யொன்றாக்கிச்
சீராய்ந்து பூதத் திருக்கை முருக்கெடுத்து
காலால் கனலெழுப்பிக் கணபதியைப் பார்ப்பளவில்
மூலக் கிழங்காகி முத்திருக்கு வித்தாகி

### விநாயகர் காட்சி தருதல்

மும்மண் டலமும் முடியடியுந் தானாகி
எம்மண்ட லந்தனக்கு மேகமுத லாகாயம்
அம்மண்ட லந்தனக்கு ஆணியுமாய் ஆதியுமாய்
கம்மென்ற நாதமணி கலகலெனத் தான்முழங்க[1]
வந்தார் மரம்பிடுங்கி மலைகள் தகர்ந்தோட
பந்தாடி யேமலையைப் பாய்ந்து பிளந்தெறிந்து[2]
கண்கள் சிவந்து கனலாய் பொறிபறக்க[3]
விண்கள் எதிர விநாயகனார் வந்துதித்தார்.

### தருமர் விநாயகரை வணங்குதல்

**விருத்தம்**

95. கடதட விகடித நாதா சரணம்
கரிமுக யரிதிரு மருகா சரணம்
வடவரை யதிரிட வந்தாய் சரணம்
மதகளி றெனவுரு கொண்டாய் சரணம்
அடவியில் வழிதடு[4] மாறியும்[5] அடியேன்
அன்புடன் மனதி லுமையே நினைய
நடமிடு சிவசுத னாளென வந்தாய்
நாதா கணபதி சரணஞ் சரணம்.

94.11. ஐம்புனல் - மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்புலன்கள். 94.12. சீராய்ந்து - விநாயகரின் சிறப்புக்களை ஆராய்ந்து. பூதத்திருக்கை - ஐம்பூதங்களின் உடம்பிடத்துள்ள இருப்பிடங்கள். முருக்கெடுத்து - அழித்து. 94.13. காலால் - காற்றினால்; இங்கு 'பிராணாயாமத்து முறையினால்' என்ற பொருளில் வந்தது. பார்ப்பளவில் - பார்க்கின்ற நேரத்தில். 94.14. மூலக் கிழங்கு - அடிப்படை சக்தி. 94.15. மும்மண்டலம் - மூன்று மண்டிலங்களான வானம், பூமி, பாதாளம். முடியடியும் - மேலிருந்து கீழ் வரையிலும். 94.17. ஆணி - முதன்மை. 94.18. கம்மென்ற - ஓர் ஓசை குறிப்பு. 94.19. மரம் பிடுங்கி - மரம் வேரோடு பிடுங்கப்பட. 94.20. பந்தாடியே மலையை - மலைகளைப் பந்து அடித்தாற் போல அடித்தே. 94.21. பொறி - நெருப்பிலிருந்து வரும் பெரும் பொறி. 95.1. விகடித நாதா - விஷ்ணுவின் பொருட்டு விகடக் கூத்து ஆடிய இறைவா; விநாயகனே 95.2. கரிமுக - யானை முகத்தவனே; விநாயகனே. அரிதிரு மருகா - திருமாலின் மேன்மையான மருமகனே; விநாயகனே. 95.2. வடவரை - வட திசையிலுள்ள மலை; இமைய மலை. அதிரிட - அதிர்ந்திட. மத களிறு - மதம் பொருந்திய யானை. உரு - உருவம். 95.3. அடவி - காடு. நினைய - நினைக்க. 95.4. நடமிடு - நடனமிடுகின்ற. சிவசுதன் - சிவனின் மைந்தன்; விநாயகன்.

சு.சொல் : 1. தான்முளங்குக 2. தெரிந்து 3. பொரிபரக்க 4. வளிதடு 5. மாரியும்

He achieved citti[1] and its powers.
He got cātu[2], keeping it intact.
He earnestly searched, focussing the five senses,
He sought the places where they worked.
He destroyed them and raised the 'fire'.
If one saw Lord Vināyakan,
One becomes one with His basic forces.
Tarmar knew of it and deeply prayed.

**Vināyakan appears**

The three worlds[3] turning upside down
Clouds covering the skies in all the worlds,
The world's First and foremost Cause came.
The deep, booming bells ringing cheerfully,
Came He and trees got uprooted.
The hills got cracked and he threw mountains.
Like playing balls he threw them about.
He blasted them to pieces; His eyes
Were redshot that sparks flew from them.
The skies reverberated as
Lord Vināyakan appeared.

**Tarmar pays obeisance to Vināyakan**

Tarmar said, "O Lord who once danced,
A cosmic dance for Viṣṇu's sake!
Lord, you are our only refuge!
O the elephant headed, the rephew of Kaṇṇan!
You are our only refuge!
When you came the Northern mountain[4] trembled.
You have taken the form of an elephant strong.
We, your slaves could find no way in the forest.
Hence we did think of you with reverence.
O the son of Civan, the cosmic dancer!

1. Ability to do various things normally not possible for man. 2. Immortal things. 3. Sky, earth and the netherworld. 4. The Himalayas

### வைகுண்டம் செல்ல விநாயகரிடம் தருமர் வழிவேண்டுதல்

96. இடைந்து மனது புண்ணாகி எங்கே யெவடம் என்றாய்ந்து
குடைந்தே யெனதுகுடல் கும்பி கோழை யீரல் வழுவுளது
கடைந்தே யுடைந்து பின்சென்ற கரத்த னெனது கணபதியே
அடைந்தேன் சரணம் வைகுண்டம் அறியும் படிக்கு வழிகாட்டும்.

### கானகத்திற்கு வந்த காரணத்தை விநாயகர் கேட்டல்

நடை

97. தன்மர் துதித்துச் சரணமென்று போற்றிசெய்து
முன்மத வேளானை முகனு மனமகிழ்ந்து[1]
ஏன்பிள்ளாய் தம்பியரே யித்தூரம் நீங்களுந்தான்[2]
தான்பிறந்த[3] நாடுந் தலமும் நிலமும்விட்டு
கானகத்தில் வந்தமையால் கஷ்டம்நமக்[4] குண்டாகி
வான்கத்தோர் தாமறிய மனதுமிகப் பதறி[5]
தடுத்தோம்நா முங்களையும் தன்மரே யென்றுசொன்னார்
அடுத்துமிகத் தன்மர் ஐங்கரனை நெஞ்சில்வைத்து

### தருமரின் பதிலுரை

நடந்த விபரிதமும் நாரணனார் கற்பனையும்[6]
முடிந்த ரகசியமும் முற்றுமே யாராய்ந்து
துடர்ந்து கலிவருமுன் தொல்லுலகை விட்டகன்று
அடர்ந்து வனத்தூடே அடியார் வருகையிலே

96.1. இடைந்து - நிலை அழிந்து. எவடம் - 'எவ்விடம்' என்பதின் பேச்சுவழக்கு. 96.2. குடைந்தே - மனம் வருந்தியே. கும்பி - வயறு. கோழை யீரல் - பலவீனமான இதயம். வழுவுளது - குற்றமுள்ளது. 96.3. கடைந்தே - பலவிடத்து அலக்கழிக்கப் பட்டே. உடைந்து - உள்ளம் உடைந்து. பின் சென்ற கரத்தன் - வலிமை குறைத்த கரத்தன். 97.2. மத வேளானை முகம் - மதம் பொருந்திய யானையின் முகம். 97.4. தலம் - இருப்பிடம். 97.5. கானகம் - காடு. 97.6. வானகத்தோர் - தேவர். பதறி - செய்வது அறியாது மனம் திகைத்து. 97.9. நடந்த விபரிதம் - கலியனின் பிறப்பால் நடந்த விபரீத செயல்கள். கற்பனை - கட்டளை. 97.10. ரகசியம் - திருமால் மண்ணுலகத்திலிருந்தும் விண்ணுலகம் சென்ற ரகசியம். 97.11. துடர்ந்து - 'தொடர்ந்து' என்பதின் பேச்சு வழக்கு. தொல்லுலகு - பழைய உலகம். 27.12. வனத்தூடே - காட்டினிடையே.

சு.சொல் : 1. மகிள்ந்து 2. நீங்களுந்தான் 3. தான்பிரந்த 4. கஸ்டம்நமக் 5. பதரி 6. கற்பினையும்

O Lord Vināyakaṉ We take refuge in you!
Heart broken, I searched for a proper place.
Sorrow made my stomach and heart faulty.
I tossed about, sapped of energy.
I dragged along O Lord Vināyakaṉ
You're my refuge, and to reach
*Vaikuṇṭam*, pray, show me the way."
As Tarmar worshipped, paying his respects
The One with an elephant head[1] was pleased.
Vināyakaṉ said, "O my brothers!
This far somehow, you have come,
Leaving behind your native land.
Your doing so has caused us sorrow.
The celestials too, got perturbed.
And so, Tarmar we had stopped you!"
Tarmar spoke of the evil effects[2]
Of the plans of Lord Nārāyaṇaṉ
He told Vināyakaṉ of the secret end[3],
"We planned to leave the earth before *kali* came.

1. Lord Vināyakaṉ 2. Because of the advent of *kali yukam*. 3. Viṣṇu's leaving the earth for *Vaikuṇṭam*.

வழிமயக்கித் தேவர் வாட்டப் படுத்தினதால்
தெளியவழி[1] காட்டவென்று தேவர் தனைநினைத்தோம்

### விநாயகர் வைகுண்டம் ஏக வழி கூறுதல்

என்று தன்மர்சொல்ல ஏற்ற விநாயகரும்
நன்றுகாண் தன்மிதரே நாரணனார் தம்மிடத்தில்

சென்றுநீர் வைகுண்டம் சேர்வதற்கு நான்தானும்
இன்று வழிகாட்ட[2] யெழுந்தருளு மென்றுசொல்லிக்

கானகத்தி னூடே கணபதியுந் தானடந்தார்
வானகத்துக் கேற்ற வழிதா னிதுவென்னவே

நல்ல வழிகாட்டி நடந்தார் விநாயகரும்
வெல்லரிய தன்மர் விநாயகனைத் தான்தொழுதுத்

### கானகத்துள் அனைவரும் நடத்தல்

தம்பியருந் தன்மருமாய் தானடந்தா ரம்மானை
நம்பி வெகுதூரம் நடுக்காடு தான்கடந்து

காடு மலைசெடிகள் கல்லடர்ந்த பூமியுமாய்
ஈடுகலக் காடுகளும் இக்கட்டாய்க் காதவழி

### மலை தெரியக் கண்ட அனைவரும் அது நோக்கி விரைதல்

அலுத்து மிகநடந்து அப்பாலே போகையிலே
வலுத்துவெகு உன்னிதமாய் மலைதெரியக் கண்டனர்காண்

கண்டவுட(ன்) தன்மருந்தான் கண்ணான தம்பியரே
கொண்டல் செறிகுழலாள்[3] கோதை துரோபதையும்

அயர்ந்தாள் நடைதளர்ந்தாள் ஐயோ வெனவழுதாள்
உயர்ந்த மலையருகே ஒண்டொடியு மிப்போது

97.13. வழி - பாதை. வாட்டப்படுத்தினதால் - துன்பப்படுத்தியதால். 97.14. தேவர் - கணபதியைக் குறித்தது. 97.20. வானகம் - வைகுண்டம். 97.22. வெல்லரிய - வெல்வதற்கு அருமையான. 97.26. ஈடுகல - பெருமைகள் அகல. இக்கட்டு - இடையூறு. 97.27. அலுத்து - சோர்ந்து. 97.28. வலுத்து - தெளிவாய். உன்னிதம் - உன்னதம்; உயர்வு. 97.29. கண்ணான - கண்ணுக்கு இணையான. 97.30. கொண்டல் செறிகுழலாள் - கருமேகத்தை ஒத்த கரிய, செறிந்த குழலினாள். 97.31. அயர்ந்தாள் - சோர்ந்தாள். 97.32. ஒண்டொடி - ஒளி வீசும் ஆபரணங்கள் அணிந்த பெண்; திரௌபதி.

சு.சொல் : 1. தெளியவெளி 2. வழிகாட்ட 3. செரிகுளலாள்

Piously, as we were walking through the forest,
Tēvars blocked our way and caused us troubles.
We thought of you and then prayed to you O Lord!
Kindly show us the way out of here!"
When Tarmar spoke so Vināyakaṉ said,
"Well, Tarmar, go to Nārāyaṇaṉ
*At Vaikuṇṭam*:Do follow me
I will show you the right way."
He walked through the forest.
He showed them the right way to Heaven.
Tarmar, the invincible king
Did worship Lord Vināyakaṉ.
Tarmar and the brothers moved on.
With faith they crossed the centre of the forest,
Losing greatness they crossed the woods,
Hills, bushes and rocky plains.
They walked past the hindering celestials.
Fatigued, they dragged themselves along.
Soon a great mountain came into view.
Tarmar murmured, "Oh! my darling brothers!"
Tiroupati whose locks resembled dark clouds,
Tired, walking with faltering steps cried aloud.
When they were near the mountain
She wanted to rest awhile and then proceed.
As they had to reach the mountain
Before dark they continued walking.

தங்கி யிருந்து தவிப்பாறிப்[1] போவோமென்றார்
மங்கி யிருள்வருமுன் மலையடுப்போ மென்றுசொல்லி

### மலையின் தோற்றம்

மலையைத் திசைநோக்கி வந்தனர்கா ணம்மானை
நிலையைத் தொடுத்து நெடுக வளர்ந்தமலை

மேகம் படியும் விலாசமுள்ள தந்தமலை
மாகமுட னளவும் வளர்ந்த மலையதனில்

### காந்தர்வன் ஒருவனின் வருகை

காந்துருவ னென்றொருவன் கண்டெதிரே வந்துநின்றான்
ஊர்ந்துவரு மானிடரே உயிர்வெறுத்து[2] வந்ததென்று

மேகநாத னென்பேர் விடுவதில்லை யுங்களையும்
தாக முடன்பெருகுஞ் சாற்றுமென்றா ரம்மானை

### தருமர் காந்தர்வனிடம் உரையாடுதல்

அப்போது தன்மர் அவனை முகம்நோக்கி
இப்போது நாங்கள் ஏற்ற குருகுலத்தில்

சந்தன மகாராசன் தன்னுடைய வங்கிசத்தில்
எந்தன்பேர் தன்மர் எனக்கிளைய நால்வரிவர்

வந்தோங் கலியதனால் வைகுண்டஞ் சேர்வதற்கு[3]
இந்த வழியாக[4] யேகிவந்தோம் என்றுரைத்தார்

### கந்தர்வன் தருமர் மீது பழி சுமத்துதல்

அந்த மொழிகேட்டு அவனேது செப்பலுற்றான்
விந்தையுடன் என்குலத்து வேந்தரையுங் கொன்றுழக்கி

97.33. தவிப்பாறி - இளைப்பாறி. 97.34. மங்கி இருள் வருமுன் - காலை ஒளி மங்கி இரவு வருவதற்கு முன்னால். அடுப்போம் - செல்வோம். 97.36. நிலையைத் தொடுத்து - உயர்ந்த நிலையை எட்டிப்பிடித்து. 97.37. மேகம் படியும் - மேகங்கள் வந்துறையும். விசாலம் - அகலம். 97.38. மாகமுடன் - ஆகாயத்துடன். 97.39. காந்துருவன் - காந்தர்வன்; தேவ சாதியருள் ஒருத்தன். 97.40. ஊர்ந்துவரு - மெதுவாக வருகின்ற. 97.42. தாகமுடன் பெருகும் சாற்றும் - 'மிகுதியாகத் தாகம் எனக்குப் பெருகிறது; அது தீர வழி சொல்லும்' என்ற பொருளில். 97.44. ஏற்ற குரு குலம் - மேன்மையான குரு குலத்து வம்சம். 97.45. சந்தன மகாராசன் - சாந்தனு மகாராஜன். வங்கிசம் - வம்சம். 97.49. செப்பலுற்றான் - கூறலுற்றான். 97.50. விந்தையுடன் - வியப்புடன். உழக்கி - அழித்து.

---

சு.சொல் : 1. தவிப்பாரிப் 2. உயிர்வெருத்து 3. சேர்வதற்கு 4. இந்தவளியா

Growing to heights the mountain was standing tall.
The peaks of the mountain were covered with clouds.
It appeared as if the mountain grew to the skies.
Seeing them a celestial being turned up.
"O crawling humans, risking your lives
Why did you come here? I'm Mēkānātaṉ
I am very thirsty, to quench it
Find a way." the celestial ordered.
Tarmar looked at his face, said,
"We are of the *Guru* clan,
The progeny of the great king Cāntaṉu.
I am Tarmar, these four, my younger brothers.
Because of the advent of *kali*
We came this way to go to *Vaikuṇṭam*".
Listening intently the celestial said,
"How strange! you once killed the king
Of our clan and earned the blame.

வந்தீரே தன்மிதரே வாய்த்த பழியதனைத்[1]
தந்துவிட்டுப் போமெனவே தானுரைத்தா னம்மானை

முன்னாளில் வானவர்க்காய்[2] மூர்க்கமுள்ள அருச்சுனனும்
அன்னாளில் வந்தான் அந்தரத்தோர் தங்களுக்காய்

மன்னா பொறுத்துவிட்டேன் வலியவந்தீ ரிப்போது
இன்னா ளிலென்பழிக்கு[3] எதிராக வந்துவட்டீர்

### தருமரின் பதிலுரை

கொன்று சினந்தீர்ப்பேன் கொற்றவரே யுங்களையும்
இன்றுபொர வாருமென்று எதிர்த்தான் வனந்தனிலே

கலியைவிட்டு தப்பிக் காசினியுந் தானிழந்து
வலிய வனந்தனிலே வைகுண்டந் தானோக்கிப்

போகையிலே நீமறித்துப்[4] பொரவாடா யென்றுசொன்னாய்
ஆகையினா லுன்னுடனே அடர்ந்துபோர் செய்வதில்லை

### காந்தர்வன் தருமரை நாடு திரும்பும்படி கூறுதல்

என்று தன்மர்சொல்ல ஏற்றதொரு காத்துருவன்
நன்றுகாண் தன்மிதரே நாடிப் பொராதிருந்தால்

ஆனால் திரும்பிநீர் அத்திபுரஞ் சேருமென்றான்
தேனாருந் தன்மர் சிரித்தவனைத் தானோக்கி

### தருமரின் சினமொழிகள்

ஏனோ கெடுவாய்நீ இவ்வசனந் தானுரைத்தான்
நானோயுன் சொல்கேட்டு நடப்பதுபோ லேயுரைத்தாய்

பேய்கொண்ட காந்துருவர் பேசா திருபோடா
வாய்கொண்ட தட்டாதே வழிவிலகி[5] நீபோடா

97.53. மூர்க்கமுள்ள - மிகுந்த பலமுள்ள. 97.54. அந்தரத்தோர் - வானவர். 97.55. பொறுத்து விட்டேன் - மனத்தால் தாங்கிக் கொண்டேன். வலிய வந்தீர் - வேண்டுமென்றே நெருங்கி வந்தீர். 97.57. கொற்றவர் - மன்னவர். 97.58. பொர வாரும் - போர் செய்ய வாருங்கள். 97.59. காசினி - நாடு. 97.60. வலிய வனம் - பெரிய காடு. 97.61. பொர வாடா - போர் செய்ய வாடா. 97.62. அடர்ந்து - நெருங்கி. 97.63. காந்துருவன் - காந்தர்வன். 97.64. பொராதிருந்தால் - போர் செய்யாமல் இருந்தால். 97.65. அத்திபுரம் - அஸ்தினாபுரம். 97.66. தேனாருந் தன்மர் - தேன் போலும் இனிமையாகப் பேசும் தர்மர். 97.69. பேய் கொண்ட காந்துருவா - பேய்க்குணம் படைத்த காந்தர்வனே. 97.70. வாய்கொண்டு - வாயால்.

சு.சொல் : 1. பளியதனைத் 2. வானவற்காய் 3. லென்பளிக்கு 4. நீமரித்துப் 5. வளிவிலகி

Now you're here, wipe it off, then go.
Once Arjuṉaṉ, the cruel came
Fighting us the celestials
I was bearing a grudge at heart
All these days and now you are here.
You have now come of your own volition.
To avenge myself you've come in front of me.
Killing you I'll get rid of my burning rage.
Hey you, come and fight with me!"
Tarmar replied to the challenging celestial,
"Losing our land, escaping *kali*
As we go in the forest towards *Vaikuṇṭam*
Alas! you stop us and challenge for a fight.
But fight you, I will not!"
In reply the Kantarvaṉ[1] said,
"Well, Tarmar either you fight me
Or go back to Hastiṉāpuram."
Tarmar addressed the celestial
Who laughed at him thus:" you'll go waste,
If you say these words again!
You speak as if I take orders from you.
O Kantarvaṉ you are possessed!
Shut up and get lost; don't ever try

1. Celestial.

### காந்தர்வன் கோரிக்கை

மன்னாநீர் போர்புரிய மாட்டீரோ யாமாகில்
என்னாணை யுந்தன் இளையோரை என்மேலே

கடுக அனுப்புமென்று காந்துருவன் தானுரைக்க
முடுகிப் பொருவென்று மூண்டவனுஞ் சொல்லுகையால்

### தருமரின் சினம்

தன்மர் சினத்தெழுந்து தம்பியரைத் தானோக்கிப்
பொரும லுடன்மனசு பொருமை மிகவாகி

### தம்பியர்கள் தருமரை அமைதிப்படுத்தல்

வார்த்தைசொல்ல தம்பியர்கள் வணங்கிப் பதறாமல்[1]
கீர்த்தியல்ல[2] சாமி கேடுகெட்டான் சொல்வதெல்லாம்

என்றுசொல்லி அப்பால் இருக்கின்ற நால்வருந்தான்
பார்த்துமிகக் காந்துருவன் படைபொரவே வாருமென்றான்

### தம்பியரைக் காந்தர்வன் போருக்கு அழைத்தல்

சாற்றும்புகழ்[3] பா(ர்)த்தனையும் சகாதேவன் வீமனையும்
ஏற்ற பரிநகுலன் இவர்களையும் வாருமென்றான்

போருக் கழைத்தான்காண் புத்திசற்று மில்லாதான்
பாருக்குள் வாணாள் பதைக்க யுடல்பதறி[4]

இக்கணமே யுங்களையும் இமலோக மேற்றுதற்குத்
தக்கமுடன் வாருமென்று தாவிக் குதிபோட்டான்

### தம்பியர்களின் பதிலுரை

இப்போது நாங்களுன்மேல் எதிர்ப்பதில்லை யானாலும்
தப்பாத சொல்லுடைய தன்மர்வார்த்தை கேளாமல்

97.72. உந்தன் இளையோர் - உன்னுடைய தம்பியர்கள். 97.73. கடுக - விரைவாக. 97.74. முடுகிப் பொருவென்று - விரைந்து போர் செய் என்று. மூண்டவனும் - கோபத்தால் போர்க்கோலம் கொண்டு அவனும். 97.76. பொருமலுடன் - மன வருத்தத்துடன். 97.78. கீர்த்தியல்ல - பெருமையல்ல. கேடுகெட்டான் - தன்நிலை தாழ்ந்தவன். 97.79. படைபொரவே - போர்செய்யவே. 97.81. சாற்றும் புகழ் - மிகுதியாக புகழ்ந்துரைக்கப்படும். பார்த்தன் - அருச்சுனன். 97.82. பரி - பெருமை. 97.84. பாருக்குள் - உலகத்துள். வாணாள் - வாழ் நாள். பதைக்க - பதற. 97.85. இக்கணம் - இந்த நேரம். இமலோகம் - 'எமலோகம்' என்பதின் பேச்சுவழக்கு. 97.86. தக்கமுடன் - தரும நூலின் படி. 97.88. தப்பாத சொல்லுடைய - சொன்ன சொல் தவறாத.

சு.சொல் : 1. பதராமல் 2. கீற்தியல்லச் 3. சாற்றும்புகள் 4. பதரி

To talk harsh to me and obstruct my way!
You better leave this place giving me way."
The celestial said," No way, O king!
I swear, you have to fight with me.
Set your younger brothers on me soon."
In fury, he thus itched for a fight.

**Tarmar gets enraged**

Hurt, enraged, Tarmar told his brothers
"O brothers when we saw him we paid respects!
But this angry, useless one speaks monsense!"
Tarmar and brothers stood still.
The celestial went on challenging them.
He challenged famed Pārttaṉ, Cakātēvaṉ
Vīmaṉ and the renowned Nakulaṉ.
The stupid one provoked them further.
Trembling with fury he said,
"I'll despatch you all to Yama's[1] land.
Following the dictates of the book of codes,
Come and fight me like real men!"
In anticipation he was jumping about.
The brothers of Tarmar spoke thus:
"Though you provoke, we'll not fight you,
Disregarding the advice of Tarmar,

1. God of death.

உன்மேலே யுயித்தமொரு நாளுஞ்செய் வதில்லை
தன்மர்மொழி தப்பாத தர்மமே[1] யெங்களுக்கு[2]

### காந்தர்வன் போரின் அவசியம் கூறுதல்

என்றாரி ளையோர்கள் எதிரின்சொல் வான்காந்துருவன்
நன்றாகக் கேட்டிலையோ நன்செய்தி விண்ணுலகில்

முன்னாளி லிந்திரன்மேல் முடுகிச்சமர் பொருதேன்
மன்னாஅவன் பொரவே மாட்டாமல் போம்பொழுது

சொன்னான் காண்ஐவர் தோற்றமுட னிந்தவனம்
இன்னாள் வருவார்கள் எதிர்த்துப் பொருமென்றுசொன்னார்

அப்படியே நீங்கள் அவர்சொல்லை மீறாமல்
சொல்படியே வந்தீர் சுண்டுபொர வாரீர்

### தம்பியர்கள் சினவுரை

வேண்டா மடாகேள்நீ வைகுண்டம் போறவரை[3]
ஏண்டா தடைபண்ணுகிறாய் ஈடழிந்து போகாதே

சொல்லக்கேள் வம்பா துடுக்குதனை விட்டுவிடு
அல்லக்கா ணீங்கள் அடர்ந்துபொர மாட்டாமல்

### திரௌபதையைக் காந்தர்வன் சிறையெடுத்தல்

போவ தரிதெனவே புத்திகெட்ட காந்துருவன்
தாவித் துரோபதையைத் தானெடுத்துத் தோளில்வைத்து

**97.89. உயித்தம் - 'யுத்தம்' என்பதின் பேச்சு வழக்கு. 97.91. இளையோர்கள் - தருமரின் தம்பியர்கள். எதிரின் சொல்வான் - தருமரின் தம்பியர்களுக்கு எதிராகச் சொல்வான். 97.93. இந்திரன் - தேவர்கள் தலைவன். முடுகி - விரைந்து. சமர் - போர். 97.94. போம் பொழுது - போகும் பொழுது. 97.96. இன்னாள் - இந்த குறிப்பிட்ட நாளில். பொரும் - போர் செய்யும். 97.98. சுண்டு பொர வாரீர் - அற்பமாகப் போர் செய்ய வாருங்கள். 97.99. போறவரை - போகின்றவரையிலும். 97.100. ஈடழிந்து - புகழழிந்து. 97.101. வம்பா - துஷ்டனே. துடுக்கு - தீய குணம். 97.102. அல்ல காண் - நீங்கள் சொல்வது பொருத்தமற்றது காண். அடர்ந்து - நெருங்கி. பொர - போர் செய்ய. 97.104. துரோபதை - திரௌபதை.**

சு.சொல் : 1. தற்மமே 2. யெங்கழுக்கு 3. போரவரை

A man of words and our code is
To adhere to Tarmar's advice.
We will never ever fight with you!"
The celestial in reply to the brothers said,
"Listen well to what I have to say.
Once upon a time in the heaven
I was engaged in war with Intiraṉ[1]
He was unable to fight with me.
As he went off he said that this very day,
Five handsome men would come this way.
He asked me to challenge you for a fight.
Don't violate his words, come, fight me!"
The brothers replied the celestial in anger:
"Listen to us O silly one!
Why stop us from going to *Vaikuṇṭam*?
Don't earn a bad name.
Do heed our advice O mischievous one!
Listen, first get rid of your mischief.
You see, a fight now is impossible!"
As he was not able to fight them,
The stupid Kantarvaṉ[2] jumped,
Lifted Tiroupati on his shoulders

1. The king of the celestial beings. 2. Celestial

## வீமன் காந்தர்வனோடு போர் செய்தல்

கொண்டுசெல்ல மங்கையுந்தான் கோவிந்தா யென்றழுதாள்
கண்டுமிக வீமன் கண்கள் பொறிபறக்க

ஆகாயம் பூமி அதிரவே பொரவீமன்
போகாதே யென்று புறப்பட்டான்[1] அந்நேரம்[2]

காந்துருவன் தன்னைக் கட்டி மிகப்பிடித்து
சேர்ந்து பொருது சினந்திருவர் ஆர்ப்பரித்து

காத்து மழையுங்[3] கலந்துபொரு தாப்போல்
ஏத்தமலை களிரண்டும் எதிர்த்துப் பொருதாபோல்

வாலியுடன் சுக்கிரீபன்[4] வந்துபொரு தாப்போல
கோலியே முன்னாளில் கோபாலர் சிங்கமென

இரணியனைக் கொன்றதுபோல் எட்டா வலுவீமன்
தரணி தனிலிவனைச் சங்கரிக்க வேதுணிந்தான்

## தருமர் வீமனிடம் போர் நிறுத்தும்படி கூறுதல்

தன்மருந் தானறிந்து[5] தம்முடனே லாணையிட்டு
மின்மருவு வீமா விட்டுவிடுந் தம்பியென்றார்

## வீமன் அண்ணன் சொல் கேட்டல்

அண்ணர் மொழிகேட்டு அவன்மயிரை விட்டறுத்து
மண்ணதிர விண்ணதிர வாரி யெடுத்தெறிந்து[6]

குத்தினான்வீமன் கூவென்றான் காந்துருவன்
புத்திவந்து காந்துருவன் போர்வீம னைத்தொழுதான்

97.105. மங்கை - பெண்; திரௌபதை. 97.106. பொறி பறக்க - சினத்தால் கண்களில் நெருப்பு பறக்க. 97.107. அதிரவே - அதிரும் படியாகவே. 97.110. ஆர்ப்பரித்து - ஆரவாரம் செய்து. 97.111. காத்து - 'காற்று' என்பதின் பேச்சுவழக்கு. 97.112. ஏத்த - பொருத்தமான. 97.114. கோலியே - வளைந்த. கோபாலர் - திருமால். சிங்கம் - நரசிங்கமூர்த்தி. 97.114கோலியே - வளைந்த. கோபாலர் - திருமால். சிங்கம் - நரசிங்கமூர்த்தி. 97.115. எட்டா வலுவீமன் யாருக்கும் அகப்படாத வலுமையான வீமன். 97.116. தரணி - உலகம். சங்கரிக்கவே - கொல்லுதற்கே. 97.117. தம் உடம் மேல் ஆணையிட்டு - தனது உடம்பின் மீது ஆணையிட்டு. 97.118. மின் மருவும் - ஒளி பொருந்திய. 97.120. வாரி - கையால் சேர்த்து. 97.121. கூ - வேதனையால் ஒருவன் எழுப்பும் ஓசையைக் குறித்தது.

---

சு.சொல் : 1. புரப்பட்டான் 2. அன்னேரம் 3. மளையுங் 4. சுக்கிறியன் 5. னரிந்து 6. தெரிந்து

And carried her away; she cried "Oh! Lord Kaṇṇaṉ!"
Seeing it, sparks flew from Vīmaṉ's eyes.
For the sky and earth to tremble
Vīmaṉ went forward to fight.
He gripped the celestial tight,
And grappled with him in anger.
He roared with fury and they fought.
Like wind and rain they fought each other.
It appeared as if two mountains fought.
Like Vāli[1] and Cukkirīvaṉ[2] they fought.
Lord Kaṇṇaṉ once slew Hiraṇiyaṉ[3]
Vīmaṉ, who could not easily be contained.
By any one, decided to slay the celestial.
Tarmar said, "O my younger brother!
Vīmaṉ, of a glowing body stop fighting!"
Obeying the command of Tarmar,
He cut the locks of the celestial.
As the earth and sky trembled,
He tossed it away and punched him.
The celestial in agony cried aloud.
Getting his senses back, the celestial,
Kneeling, paid obeisance to Vīmaṉ

1 & 2. Two characters in the *Rāmāyaṇam*. 3. Hiraṇiya Kacipu questioned the omnipresence of god. Viṣṇu with a lion head (Narasimha avatāra, nara = man, simha = lion) came out of a pillar and killed him.

## காந்தர்வன் தப்பி ஓடுதல்

தெண்டனிட்டு ஓடலுற்றான் திரும்பியே பாராமல்
சண்டையிட்ட காந்துருவன் தப்பிப்பிழைத் தானெனவே

## திரௌபதை வருத்தம்

மின்னாள் துரோபதைதான் வேந்தரைவர் தங்களுடன்
சொன்னாள் மனத்துயரந் துன்பமென்னால் வந்துதென்று

பாடுபட்ட தெல்லாம் பாவியென் தன்னாலே
கேடுகெட்டே னானுங் கிலேச மிகவானேன்

## தருமர் திரௌபதையை அமைதிபடுத்தல்

என்றுசொல்ல தன்மர் ஏந்திழைக்குப் புத்திசொல்லி
நன்றுநன் றென்று நடந்தாரவ் வடம்விட்டு

## அனைவரும் கானகத்துள் காட்சிகளை ரசித்து முன்னேறுதல்

தென்னவர்க ளைவருமாய்ச் சேர்ந்து துரோபதையும்
மன்னவர்கள் அப்போது வழிகூடியே[1] நடந்தார்

மலைகள் பருவதங்கள் வனமும் பலகடந்து
குலைசெய்யு மாளிசிங்கம் கொடியபுலி குஞ்சரங்கள்

வல்மிருகம் வாழும் மலையும் வனாந்திரமும்
பல்மிருகம் வாழும்வனம் பஞ்சவர்கள் தோற்றாமல்

விலகு மிருகமிதை விந்தையுடன் பார்த்துநின்று
கலக மிடுமிருகங் கண்டொதுங்கிப் போகுதென்று

97.123. தெண்டனிட்டு - அடிபணிந்து. 97.125. மின்னாள் - மின்னல் போலும் கொடி இடையாள். 97.126. வந்துதென்று - வந்தது என்று. 97.127. பாடு - துன்பம். 97.128. கேடுகெட்டேன் - நிலை தாழ்ந்தேன். கிலேசம் - துன்பம். 98.129. ஏந்திழை - அழகிய ஆபரணங்கள் அணிந்த திரௌபதை. 98.130. அவ்வடம் - 'அந்த இடம்' என்பதின் பேச்சு வழக்கு. 98.131. தென்னவர் - பாண்டிய நாட்டு அரசர்; இங்குப் பாண்டவர்களைக் குறித்தது. 98.134. குலை - 'கொலை' என்பதின் பேச்சு வழக்கு. ஆளி - சிங்கம் மற்றும் யானை இரண்டின் முகமும் கலந்த ஒரு வகை மிருகம். குஞ்சரம் - யானை. 98.135. வனாந்தரம் - பெரிய காடு. 98.136. தோற்றாமல் - மிருகங்களின் கண்களுக்குத் தோன்றாமல். 98.137. விந்தை - வியப்பு. 98.138. கலகமிடு மிருகம் - இடையூறு செய்யும் விலங்கு. போகுதென்று போகின்றது என்று' என்பதின் பேச்சு வழக்கு.

சு.சொல் : 1. வளிகூடியே

And fled the scene not looking back.
Thus the celestial narrowly escaped.
Tiroupati the slender waisted,
Said to the five kings that for all
The sorrow and grief she was the cause.
Ṣhe, a sinner caused them sufferings, she said.
"Grief stricken I've gone down in stature!"
When she lamented thus, Tarmar advised.
"Well, Well!" said he and walked away from there.
The five Southern kings and Tiroupati
Walked along the forest path.
Mountains, hills and forests crossed they.
*Yāḷi*, lion, tiger that would kill,
Elephants and many wild animals lived there.
They crossed mountains and wooded plains,
And the forest where wild animals lived.
The Pāṇṭavars walked unobserved by them.
They gazed at the beauties in amazement,
As they scurried away from them.
The animals that used to give trouble,
Peacefully went away, avoiding them.

தங்களிலே தான்பேசிச் சந்தோச மாய்நடந்தார்
பொங்குநதி யாறுகளும்[1] பூபாலர் தான்கடந்து
செங்கழுநீர் தாமரையுஞ் சேர்ந்தநீ ராம்பலுடன்

வைகை நதிபாயும் வாவித் தடாகமுமாய்
பொய்கை யதுகண்டு புனலருந்தி யங்கிருந்து

## அனைவரும் முனிவர் ஒருவரைக் கண்ணுறுதல்

செய்யபுகழ் ராஜரிசி செய்யுந் தவந்தனிலே
வெய்யபுகழ் தன்மர் விசேஷமிது வென்றறிந்து

கண்டு பணிந்தைவர் களிகூர்ந்து தெண்டனிட்டார்
தொண்டுபண்ணி நின்றார்கள் துரைராச மாமுனியைப்

## அனைவரும் முனிவரிடம் உரையாடுதல்

பாத்திபர்கள் மாமுனியைப் பணிந்தே துரைக்கலுற்றார்
போற்றும்புலித் தோலுடையீர் பொய்கைதா னேதெனவே

நாடுபுகழ்[2] வேந்தேகேள் நாக மடந்தையர்கள்
ஆடுகின்ற தீர்த்தமிது ஆமென்றா ரம்மானை

அப்போது மாமுனியை ஐவருமே தானோக்கிச்
செப்பார் முலைமடவார் தீர்த்தமது ஆடுதற்கு

எப்போ வருவார்கள் யெனக்கேட்டா ரம்மானை
தப்பாத மாமுனியும் தானவர்க்கு[3] மேதுரைப்பார்

## நாகமடந்தையர்கள் நீராடுதல்

ஓதுகின்ற நீள்பருதி உதையமென்ற வேளையிலே
காதலா யங்கவரைக் காணலா மென்றுரைத்தார்

98.140. பூபாலர் - அரசர். 98.141. செங்கழுநீர், தாமரை, நீராம்பல் - தண்ணீரில் மலரும் சில மலர்களின் பெயர்கள். 98.142. வாவி - நீர்த் தடாகம். 97.143. புனல் - நீர். 97.144. ராஜரிசி - உயர்ந்த முனி. 97.145. வெய்ய புகழ் - மிகுந்த புகழ். 97.146. களி கூர்ந்து - மகிழ்ச்சியால் மிகுந்து. தெண்டனிட்டார் - அடிபணிந்தார். 97.147. தொண்டு பண்ணி - பணிவிடை செய்து. 97.148. பாத்திபர்கள் - அரசர்கள். ஏது - என்ன. 97.149. புலித்தோல் உடையீர் - புலித்தோலினை ஆசனமாகக் கொண்டவரே. பொய்கைதான் ஏதெனவே - நீராடும் இப்பொய்கையின் வரலாறுதான் யாதெனவே. 97.150. நாக மடந்தையர் - நாக லோகத்து மகளிர். 97.153. செப்பார் - கூறுவதற்கு அரிய புகழுடைய. 97.154. எப்போ - 'எப்பொழுது' என்பதின் பேச்சு வழக்கு. 97.155. தப்பாத - ஒழுக்க நெறியில் குறைவில்லாத. தானவர் - அரசர். 97.156. ஓதுகின்ற - அந்தணர்கள் மந்திரங்கள் ஓதுகின்ற. பருதி - சூரியன். 97.157. காதலாய் - விருப்பத்துடன்.

சு.சொல் : 1. யாறுகளும் 2. நாடுபுகள் 3. தானவற்கு

They spoke about it and happily walked.
They crossed rivers that were in full spate.
*Ceṅkaḻunīr*[1], lotus and *nīrāmpal*[2]
Were plenty in a huge pond where
The river Vaikai flowed into.
They found the pond, drank water and there
The kings and the pretty woman rested.
They came to a forest where a sage stayed.
Greatly famed Tarmar knew his greatness.
The five saw the sage and knelt before him.
They did errands for the great sage.
The five kings paid respects to the sage, said,
"O great one, who sits on a tiger skin![3]
Tell us about the history of the pond."
The sage said." O great king who is
Famous all over the world, listen!
It is the water source where
Damsels of Nagaland used to bathe."
Thereby the five questioned the sage.
"When will those damsels with glorious
Breasts come to bathe here in the pond?"
The ascetic said to the kings,
"When the Brahmans chant their *mantras*
When the sun rises in the morn
You can surely see them there."

1,2. Flowers of some water plants. 3. Sages used to sit on tiger or deer skins while doing penance or meditation.

கோல மடந்தையருங் கொற்றவரு மங்கிருந்து
வால யுதையமதில் வந்தார் மடந்தையர்கள்

மீதான பொய்கையிலே மெல்லிநல்லார் தான்மூழ்கிக்[1]
கோதான மாதரெல்லாங் குழலாத்தித் தான்முடித்து

## நாகமடந்தையர்கள் பாண்டவர்களிடம் அவர்கள் வரலாறு கேட்டல்

வந்தவரைக் கண்டு மங்கையர்கள் தான்கூடி
இந்த வனத்தில இவர்ஆ ரெனவேதான்

துங்கமுடி மன்னவனே துடியிடையாள் தன்னுடனே
இங்குவந்தீர் நீங்களுந்தான் எவ்வூர் எவடமென்றார்

## தருமர் வரலாறு கூறுதல்

பாரோர் புகழுகின்ற பாண்டுமன்னர் தன்புதல்வர்
தாராருந் தன்மரென்பேர் தம்பிமார் நால்வரிவர்

வாய்த்த யுலகந்தான் மண்ணுலகில் வந்ததினால்
ஆய்ந்தபுகழ் வைகுண்டம் அடையவென்று வந்தோங்காண்

## நாகமடந்தையர்கள் பாண்டவர்களை நாகலோகத்திற்கு அழைத்தல்

தன்மருடன் தம்பியருஞ் சார்ந்த துரோபதையும்
அருமையுட னிப்போது ஐவரையுங் கண்டோமே

எங்களுக்கு நற்காலம் இப்போது நீங்களுந்தான்
உங்களுக்கு நாங்கள் உகந்தடிமை தானாகும்

புரந்தரனார் தம்மிடத்தில் போவோம் மனம்மகிழ்ந்து[2]
வரந்தருவா ரங்கே மகுடமுடி சூட்டிவைப்பார்

நாளை முடிசூட்டி நாகலோக மானதெல்லாம்
ஆளும்[3] படியே அரசான வைத்திடுவார்

97.158. கோல மடந்தை - திரௌபதி. 97.159. வாலயுதையம் - இளம் சூரியனின் உதிக்கும் நேரம். 97.164. துங்கமுடி மன்னவன் - மேன்மையான மகுடமணிந்த மன்னவன். துடியிடையாள் - துடி என்னும் இசைக்கருவியின் நடுப்பகுதியினைப் போல சிறுத்த இடையினை உடையவள்; திரௌபதி. 97.165. எவடம் - 'எந்த இடம்' என்பதின் பேச்சுவழக்கு. 97.168. வாய்த்த யுலகம் - கலியால் சூழப்பெற்ற உலகம். 97.170. துரோபதை - திரௌபதை. 97.174. புரந்தரனார் - இந்திரன்.

சு.சொல் : 1. தான்முள்கி 2. மகிள்ந்து 3. ஆழும்

The Pāṇṭavars with Tiroupati stayed there.
When the sun rose, the *Nāga* women came.
In the pond the tender women bathed.
Then they stood drying their hair.
Seeing the strangers they gathered around.
They wondered as to who the strangers were.
"O kings, wearing grand crowns with woman
Whose waist resembles a *tuṭi*,[1]
Where are you from, tell us about you?"
Thus they spoke to the Pāṇṭavars.
Ṭarmar spoke to the pretty damsels,
"We are the sons of the famed king Pāṇṭu
I'm Tarmar, these four are my brothers.
Because of the advent of *kali*
We are on our way to *Vaikuṇṭam*.

**The *Nāka* women invite the Pāṇṭavars to the land of the *Nākas***

O how blessed are we to meet
Tarmar, his brothers and Tiroupati!
Its our good time that you are here,
To you we'll be always willing slaves.
To Intiraṉ[2] let us happily go.
He'll give you boons and he'll crown you.
So that you rule the *Nāka* land.

1. a musical instrument in the shape of a hour glass. 2. King of the celestials

நன்றாக யுங்களுக்கு நாங்களே யேவல்செய்வோம்
மன்றார சபையறிய மனையாட்டி யாகிடுவோம்
சேருவோம் வானவர்முன் செல்வியுட னைவருமாய்
வாருமய்யா வென்று மடந்தையர்கள் தானழைக்கப்

## தருமர் மறுப்புரை

பாசமுள்ள பெண்ணரசே பார்மீதி லாசைவிட்டு
நேசமுட னாங்கள் நெடுமால் தனைநினைந்து
போகையிலே நீங்கள்சொல்ல புத்தியல்ல மங்கையரே
தாகமுடன் சொல்லத் தகுமோதா னுங்களுக்கு
என்றுதன்மர் சொல்ல ஏந்திழைமார்[1] தான்கேட்டு
ஒன்றுமில்லை நாமிவர்க்கு உள்ளாசை கொண்டதெல்லாம்
சத்தாசை யில்லாமல் தானுரைத்தார் தன்மருந்தான்
சித்தாசை கொண்டபெண்கள் திரும்புமென்று தான்போனார்

## பாண்டவர்கள் முனிவரிடம் விடை பெறுதல்

மன்னவரை விட்டு மடந்தையர்கள் போனபின்பு
தென்னவர்க ளைவருடன் சேர்ந்து துரோபதையும்
மாமுனியைத் தான்வணங்கி வாழ்த்தி விடைவாங்கிப்
பூமுனிவர்[2] வாக்கருளிப் போமென்று சொல்லுகையில்

## முனிவர் பாம்பை நீவிர் எப்படி கடப்பீர்? என வினவுதல்

தன்மரே நீங்களுந்தான்[3] தாவு வழிதனிலே
தென்மலைபோல் பாம்பதுதான் சீறவந்து தான்முழுங்கும்
எப்படிநீர் போவீர் என்றுரைத்தார் மாமுனியும்
மெய்ப்புடைய தன்மருந்தான் விரைந்தேது செப்பலுற்றார்

97.178. ஏவல் - தொண்டு. 97.179. மன்றார - மன்றம் அறிய. மனையாட்டி - மனைவி. 97.180. செல்வி - திரௌபதியைக் குறித்தது. 97.184. போகையிலே - போகும் பொழுது. புத்தியல்ல - அறிவுக்கு உகந்தது அல்ல. 97.185. தாகமுடன் - மிகுந்த வேட்கையுடன்; காமயிச்சையுடன். 97.186. ஏந்திழைமார் - அழகிய ஆபரணங்களை அணிந்த நாகமடந்தையர்கள். 97.187. உள்ளாசை - மனதால் கொண்ட ஆசை. 97.188. சத்தாசை - 'சற்றும் ஆசை' என்பதின் பேச்சு வழக்கு. 97.189. சித்தாசை - சித்தத்தில் ஆசை; சிறிது ஆசை எனினும் அமையும் 97.193. பூமுனிவர் - பூ போன்ற மென்மையான மனம் கொண்ட முனிவர். போமென்று - போங்கள் என்று. 97.194. தாவுவழி - கடந்து செல்லுகின்ற வழி. 97.195. தென்மலை - பொதிகை மலை. 97.197. மெய்ப்புடைய - உண்மையுடைய.

சு.சொல் : 1. ஏந்திளைமார் 2. பூமனிவர் 3. நீங்கமுந்தான்

He'll make you kings, yes, he will!
We will do your errands so well!
For all to know we'll become your wives.
In front of the celestials,
We will unite, come!" said the damsels.

**Tarmar refuses**

"O affectionate queen like women!
We have renounced desire for things!
Having the Lord at heart, we travel.
When it is the case, what you spoke is not fair.
It ill behoves you to speak with lust?"
When Tarmar spoke the damsels did
Accept what he said without demur.
"Our desire for them is but nothing.
With the least desire Tarmar talked to us.
We are women with burning desire
At heart, let us go off ."they went off.
After the damsels left the kings
The Pāṇṭavars with Tiroupati
Paid their respects to the great sage and
Bade him farewell.
The tender hearted sage blessed them.
Bidding farewell the sage said,
"O Tarmar on your way ,
Snakes will hiss like Potikai mountain!
Then how will you go, my king?"
The truthful Tarmar replied him,

### தருமரின் பதிலுரை

விதிவசத்தை நம்மால் விலக்கவொண்ணா தென்றுசொல்லி
சதிரான மாமுனியைத் தானனுப்பி யேநடந்தார்

### அனைவரும் பயணம் தொடருதல்

மின்கொடியுந் தன்மருமாய் வீமனுடன் தம்பியரும்
வன்குமுத மாமலையில் வந்தனர்கா ணம்மானை

அந்தமலை சார்பில் அருகே யொருபுறமாய்[1]
சந்துசிறு தாரைவழி தானடந்து போகையிலே

### அனைவரையும் பாம்பு விழுங்குதல்

சித்தடியும் பாதையுமாய்ச் சிறியமலை யதுபோல்
புத்தரவ மானதுவும் போறவரைகள் போலேதான்

ஓங்கி வளர்ந்த உயர்மலையா மென்றுசொல்லித்
தாங்கி நடவாமல் தாராள மாய்நடந்தார்

வந்தவர் களைவரையு மவனுதைத்து துரோபதையும்
சந்தோச மாய்அரவந் தானே விழுங்கியதால்

### வீமன் பாம்பை மாய்த்தல்

அப்போது வீமன் அரையில் சிறு வாளெடுத்துத்
தப்பாமல் நாகமதைத் தான்கீறிப்[2] போட்டபின்பு

மெய்ப்பான தன்மருந்தான் விதிவசமோ யென்றுசொல்லி
இப்பால் வெளியில்வந்து எச்சிபட்டோ மென்றவரும்

### பாம்பு பார்ப்பான் உருவைப் பெறுதல்

மாதீர்த்த மாடி மடுக்கரையில் நிற்கையிலே
கொத்தி விழுங்குகின்ற கொடியரவம் பாப்பானாய்

**97.198.** விலக்க - நீக்க. ஒண்ணாது - முடியாது. **97.199.** சதிர் - மேன்மையான. **97.200.** மின்கொடி - திரௌபதையைக் குறித்தது. **97.201.** குமுத மாமலை - ஒரு மலையின் பெயர். **97.203.** சந்து - சிறுவழி. தாரை - நீர் ஒழுக்கு. போகையிலே - போகின்ற பொழுது. **97.204.** சித்தடி - சிறிய அடி. **97.205.** புத்தரவம் - புற்றிலுள்ள பாம்பு. போற - போகின்ற. வரை - மலை. **97.207.** தாங்கி நடவாமல் - மெதுவாக நடக்காமல். **97.210.** அரையில் - இடுப்பில். **97.211.** தப்பாமல் - குறி தவறாமல். நாகம் - பாம்பு. **97.212.** மெய்ப்பான - உண்மை நெறியில் செல்பவரான. **97.213.** எச்சிபட்டோம் - பாம்பின் எச்சில் பட்டோம். **97.214.** மாதீர்த்தம் - புனித நீர். மடுக்கரை - குளத்தங்கரை. **97.215.** கொடியரவம் - கொடுமையான பாம்பு.

---

சு.சொல் : 1. புறமாய் 2. தான்கீறி

"O sage can one avoiḍ the effects of fate?"
Bidding farewell to the great sage he walked.
Tiroupati, Tarmar, Vīmaṉ and brothers
Came to the wild Kumutam hill.
By the side of the mountain they walked
Along a narrow pathway, where
There was a trickling of water.
Like a small mountain with small steps
There lay a snake which they crossed.
They mistook it for a small hill
And walked past it without caution.
Kicking the five and Tiroupati,
The snake in one gulp swallowed them.
Vīmaṉ took a dagger from his waist,
With a good aim he did slay the snake.
Tarmar of the righteous path
Blamed it on their fate and they came out.
They were drenched in the saliva of the snake.
Then, they took bath in the holy water,
After which they were standing on the bank.
The slain snake into a Brahman changed.

வந்து பணிந்தான்காண் மன்னவர்க ளைவரையும்
இந்த வரலாறு ஏதென்று தன்மருந்தான்

### பார்ப்பான் தன் வரலாறு கூறுதல்

கேட்கும் பொழுது கிருபையுடன் பாப்பானும்
தாக்குடனே முன்னாள் சபித்தான்காண் மாமுனிவன்
பூங்கா வனந்தேடிப் போனேன்[1] மலரெடுக்க
மாங்குயில்போல் தேவரம்பை வந்தாள் மயங்கிவிட்டேன்
பூசை செபந்தனக்குப் புஷ்பமல[2] ரில்லையென்று
ராசமுனி கோபமதாய் நாட்டமுட னெந்தனையும்
பாம்பாகவே சபித்தார் பாரமுனி யெந்தனையும்
அப்போது சாபம் அகல்வதெப்போ யென்றுரைத்தேன்
ஐவர் வைகுண்ட மடையவென்று தான்வருவார்
மெய்வாய் பிளந்து விழுங்கிடுவாய் ஐவரையும்
வீமனுட சித்திடைவாள் மெய்யுடலைத் தான்பிளக்கும்
அப்போது சாபம் அகன்றுவிடு மென்றுரைத்தார்
இப்போது நானும் ஈடேற[3] யிங்குவந்தீர்

### பார்ப்பான் தேவலோகம் செல்லுதல்

தன்மருட னால்வரையுந் தான்கண்ட போதெனக்குச்
சென்ம விமோசனமாய்த் தேவசபை நான்சேர
போறே னெனப்பாப்பான் போயினர்கா ணம்மானை
நீரே தரித்தருளும் நிமலர் தனைநினைந்து

97.216. பணிந்தான் - அடிபணிந்து வணங்கினான். 97.217. வரலாறு - அந்தணன் பாம்பாக மாறிய வரலாறு. 97.218. கிருபை - இரக்கம். பாப்பான் - பார்ப்பான்; அந்தணன். 97.219. தாக்குடனே - வலிமையுடனே. 97.223. நாட்டமுடன் - தன்நிலையில் ஏற்பட்ட அசைவினால். 97.225. எப்போ - 'எப்பொழுது' என்பதின் பேச்சுவழக்கு. 97.227. மெய் வாய் - உடம்பிடத்திலுள்ள வாய். 97.228. சித்திடை வாள் - சிறிய, இடையில் சொருகி வைத்திருக்கும் வாள். மெய்யுடல் - வலிமையான உடல். 97.232. தேவ சபை - தேவலோகம். 97.233. போறேன் - 'போகிறேன்' என்பதின் பேச்சு வழக்கு. பாப்பான் - பார்ப்பான். 97.234. தரித்தருளும் - பொறுத்தருளும்; பாம்பு, தான் ஐவரையும் விழுங்கியமையால் இவ்விதம் கூறியது. நிமலர் - கடவுள்; திருமாலைக் குறித்தது.

---

சு.சொல் : 1. போனேன் 2. புஸ்பமல 3. ஈடேர

He came forward, paid respects to the kings.
Tarmar enquired him of his story.
The Brahman started narrating his story.
"Once I earned the curse of a great sage.
I was to the garden to pick flowers for him.
I saw a divine damsel there.
I lost myself to her beauty.
I forgot the world and my duty too.
As he had no flowers for his *pūja,*
The greatest of the sages grew wrathful.
He cursed that I, a snake become.
I asked him when my curse would end.
He said, 'when the great five on their
Way to *Vaikuṇṭam* come this way,
You would swallow them and then the
Dagger of Vīmaṉ would tear your body
Then your curse will leave you for good.'
To give me salvation you came here.
When I saw Tarmar with brothers four
I got my salvation - here I go
Bear with me." The Brahman went away.
Crossing the mountain they were on their way.

### அனைவரும் பயணம் தொடர்தல்

மார்க்கமுட னந்த மலைகடந் தப்பாலும்
தீர்க்கமுட னைவர் திருமால் தனைநினைந்து

வாற[1] வழியில்[2] மலைகளோ ராயிரமாய்
ஏறி யிறங்கியப்பால் எண்பதின் காதவழி

### உயர்ந்த மலையைக் கண்டு தருமர் அதிசயித்தல்

நடந்து வருகையிலே நல்லதொரு அஸ்தகிரி
அடர்ந்துமொரு மாகாசம் அந்தமட்டுந் தான்வளர்ந்து

நீண்டமலை கண்டு நின்றயர்ந்து தன்மருந்தான்
ஆண்டவனே யிந்த அதிசெயந்தா னேதெனவே

### வீமன் தண்டாயுதத்தால் அடித்து மலையைப் பிளத்தல்

தெண்டா யுதமெடுத்து திறல்வீமன்[3] அப்போது
அண்ட மதிர அடித்தான் மலைதகர

### மலை வேதியன் உருவைப் பெறுதல்

தகர்ந்தமலை வேதியனாய் தானின்றா னம்மானை
பகர்ந்துதன்ம ரேதெனவே பாப்பானைத் தானோக்கி

### தருமர் வேதியனிடம் காரணம் வினாவுதல்

இந்த வகையேது என்றுதன்மர் தான்கேட்க
சிந்தைம கிழ்ந்துடனே செப்பலுற்றான் வேதியனும்

### வேதியன் பதிலுரை

முன்னாள் சுரருடன் மூர்க்கமுட[4] னான்பொருதேன்
என்னோ டவர்கள் எதிர்த்துப்பொர மாட்டாமல்

97.235. மார்க்கமுடன் - வழியுடன். 97.236. தீர்க்கமுடன் - உறுதியுடன். 97.237. வாற வருகிற. 97.238. எண்பதின் காத வழி - எண்பது காத தூரம்; ஒரு காதம் என்பது நான்கு கூப்பிடு தூரம் என்பது பண்டை வழக்கு. 97.239. அஸ்தகிரி - சூரியன் அஸ்தமிக்கும் இடமாகச் சொல்லப்படும் மேற்கு பகுதியிலுள்ள ஒரு மலையின் பெயர். 97.240. ஆகாசம் அந்தமட்டும் - வானத்தைத் தொடும் அளவில். 97.241. அயர்ந்து - மயங்கி. 97.243. தென்டாயுதம் - 'தண்டாயுதம்' என்பதின் பேச்சு வழக்கு. திறல் - வலிமை. 97.244. அண்டம் - உலகம். தகர - தகர்ந்து போக. 97.246. பகர்ந்து - கேட்டு. ஏதெனவே - 'நீர் மலையுருவம் கொண்டதன் காரணம் யாதெனவே' என்ற பொருளில். 97.247. கேள்க்க - கேட்க. 97.248. சிந்தை - அறிவு. செப்பலுற்றான்- கூறலுற்றான். 97.249. சுரர் - தேவர். மூர்க்கமுடன் - மிகுந்த மனோ வலிமையுடன். பொருதேன் - போர் செய்தேன்.

---

சு.சொல் : 1. வார 2. வளியில் 3. திரல்வீமன் 4. முறக்கமுட

Strong willed, they thought of Kaṇṇaṉ constantly.
On their way thousands of mountains
They climbed and soon crossed *kātam*l[1] eighty.
On their way good Hastagiri[2]
Was standing tall up to the skies.
Tarmar seeing the mountain stood, stunned.
Said" Oh Lord! what does this wonder mean?"
Then able Vīmaṉ took his mighty club.
Hit the mountain so the earth tembled.
The mountain took the form of a Brahman.
Tarmar asked him for an explanation
Pleased, the Brahman said to Tarmar,
"Once with great strength I fought the *Curars*[3]
They were unable to fight with me.

1. Ancient measure of distance 1 *kātam* = 71/2 *nāḻikai* = 3hrs. 80 *kātams* = 10 days. 2. The Westernmost mountain where the sun was supposed to set. 3. The celestial beings.

உதைபட் டசுரர் உயிர்மடிந்து மண்மீதில்
வதைபட் டுயிர்போக வைகுண்டந் தாருமென்றார்
வகைதெரியா மலுந்தான் வைகுண்டந் தந்தேனென்றேன்
பகைவருவ தறியாமல்[1] பாவியே நானாகிச்
சொல்லிவிட்டேன் வாய்வீண்தான் சொன்னதையு மாலறிந்து
கல்லா யெனைச்சபித்தார் காயாம்பூ மேனியனார்
பண்டே யுருமாறிப் பார்மலை தானாகி
மீண்டுயரந் தான்வளர்ந்து மேதினியில் தானிருன்றார்
ஆயரே அச்சுதரே அடியேர்க்கு விமோசனந்தான்
தூயவரே யெப்போது துலையுமென்று தான்கேட்டேன்
நேச முடனைவர் நினைத்துநம்மைத் தானோக்கி
மாயவரே தஞ்சமென்று வைகுண்டந் தானோக்கி
வருவா ரிதுவழியாய்[2] மானனையாள் தன்னுடனே
பருவரையை நோக்கிப் பயந்தவர்கள் நிற்பார்கள்
தருமர்[3] தனக்கிளைய தமிழ்வீமன்[4] தெண்டாலே
உருமாற[5] வுன்னை உடைபடவே தானடிப்பான்
பருவரையும் நீங்கிப் பழைய வுருமாறி
வருவா யெனவேதான் மாயன் சபித்துவிட்டார்
ஆனதினாலே சாபம் ஐவருமே தீர்த்துவிட்டீர்
நானதிலே பிழைத்தேன்[6] நல்லவரே யுங்கள்தர்மம்

**97.252.** வதைபட்டு - மிகுந்த துன்பம் அடைந்து. **97.253.** வகை தெரியாமல் - செய்யும் வழி தெரியாமல். **97.254.** பகை வருவது - துன்பம் வருவதை. **97.255.** வாய் வீண்தான் - வாயால் சொன்னது அனைத்தும் வீண்தான். சொன்னதையும் - இறந்தவர்களுக்கு வைகுண்டம் தரும்படி நான் சொன்னதையும். மால் - திருமால். காயாம்பூ மேனியனார் - காயாம்பூ போலும் நீல நிறத்தை உடைய மேனியனார். **97.257.** பண்டே - அக்காலத்திலிருந்தே. உரு - வடிவம். **97.258.** மேதினி - உலகம். **97.259.** அடியேர்க்கு - அடியவனாகிய எனக்கு. **97.260.** தூயவர் - தூய்மையானவர்; திருமால். துலையும் - 'தொலையும்' என்பதின் பேச்சுவழக்கு. **97.262.** தஞ்சம் - அடைக்கலம். **97.263.** இது வழியாய் - இந்த வழியாக. மானனையாள் - மான் போலும் சாயலையுடையவள்; திரௌபதை. **97.264.** பருவரை - பெரிய மலை. **97.265.** தமிழ் வீமன் - தமிழ் மொழியில் சிறந்த வீமன். தெண்டாலே - தண்டாயுதத்தாலே. **97.266.** உடைபடவே - மலையாக நிற்கும் நீ உடைந்து போகும்படியே.

சு.சொல் : 1. தரியாமல் 2. வளியாய் 3. தன்மர் 4. தமிள்வீமன் 5. உருமார 6. பிளைத்தேன்

Beaten, they lay on the ground and
Asked me to bless them with *Vaikuṇṭam*.
Not knowing of the consequences,
Not knowing of the impending danger,
Headstrong, I blessed them with *Vaikuṇṭam*.
Kaṇṇaṉ came to know of it and
The *kāyam* flower complexioned one
Cursed that a stone I should become.
'Become a mountain and stay on earth
Growing tall do stay on earth' He said
I begged Him for salvation:
I asked the Holy one when my curse would end.
He said, "The five with the thought of me
In their heart chanting my name will
Come this way with their pretty wife.
They'll stand stunned by the sight of the hill.
Then Taṟmar's younger brother Vīmaṉ
With his club will strike and break you.
You'll then get your original form
Then you will come to me!"

## வேதியன் வைகுண்டம் போதல்

நான்போறே னிப்போது நாரணனார் தம்மிடத்தில்
தான்போங் கோவென்று சதுரமறையோன் தானடந்தான்

## இறைவனைத் துதித்து அனைவரும் வனத்துள் நடத்தல்

ஆமாமென் றைவர் அநேக நெடுந்தூரம்[1]
தாமோ தரனே சரணஞ் சரணமென்று

தன்மருந் தம்பியருந் தாரார் துரோபதையும்
இன்மை தனிலெல்லாம் இங்கே கழித்தோமென்று

ஆதித்த னூடாத அருங்கான கம்புகுந்து
பேதித்த வன்மிருகம் பெரும்பூதம் நாதகெணம்

ஊரும் பலாசாதி உயர்பறவை[2] வல்விலங்கு
சாரும் பலவிருச்சம் தழைத்தமா[3] சோலைகளும்

மன்னுயிருந் தன்னுயிர்போல் வாழும்புகழ்[4] தன்மரென்று
பன்னுயிரெல் லாம்வணங்கும் பஞ்சவர்கள் தங்களையும்

எண்பத்தி நான்குயிரும் இவர்களுடன் தான்பேசிப்
பண்பற்ற பஞ்சவர்கள் பலசலிப்பு மில்லாமல்

நாத்திசையுங் கானகமும் நல்ல சனம்போலே
வேத்துமைக ளற்று விசாலமா யவ்வனத்தில்

**97.271.** போறேன் - 'போகிறேன்' என்பதின் பேச்சுவழக்கு. **97.272.** தான் போங்கோ - நீங்கள் சொல்லுங்கள். சதுரமறையோன் - நான்கு வேதங்களான ரிக், யசூர், சாம, அதர்வணங்களில் வல்லவனான வேதியன். **97.275.** தாரார் - மாலை ஆர்க்கின்ற. **97.276.** இன்மை தனிலெல்லாம் - சோகமான நேரத்திலெல்லாம். **97.277.** ஆதித்தன் ஊடாத - சூரியன் உள்ளே புகமுடியாத. அருங்கானம் - கடுமையான காடு. **97.278.** பேதித்தவன் - செய்வது அறியாது திகைத்தவன்; தருமன். நாத கெணம் - பெருங்கூட்டம். **97.279.** வல்விலங்கு - கொடுமையான விலங்கு. **97.280.** விருச்சம் - மரம். மா சோலை - மாமரங்கள் நிறைந்த சோலை. **97.281.** மன்னுயிரும் - உலகத்து உயிரும். **97.282.** பன்னுயிர் - பல்லுயிர்; பல வகைப்பட்ட உயிர். **97.283.** எண்பத்தி நான்குயிர் - எண்பத்தி நான்கு வகைகளாகப் பிரிக்கப்பட்ட உலக உயிர்கள். **97.284.** பண்பற்ற - 'யாம் அரசர்கள்' என்கிற இறுமாப்பு பண்பு இல்லாத. **97.285.** நாத்திசை - 'நாற்றிசை' என்பதின் பேச்சு வழக்கு. நல்ல சனம் - உயர்ந்த மக்கள். **97.286.** வேத்துமை - 'வேற்றுமை' என்பதின் பேச்சு வழக்கு. விலாசமாய் - அழகாய்.

---

சு.சொல் : 1. அனேகநெடுந் 2. உயர்பரவை 3. தளைத்தமா 4. வாழும்புகள்

As He said you ended my curse.
I'm saved, O good men, because of
Your charity - I take leave now,
Peacefully to Nārāyaṇan̲ you go."
Said the Brahman an expert in
The four *vēdas*[1] and went off.
The five then to long distances walked,
Saying that Kaṇṇan̲ was their refuge.
Tarmar, brothers and Tiroupati,
Thinking their troubles ended there
Entered a dense forest on their way.
The forest was so dense that it
Did not allow the sun's rays through.
Many trees, thick mango groves were there.
The forest teemed with wild life-
Wild animals, ghosts, all forms of life,
The animals that crawled, birds and wild beasts.
All said Tarmar was very humane,
Considering other lives as his own
Hence all the lives worshipped the five.
The living things four and eighty
Conversed with them very freely.
The Pāṇṭavars sans pride walked swiftty
Without weariness, the beautiful
Forest surrounding them on all sides.
As they walked they did encounter
A very strange sight on their way.

1. *Rig*, *Yajūr*, *Sāmam* and *Atarvaṇa*.

### குதிரை முகத்துடன் பெண்ணொருத்தித் தோன்றுதல்

வாரார்கள் ஐவருடன் வனிதையொரு பெண்ணுமென்று
பேறாகக் கண்டெதிரே பெண்கொடியா ளென்றொருத்தி

அசுவ முகமாக ஐவர்முன்னே வந்துநின்றாள்
விசுவ ரூபமுடனே மெய்ப்புடனே மேவவென்று

### குதிரை முகப்பெண் அர்ச்சுனன் தோள் தழுவி அழகிய வடிவம் பெறுதல்

தன்மருடன் தம்பி தார்வீம னுக்கிளைய
வரும்விசையன் தன்புயத்தில் வந்து தழுவவென்றாள்

புரவிமுக மானதுவும் புண்டரீக மாமலர்போல்
இரவி முகமதுபோல் ஏந்திழையாள்[1] நிற்பளவில்

### தருமர் பெண்ணிடன் குதிரைமுகம் பெற்ற காரணம் விளாவுதல்

தாதலருந் தன்மர் தானே யதிசெயமாய்க்
காதலரே யிந்தக் காரணமே தென்றுரைத்தார்

### பெண் தன் வரலாறு கூறுதல்

கானில் முனிதேவி காளியென்பேர் முன்னாளில்
வாளி லொருமுனிவன் வந்தென்னைச் சேருகையால்

அறிந்தெந்தன் பர்த்தாவும் அசுவமுக மாவையென்றார்
பிரிந்தேன் முனியைவிட்டு பேச்சொன்று மில்லாமல்

ஐயா யிச்சாபம் அகலுவது யெக்காலம்
மெய்யாக நீயும் விசயனுட தன்தோளில்

97.287. வாரார் - 'வருகிறார்' என்பதின் பேச்சுவழக்கு. வனிதை - பெண். 97.288. பேறாக - கிடைத்தற்கரிய காட்சியாக. 97.289. அசுவ முகம் - குதிரை முகம். 97.290. விசுவ ரூபம் - மாயா வடிவம். மெய்ப்புடன் - விருப்பத்துடன். மேவ - பொருந்த. 97.291. தார் - மலர்மாலை. 97.292. விசையன் - அர்ச்சுனன். புயம் - தோள். 97.293. புரவி - குதிரை. புண்டரீக மாமலர் - தாமரையாகிய பெரிய மலர். 97.294. இரவிமுகம் - சூரிய முகம். 97.295. தாது அலரும் - பூவிதழ் மலரும். 97.296. காதலரே - மிகுந்த அன்பு உடையவரே. இந்த காரணமேது - குதிரை முகமாய் இருந்த காரணம் என்ன. 97.297. கானில் - காட்டில். முனி தேவி - முனிவரின் மனைவி. முன்னாள் - முந்தாள். 97.298. சேருகையால் - புணர்ந்தமையால். 97.299. எந்தன் - என்னுடைய. பர்த்தா - 'கணவன்' என்ற பொருளிலமைந்த மலையாளச் சொல். ஆவை - ஆகுக. 97.300. பேச்சொன்றும் - எதிர்த்துப் பேசுதல் எதுவும் இல்லாமல். 97.301. இச்சாபம் - இந்த சாபம். 97.302. மெய்யாக - உண்மையாக. விசயன் - அர்ச்சுனன்.

---

சு.சொல் : 1. ஏந்திளையாள்

A tender looking woman with
The head of a horse came before them.
With an appearance, bordering on illusion
With an intense yearning to unite with,
She embraced Vijayan̲[1], the brother of
Tarmar and Vīman̲, the mighty.
As she did so her horse head became
That of a woman, soft as lotus.
The damsel, bright as sun, stood waiting.
Worderstruck Tarmar said to her,
"O lovely one, what's all these?"
"I'm Kāḷi the wife of a great sage.
Once a sage came and we made love.
My husband came to know of it and
Cursed that I would get a horse's head.
I asked him when my curse would go.
He said that when I earnestly hugged
Vijayan̲ of the Pāṇṭavar, my curse
Would end and the horse face would go.
As he said, now, my curse is gone.

சென்று தழுவத் தீரும் அசுவமுகம்
என்றுமுனி சொல்படியே இப்போது தீர்ந்துதென்று

### பெண்ணின் மகிழ்ச்சியும் கூற்றும்

பூவுலகில் வாழும் போர்வேந்தன் ஐவருந்தான்
தேவுலகு வைகுண்டஞ் சேர்வீ ரெனமொழிந்தாள்[1]

போனார் முனிசாபம் போச்சுதென்று தான்மகிழ்ந்து
மானாரும் போனதற்பின் மன்னவர்கள் ஐவருந்தான்

### அனைவரும் பயணம் தொடர்தல்

கானார்வனம் நோக்கிக் கடுக நடக்கலுற்றார்
சேனா பதிவேந்தர் திருவுளமே யுண்டெனவே

நடந்தார் வெகுதூரம் நாலாறு காதவழி[2]
கடந்தப்பால் வந்துநின்று கண்டார் விமலமலை

அந்த மலைகடந்து அநேக[3] நெடுந்தூரம்
சந்த வனத்தோடே தடாகமது தான்கடந்து

### மாலியாறு என்பதை அனைவரும் காணுதல்

ஆலிலையின் மேல்துயின்ற அச்சுதனைத் தானினைந்து
மாலியா றென்னும்[4] வலியாறு வந்துகண்டார்

ஆறு தனைக்கண்டு ஐவருந் தான்கரைக்கு
ஏறவொண்ணா தென்று இயல்தருமர் தானுரைக்க

### வீமன் அனைவரையும் அக்கரைக்குக் கொண்டு செல்லுதல்

வீறிட்டு[5] வீமன் விசையனையுந் தன்மரையும்
பூரித்து ரெண்டு புயமீதில் வைத்துமிக

97.304. தீர்ந்துதென்று - தீர்ந்ததென்று. 97.305. பூவுலகு - மண்ணுலகம். 97.306. தேவுலகு - தேவர் உலகம். 97.307. போச்சுது - 'போயிற்று' என்பதின் பேச்சுவழக்கு. 97.308. மானாரும் - மான் போன்ற சாயலை உடைய பெண்ணும். 97.309. கடுக - விரைவாக: 97.310. சேனாபதி வேந்தர் - முருகக் கடவுள். 97.311. நாலாறு காத வழி - இருபத்தி நான்கு காதத் தூரம். 97.312. விமல மலை - ஒரு மலையின் பெயர். 97.314. சந்த வனம் - அழகிய வனம். தடாகம் - நீர்ப் பொய்கை. 97.315. ஆலிலையின் மேல் துயின்ற அச்சுதன் - உலகப் பிரளயக் காலத்தில் ஆல மரத்து இலையில் துயின்ற திருமால். 97.316. மாலியாறு - ஓர் ஆற்றின் பெயர். வலியாறு - பெரிய நதி. 97.317. கரைக்கு ஏற்வொண்ணாது - ஆற்றின் இக்கரையிலிருந்து அக்கரைக்குச் சென்று ஏற முடியாது. 97.319. வீறிட்டு - வேகம் கொண்டு. 97.320. பூரித்து - உள்ளம் மகிழ்ந்து. ரெண்டு - 'இரண்டு' என்பதின் பேச்சு வழக்கு.

சு.சொல் : 1. மொளிந்தாள் 2. காதவெளி 3. அனேக 4. ரென்னும் 5. வீரிட்டு

O five war lords who are still on earth!
Heavenly *Vaikuṇṭam* you'll soon go!"
She went off pleased, her curse was gone.
After the pretty woman left the five kings
Walked fast towards a dense forest.
Hoping they'd have blessings of Lord Murukaṉ.
They walked for long - twenty four *kātams*.
They soon reached the Vimala hills,
Crossed it and for a long distance
Went through the forest of sandal trees.
They were walking with Kaṇṇaṉ at heart,
Who once slept on a peepul leaf.[1]
Soon they came to a big river called Māli.
The five on the bank of the river stood.
Tarmar said that crossing it was difficult.
With speed Vīmaṉ, happily lifted
Vijayaṉ and Tarmar on his shoulders.

1. As an infant Kaṇṇaṉ was supposed to have been sleeping on a peepul leaf during the flood.

ஒருகை சகா்தேவன் ஒருகை நகுலனையும்
மருவு மலர்முதுகில் மங்கையரைத் தானேற்றிப்

பிறவிப்[1] பெருங்கடலைப் பெரியோர்கள் நீந்துகையால்
திறவிலக் கரிய திறல்முனிவர் போலாகி

ஆறு தனைநீந்தி அரியவை குண்டமதில்
ஏறுவது போல்கரையில் ஏறினர்கா ணம்மானை

## மாலியாறு பெண்ணுரு கொள்ளுதல்

அந்தமுள்ள பேராறு ஆரணங்கு போலாகி
வந்தவளும்[2] நிற்க வாய்த்தபுகழ்[3] தன்மருந்தான்

## தருமர் பெண்ணிடம் நடந்தமையை வினாவுதல்

ஏதுகாண் பெண்கொடியே இவ்வேச முந்தனக்கு
ஓதுவீ ரென்றுதன்மர் உண்மையுடன் தான்கேட்க

நீத முனிதேவி நித்திய கன்னியென்பேர்
சாதகமாய் நித்திரையில் தானனந்தல் செய்துவிட்டேன்

மாய்மை யிதுசாபம் வாங்குவதெக் காலமென்றேன்
அரியபுகழ்[4] தன்மருடன் ஐவர்துரோ பதையும்

பெரியவர் களிந்தவழி பேதலியா தேவருவார்
ஆறென்று சொல்லி அவர்கள் மயங்கிநிற்பார்

ஏறென்று வீமன் இவர்கள் தனையிடுக்கி
நீந்தி வருகையிலே நீங்குமுந்தன் சாபமென்றார்

**97.322.** மருவு மலர் - மலர் பொருந்தி நிற்கின்ற. மங்கையர் - திரௌபதையைக் குறித்தது. **97.324.** திற விலக்கரிய - திறமை, நேர்மை இரண்டிலும் அரிய. **97.326.** கரையில் - ஆற்றின் கரையில். **97.329.** இவ்வேசம் -- பெரிய ஆறு போல கிடந்த இந்த வேசம். **97.330.** ஓதுவீர் - கூறுவீர். **97.331.** நீத முனி - ஒரு முனிவரின் பெயர். தேவி - மனைவி. **97.332.** சாதகமாய் - சுயநலத்துடன் காரியம் வெற்றிபெற. நித்திரை - தூக்கம். அனத்தல் - தவறு. **97.333.** மாய்மையிது - மாய வடிவமாகிய மாலியாறு வாங்குவது - 'தீர்வது' என்ற பொருளில். **97.335.** பேதலியாதே - எந்த வித தடுமாற்றமும் இல்லாமல். **97.336.** ஆர் - 'யார்' என்பதின் பேச்சு வழக்கு. **97.337.** ஏறென்று - தோளின் மீது ஏறுங்கள் என்று. இடுக்கி - வலிமையாகப் பிடித்து.

---

சு.சொல் : 1. பிரவிபெருங் 2. வந்தவமும் 3. வாய்த்தபுகள் 4. அரியபுகள்

In one hand Cakātēvan and
In the other he carried Nakulaṉ.
On his back he carried Tiroupati.
Like greatmen crossing the sea of life
Vīmaṉ, honest and talented like
A great sage swam across and reached
The otherside of the river which
Appeared as if they reached *Vaikuṇṭam.*
The huge river then took a woman's form.
She stood before the famed Tarmar who said,
"O tender woman! Why this disguise? Tell me."
When Tarmar asked thus she said,
"I'm the wife of Nītamuṉi
My name is Nittiyakaṉṉi
Selfishly I wronged him in my sleep.
He cursed me to become a river.
When I asked when the curse would end,
'The famed five with Tiroupati great,
Sans confusion this way would come.
Seeing the river they'll stand awestruck.
Vīmaṉ would swim across carrying them.
Then your curse will leave you.' he said.
My curse is gone O Tarmar, its your blessings!

### முனி பத்தினி அனைவரையும் ஆசிர்வதித்து நீங்குதல்

சாபமுந் தீர்ந்துதுகாண் தன்மரே யுங்கள்தன்மம்
பாவ மகன்றிதுகாண் பதிதனக்கு நான்போறேன்[1]
தேவரீர் நீங்கள் சேருமென்றாள் வைகுண்டம்

### அனைவரும் பயணம் தொடருதல்

அந்த மொழிகேட்டு[2] அதிசெயமா யுள்மகிழ்ந்து[3]
வந்தார் வெகுதூரம் வனமு மலைகடந்து
வரும்வழியிலே[4] நிமித்த மதிமயக்க மாயுரைக்க
தரும ரதுகேட்டுத் தானே விசாரமுற்று

### திரௌபதை தளர்ச்சி அடைதல்

கன்னி துரோபதைக்கு காலம்பொல் லாதெனவே
இன்னிமித்தஞ் சொல்லுதென்று இடைந்து மனமுழன்று[5]
வருகையிலே நல்லதொரு வாய்த்த துரோபதையும்
இருகை விரித்தலறி[6] எடுத்தடியும் வையாமல்
மெய்சோர்ந் தயந்து மேல்மூச்சும் வேர்வையுமாய்
கைகா லயர்ந்து களைதாங்கி நிற்பளவில்

### பாண்டவர்கள் திரௌபதையிடம் வினாவுதல்

ஐவர் திரும்பி ஆரணங்கை வந்தணைத்துக்
கைதாங்கி மெள்ள கருத்தே தெனக்கேட்டார்

**97.338.** தீர்ந்தது - 'தீர்ந்தது' என்பதின் பேச்சு வழக்கு. **97.339.** தன்மம் - தர்மம். **97.340.** அகன்றிது - 'அகன்றது' என்பதின் பேச்சு வழக்கு. பதி - கணவன்; நித்தியகன்னியின் கணவனான நீதமுனியைக் குறித்தது. **97.344.** நிமித்த மதிமயக்கமாய் உரைக்க - காட்டில் தீய சகுன ஒலிகள் அறிவை மயக்கும் விதத்தில் கேட்க. **97.345.** விசாரமுற்று - துன்பமுற்று. **97.346.** காலம் பொல்லாதெனவே - திரௌபதைக்கான வாழ்க்கை காலம் இடையூறுக்கு உரியது என்றே. **97.347.** இன்னிமித்தம் - இந்நிமித்தம்; இந்த நிமித்தம்; மேல காட்டில் கேட்ட தீய சகுன உரைகள். சொல்லுது - 'சொல்லுகிறது' என்பதின் பேச்சு வழக்கு. இடைந்து - துன்பம் அடைந்து. உழுன்று - வருந்தி. **97.349.** வையாமல் - வைக்க முடியாமல். **97.350.** மெய் சோர்ந்து - உடல் தளர்ந்து. அயந்து - அயர்ந்து. **97.351.** களை தாங்கி நிற்பளவில் - உடல் தளர்ச்சியைத் தாங்கிக் கொண்டு நிற்கும் நேரத்தில். **97.353.** கை தாங்கி - கைகளால் அரவணைத்து. மெள்ள - மெதுவாக. கருத்து ஏதெனக் கேட்டார் - 'உடம்பால் திரௌபதை தளர்ந்தமையால் ஐவரும் உன் மனவோட்டம் என்ன எனக் கேட்டார்' என்கிற பொருளில்.

சு.சொல் : 1. நான்போரேன் 2. மொளிகேட்டு 3. யுள்மகிள்ந்து 4. வரும்வளியிலே 5. முளன்று 6. தலரி

Absolved of my sin to my husband I go.
O Lords, you'd reach *Vaikuṇṭam* soon!"
The Pāṇṭavars were very pleased.
They crossed a long distance of hills and woods
On their way they heard sounds of ill omen,
Hearing which Tarmar grew restless.
"The time seems bad for Tiroupati
So say the ill omens!" he felt sad.
With outstretched hands she cried aloud.
Tiroupati could not take another step.
Tired, worn, gasped, she profusely sweated.
Tired of limbs, she was standing limp.
The five came back and hugged the lady.
Softly they asked what was on her mind.
She said that she was feeling giddy.
They asked her to describe her sickness.

## திரௌபதை தன் உடல்நிலை குறித்த மனவோட்டத்தைக் கூறுதல்

தனக்கு வருமயக்கந் தானுரைத்தா ரம்மானை
உனக்கு வருமயக்கம் உள்ளபடி யின்னதென்று

சொல்லென்று கேட்க துரோபதையும் வாய்வெருவி
நில்லென்று காத்து நெடுநாடி வுள்ளயர்ந்து

தத்துவங் களத்துத் தன்னினைவுதா னம்மானை
பித்துக் கலங்கிப் பேரறிவு சித்தறிவாய்[1]

கண்டத்தில் சேற்றுமமாய் காலனென்னு மாபாவி
அண்டத்தில் நின்று ஆறடுக்குத் தானசந்து

பிண்டத் தடுகுலைந்து பிராணனென்று வாயுவுந்தான்
விண்டத்தை நோக்கி விடைந்தே மிகப்பதறிப்[2]

பொறிகலங்கி[3] அந்தப் புனலு மதிமயங்கி
நெறிகலங்கி யேங்கி நினைவு தடுமாறி[4]

வாத மொடுங்கி வலுபித்தம் மெய்குளிர்ந்து
சீத மயர்ந்துமிகச் சேற்றுமமு மேலாகி

மண்ணுந்தண் ணீரதிலே வந்து மிகவொடுங்கித்
தண்ணீருந் தீயில் தானொடுங்கி மேலாகி

**97.355.** இன்னதென்று - இத்தன்மையானது என்று. **97.356.** கேள்க்க - கேட்க. வெருவி - குழறி. **97.357.** காத்து - 'காற்று' என்பதின் பேச்சு வழக்கு; இங்கு உயிர் மூச்சைக் குறித்தது. நாடி உள்ளயர்ந்து - உயிரோட்டம் உணர்த்தும் நாடி மிகவும் தளர்ந்து. **97.358.** தத்துவம் - வலிமை. அத்து - 'அற்று' என்பதின் பேச்சு வழக்கு. நினைவு - அறிவு. **97.359.** பித்துக் கலங்கி - அறிவில் தடுமாற்றம் கொண்டு; உன்மத்த நிலையை அடைந்து எனினும் பொருந்தும். சித்தறிவு - 'சிற்றறிவு' என்பதின் பேச்சு வழக்கு. **97.360.** கண்டம் - கழுத்து. சேற்றுமம் - முப்பிணிகளில் ஒன்றான சிலேத்துமம்; பிற வாதம், பித்தம் என்பன. காலன் - எமன். **97.361.** அண்டம் - ஆகாயம். ஆறடுக்கு - ஜீவ சக்திகள் இருக்கின்ற மூலாதாரம், சுவாதிட்டானம், மணிப்பூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்னும் உடம்பிடையே உள்ள ஆறு அடுக்குகள். **97.362.** பிண்டத்து அடு குலைந்து - உடம்பின் அமைப்பு நிலை குலைந்து; உடம்பினினுள்ள கூடு குலைந்து எனினும் அமையும். பிராணன் - உயிர் மூச்சு. **97.363.** விண்டம் - விண்ணுலகம். விடைந்து - பிரிந்து. **97.364.** பொறி - ஐம்புலன்கள். புனல் - ஜீவ நீர். **97.365.** நெறி கலங்கி - வாழ்வியல் ஒழுகலாறுகள் கலங்கி. **97.366.** வாதம் ஒடுங்கி - வாதம் என்னும் நோய் உடல் தன் ஒளியில் ஒடுங்கி. வலு பித்தம் - கடுமையான பித்த நோய். மெய் - உடல். **97.367.** சீதம் அயர்ந்து - உயிர் வேதனை தரும் மிகுந்த குளிர்ச்சியினால் செய்வதறியாது தளர்ந்து. சேற்றுமம் - 'சிலேட்டுமம்' என்பதின் பேச்சு வழக்கு. மேலாகி - அதிகமாகி.

சு.சொல் : 1. சித்தரிவாய் 2. மிகப்பதரிப் 3. பொரிகலங்கி 4. மாரி

But she could not even speak properly.
'Air' in her body stood still, her pulse fell.
Strength depleted, she felt disoriented.
She had a muddled mind and impaired intellect.
In her throat *cilēttumam*[1] settled.
Kālaṉ[2] at the sky stood awaiting.
The six power centres[2] in her body
Got weakened and her shape changed.
There seemed to be an effort heaven wards.
Her senses were astray and blood flew away.
She lost her normal movements and consciousness.
*Vātam* caused the dimming of her body glow.
Severe *pittam* made her body cool.
Cooling of the body caused her tiredness.
Her *cilēttumam* increased very much.
The 'earth'[3] got contained in the 'water'.[4]
The 'water' contained by 'fire'[5] rose up.

1. One of the three types of diseases, viz *cilēttumam*, *vātam* and *pittam*. 2. *Mūlātāram*, *cuvātiṭṭāṉam*, *maṇipūram*, *anākatam*, *vicutti*, and *aññai*. 3,4 - 5. The four of the five elements.

வாய்வு விலேதீயும் வந்தெட்டி பார்க்குதிப்போ
காயு முடம்பு கடுப்புடனே யாக்கைவிட்டு
அசதி கொடுக்குதிப்போ ஐவரே யென்றுரைத்தாள்
அசதியென்ற சத்தம் ஐவருந் தான்கேட்டு

## தருமர் அனைவரையும் அமைதிப்படுத்துதல்

வீமன் நகுலன் விசையன் சகாதேவன்
தாமும் மயங்கித் தயங்கயிலே தன்மருந்தான்
நால்வருக்கும் நெஞ்சம் நடுங்காமல் புத்திசொல்லி
வேல்விழியாள்[1] துரோபதைக்கு மெய்யே பதறாமல்[2]
சொல்லுகிறார் தன்மர் துரோபதைக்கு நேசமுடன்

## தருமர் திரௌபதையிடம் கண்ணனைத் தியானிக்கக் கூறுதல்

மின்னே துரோபதையே விட்டுப் பிரியாது
பொன்னே நவமணியே புத்திசொல்ல கேட்டருளும்[3]
நெடியோனே தஞ்சமென்று நெஞ்சில் தியானமதாய்ப்
பிடியே நிலையாகப் பிடியென்று தன்மர்சொல்ல

## கண்ணனைத் திரௌபதைத் தியானித்து உரைத்தல்

துடியிடையாள் நல்ல துரோபதையுந் தான்மகிழ்ந்து
படியளந்த மாலே பச்சைவண்ணா தஞ்சமென்று
மகிழ்ந்து[4] துரோபதையும் வழுத்துகின்ற தோத்திரமும்
புகழ்ந்து புவியிலுள்ளோர் புத்தியென்று கேட்டருளும்

**97.368, 369 & 370.** மண்ணும் . . . இப்போ - மேற்படி மூன்றடிகளில் உள்ளவை "உடம்பு பஞ்ச பூதங்களான நிலம், நெருப்பு, நீர், காற்று, ஆகாயம் என்பவற்றால் ஆக்கப் பட்டது என்பதைக் கூறி அவை இப்பொழுது ஒவ்வொன்றும் பிரிந்து செல்ல உள்ளன" என்னும் உடலியல் தத்துவத்தை உணர்த்தின. **97.370.** இப்போ - 'இப்பொழுது' என்பதின் பேச்சுவழக்கு. **97.371.** காயும் உடம்பு - பஞ்ச பூத சேர்க்கை இன்றி காய்ந்து போகும் உடம்பு. கடுப்பு - வேகம். யாக்கை - உடல். **97.372.** அசதி - தளர்ச்சி. **97.375.** தயங்கயிலே - 'தயங்கும் பொழுதிலே' என்பதின் பேச்சு வழக்கு. **97.377.** வேல் விழியாள் - வேல் போலும் கூர்மையான கண்களை உடையவள். மெய் - உடம்பு. **97.379.** மின்னே - மின்னல் போலும் ஒளியை உடையவளே. விட்டுப் பிரியாது - எங்களை விட்டுப் பிரியாமல். **97.380.** புத்தி சொல்ல - நான் அறிவுரை கூற. **97.381.** நெடியோன் -- திருமால்; மூன்றடியில் உலகம் அளந்தமையினால் இப்பெயராயிற்று. **97.382.** பிடியே - பெண் யானை போன்றவளே. பிடி - திருமால் குறித்த எண்ணங்களை மனதில் உறுதியாகக் கொள். **97.384.** படி - உலகம். தஞ்சம் - அடைக்கலம். **97.385.** வழுத்துகின்ற - துதிக்கின்ற. **97.386.** புவி - உலகம்.

---

சு.சொல் : 1. வேல்விளியாள் 2. பதராமல் 3. கேட்டருமும் 4. மகிள்ந்து

'Fire', then was entering the 'air'·
"Drying up, my life seems to leave me.
I am very tired, O great five!" she said.
The five men heard only the word 'tired'.
Vīmaṉ, Nakulaṉ, Vijayaṉ and Cakātēvaṉ
Were confused and hesitant.
·Tarmar with a steady mind advised
Tiroupati of spear-shaped eyes.
With deep affection, Tarmar, controlling
His emotions told Tiroupati,
"O Tiroupati, bright like the lighting!
Our precious gem, our gold, leave us not!
Pray, listen to my advice now.
Think of Lord Kaṇṇaṉ as refuge.
Meditate on him at heart.
Oh woman like a female elephant![1]
At heart make thoughts of Him as your anchor."
Tiroupati whose waist resembled a *tuṭi*[2] said.

1. Tiroupati. 2. A musical instrument in the shape of an hour glass.

**விருத்தம்**

98. பஞ்சவர் தனக்கு நானும் பாஞ்சாலி யாகத் தோன்றிப்
பஞ்சவர் அஞ்சு பேர்க்கும்[1] பாரியா யிருந்து பாரில்
துஞ்சவே சூது வென்று துர்ச்சனன்அத்[2] துயிலைக் கொய்ய
அஞ்சலென் றருளிச் செய்த அச்சுதா பச்சை மாலே.

99. மேருவினில் பொருத்த யுண்மை வியாகர்சொல் படியா யிந்த
பாரினில் பகையு மற்று பார்தனை யாண்டு யிப்பால்
ஊரினில் கலியன் வாறான் என்றைவர் ஒதுங்கி வந்த
சீரினி லடியாள் தானுஞ் சேரவை குண்டம் தாரும்.

100. ஐவருக்குந் தேவி யாகி அழியாத[3] கன்னி தானாய்
ஐவரைப் பிரியா திந்த அவனியி லிருந்து வாழ்ந்து
ஐவரும் அடியாள் தானும் அருந்தவம் புரிய வந்தோம்
ஐவர்க்கு[4] முன்னே வாறேன் அரியவை குண்டந் தாரும்.

101. வந்த யிடத்தி லிடவழியில் மரண மெனக்குச் சரியெனவே
இந்த யிடத்தி லுடலிழந்து எளியா ளுந்தன் பதஞ்சேர
விந்தை திகிரிக்கு வழிகாட்டி வேறோர் துன்ப மணுகாமல்
நந்தா முகுந்தா வைகுந்தா நாதா மலர்த்தாள் தருவாயே.

102. என்னை யெமனு மணுகாமல் எதிரே யுந்தன் மலர்பாதம்
உன்னை மனதில் மறவாமல்[5] உறையவே வருவேன் வைகுண்டம்
பின்னே மனது பதறாமல்[6] பிடித்த பிடியுந் தவறாமல்
முன்னே வருவாய் கோபாலா முகுந்தா சரணஞ் சரணுமக்கே.

98.2. அஞ்சு - 'ஐந்து' என்பதின் பேச்சு வழக்கு. பாரி - மனைவி என்ற பொருளிலமைந்த மலையாளச் சொல். பார் - உலகம். 98.3. துஞ்சவே - வருந்தவே. சூது - சூதாட்டம். துர்ச்சனன் - துச்சாதனன். துயில் - ஆடை. கொய்ய - இழுக்க. 98.4. அஞ்சல் - அஞ்சாதே. 99.1. மேரு - ஒரு மலை; விநாயகர் இம்மலையில் தன் கொம்பினை ஒடித்துப் பாரதம் எழுதினார் என்பது ஐதீகம். வியாகர் - வியாசர். 99.2. இப்பால் - இந்த பகுதில். 99.3. கலியன் - கலியுகம். வாறான் - 'வருகிறான்' என்பதின் பேச்சு வழக்கு. 99.4. சீரினில் - சிறப்பினில். 100.1. கன்னிதானாய் - கன்னித்தன்மை உடையவாய் 100.2. அவனி - உலகம். 100.4. வாறேன் - 'வருகிறேன்' என்பதின் பேச்சு வழக்கு. 101.1. இடவழி - 'இடைவழி' என்பதின் பேச்சு வழக்கு. 101.2. எளியாள் - எளிமையானவள்; திரௌபதை. தன் பதம் - திருமாலின் பாதாரவிந்தம். 101.3. விந்தை திகிரி - விந்தையான மலை; வைகுண்டம். 102.2. மறவாமல் - மறக்காமல். உறையவே - தங்குவதற்கே. 102.3. பிடித்த பிடி - 'நான் உனது மலர் பாதத்தைப் பிடித்த பிடி' என்ற பொருளில்.

சு.சொல் : 1. பேற்கும் 2. துற்சனன்அத் 3. அளியாத 4. ஐவற்கு 5. மரவாமல் 6. பதராமல்

"O Lord who measured the worlds!
O Lord with a dark green complexion!
You're my only refuge Oh! Lord!"
Tiroupati thus offered her prayers,
Which the people of the earth should take note of.
She said "For the Pāñcavars[1] I was Pāñcāli.
I am the wife of the Pāṇṭavars.
Making us grieve winning in gamble
When Turiyōtaṉaṉ tried to disrobe me
O Lord, you succoured me and asked me
Not to worry O Accutaṉ[2], Paccaimāl,[3]
On mount Mēru[4] sage Viyācar dictated
All the truth and Vināyakaṉ wrote it down.
With no foes we, the Pāṇṭavars ruled the world.
Knowing of Kaliaṉ's coming and to
Keep away from him we came here.
O Lord bless me, your slave so that
I reach your feet at *Vaikuṇṭam*.
I the spouse of the five remained chaste always.
Never leaving the five, I lived on the earth.
The five and me, your slave came here for *tapas*.[5]
I want to come to you before these five do.
Oh Lord come, and bless me with *Vaikuṇṭam*.
Here I am mid way to you.
Now, my death is agreeable to me.
Leaving this frame here and to reach your feet.
Show the way for this poor woman.
Lead me to the wonderous mountain[6] O lord!
Save me from troubles that may crop up.
O Nanta, Mukunta, Vaikuṇṭa![7]
O Lord grace me with your flower like feet!
Your Feet can keep Yamaṉ[8] at bay.

1. The five Pāṇṭavars. 2 & 3. Kaṇṇaṉ. 4. Kailash in the Himalayas. 5. Very deep meditation with a purpose. 6. *Vaikuṇṭam*. 7. All different names of Kaṇṇaṉ. 8. God of death.

**நடை**

103. என்று துரோபதையும் இறையோனைப்[1] போற்றிசெய்து
ஒன்று மறியேனான் உன்பதமே எந்தனுக்குத்

தந்தருள் வேணும் தாணுவே எந்தனுக்கு
நந்தா முகுந்தா நடுக்காட்டி லென்னுடலை

இந்தா பிரிந்துயிர்தான் என்கோவே உம்மிடத்தில்
வந்தா லிடவழியில்[2] மருகாம லும்முடனே

வைகுண்டந் தந்துதவு மாயோனே போற்றியென்று
மெய்கொண்டு போற்றி விமானமதி லேற்றி

வைகுண்டந் தான்சேர மாது த்ரோபதையும்
தோஸ்திரங்கள் பண்ணித் துதித்து மறவாமல்[3]
மாத்திரப்பொ ழுதானாலும் மனதும் அயராமல்

## அனைத்துத் தெய்வீக தலத்து இறைவனையும் திரௌபதி மனத்துள் எண்ணுதல்

தில்லை நகர்காசி திகழ்கருணை[4] யமுனாநதி
தொல்லையகல் சிந்துநதி தோற்றமுள்ள முற்றுநதி

செய்யதிருக் காவேரி திருக்குழந்தை பொன்னகரம்
அய்யன் சிகநாதன் அனந்த சயன்முதல்

திருப்பதி சிதம்பரமுஞ் சீகாழி[5] மாதலமும்
விருப்ப முடனுள்ள விசேஷதல மத்தனையும்

**103.3.** தாணு - சிவன்; இங்குத் திருமாலைக் குறித்தது. **103.5.** இந்தா - இப்பொழுதே. **13.6.** இடவழி - இடைவழி; நடுவழி. மருகாமல் - வருந்தாமல். **103.8.** விமானம் - வைகுண்ட லோகம் செல்வதற்கான விமானம். **103.10.** தோஸ்திரங்கள் - வணக்க, துதி மொழிகள். பண்ணி - செய்து. **103.11.** மாத்திரப் பொழுது - மாத்திரை நேரம்; சிறு நேரம். அயராமல் - தளராமல். **103.12.** தில்லை நகர் - நடராஜர் வாழும் சிதம்பரம். காசி - விஸ்வநாதன் வாழும் காசி. **103.13.** தொல்லை - துன்பம். சிந்து நதி - இந்திய நாட்டின் புண்ணிய நதிகளுள் ஒன்று. தோற்றமுள்ள - சிறந்த அழகு உடைய. **103.14.** திருக் காவேரி - வளமையான காவேரி. திருக்குழந்தை - மாயக்கூத்தன் என்னும் திருநாமம் உடைய திருமால் உறையும் பாண்டிய நாட்டிலே உள்ள ஒரு திருத்தலம். **103.15.** அய்யன் - ஐயன்; சிவன். சிகநாதன் - 'ஜெகநாதன்' என்பதின் பேச்சு வழக்கு; சிவன். அனந்தசயன் - அனந்த சயனன்; திருமால். **103.16.** சீகாழி - 'சீர்காழி' என்பதின் மரூஉ. மாதலம் - மேன்மையான இடம். **103.17.** விஷேச தலம் - புனித தலம்.

சு.சொல் : 1. இறையோனை 2. படவிழியில் 3. மரவாமல் 4. திகள்கருணை 5. சீகாளி

As always, keeping you at heart
I will come to *Vaikuṇṭam* to stay.
Help me that my mind wanders not.
Help me that my mind holds fast to my goal.[1]
O Lord Kaṇṇaṉ appear before me!
O my Lord, you're my only refuge!"
Thus Tiroupati did worship Kaṇṇaṉ.
She further said," I know nothing!
I only know you're feet are my refuge.
Bless me O Lord Tāṇu![2]
O Lord in the wild forest let me
Leave my body and without feeling sad,
Let me reach you soon.
Lord Kaṇṇaṉ take me to *Vaikuṇṭam!*"
She prayed that she should go to
*Vaikuṇṭam* with her body in a plane.[3]
Losing not her heart she went on praying.
She fervently prayed to the Lord.

**Tiroupati offers prayers at heart to all gods residing at many holy places**

Tiroupati meditated at heart on
Tillai[4], Kāci,[5] the graceful places
Beautiful Cintu[6] that rids one troubles,
Kāvēri[7] and Tirukkuṭantai,[8]
A temple adorned with beaten gold,
Lord Jakanātaṉ[9], Aṉantacayaṉ[10]
Tiruppati, Citamparam,
The great holy place, Sīrkḻi
And many holy places they always liked.

1. *Vaikuṇṭam*. 2. Lord Civaṉ, here, Viṣṇu. 3. A divine plane which is supposed to carry certain blessed people to heaven with their mortal bodies. 4. Citamparam where Lord Naṭarājaṉ (Civaṉ) graces. 5. Benares where Lord Kāci Visvanātaṉ graces. 6. A holy river, bathing in it is supposed to alleviate the sufferings of the people. 7. A river of South India. 8. A holy place in Southern Tamil Nadu where Viṣṇu in the name of Māyakū an graces. 9. Civaṉ 10. Viṣṇu

சிந்தைதனில் நினைத்துத் தியானித் திருப்பளவில்
அந்தரத்தி லுள்ள அரம்பையர்க ளெல்லோரும்

### திரௌபதி வைகுண்டம் செல்லுதல்

துய்ய மலர்சொரிய துந்துமிகள் நின்றதிர
வெய்ய மணிபதித்த விமான மதிலேதான்

ஆயாள் துரோபதைதான் அரம்பையர்கள் தான்சூழ
நேயாள் வைகுண்டம் நிறைந்திருந்தா[1] ளம்மானை.



103.17. இருப்பளவில் - இருக்கின்ற நேரத்தில் 103.19. அந்தரம் - வானலோகம். அரம்பையர் - தேவ மகளிர். 103.20. துய்ய மலர் - தூய்மையான மலர். துந்துமி - ஒரு வகை இசைக்கருவி. 103.21. வெய்யமணி - மிகுந்த ஒளி வீசும் மாணிக்கம். 103.22. ஆயாள் - 'அந்த ஆள்' என்ற பொருள் தரும் மலையாளச் சொல்; இங்குத் திரௌபதைக் குறித்தது. 103.23. நேயாள் - நேசம் மிகவும் கொண்டவள்; திரௌபதை.

சு.சொல் : 1. நிரைந்திருந்தா

